# துரதிர்ஷ்ட இந்தியா

லாலா லஜபதிராய்.
எழுதியது.

கே. எஸ். சுந்தரம்,
கே. எஸ். முத்தையா கம்பேனி,
சென்னை.

# துரதிர்ஷ்ட இந்தியா

லாலா லஜபதிராய் எழுதியது.



பிரசுரிப்பவர்கள் :

கே. எஸ். முத்தையா கம்பெனி, சென்னை.

 1928. [விலை ரூ. 2-8-0.

# முன்னுரை.

கன்னி மேயோ என்னும் அமெரிக்க மாது வெளியிட்டிருக்கும் "இந்தியமாதா" வுக்கு எத்தனையோ பேர் மறுப்பு நூல் வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றுள் எல்லாம் பாஞ்சாலச் சிங்கம் லாலா லஜபதிராய் எழுதிய நூலே தலைசிறந்தது. கன்னி மேயோவுக்கு ஆணித்தரமாகப் பதில் கூற, படிப்பினாலும், உலக அனுபவத்தினாலும், தேச ஊழியத்தினாலும், லாலாஜியை விடச் சிறந்தவர்கள் ஒருவருமில்லை யென்று இந்தியர்கள் ஒப்புக் கொள்வர். லாலாஜியின் நூல், கன்னி மேயோவுக்குத் தக்க பதிலாயிருப்பதுமன்றி, சுதந்தர தாகம் மிக இந்தியருக்கு மிக உபகாரமான ஒரு உறுதி நூலாகவு மிருக்கின்றது. ஆகவே அதனை மொழி பெயர்த்து இன்று தமிழுலகத்தார் முன்னிலையில் சமர்ப்பிக்கின்றேன். தமிழுலகம் அதனை ஆதரித்துப் பயனடையுமாயின் என் முயற்சி நன் முயற்சியா யிற்றெ‌ன மகிழ்வுறுவேன்.

சென்னை,
25—9—28.

கே. எஸ். சுந்தரம்.

# ஆசிரியர்
# முன்னுரைச் சுருக்கம்.

அடிமை வாழ்வு நரகவாழ்வினும் கடையானது. பண்டும் வெளி நாட்டுக் கொள்ளைக்காரர்கள் பலர் நம் தாய் நாட்டில் புகுந்து சூறையாடிய துண்டு. அவர்களில் சிலர் தம் கைக்கெட்டியவற்றை யெல்லாம் அள்ளிக்கொண்டு ஒரே போக்காய்ப்போயினர். சிலர் இங் நாட்டிலேயே தங்கி இந்தியருடன் ஒன்றுபட்டனர். அலக்காண்டர், கிஜினி முகமது, தைமூர், செங்கிஸ்கான், நாதர்ஷா, அகமத்ஷா அப்தாலி முதலியோர் முன்னைய வகுப்பைச் சேர்ந்தவர்கள் சித்தியர்களும், ஹூணர்களும், கோரிபாபர் முதலியவர்களும் பின்னைய வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

பின்னைய வகுப்பாருக்கு இந்தியர் அடங்கி வாழ வேண்டிவந்தது மெய்யே. ஆனால் கடைசியில் இருசாராரும் ஐக்கியப்பட்டனர். படவே ஒரு புது வாழ்க்கை முறையும், நாகரிகமும், பயிற்சியும் உருப்பெற்றன. இரு திறத்தாரிடத்தும் அமைந்திருந்த உத்தம குணங்கள் அந்தப் புதுவாழ்க்கை முறையிலும், நாகரிகத்திலும் பயிற்சியிலும் லயித்து ஒளிவீசின. ஆகவே அந்நியர் அரசாட்சித் துன்பத்தை ஜனங்கள் உணர வில்லை.

யதேச்சாதிகார முடைய முடிமன்னர்களும் மனிதர்களே யாகையால், ஒரு கால் குடிகள் துயரத்துக் கிரங்கி செங்கோலரசு நடத்தவும், கூடும். தனிப்பொறுப்பில்லாக் குடி அரசில் அல்லது பொதுப் பொறுப்பாட்சியில் அத்த

கைய இரக்கத்தையும், செங்கோலாட்சியையும் எதிர்பார்க்க முடியாது. பொது அடியான் புழுத்துச்சாவது உலகஇயல்பு. ஆகவே ஒரு அன்னிய நாட்டுக் குடி அரசுக்கோ, பொதுப் பொறுப்பாட்சிக்கோ அடிமைப் பட்டிருப்பதினும் கொடிய சாபம் வேறில்லவே இல்லை. பிரிட்டிஷ் பொறுப்பாட்சி பிரிட்டிஷாருக்கு நன்மை யளிக்கலாம். அதனால் இந்தியர்களுக்குப் பயன் என்ன? "நாட்டுக்கு நல்ல துரை வந்தாலும் தோட்டிக்குப் புல்லுச்சுமை" என்றபடி பிரிட்டிஷ் பொறுப்பாட்சி எத்தகை சிறப்புடையதாயிருந்தாலும், அடிமை நாடாகிய இந்தியாவின் பாடு—அந்தோ! சொல்லத்தான் தகுமோ? எண்ணத்தான் தகுமோ?

நமது சமூக ஊழல்களும், மதக்கொடுமைகளும், ராஜீயத் துரோகங்களும் நமது தற்கால அடிமை வாழ்வுக்குக் காரணங்களாகும். உண்மையில் நாம் நமது கர்மபலனை அனுபவிக்கிறோம். சமூக ஊழல்களை யொழித்து, பழி பாவங்களை நீத்து, புனிதவாழ்வு மேற்கொள்ள எண்ணினும் நமது அடிமை வாழ்வு அதற்குத் தடையாக முன்னுறுகிறது. நாம் முன்னேறவிரும்பினால் அது பின்னுக்கு இழுக்கிறது. ஜனங்கள் விழித்தெழும்போது, அடக்குமுறைச் சட்டங்கள் முன்தோன்றி வெருட்டுகின்றன.

அடிமைப்பட்டவர்களை எந்நாளும் அடிமைப் படுகுழியிலாழ்த்தி வைப்பதே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தந்திரம், அதுவே வெள்ளையராட்சியின் மூலக்கொள்கை.

முதன் முதல் ஆங்கிலேயர் இந்தியாவில் கால்வைத்த பொழுது, இந்தப் பொன் விளையும் பொழில் நாட்டுக்கு அதிபதியாவார்களென்று அவர்கள் எண்ணவேயில்லை. "கம்புத் தோட்டத்தில் களைவெட்ட வந்தவன் கன்னிக்குமாரிக்குக் கணவனானது"போல், சொந்த நாட்டில் வயிற்றுப் பாட்டுக்கு வழியில்லாமல் வர்த்தகம் செய்து பிழைக்கவந்த ஆங்கிலேயர்கள், நாட்டாண்மை, அதிகாரம் பெற்றுவிட்

டார்கள். "குருட்டாம் போக்கில்" ஒரு ராஜ்யம் கிடைக்கவே அவர்களது பேராசை பின்னும் வளரத் தொடங்கிற்று. சுற்றுப் பக்கங்களிலுள்ள பிரதேசங்களையும் பிடித்தடக்கினர். உலக முழுதுமுள்ள கடற்கரைப் பிரதேசங்களின் கேந்திர ஸ்தானமாகவுள்ளவைகளையும் கைப்பற்றினர். கடைசியில் ஒருபிரம்மாண்டமான ஏகாதிபத்தியத்தையும் நிறுவிட்டனர். இப்பொழுது அதைப் பாதுகாப்பதே அவர்களுக்கு ஒரு பெரும்பாடாக ஏற்பட்டு விட்டது.

சமதர்ம உணர்ச்சி நாளுக்குநாள் வலுவடைந்து வருவதைப்பார்த்து அவர்கள அஞ்சுகின்றனர். வெளிநாட்டார் தம்மேல் சந்தேகம் கொள்ளாதபடி அவர்கள் கண்ணில் மண்ணைத்தூவ, அன்னோர் பல சூழ்ச்சிகளும் செய்து வருகின்றனர். அச் சூழ்ச்சிகளுள் பொய்ப் பிரசாரம் செய்விப்பதும் ஒன்று. இதற்காக சர்க்கார் உதவி பெற்ற பல சங்கங்களும் இருந்து வருகின்றன. "இந்தியர்கள் ஆபாசர்கள்; ஆகாவழிகள்; ஏலாச்சோம்பிகள். இந்தியாவின் க்ஷேமத்துக்கு ஆங்கில அரசாட்சி இன்றியமையாதது" என்று வெளிநாட்டாருக்கு வற்புறுத்துவதே அந்தச் சங்கங்களின் ஏக நோக்கம.

நமது கன்னி மேயோவும் அந்தப் பிரசார கோஷ்டியைச் சேர்ந்தவரே. அவர் அமெரிக்க அதிகார வர்க்கத்தினரின் குலாம். பததிரிகைகளுக்கு எழுதுவதே அவரது தொழில். புரளி யுண்டுபண்ணும் புனைந்துரைகளும் பொய்க் கதைகளும் எழுதுவதில் அவர்கைதேர்ந்த ஆசாமி. இந்தியாவைப்போல், அமெரிக்கருக்கு அடிமைப்பட்டுத் தவிக்கும் பிலிப்பையின் தீவாரைப்பற்றி அம்மையார் ஒரு வசை புராணம் வெளியிட்டதுமுதல், முதலாளி வர்க்கத்தினருக்கும், ஏகாதிபத்தியக் கிறுக்கர்களுக்கும் அவர் செல்வப்பிள்ளையாய் விட்டார்.

ஆகவே சுயநலக்காரர்களான சிலரின் தூண்டுதலினால் கன்னி மேயோ இந்தியாவுக்குவந்தார். 12 மாத காலத்தில்,

ஒரு பெரிய பூகண்டத்துக் கொப்பான இந்தியா முழுதும் சுற்றி, "இந்திய மாதா" என்னும் பெயரால் ஒரு பெரிய புஸ்தகமும் வெளியிட்டார். அதுவோ ஆபாசக்களஞ் சியமாகவும், அசட்டுப் பொய் மூட்டையாகவும் இருக் கிறது.

நியாய புத்தியும், நல்லெண்ணமும் உடைய ஆங்கிலே யர்களும், அமெரிக்கர்களும் அதை அறவே வெறுக்கின்ற னர். உலகம்போற்றும் உத்தமரான மகாத்மா காந்தி, கவிச்சக்கிரவர்த்தி ரவீந்திரர், முதல் இந்தியப் பிரபுவாகிய சின்ஹா முதலிய இந்தியத் தலைவர்களும் அதன் புன்மை யை விளக்கிவிட்டனர்.

'இந்திய மாதா' ஒவ்வொரு அத்தியாயத்திலும் அடங் கிய பொய்யுரைகளைத் தக்க சான்றுகளுடன் இந் நூலில் மறுத்துக்கூறி யிருக்கிறேன்.

இந்திய மக்கள் தம் உண்மை நிலையை உணர்ந்து விடு தலை பெற முயற்சி செய்வார்களாக !

லஜபதி.

# துரதிர்ஷ்ட இந்தியா

## மேயோவுக்கு பதில்

### அத்தியாயம் 1.



கன்னி மேயோ எழுதிய "இந்திய மாதா" என்னும் நூலின் முதலிரண்டு பகுதிகளும் (அத்தியாயம் 1-முதல் 10-வரை) ஹிந்துக்களின் சமுதாய வாழ்க்கையை—அதாவது சமுதாய ஊழல்களைக் குறிப்பனவாக இருக்கின்றன. அவர் எடுத்துக் கூறும் ஊழல்களெல்லாம் இந்திய ஜனவரிடத்தும் பொதுவாகக் காணப்படினும், ஹிந்துக்களை மட்டுமே அவர் குறைகூறுகிறார். இந்த அத்தியாயங்கள் பத்தும் இந்திய மாதர்களையும் புருஷர்களையும் தூற்றுவனவாகவே இருக்கின்றன. சமுதாயச் சீர்திருத்தத்தில் மிகுந்த அக்கறையுடைய இந்தியனும்கூட கன்னி மேயோவின் புனைந்துரைகளையும் பொய் மூட்டைகளையும் ஒப்புக்கொள்ள மாட்டான்.

ஏனென்றால், பிள்ளையாருக்குக் குட்டும் போதே கண்ணில் குட்டிக்கொண்ட மாதிரி, சில தப்பெண்ணங்களுட

னும் ஆதாரங்களுடனும் கன்னி மேயோ நூல் எழுதத் தொடங்கிவிட்டார். சர்க்கார் உதவி பெருது பாரபட்சமற்ற மனத்துடன் நூலெழுதியதாகக் கூறும் கன்னி மேயோ, அரசியல் பிரசாரத்துக்கென்றே இந்தியாவுக்கு வந்த விஷயத்தை நாம் முன்னுரையிலேயே விளக்கி யிருக்கிரேம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் குற்றங் குறைகளை மறைப்பதே அவரது முழு நோக்கமாக இருந்திருக்கிறது. ஆகவே ஒரு நூலாசிரியருக் குரிய தருமங்களை அவர் அறவே கைநழுவ விட்டுவிட்டார். இந்தியாவில் அறியாமையும், நோய்களும், வறுமையும், குடிகொண்டிருப்பதற்கு பிரிட்டிஷ் சர்க்காரே ஜவாப்தாரி யென்று அவர் ஒப்புக்கொள்கின்ருரில்லை. அவரது பார்வையில் இந்தியா முழுதும் தீமையே குடிகொண்டிருக்கிறது. ஹிந்துக்களெல்லாம் சிற்றின்பப் பைத்தியங்கொண்ட மிருகங்களா யிருப்பதே அதற்குக் காரணமாம்.

இந்திய சமுதாய வாழ்க்கையைப்பற்றி அவர் கூறி யிருக்கும் வரலாறுகள் பின்வரும் அத்தியாயங்களில் விரித்துரைக்கப்படும். ஆனல் இந்நிலைமைக்கு இந்திய சர்க்கார் ஜவாப்தாரி யல்லவென்று அவர் கூறும் வாதம் சரியா தப்பா என்று முதன் முதலில் ஆராய வேண்டியது இன்றியமையாததா யிருக்கிறது. 'இந்திய மாதா' 23-வது பக்கத்தில் சர். சிமன்லால் சேதல்வாடும், மகாத்மா காந்தியும் கூறிய சில மொழிகள் மேற்கோளாகக் கையாளப்பட் டிருக்கின்றன. "சுயமாக ஒன்றைச் செய்யும் ஆற்றலும் மனத்துணிவும் விடாமுயற்சியும் இந்தியர்களிடம் இல்லாமையே இந்தியாவின் கஷ்டங்களுக் கெல்லாம் காரணம் என்று ஸர். சிமன்லால் கூறி யிருக்கிருராம். அதற் கடுத்தாப்போல் மகாத்மாவின் "யங் இந்தியா" பத்திரிகையி லிருந்து ஒரு வாக்கியமும் எடுத்தாளப் பட்டிருக்கிறது. அது பின் வருமாறு. "நாம் சுயமாக ஒன்றைச் செய்யச் சக்தியற்றவர்களா யிருப்பதற்கு அரசாங்கத்தாரைக் குறை கூறுவது நியாயமே ஆகும்."

பின்னர் இதர இந்தியத் தலைவர்கள் கூறிய சில மொழிகள் உதகரிக்கப்பட் டிருக்கின்றன. அவையாவன:—"நமக்குள் ஊக்கம் குன்றி யிருக்கக் காரணமென்ன? சகோதர உணர்ச்சி நம் முள் என் பரவவில்லை? நாம் இளவயதிலேயே ஆண்மை யற்று, அகால மரண மடையக் காரணமென்ன? நமது புராதனப் பெருமை எங்கேனும் மறைந்து விட்டதா? நமது ஆத்மீக சக்தி அழிந்துவிட்டதா? நம்முடைய நாட்டில் அன்னியர் வந்து கால் வைத்த நாள் முதல் நமக்குப் பலவித துன்பங்கள் ஏற்படத் தொடங்கினவே. நமது பண்டைப் பெருமை ஒழிந்தது; சிறப்பு அழிந்தது. இனி என் செய்வது! ஒன்றும் செய்வதற்கில்லை. மேடைமீதேறி நின்று, நம்மை அடக்கியாளும் கொடுங்கோல் அதிகாரிகள் வெருண்டோடும் வரை உரக்கக் கத்துவதுதான் நமக்கு மீதமாயுள்ள ஒரே ஒரு வழி. பிரிட்டிஷார் நம் நாட்டை விட்டுப் போன பிறகே, சுயேச்சையாய் நமது தாய்நாட்டின் குறைகளை நீக்க முடியும்."

இதற்கெல்லாம் கன்னி மேயோ கூறும் நொண்டிச் சமாதானம் பின் வருமாறு:—"பிரிட்டிஷ் ராஜாங்கம் நல்லதோ கெட்டதோ எப்படியானாலும் இருக்கட்டும்; அதற்கும் மேலே கூறியவற்றிற்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. சோம்பல், முயற்சியின்மை, ஊக்கமின்மை சுயமாக ஒரு வேலை செய்யும் சக்தி, தேக வலியின்மை ஆகியனவெல்லாம் இந்தியர்களிடம் இப்பொழுதுதான் தோன்றியிருக்கின்றனவென்று எவரும் எண்ணி ஏமாந்து போக வேண்டாம். அக் குறைபாடுக ளனைத்தும் தொன்று தொட்டு இந்தியர்களிடம் அமைந்தவைகளே. இவைகளுக்கெல்லாம் தாங்களே காரணமென்றுணர்ந்து, அவைகளை நீக்க முயற்சிக்காமல் வெறும் வாய்வீச்சு வீசிக்கொண்டிருந்தால் இன்னும் பல்லாண்டு இந்தியர்கள் இதே நிலைமையில் தான் இருக்க வேண்டியதாக வரும். ஒரு நாளும் அவர்கள் முன்னேற்ற மடையப் போவதில்லை. இந்தியர்களின் உடலும் உயிரும் அடிமைப்பட்டிருப்பது உண்மையே.

ஆனால் அடிமை விலங்கை அவர்களே தாமாக மாட்டிக் கொண்டிருக்கிறார்கள். அவ்வடிமை விலங்கை தகர்த்தெறிய எவ்வளவோ முயற்சித்தும் பயன்படவில்லை. அதைத் தகர்த் தெறிவதற்கு இந்தியர்களுக்குள் ஒரு புதிதான சக்தி உதயமாகவேண்டும். முற்காலப் பெருமையையும், தற்காலப் பெருமையையும், பிற்காலத்தில் அடையப் போகும் சிறப்புகளையும் நினைத்து வீண் கனவு கண்டு கொண்டிருந்தால் இந்தியர்கள் ஒரு நாளும் விடுதலையடைய மாட்டார்கள்."

"உதாரணமாக 12 வயதுள்ள ஒரு இந்தியச் சிறுமி யை எடுத்துக்கொள்வோம். அவளுக்கும் உடம்பில் எலும் பும் தோலும் தவிர வேறொன்றுமில்லை. அவள் கல்வி யில்லாதவள்; அறிவைப் பெறுதவள்; தேக ஆரோக்கியத் தை எவ்வாறு பாதுகாத்துக் கொள்ள வேண்டுமென்று எவ ரும் அச் சிறுமிக்குக் கற்பிக்கவில்லை. இந்நிலைமையில் அவள் ஒரு குழந்தையைப் பெற்றுவிடுகிறாள். இத்துணை திட காத்திரமுள்ள ஒரு சிறுமிக்குப் பிறக்கும் குழந்தை, எந் நிலைமையி லிருக்கு மென்பது நாம் சொல்லாமலே விளங் கும். அக் குழந்தையைத் தேகப்பயிற்சி செய்விப்பதில்லை. சுத்தமான காற்று வசதியுள்ள இடத்தில் தூங்க வைப்ப தில்லை. அக் குழந்தை பாலப்பருவ மடைகின்றான். அப் பொழுதும் அவனது தேக சௌக்கியத்தைக் கவலையுடன் கவனிப்பார் ஒருவருமில்லை. ஆகவே, அவன் 30 வயது ஆனவுடன் மெலிந்து, அங்கம் தளர்ந்து ஆண்மை குன்றி வாடி விடுகின்றான். இதற்குக் காரணம் என்னவென்று நீங்கள் வினவுவீர்கள்?

"கிராமாந்தரங்களிலுள்ள ஜனங்களை எடுத்துக் கொள் ளுங்கள். அவர்களுக்குக் கல்வியில்லை; கல்வியில் விருப் பமுமில்லை. அவர்களுக்கு ஆரம்பக் கல்வி யளிக்க முயற் சித்துப் பாருங்கள். ஆனால் பெண்களை மட்டும் ஆசிரியர்க ளாய், நியமிக்காதீர்கள். அவ்விதம் செய்வீர்களாயின் அப்

பெண்களுக்கு உடனே வருவது நாசமே. நிலைமை இப்படி யிருந்தால் எங்ஙனம் கல்வி வளர்ச்சி ஏற்படும்? இவ்வித மாக வாழ்ந்துவரும் ஜனங்கள் என் இளம்பிராயத்திலேயே இறந்து போகமாட்டார்கள். இதுதான் ஜனங்களுடைய வறுமைக்குக் காரணம். பிரிட்டிஷார் அரசாண்டாலும் சரி; ருஷியர்களோ ஜெப்பானியர்களே அரசாண்டாலும் சரி. அதைப்பற்றி நாம் இப்பொழுது ஆராய வேண்டுவதில்லை. அல்லது பண்டைக்காலத்தி லிருந்ததுபோல் தங்களுக்குள் தேசத்தைப் பங்கு போட்டுக்கொண்டு சுதேச மன்னர்கள் ஆண்டாலும் சரி, அல்லது இப்பொழுதிருக்கும் அரசியல் முறை போய் எம்மாதிரி சுய ஆட்சி வந்தாலும் சரி. இப் பொழுது இந்தியா விடுதலையை நோக்கிச் சென்றுகொண் டிருக்கும் வேகத்தைவிட அதிகமான வேகத்துடன் செல்ல வேண்டுமாயின் சுருங்கச் சொல்லின், இந்தியா பூரண விடு தலையடைய வேண்டுமாயின், வெறும் பேச்சுப் பேசுவதை யும் ஒருவரை யொருவர் குறைகூறிக் கொள்வதையும் இன் றேடு ஒழித்துவிட்டு எல்லோரும் தங்கள் தங்களிடமுள்ள அசுத்தங்களை முதலில் நீக்கவேண்டும்; தங்கள் மனே வாக்குக் காயங்களை முதலில் பரிசுத்தம் செய்ய முன் வர வேண்டும்."

கன்னி மேயோவின் நன்மைக்காகவே, அவரது நூலி லிருந்து மேலே கூறிய பாகங்களை விரிவாக எடுத்தாண் டிருக்கிறேம்.

இந்தியர்களாகிய நாம், நமது ஒற்றுமைக் கேட்டினு லும், மடமையாலும் வெளி நாட்டாரை ஆள அழைத்தோ மென்றும், அந்த அரசாட்சியினுல் நாம் சீர்குலைந்து, தேக வலிகுன்றி, ஊக்கமற்று, நமது வளர்ச்சிக்கும் தேசிய முன் னேற்றத்துக்கும் தடை யேற்படுமாயின் அதற்கு நாமே ஜவாப்தாரிகள் என்றும் கன்னி மேயோ கூறுவதானல் அது ஒருவாறு சரியாகத் தோற்றலாம்! கன்னி மேயோ வின் வாதப் போக்கு அத்தகையதானுல் அதை நாம் ஒப்

புக்கொள்ளத்தான் வேண்டும். வாஸ்தவத்தில் அந்த வாதம் அவ்வளவு பலமா யிருப்பதனுலேயே, நாம் அன்னிய ஆட்சியைத் தொலைத்துவிட்டு, சுயேச்சை யடைந்து, நமதிஷ்டப்படி முன்னேற்றமடைய விரும்புகின்ருேம்.

ஆனுல் கன்னி மேயோ வேறுவிதமாக நியாயம் கூறுவதாகத் தோற்றுகிறது. அவரது அபிப்பிராயத்தில் நமது பலவீனத்துக்கும், திக்கற்ற தன்மைக்கும் தற்கால அரசியல் நிலை காரண மாகாதாம். ஒரு தேசத்தாரின் தொழிலாற்றும் சக்தியும், ஊக்கமும் அத்தேசத்து அரசியல் நிலையைப் பொறுத்து நிற்கவில்லையாம். கல்விப் பயிற்சி, சுகாதாரம், தேசமக்கள் திராணி முதலியன, அத்தேச சட்டசபைப் போக்கையும், அரசியல் நிலைமையையும் அடிப்படையாகக் கொண்டதன்ருே? இவை யாவும் கன்னி மேயோ கருதுகிறபடி சமுதாயப் பழக்க வழக்கங்களை மட்டுமா தழுவி நிற்கின்றன? உண்மையில் ஒரு தேசத்தின் அரசியல் முறையையும், தேச மக்களின் கல்வி யறிவையும் ஒட்டியன்ருே சமுதாயப் பழக்க வழக்கங்கள் உருப்பெறுகின்றன.

தான் கூறும் நியாயத்தை நிலைநாட்டுவதற்காக, இல்லாத சில விஷயங்களை உள்ளதாக, கன்னி மேயோ நம்பிக் கொள்கிருர். அவைகளுக்கெல்லாம் ஆதாரமாக நமது புராதன சரித்திரங்களையும் சுட்டிக் காட்டுகிருர். ஆனுல் நமது பூர்வ சரிதங்களைப் பற்றி அவருக்குக் கடுகளவு ஞானமும் கிடையாது. அன்றியும் அன்னிய அரசாட்சிக்கு அடிமைப் பட்டுழலும் ஒரு நாட்டாருக்கு, அவ்வடிமைத்தனத்தினுல் சமூக ஆத்மீக வாழ்க்கைக்குண்டாகும் பலாபலன்களையும் அவர் முற்றிலும் புறக்கணித்து விடுகிருர். இவ்வுண்மையை அவர் மெல்லக் கை நழுவ விட்டுவிட்டு, மேலெழுந்தவாரியாக வாதம் செய்து மழுப்புவதுதான் மிக விநோதமாக இருக்கிறது.

ஆசிரியர் மன்ஸ்டன் பர்க் என்பார், தமது 'அமெரிக்கர்' என்னும் நூலில் பின் வருமாறு கூறியிருக்கிருர்.

"அற்ப சொற்பப் படிப்புடைய அமெரிக்க மாதர்கள் சர்வஞ்ஞானிகளென்று தம்மைத்தாமே மதித்துக் கொள்கிறார்கள். அறிவாராய்ச்சித் துறையில் பெண்கள் ஆதிக்கம் மிகுந்தால் உண்டாகும் ஆபத்துக்களையே இத்தகைய பெண்களின் மனப்பான்மை விளக்கிக் காட்டுகின்றன.

கன்னி மேயோவைப் பார்த்துத்தான் ஆசிரியர் மன்ஸ்டன் பர்க்கு இவ்வாறு அபிப்பிராயப்பட்டாரா?

12 வயதுடைய ஒரு பெண் எலும்பும் தோலுமாயிருக்கக் காரணமென்னவென்று கன்னி மேயோ கேட்கின்றார்.

அக் குறைபாடு (1) பரம்பரைக் காரணத்தினாலும் (2) போதுமான உணவின்மையாலும் (3) சுகாதார சௌகரியங்கள் இன்மையாலும் (4) கல்விப் பயிற்சி யில்லாமையாலும் அறியாமையாலும் ஏற்படலாம்.

முதற் காரணத்தை தற்காலம் விட்டுவிடுவோம். 2-ம் 3-ம் 4-ம் காரணங்கள் அரசியல் நிலையைப் பொறுத்தன வல்லவா? துர்ப்பலரான பெற்றோருக்குப் பிறந்த பிள்ளைகளும் பிற்காலத்து நன்கு போஷிக்கப்பட்டால், பரம்பரைப் பலவீனம் நீங்கி திட சரீரிகளாய் வளர்வது சர்வ சம்மதம் பெற்ற உண்மை யல்லவா? பரம்பரைத் துர்ப்பலத்தோடு, அரசியல் அடிமைத்தனத்தினால் ஏற்படும் தடைகளும் சேர்ந்தால் அக் குழந்தைகளுக்கு ஆண்டவன் தான் துணை. ஒரு தேசத்தில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் சரியாக வளர்க்கப்படுகிறதா என்று கவனிக்கும் பொறுப்பு அத் தேசத்து அரசாங்கத்தைச் சேர்ந்ததாகும். குழந்தைகளை ஆரோக்கியமாக வளர்க்கப் பெற்றோர் சக்தியற்றவர்களா யிருந்தால் அதற்குப் பொறுப்பாளிகளும் அரசாங்கத்தாரே யாவர். இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டே ஏழைக் குழந்தைகளைப் பாதுகாப்பதற்கு, மேனாடுகளில், தேசியப் பொது சிசு பாதுகாப்புச் சாலைகளும், கல்வி கற்பிப்பதற்கு தேசியத் தருமப் பள்

ளிக்கூடங்களும் தற்காலத்து ஸ்தாபிக்கப்படுகின்றன. சுயேச்சை நாடுகளில், குழந்தைகள் வயிற்றுப் பிழைப்புக்காக வேலை செய்யாமலிருக்கத் தடை யேற்படுத்தப்பட்டிருக்கின்றன. மதுபானத்தைத் தொலைக்கவும், பிரமேக நோய்களைத் தடுத்து சிகிச்சை செய்யவும், விவாக முறையை ஒழுங்குபடுத்தவும், ஜன நெருக்கத்தைக் குறைக்கவும் தற்காலத்திய அரசாங்கங்கள் எதற்காக முயற்சி செய்கின்றன? உலகத்திலுள்ள அரசாங்கங்களெல்லாம் சுகாதார மந்திரிகளை நியமனம் செய்யக் காரணமென்ன? எல்லோருக்கும் நல்ல பால் வழங்கும் பொறுப்பையும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஏற்றுக்கொள்ளக் காரணமென்ன? கன்னி மேயோ கூறும் காரணம் சரியாயிருந்தால் வெளி நாட்டு அரசாங்கங்கள் இவ்வாறு செய்வது எதற்காக? வெளிநாட்டு அரசாங்கத்தார் இந்தப் பொறுப்புகளைத் தாமாகவே ஏற்றுக்கொண்டிருக்கும்போது இந்திய சர்க்கார் மட்டும் அவைகளைப் புறக்கணிக்கக் காரணம் வெளிப்படையானதே. இந்திய அரசாங்கம் அன்னிய அரசாங்கம். இந்தியாவைக் கொள்ளையடித்துத் தமது சாம்ராஜ்யத்தைப் பலப்படுத்துவதே அவர்களது தலைமையான நோக்கம். மாஜி இந்தியா மந்திரியான ஸர். ஆஸ்டின் சேம்பர்லேன், 1917 மார்ச்சு 29ந்தேதி சேவாய் ஹோட்டலில் ஒரு விருந்து பிரசங்க மத்தியில், இநதியர்கள் எந்நாளும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு உழைத்துப் போடும் அடிமைகளாக இருக்க விரும்பமாட்டார்கள் என்றும், எந்நாளும் அவர்களை அடிமைகளாக்கி வைத்திருப்பது நியாயமாகாதென்றும் சொன்னார். அதன் உட்பொருள் என்ன? அப்போது இந்தியர்கள் அடிமைகளாயிருந்தார்களென்பதே. ஆனல் அந்த நிலைமை இன்னும் மாறவில்லை. இப்போதும் இந்தியர்கள் அடிமைகளாகவே இருந்து வருகின்றார்கள்.

சென்ற 200 வருஷ காலமாக பிரிட்டிஷார் அவர்களது சாம்ராஜ்ய நன்மைக்காக இந்தியாவைக் கொள்ளையிட்டு வருகிறார்களென்னும் உண்மை ஒப்புக்கொள்ளப்பட்டால், இந்தியர்களின் சமூக ஊழல்களுக்கும், பலவீனத்

துக்கும் ஊக்கக் குறைவிற்கும் காரணம் தேடத் தேவையில்லை. சென்ற 75 வருஷங்களுக் கிடையில், சமுதாயச் சார்பான சட்டங்களினால், பிரிட்டன், ஜெர்மனி, பிரான்ஸ், அமெரிக்கா, ஜப்பான் முதலிய தேசங்களில் ஏற்பட்டிருக்கும் நன்மைகளை யாவரும் அறிந்திருக்கலாம். கன்னி மேயோவும் அறிந்திருக்கக்கூடும். சிசுக்கள் வாழ்வையும், பருவ வயது வந்தோர் வாழ்வையும் பாதிக்கக் கூடிய எண்ணற்ற அரசியல் சட்டங்களும், உத்தரவுகளும் தோன்றியிருக்கின்றன. ஒரு தேசியத் துரைத்தனத்துக்கே, அத்தேசமக்கள் க்ஷேமத்தில் கவலையுண்டாகக் கூடும். தேச க்ஷேமமும், தேச மக்கள் க்ஷேமமும் பரஸ்பர பந்தமுடையவைகளா யிருக்கின்றன. அவைகளைப் பிரித்து வைக்க முடியாது. புராதன இந்தியாவிலும், சமுதாய வாழ்க்கைக்கும், பொது ஜன சுகாதாரத்துக்கு அனுகூலமான எவ்வளவோ ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. பொதுக் கல்வி, மாணவர் நடை முறை, சுகாதாரம், விவாகம் முதலியவைகளைப் பற்றி ஹிந்து தர்ம நூலாசிரியர்களும், பாஷியகாரர்களும் நூல்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள்.

தேச மக்களை உருப்படுத்துவதில் அரசாங்கத்துக்குள்ள பொறுப்பை எல்லா அரசியல் வாதிகளும் ராஜ்ய தந்திரிகளும் இப்பொழுது ஒப்புக்கொள்கிறார்கள். இவ்விஷயம் மிகத் தெளிவானதாகவும், சுலபமானதாகவும் இருப்பதால் இதற்கு மேற்கோள் தேடிப் பிடிக்க வேண்டிய அவசியமே இல்லை. எனினும் கன்னி மேயோவின் வாதத்துக்கு இந்தப் பிரச்சினை மிக முக்கியமானதாக இருப்பதால் சில நூலாசிரியர்களின் அபிப்பிராயங்களைக் கீழே கூறுகிறேன்.

ஆசிரியர் ஸ்காட்டு நேரிங் என்ற அமெரிக்க சமுதாய சாஸ்திரி, சமீபத்தில் வெளியிட்டிருக்கும் "சோஷியல் அட்செஸ்டுமெண்டு" என்னும் நூலில் கூறுவதாவது:—"ஒரு

தேசத்தாரின் சமூக ஊழல்களை தேச சட்டம் மூலமாகவே நீக்க முடியும். ஒரு சமூகத்தின் ஆசார ஊழல்கள் பொது ஜன அபிப்பிராயத்தால் சில காலம் சீர் பெறக் கூடுமெனினும், சாச்வதமான சீர்திருத்தம் அரசியல் சட்ட மூலமாகவே நிலைபெறக் கூடும்."

சமுதாய விஷயங்களில் துரைத்தனத்தாருக்குள்ள பொறுப் புணர்ச்சி விருத்தியடைந்து வரும் வகையை ஸ்ரீ. எல். டி. ஹாப்ஹௌஸ் என்னும் ஆங்கில சமுதாய சாஸ்திர பண்டிதர் செவ்வையாக விளக்கி யிருக்கிறார். அவர் கூறுவதாவது:—பிறவிச் சோம்பேறி பொது ஜனங்களைப் பிடுங்கித் தின்ன விடக்கூடாது. பிச்சையெடுத்தும், பயனற்ற வேலைகள் செய்தும் அவன் வயிறு வளர்க்கக்கூடாது. அவனது மனைவி மக்கள் கந்தை யுடுத்தவும் சுகாதார சௌகரியங்களற்ற வீட்டில் வசிக்கவும், அரை வயிறு கால் வயிறு உண்டு வாழவும் விடக்கூடாது. குழந்தைகள் செவ்வனே பாதுகாக்கப்படல் வேண்டும். பெண் தன் குழந்தைகளைப் பேணும் கடமையைச் சரிவரச் செய்தால் ஒரு பெண் செய்ய வேண்டிய வேலையைச் சரிவரச் செய்தவளாகிறாள். ஆகவே பொதுச் செலவில் அவளைக் காப்பாற்ற வேண்டியது அவசியம். சோம்பேறித் தந்தையை பந்தோபஸ்தில் வைத்து ஏதேனும் தொழிலில் பழக்கவேண்டும். அவனுக்காக ஒருதொழில் பண்ணை ஸ்தாபித்து,தொழிலில் பழக்கம் பெற ஏற்பாடு செய்யவேண்டும். தொழிற்போட்டியில் வெற்றியடைய மனவுறுதியும், உடல் வலிமையும் உடையவன் ஆகும்போது அவனைத் தொழிற் பண்ணையிலிருந்து விடுதலை செய்யவேண்டும்.

இவ்வண்ணம் பல திறப்பட்ட மக்களுக்கும் அவ்வக் காலங்களில் துரைத்தனத்தார் செய்யவேண்டிய கடமைகளை அவ்வாசிரியர் வெகு அழகாக விளக்கிக்கொண்டே போகிறார். தேச மக்களைக் காப்பாற்றும் பொறுப்பு அரசாங்கத்தைச் சார்ந்தது என்பதே அவர் கூறுவனவற்றின் சாரம். சரித்திரமும் இதனையே வற்புறுத்துகிறது.

இங்கிலாந்தின் சமய, சமூக, சுகாதார, கல்வி, தொழில் நிலைமைகளைக் கவனித்தால் 1870-க்கு முன்னும் அல்லது சீர்திருத்தச் சட்டம் ஏற்பட்ட 1830க்கு முன்னும் பொது ஜனங்களின் நிலைமை அநேகமாக இந்தியர்கள் நிலைமையை விடக் கேவலமாகவே இருந்தது. ஜனங்கள் எழுதப் படிக்கத் தெரியாதவர்களாகவே இருந்தனர்; பிணியும் வறுமையும் தாண்டவமாடின; சுதாசார உணர்ச்சி குதிரைக் கொம்பாகவே இருந்தது. 1870 வரை ஜனங்கள் கல்விப்பயிற்சியற்றவராகவே இருந்தனர். 19-வது நூற்றாண்டில் நிகழ்ந்த சம்பவங்களைப்பற்றி ஸ்ரீ. ஜி. எம். டிரிவேலியன் என்ற சரித்திரகாரர் பின் வருமாறு கூறுகிறார்:—விக்டோரியா மகாராணியாரின் அரசாட்சி யிறுதியில், இங்கிலீஷ் துரைத்தனத்தில், ஒரு விசேஷ மாறுதல் ஏற்பட்டது. பொது ஜன தருமஸ்தாபனங்கள் மீது சர்க்கார் கண் காணிப்பும், மாகாண சர்க்கார்மீது மத்திய சர்க்கார் அமுலும் நிலை பெற்றன. பார்லிமெண்டும் மாகாண சர்க்காரும் தேச மகா ஜனங்களின் முழு க்ஷேமத்தையும் கவனிக்கவும், கல்வி, வைத்தியம், சுகாதாரம் முதலிய விஷயங்களுக்காக பொது ஜனங்கள் செய்யும் முயற்சியைத் துரைத்தனத்தார் கவனிக்கவும் வசதி வாய்த்தது. ஆகவே பொது ஜன க்ஷேமத்துக்குத் தேவையான விஷயங்களுக்கெல்லாம் துரைத்தன உதவி யளிக்கும் ஒரு ஏற்பாடும் உருப்பெற்றது."

மற்றும், "ஜனத்தொகை பெருகி, ஜன நாயக உணர்ச்சி முதிர்ந்து, கல்வி விருத்தியாகி, கைத்தொழில் முறை மாறுதலடைந்து, தொழிற்சாலைகளிலும், சர்க்கார் காரியாலயங்களிலும் புருஷர்களும் ஸ்திரீகளும் கூட்டம் கூட்டமாக வேலைக்கு அமரவே, சமூக வாழ்வில் பெண்களுக்குள்ள ஸ்தானத்தைப்பற்றி ஒரு புதிய உணர்ச்சி தோன்றிற்று. முன்னம் பெண்கள் விஷயம் புறக்கணிக்கப்பட்டிருந்ததாயினும், இரண்டு தலை முறைக்குப் பின் பெண் கல்வியும் புருஷர் கல்வியும் சம நிலையை அடைந்தன. குடும்

பத்தில் பெண்களுக்குள்ள ஸ்தானம் சட்ட பூர்வமாக மாறுத லடைந்தது. நடை முறையிலும் பொதுஜன அபிப்பிராயத்திலும் பெண்கள் நிலைமை சட்ட பூர்வமான மாற்றத்தைவிடப் பெரியதோர் மாற்றம் பெற்றது.”

ஐரோப்பிய தேசங்களில் பல, இங்கிலாந்துக்கு முன்னமேயே கல்வி விஷயமாகக் கவலை செலுத்தின. 1717ல் ஜெர்மனியில் கட்டாயக் கல்வி மசோதா நிறைவேற்றப் பட்டது.

இக் கொள்கைகளை எல்லாத் துரைத்தனத்தாரும், ராஜ்ய தந்திரிகளும் இப்பொழுது ஒப்புக்கொண் டிருக்கிறார்கள்.

ஜனங்கள் கற்றறியா மூடரா யிராதபடி பார்த்துக் கொள்ள வேண்டுவது அரசாங்கத்தின் பொறுப்பென, சோஷியலிஸ்டு, பாசிஸ்டு, போல்ஷெவிக் அரசாங்கத்தாரும் சம்மதித்திருக்கிறார்கள். அமெரிக்கா, மெக்ஸிகோ, ஜப்பான் முதலிய தேசங்களும் இக்கொள்கையை ஆதரிக்கின்றன. அரசியல் சுதந்தரம் பெற்ற இந்தியாவும் அவைகளை ஒப்புக்கொள்ளா தொழியாது. மேனாட்டாரைப்போலவே இந்தியர்களும் கல்லாமையையும், அறியாமையையும் விரும்பமாட்டார்கள். மேனாட்டிற்போலவே இந்தியாவிலும் கட்டாயக்கல்வி, நிற்பந்தமின்றி நிலைபெறாதென்றும் நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

## அத்தியாயம் 2.

## முற்காலக் கல்வி முறை



இந்திய மாதா 13 முதல் 16 வரையுள்ள அதிகாரங்களில் இந்தியக் கல்வியைப்பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள் முதல் அத்தியாயத்துக்கு (13-வது அத்தியாயத்துக்கு) "உத்தியோகம் கொடு; அல்லது உயிரை மாய்த்து விடு" எனப் பொருள்படும் "Give me Office or Give me Death" என்னும் தலைப்புக் கொடுத்திருக்கிறார். இத் தலைப்பினால் கன்னி மேயோவிடம் ஹாஸ்ய ரசம் எள்ளளவும் இல்லையென விளங்குகிறது. தன் மூக்கை யறுத்து எதிரிக்கு சகுனத் தடை யுண்டுபண்ணிய வித்துவானைப் போலவே அவ்வம்மாள், அந்த அத்தியாயத்துக்கு மகுடம் சூட்டியிருக்கிறார். இந்தியாவில் நிலைபெற்றிருக்கும் பிரிட்டிஷ் கல்வி முறையை, தம்மை யறியாமலே கன்னி மேயோ மிக வன்மையாகக் கண்டித்துவிட்டார். கல்வி விஷயங்களில் பிரிட்டிஷ் சர்க்காருக்கு பெரிய பொறுப்புண்டென்பதை அவர் ஒப்புக்கொள்வதாகத் தோன்றவில்லை. ஹிந்துக்களைத் தூற்றுவதே அவரது முக்கிய நோக்கமாகக் காணப்படுகிறது. பிரிட்டிஷ் இந்தியக் கல்வி முறையிலுள்ள ஊழல்களுக் கெல்லாம் அவர் ஹிந்துக்களையே குறை கூறுகின்றார். 13-வது அத்தியாயம் பின்வருமாறு தொடங்குகிறது:—இந்தியர்களுக்குக் கட்டாயக் கல்வி அவசியம். கட்டாயப்படுத்தி அவர்களுக்குக் கல்வி கற்பித்தாலொழிய அவர்கள் கல்வி கற்கமாட்டார்கள். பிரிட்டிஷார் வெகு நாட்களுக்கு முன்பே இங்கிலாந்தில் கட்டாயக் கல்வியை ஆரம்பித்திருப்பதனால்தான் அங்கு அதிகமாகக் கல்வி வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ஏன் இந்தியாவிலும் கட்டாயக் கல்வி முறையை பிரிட்டி

ஷார் ஆரம்பிக்கக் கூடாது? இந்தியர்கள் கல்வி கற்காம லிருந்தால் தங்கள் பாடு சௌக்கியமென பிரிட்டிஷார் நினைக்கின்றனர் என இந்திய அரசியல் வாதிகள் ஓலமிடு கின்றனர்.

இதற்கு, சென்னை ராஜதானியில் பிராமணரல்லாதார் தலைவராகிய பனகால் ராஜா தக்க விடை யளித்திருப்ப தாக கன்னி மேயோ கூறுகிறார்.

பனகால் ராஜா அளித்த விடை பின் வருமாறு:—
"தாங்கள் கூறுவது பொருத்தமற்ற வார்த்தை. பிரிட்டிஷார் இந்தியாவிற்கு வருவதற்கு முன் எங்களுடைய கல்வி வளர்ச்சிக்காகப் பிராமணர்கள் என்ன செய்தார்கள். தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்த ஒருவன் கல்வி கற்க ஆரம்பிப் பானுயின் உடனே அவன் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவதற்குத் தனக்கு உரிமை யுண்டென பிராமணன் கூறிவந்தான். கல்வி கற்கும் சுதந்தரம் பிராமணனுக்குத் தான் என அவர்கள் கூறிவந்தனர். பிராமணருடைய ஆதிக்கம் ஒருவாறு குறைந்து, முகமதியர்கள் எங்களை ஆள வந்தபோது பிராமண ரல்லாதாருக்குக் கல்வி கற்கும் உரிமை சிறிது கிடைத்தது. ஆனால் பிரிட்டிஷார் வந்த பின்புதான் கல்வி கற்பதற்கு அனைவருக்கும் சுதந்தரம் கிடைத்தது. பிரிட்டிஷ் ஆட்சி இங்கு நிலவிய பின்பு தான் நாடெங்கும் பாடசாலைகளும், கல்லூரிகளும் சர்வகலா சங்கங்களும் ஏற்பட்டன. இப்பொழுது அனைவரும் ஜாதி வித்தியாச மின்றிப் பள்ளிக்குச் சென்று கல்வி கற்கலா மென்ற உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது".

இதற்கு ஆதாரமாக ஆபே போய் எழுதிய நூலி லிருந்து இரண்டு உதாரணங்களும் எடுத்துக் காட்டப்பட் டிருக்கின்றன. சந்தர்ப்பத்துக் கேற்றபடி கன்னி மேயோ வால் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் உதாரணம் பின் வரு மாறு:—"மற்றவர்கள் கல்வி கற்கக் கூடாதெனத் தடை

செய்துவிட்டால், தன்னுடைய ஆதிக்கத்தை என்றும் நிலை நிறுத்தி வரலாமென்று நினைத்து, தான் கற்ற கல்வியை இரகசியமாக வைத்துக்கொண்டு, எவருக்கும் கல்வி கற்பியாமல் பிராமணன் வாழ்ந்து வந்தான்" என ஸ்ரீ. போய் கூறுகிறார்."

இந்த உதாரணத்தில் உள்ள முதலிரண்டு வாக்கியத்தை கன்னி மேயோ மறைத்துவிட்டார். ஹிந்துக்கள் ஆதிகாலந்தொட்டே கல்வியை விருத்தி செய்து வந்ததையும், பிராமணர்கள் கல்விக் களஞ்சியமாயிருந்ததையும் அவ்விரண்டு வாக்கியங்களிலும் புகழ்ந்துரைக்கப்பட்டிருக்கின்றன. தன் வாதத்துக்கு இடைஞ்சலாயிருக்கும் அந்தப் பகுதி தன் புஸ்தகத்தில் இடம் பெறலாகாதென்பது கன்னி மேயோவின் கருத்துப்போலும்.

ஆபே போயின் யோக்கியதைகளைப் பற்றி நாம் விரிவாக ஒன்றும் கூறவேண்டியதில்லை. ஒரு தலைச்சார்பான அவரது அபிப்பிராயங்களை, பாரபட்சமற்ற மனப்பாங்குடைய எவரும் ஆதாரமாக ஒப்புக்கொள்ள மாட்டார்கள். தாம் கூறியதை கன்னி மேயோ தப்பர்த்தம் பண்ணி, திரித்துக் கூறியிருப்பதாக பனகால் ராஜா எழுதிய கடிதம் என் கையில் இருக்கிறது. பனகால் ராஜா கூறியதாக கன்னி மேயோ கூறும் வார்த்தைகளெல்லாம், கன்னி மேயோவின் சொந்த வார்த்தைகளே யன்றி பனகால் ராஜா கூறியவை யல்ல. மணலைக் கயிறுக்குவதும், துரும்பைத் தூணுக்குவதும் கன்னி மேயோவின் இயல்பெனத் தோன்றுகிறது. வேதம் பயில்வதற்கு 'சூத்திரர்' களுக்கு ஏற்பட்டிருக்கும் தடையைப்பற்றி பனகால் ராஜா பிரஸ்தாபித்திருக்கிறார். இயல்பாகவே, தந்திரசாலியான கன்னி மேயோ, அதைத் தம்மிஷ்டப்படி திரித்துக் கூறியிருக்கிறார். வேத பாராயணம் வேறு; சாதாரண பொதுக் கல்வி வேறு. அவ்விரண்டுக்கும் பரஸ்பர சம்பந்தமே கிடையாது. அன்றியும் அநேகம் நூற்றாண்டுகளுக்கு முன்

பிராமணர்கள் செய்ததற்கும், தற்காலக் கல்வி விஷயத்துக்கும் என்ன சம்பந்தம்? கல்வி விஷயமாக இந்திய சர்க்கார் செய்துள்ளவைகளை யெல்லாம் வானமளாவப் புகழ்ந்து, குறைபாடுகளுக் கெல்லாம் ஹிந்துக்களைக் குறைகூறி, தம் வாதத்தைப் பலப்படுத்த கன்னி மேயோ முயல்வதாகத் தெரிகிறது. பனகால் ராஜா கூறியதும் கட்சிச் சார்பான அபிப்பிராயம். ஆபே போய் அபிப்பிராயங்கள் சந்தர்ப்பத்துக்குப் பொருத்தமானவைக ளல்ல. பிராமணரல்லாதாருக்குக் கல்வி கற்க முடியாதவாறு துஷ்டர்களான பிராமணர்கள் தடை யேற்படுத்தினர்கள் என்று வைத்துக் கொள்வோம். (இது முற்றிலும் பொய் யென்பது நிச்சயமே.) அதனால் நாகரிகம் பெற்ற அரசாங்க மெனப் பெருமை பேசும் இந்திய சர்க்காரின் அட்டூழியங்கள் நியாயமாய் விடுமா? தற்காலத்திய வெள்ளைப் பிராமணர்கள், பண்டைய மஞ்சள் அல்லது கறுப்புப் பிராமணர்களின் ஸ்தானத்திலிருந்துகொண்டு ஐரோப்பிய ரல்லாதார் கல்வி கற்று முன்னேறுதபடி தடை யுண்டுபண்ணுகிறுர்கள் என்று நாம் முடிவு கூறலாமா? பிராமணர்கள் மீது கன்னி மேயோ கூறும் குற்றங்களுக்கு ஆதாரமே கிடையாது. அவர் கூறுவதெல்லாம் பொய் என்று ருசுப்படுத்த நம்மிடத்துத் தகுதியான ஆதாரங்க ளிருக்கின்றன. இவ் விஷயமாக ரேவரண்டு எப். இ. கே. என்னும் ஒரு பாதிரியார், ஒரு சிறிய நூல் எழுதியிருக்கிறுர். ரேவரண்டு. கே, பிராமணர்களிடம் வக்காலத்து வாங்கிப் பேசுகிறவரல்ல. அவர் நூலில் கூறியுள்ள விஷயங்களை ஆதாரமாகக் கொண்டே இது எழுதுகிறேன்.

பிராமணியக் கல்வி முறை வெகுகாலத்துக்கு முன்பே மிகச் சீர் திருத்தம் பெற்றிருந்ததாக ரேவரண்டு. கே தக்க ஆதாரங்களுடன் ஸ்தாபித்திருக்கிறுர். வேதத்தின் பல பகுதிகளும் பூர்த்தியான காலத்தில் பிராமணியக் கல்வி முறையும் திருத்த முற அமைக்கப்பெற்றது. பிராமணீய கல்விச்சாலைகளில் என்னென்ன கற்பிக்கப்பட்டன வென்று

இப்பொழுது ஆராயத் தேவையில்லை. பொதுவாக பிராமணச் சிறுவர்கள் வேதபாராயணத்திலும் தத்துவ ஞானப் பயிற்சியிலும் பாண்டித்தியம் பெற்றனர். பிராமணர்களுக்கு வேதப் பயிற்சி முக்கியமாகக் கருதப்பட்டதுபோல் க்ஷத்திரியர் வைசியர் விஷயத்தில் கருதப்படவில்லை. தத்தம் மரபுத்தொழிலுக்கு ஏற்ற கல்வியை க்ஷத்திரிய வைசிய மாணவர்கள் கற்றுவந்தனர். ஆதி தருமசூத்திரங்கள் எழுதி முடிந்தகாலத்தில்—அதாவது கி.மு. 500—ல்பிராமணீயக் கல்வித்திட்டம் பூரண உருப்பெற்றிருந்தது. பிராமண க்ஷத்திரிய வைசியச் சிறுவர்களுக்குப் பூணூல் பூணும் வழக்கமும் நடப்பாயிற்று. மாணவர்கள் எல்லாம் உபநயனம் பெற்ற பிறகே கல்விகற்க வேண்டுமென்னும் திட்டமும் உறுதிபெற்றது. மாணவர்கள் 12 வருஷகாலம் தங்கள் ஆசிரியர்களிடம் தங்கி கல்வி கற்றுவந்தனர்.

பிற்காலத்து—அதாவது கி.மு. 6-ம் 4-ம் நூற்றாண்டுகளுக்கு இடையில்—க்ஷத்திரியர் கல்வி விஷயத்திலே அதிக கவனம் செலுத்தப்பட்டது. அரசியல் நிருவாகக் கலையும் சாஸ்திர ரீதியில் உருப்பெற்றது. பண்டைக்காலங்களில் ஐரோப்பிய நைட்டுகளுக்கு (European Knights) கல்வி கற்பிப்பது ஐரோப்பாவில் எவ்வாறு மிக முக்கியமெனக் கருதப்பட்டதோ அவ்வாறே இந்திய அரசர் குடும்பத்து மக்களுக்கும் கல்வி கற்பிப்பது முக்கியமெனக் கருதப்பட்டது. துஷ்டரை அடக்கி சிஷ்டரைக் காத்து தேச சேவை செய்யவேண்டிய கடமை அரசர்களையும் அரச குடும்பத்தாரையும் பொறுத்ததென்றும், உண்டுடுத்துக் களித்து ஆடம்பரவாழ்க்கையில் ஈடுபடுவது அரசர் வாழ்க்கைக்கு அடுத்ததல்லவென்றும் ஒரு உணர்ச்சி நாடு முழுதும் ஏற்பட்டது. மனுதர்மப்படி ஒரு வைசியன் "இரத்தினங்கள், முத்துக்கள், பவளங்கள், உலோகங்கள், துணிவகைகள், பரிமளத் திரவியங்கள் முதலியவற்றின் விலை நிர்ணயம் செய்யக் கற்றிருக்கவேண்டும். உழவர்க்குரிய தொழில்களில் நன்குபயிற்சி பெற்றிருக்கவேண்டும்; வர்த்

தகச் சரக்குகளின் குணுகுணங்களை நிர்ணயித்தல், எந்தெந்த தேசத்தில் எந்தெந்த வர்த்தகத்துக்கு சௌகரியமுண்டென அறிதல், கால் நடைகளை வளர்த்தல் முதலியனவும் வைசியன் அறிந்திருக்கவேண்டும்; கூலிகளுக்குச் சம்பளம் கொடுக்கும் முறையும் பல பாஷைகளில் பயிற்சியும் வைசியனுக்கு இருத்தல்வேண்டும்.”என ரேவரண்டு கே கூறுகிருர்.

பிராமணப் பள்ளிக்கூடங்கள் கிராமங்களிலும் நகரங்களிலும் ஏராளமாக ஸ்தாபிக்கப்பட்டிருந்தன. புண்ணிய ஸ்தலங்களிலும் ராஜதானிகளிலும் பல பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கப்பட்டு தற்காலத்திய சர்வகலாசங்கத்துக்கோப்ப நடைபெற்றன. ஸ்ரீ காசியிலும் நாதியாவிலும் இத்தகைய கலா சங்கங்கள் இருந்ததாகத் தெரிய வருகிறது. கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே ஏராளமான குருகுலங்கள் இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டிருந்தன. அக் குருகுலங்களில் மாணவர்கள் ஆசிரியர்களுடன் தங்கி கல்விகற்றுவந்த முறையை ரேவரண்டு. கே மிகப்புகழ்ந்து எழுதியிருக்கிருர். பண வருவாயை மட்டும் கருதி குருகுலங்களில் கல்வி கற்பிக்கப்பட வில்லை. இளைஞர்களுக்குக் கல்வி கற்பிக்க வேண்டுவது தம்மைப் பொறுத்த கடமையென குருகுல ஆசிரியர்கள் நம்பியிருந்தனர். மாணவர்களிட மிருந்து ஆசிரியன் எத்தகைய பிரதிபலனும் பெறுதல் கூடாது. கல்விப்பயிற்சி முடிந்தபிறகு மாணவன் ஆசிரியர்களுக்கு ஏதேனும் தட்சணை வழங்குவான். செல்வர் வீட்டு மாணவர்கள், தாம் கற்ற கல்விக்குத் தக்க தட்சணைகள் ஒருகால் வழங்கி யிருக்கலாம். பொதுவாக ஏழை மாணவர்கள் தொகையே மிகுந்திருக்கும். அவர்கள் கொடுக்கும் தட்சணையை 12 வருஷம் குருகுலத்தில் தங்கிக் கற்ற கல்வியோடு ஒப்பிட்டுப் பார்த்தால் மிகச் சொற்பமாகவே இருக்கும். எளிய வாழ்க்கை நடத்த மாணவர்கள் முக்கியமாகப் பழக்கப்பட்டார்கள். மிக்க கட்டுப்பாடான சட்ட திட்டங்களுக் கடங்கியே அவர்கள் கல்வி பயின்று வந்தார்கள். இச்சட்ட திட்டங்கள் சிலகால் மிகக்கடினமாக இருந்

திருக்கலாம்; ஆனல் அவை ஒருபொழுதும் குரூரமாகவும் ஹிம்சை விளைப்பனவாயும் இருந்ததில்லை. மாணவர்களுக்கு மிகச் சொற்பமான தண்டனையே வழங்கப்பட்டுவந்தது. டிக்கன்ஸ் காலத்தில் இங்கிலாந்தில் மாணவர்களுக்கு வழங் கப்பட்டுவந்த மிருகத்தனமான தண்டனைகள் ஒருபோதும் இந்தியாவில் வழங்கப்படவில்லை. கௌதமர் விதிப்படி மாணவர்க்கு வழங்கப்பட்ட தண்டனையை ரேவரண்டு கே பின்வருமாறு விளக்கியிருக்கிறார்:—

"பொதுவாக மாணவர்கள் அடித்து துன்புறுத்தப் படல் கூடாது. தண்டனை அவசியமென ஏற்பட்டால் ஒரு சிறு கயிற்ருலோ பிரம்பாலோ இலேசாக அடிக்கலாம். வேறு கருவிகளால் ஆசிரியர் தண்டித்தால் அவ்வாசிரியனை, அரசன் தண்டிக்கவேண்டும்." மனுவுக்கும் இத்தண்டனை முறை உடன் பாடுதான். 'மர்ம' ஸ்தானங்களில் அடித்தல் கூடாதென்று மனு பிரத்தியேகம் கண்டித்திருக்கிறார். பய முறுத்தல், பட்டினியிடுதல், குளிர்ஜலத்தில் முழுகுவித்தல் முதலிய தண்டனைகளை அபஸ்தம்பர் விதித்திருக்கிறார்.

"ஆனல் சூத்திரர்கள் கதி என்ன?" என்று ஒரு கேள்வி பிறக்கலாம். ரேவரண்டு கே கூறுவதாவது:—"பிரா மணர்க்குரிய கல்வி சூத்திரர்களுக்கு கற்பிக்கப்படவில்லை. ஆனல் அவர்களது மரபுக்குரிய பயிற்சி அவர்களுக்கு அளிக்கப்பட்டுத்தான் வந்தது. சாமானிய ஜனங்களுக்குத் தேவையான பயிற்சி முறை பிராமணர் கல்வித்திட்டத்தில் இல்லாதிருந்தது; பிற்காலத்தில் பொதுஜனக் கல்வித் திட் டம் உருப்பெற்றபோது அக்குறைபாடு நீங்கிற்று." ஜாதி ஏற் பாடு பல தீமைகளுக்கு இடங்கொடுத்தது உண்மை யெனி னும் கைத்தொழில் பாதுகாப்புக்கும் விருத்திக்கும் அது உதவியாக இருந்தது. ஆபே டுபோய் கூட இவ்விஷயத்தை மிகப் பாராட்டி எழுதி யிருக்கிறார். அவர் கூறுவதாவது:— "சிற்பத்திலும் மற்றும் பல கைத்தொழில்களிலும் இந்தியர் களுக்கும் பண்டைக் காலந்தொட்டே வாசனை யிருந்து வந் தது. பிற்காலத்திலும் அவ்வாசனை விருத்தி யடைந்து இந் தியக் கைத்தொழில் வளர்ச்சி யடைவது நிச்சயம்."

மரபுக் கைத்தொழில்கள் குடும்பத் தலைவர்கள் மூலம் அவரவர் வீட்டில் பயிற்றப்பட்டன. பொதுவாக தகப்பன் தொழிலை மக்கள் பின் பற்றி வந்தனர். அநுபவமுறையில், சிறுவர்கள் தொழிலில் பழக்கப்பட்டனர். தற்காலப் பள்ளிக் கூடங்களில் வழங்கப்படும் "ஏட்டுச் சுரைக்காய்க் கல்வி" அவர்களுக்குக் கற்பிக்கப்படவில்லை. தன் தொழிற் தேர்ச்சியின் இரகசியங்களை மகனுக்குக் கற்றுக்கொடுக்க, தந்தை மிக உற்சாகத்துடன் முயற்சி செய்துவந்தான். பல வித விசித்திர வேலைப்பா டமைந்த ஒரு தகழி இந்திய பொருட்காட்சிச் சாலையில் வைக்கப்பட்டிருக்கிறது. டெல்லி சக்கரவர்த்திகள் அரண்மனையில் வேலை பார்த்துவந்த ஒரு குடும்பத்தார் மூன்று தலைமுறையாக வேலை செய்து அத்தகழியைச் சித்தரித்தார்களாம். தொழிலாளர் சிறுவர்களுக்கு முக்கியமாகத் தொழிற் கல்வியே புகட்டப்பட்டு வந்தது. அநேக தொழில்களுக்கு எழுதப்படிக்கக் கற்றுக் கொள்வது தேவையில்லை யாகையால் தொழிலாளர் சிறுவர்களுக்கு எட்டுக்கல்வி கற்பிக்கப்படவில்லை. ஆனல் தொழிலுக்குரிய சில சம்ஸ்கிருத சுலோகங்களை அவர்கள் மனப் பாடமாகக் கற்றுவந்தனர்."

பிராமணர் கல்வித்திட்டத்தை ரேவரண்டு கே பின் வருமாறு சுருக்கிக்கூறுகிறார்:—"பிராமணர் கல்வித்திட்டத்துக்கும், முகமதியர் கல்வித்திட்டத்துக்கும் மிகுந்த பொருத்தம் இருக்கிறது. ஐரோப்பாவில் நவீன கல்வி முறை நடப்பாவதற்கு முன் வழக்கிலிருந்த கல்வித்திட்டத்துக்குப் பிராமணர் கல்வித்திட்டம் சிறிதளவும் பிற்பட்டதல்ல. பிராமணர் கல்வித்திட்டம் பூரணமானதாயிருந்ததால், எத்தனையோ மகுட மன்னர்கள் ஒழிந்தும், சமூக மாறுதல்கள் ஏற்பட்டும் அது சீர்குலையவில்லை. ராஜீய சமூக மாறுதல்கள் பல, பன்னூண்டுகளாக ஏற்பட்டும் அக்கல்வித்திட்டம் நாளுக்கு நாள் விருத்தியடைந்தே வந்தது. ஆகவே இந்தியர்களால்மட்டு மன்றி ஐரோப்பிய அறிஞர்களாலும் புகழ்ந்து கூறப்பெற்றப் பல மேதாவிகள் இந்தியாவில் தொடர்ச்சியாக இருந்து வந்தனர்."

பௌத்த மதம் தலையெடுத்தபோதும் அம்மதத்துக்குரிய ஒரு கல்வித் திட்டம் உருப்பெற்றது. பௌத்த கல்வித் திட்டத்துக்கும், பிராமணர் கல்வித் திட்டத்துக்கும் பெருத்த வித்தியாசமொன்றுமில்லை. அனேகமாக பிராமண கல்வித் திட்டத்தைத் தழுவியே பௌத்த கல்வித் திட்டம் உருப்பெற்றது. பௌத்த கலா சங்கங்களில் சில மிகப் பெரியனவாயிருந்தன. அக்கால சங்க கல்விச் சிறப்பு உலகமெங்கும் பரவியதனால் சீனதேசத்து மாணாக்கர்களும்கூட அங்குச் சென்று கல்வி பயிலத் தலைப்பட்டனர். அவ்வாறு கல்வி கற்ற சீனர்கள்' சிலர் அக்காலத்திய கல்விச் சிறப்பைப்பற்றிப் பல வரலாறுகள் எழுதிப் போந்தார்கள். பௌத்தக் கல்வி வெறும் சமயப் பயிற்சிமட்டுமன்று. மருத்துவம் முக்கியமாக பௌத்த கலா சங்கங்களில் கற்பிக்கப்பட்டு வந்தது. பௌத்த கலா சங்கங்களில் ஜாதி மத வித்தியாசம் பாராட்டப் படவில்லை. உயர்ந்த ஜாதியாரும், தாழ்ந்த ஜாதியாரும், பௌத்தர்களும், பௌத்தர் ஆகக்கூடியவர்களும், பௌத்தர் அல்லாதாரும் அங்கே சம நிலையில் கல்வி பயிற்றப்பட்டார்கள். பௌத்தத் துறவிகளால் பொது ஜன ஆரம்பக் கல்விக்குண்டான நன்மையும் அற்ப சொற்பமல்ல. பிரிட்டிஷார் பர்மாவில் கால் வைக்குமுன், பௌத்த ஆசிரமத்தாரின் முயற்சிப்பயனால், வயது வந்த ஒவ்வொரு ஆண்மகனும் பர்மாவில் கல்வியறிவுடையனா யிருந்தான்.

ரேவரண்டு கே. கூறுவதாவது:—பர்மா, பிரிட்டிஷ் அரசாட்சிக்குள் வருமுன் பர்மாவிலுள்ள ஆண்மக்களெல்லாம் பௌத்த ஆசிரமங்களில் கல்வி கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்தனர். பிரிட்டிஷ் அரசாட்சியில் அத்தகைய சர்வ வியாபகக் கல்வி இன்னும் தலையெடுக்கவில்லை.

அரசியல் அதிகாரம் முஸ்லிம்கள் வசம் வந்தபின்னும் பிராமணர் கல்வித் திட்டம் உருக்குலையாமலே இருந்து வந்தது.

ரேவரண்டு கே கூறுவதாவது:—"மதவெறி கொண்ட முகமதிய மன்னர்கள் சிலர் பிராமண வித்தியாலயங்களை அழித்து நாசஞ்செய்தனர். எனினும், பிராமணர் கல்வி வளர்ச்சிக்குப் பெரிதும் தடையேற்படவில்லை. பிற்காலத்தில் இந்தியாவில் பௌத்த மதமும், ஹிந்துமதமும் ஒன்றுபட்டுப்போனதினால் பௌத்தர் கல்வித்திட்டம் நாளடைவில் தேய்ந்து மாய்ந்து போயிற்று. ஆனால் பல கஷ்டங்களுக்குள்ளும் பிராமணர் கல்வித்திட்டம் விருத்தியடைந்தே வந்தது. பௌத்த கல்விச்சாலைகள் மறைய மறைய பிராமண கல்விச்சாலைகள் பெருகிவந்தன.

உயர்தர சம்ஸ்கிருதக் கல்வி பெருகிவந்ததுடன் சாமானிய ஆரம்பக் கல்வியும் பரவிவந்த தென்று எற்கனவே கூறியுள்ளோம். ஆனால் கன்னி.மேயோ கூறுகிறபடி இந்திய மக்களெல்லாம் கல்வி யறிவில்லா முழு மூடர்களாயிருந்தார்களா வென்று நாம் இப்பொழுது ஆராயப் புகுகின்றோம்.

ரேவரண்டு கே எழுதுவதாவது:—"பிராமண பௌத்த முஸ்லிம் கல்விச் சாலைகளுக் கொப்ப ஜாதி, மத வித்தியாசமின்றி சர்வ ஜனங்களுக்கும் பிரயோஜன முடைய சாமனிய கல்விச்சாலைகளும் நாடெங்கும் இடம் பெற்றிருந்தன. சாமானிய ஜனங்களுக்கு எழுதப்படிக்க அவாவுண்டானதினாலேயே அப்பள்ளிக்கூடங்கள் தோன்றின. வர்த்தகர்களும், விவசாயிகளும், கைத்தொழிலாளர்களும் அக்கல்விச்சாலைகளில் கல்வி கற்றுவந்தனர்."

ஆகவே தற்காலத்தில் இந்தியப் பொதுமக்கள் கல்லாமையி லாழ்ந்து கிடப்பதற்கு ஜாதிப் பாகுபாடும், பிராமணர்களும் காரணமென்று கூறுவது மனோ நிர்மிதமான பொய்யாகும். ரேவரண்டு. கே கூறுகிறபடி சம்ஸ்கிருத கல்வித் திட்டத்துக்குப் புறம்பாக சாமானிய ஜனங்களுக்கும் பயன்படக் கூடிய ஒரு கல்வித்திட்டமும் அக்காலத்து

நிலை பெற்றிருந்தது. அவ்விருவகைக் கல்வித் திட்டங்களுக்கும் பரஸ்பர சம்பந்தம் கிடையாது; ஒன்றை மற்றொன்று தழுவி நிற்கவுமில்லை. சாமானியக் கல்விச்சாலைகள் தொழிலாளர்களுக்கும், விவசாயிகளுக்கும் தேவையான கல்வியைப் புகட்டின. சம்ஸ்கிருதக் கல்விச்சாலைகள் மதபோதனையும், உயர்தரக்கல்வியும் அளித்தன. எக்காலத்தில் இத்தகைய சர்வஜனப் படிப்பு ஆரம்பமாயிற்றென்று அறிய முடியாதிருக்கிறது; ஆனால் முஸ்லிம் அரசாட்சி காலத்திலும் அப் படிப்புமுறை பூரண அமுலிலிருந்ததென்றும், பிரிட்டிஷார் இந்தியாவில் கால்வைத்த காலத்தில் கூட அது அழிந்தொழிந்து போகவில்லை யென்றும் உறுதியாகக் கூறலாம். இவ் விஷயத்தைப் பற்றிய சர்க்கார் தஸ்தாவேஜிகள் அபூர்ணமானவைகளா யிருந்தாலும் இந்த சர்வஜனப்படிப்பு அக்காலத்தில் சர்வ வியாபகமாயிருந்ததென்று அவை மூலம் அறிய முடிகின்றது. பிரிட்டிஷ் இந்திய தஸ்தாவேஜிகளிலிருந்தும், பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் தஸ்தாவேஜிகளிலிருந்தும் ரேவரண்டு. கே சில ஆதாரங்களைப் பின் வருமாறு சுருக்கிக் கூறுகிறார்.—“பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியக் கல்வி மேற்பார்வைப் பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்கு முன் நாட்டுப் பள்ளிக்கூடங்கள் எங்கணும் பரவியிருந்தன. ஒன்றோ இரண்டோ ஜில்லாக்களில் மட்டுமன்றி இந்தியா முழுதும் அவை பரவியிருந்தன. சில ஜில்லாக்கள்எனைய ஜில்லாக்களை விட கல்வி விஷயத்தில் மிக முற்போக்கடைந்திருந்தன. 1822-26ல் சென்னை ராஜதானியில் நடத்திய விசாரணையினால், பள்ளிப் பருவச் சிறுவர்களில் ஆறிலொருபகுதியார் ஏதேனும் ஒருவகைக் கல்வி கற்று வந்ததாகத் தெரியவந்தது. 1823-28ல் பம்பாய் மாகாணத்தில் நடத்திய விசாரணையில் பள்ளிப் பருவச் சிறுவர்களில் எண்மரில் ஒருவர் கல்விகற்றதாகக் காணப்பட்டது. வங்காளத்தில் ஒரு ஜில்லாவில் 100க்கு 13½ பெயரும், வேறொரு ஜில்லாவில் 100க்கு 9 பேரும் கல்வி கற்றுவந்ததாக விளங்கிற்று. வங்காள - ஆண்மக்களில் ஐந்திலொரு பகுதியார் எழுதப்படிக்கச் சக்தியுடையவர்களா யிருந்தன ரென்று

வில்லியம் வார்டு என்பார் கூறுகிறார். மேலே கூறிய மூன்று மாகாணங்களைவிடச் சில மாகாணங்களில் கல்வி கற்போர் தொகை சிறிது குறைவாக இருக்கலாம். ஆகவே ஆரம்பக் கல்வி சர்வ வியாபகமானதாயிருந்தாலும் ஆண்மக்களில் பெரும்பாலார் கல்வி கற்பிக்கப்படவில்லை. பெண்கள் ஒரு பொழுதும் கல்வி கற்பிக்கப்பட்டது மில்லை."

நாட்டுப் பள்ளிக்கூடங்கள் அருகிவந்த காலத்தில் கிடைத்த சில புள்ளி விவரங்களை ஆதாரமாகக் கொண்டு ரேவரண்டு கே மேலே கூறியபடி முடிவுகட்டி யிருக்கிறார். ஆனால் மேலே கூறப்பட்ட புள்ளி விவரங்கள் சரியானவைக ளல்ல. விசாரணை நடத்திய உத்தியோகஸ்தர்களின் ஜாக்கிரதைக் குறைவினால் வாஸ்தவத்தில் கல்விகற்ற சிறுவர்களின் தொகையில் மிகக் குறைவான புள்ளி விவரங்களே சர்க்காருக்குக் கிடைத்தன வென்று பாஞ்சால சர்க்கார் உத்தியோகஸ்தர்களே ஒப்புக்கொண் டிருக்கிறார்கள். பெண்களுக்குக் கல்வியே கற்பிக்கப்படவில்லை யென்று ரேவரண்டு கே கூறுவதற்கும் ஆதாரமில்லை. ரேவரண்டு கே தமது நூலின் கடைசி அதிகாரத்தில் கூறும் கீழ்வரும் விஷயங்கள் மிக முக்கிய மானவை யாகும்.

"யாதொரு மாற்றமு மின்றி நீண்டகாலம் தொடர்ச்சியாக அமுலிலிருந்த ஒரு கல்வித் திட்டம் இந்தியாவைத் தவிர வேறெந்த நாட்டிலும் நிலைபெற்றிருக்கவில்லை. அது நீண்டகாலம் அமுலிலிருந்ததினாலே அதில் முக்கியமான அமிசங்கள் பல இருந்திருத்தல் வேண்டுமென்பதும், தேச மக்கள் தேவையைப் பூர்த்தி செய்யத் தக்கதாயிருந்ததென்பதும் வெளிப்படை. அக்கல்வி முறையால் பல பெரியாரும் ஆராய்ச்சிக்காரரும் தோன்றினர். அவர்களது ஆராய்ச்சிப் பயனால் உலகத்துக்குக் கிடைத்த நன்மையோ பிரம்மாண்டமானது. அநேக உயரிய லட்சியங்கள் அக்கல்வி முறையில் உருப் பெற்றன. அவை பிற்கால ஆராய்ச்சிக்காரருக்கு அளப்பரிய உதவியளித்தன."

ரேவரண்டு கே ஹிந்துக்களுக்காகவோ இந்தியர்களுக்காகவோ பரிந்து பேசுபவரல்ல. ஆகவே, அவரது நூலிலிருந்து மேலே எடுத்துக் காட்டிய ஆதாரங்களினால் கன்னி மேயோவின் கூற்றுகள் எவ்வளவு ஆதாரமற்றவை என்பது இனிது விளங்கும்.

அதிர்ஷ்ட வசமாய் நமக்குச் சில துரைத்தன தஸ்தாவேஜிகள் ஆதாரமாகக் கிடைத்திருக்கின்றன. பிரிட்டிஷார் வருமுன் நாட்டுப் பள்ளிக்கூடங்கள் இந்தியாவில் சர்வ வியாபகமா யிருந்தனவென்றும், அவைகள் நமது தேவைகளைப் பூர்த்திசெய்யப் போதியனவா யிருந்ததென்றும், அவைகளை நாசஞ்செய்த பிரிட்டிஷார், அவைகளின் ஸ்தானத்தில் நமது தேவைகளைப் பூர்த்திசெய்யத்தக்க பள்ளிக்கூடங்களை ஸ்தாபிக்காது போயினர் என்றும் அந்த தஸ்தாவேஜிகள் செவ்வனே விளக்கிக் காட்டுகின்றன. அந்த தஸ்தாவேஜிகளில் மிகவும் முக்கியமானது டாக்டர் லீட்னர் எழுதிய பாஞ்சால நாட்டுப் பள்ளிக்கூட சரித்திரமாகும். டாக்டர் லீட்னர் லாகூர் சர்க்கார் கலாசாலையின் தலைவராயிருந்த பிறகு, பாஞ்சால வித்யா இலாகாத் தலைவரானவர். நாட்டுப் பள்ளிக்கூட விஷயமாக அவர் மிகக் கஷ்டப்பட்டு சேகரித்த விஷயங்களை யெல்லாம் ஆதாரமாகக் கொண்டு சர்க்கார் செலவில் 1882ல் அவர் ஒரு புஸ்தகத்தை வெளியிட்டார். முன் பாஞ்சாலத்தில் உத்தியோகம் நடாத்தியவர்களும் மற்றும் ஆசிரியர்களும் கூறியுள்ள, இவ்விஷயத்துக்குப் பொருத்தமான தகவல்களையும் தற்செயலாய் டாக்டர் லீட்னர் அந்த புஸ்தகத்துடன் சேர்த்துப் பிரசுரித்தார். பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வந்தகாலத்தில் இந்தியா கல்வி விஷயமாக எந்நிலைமையி லிருந்த தென்பதை விளக்கிக் காட்ட டாக்டர் லீட்னரின் நூலிலிருந்து ஏராளமாக மேற்கோள் எடுத்துக் காட்ட நேர்ந்ததற்கு நாம் யாரிடமும் மன்னிப்புக் கேட்கத் தேவையில்லை. ஏனென்றால், உண்மையை விளக்குவதற்கு, கஷ்டப்பட்டு நேர்முகமாக ஆராய்ச்சி செய்தவர்களின் அபிப்பிராயங்களை ஆதாரமாகக் கொள்ளவேண்டுமே

தவிர, அரசியல் பிரசாரம் செய்ய வந்த கன்னி மேயோ போன்றவர்களின் அபிப்பிராயங்களை ஆதாரமாகக் கொள்ள லாகாது. இந்தியக் கிராம நிருவாகத்துடன் நாட்டுப் பள்ளிக் கூடங்கள் மிக நெருங்கிய சம்பந்த முடையனவா யிருந்த தினால் டாக்டர் லீட்னரின் நூலிலிருந்து கீழ்வரும் பகுதியை இங்கே எடுத்தாள்வது அநாவசிய மாகா தென்று நினைக்கிறேன்.

"ஸ்ரீ. லட்லோ அபிப்பிராயப்படி, இந்து மதத்தின் ஒரு முக்கியாம்சம் அதன் கிராம நிருவாகமாகும். ஒரு கிராமம் ஒரு வெறும் ஜனக் கும்பலன்று; வாஸ்தவத்தில் கிராமம் ஒரு சிறு தேசமாகும்; ஒரு தேசத்துக்குரிய உறுப்புகளெல்லாம் கிராமத்தில் அமைந்திருக்கின்றன. கிராமத் தலைவனே அக் கிராம நிருவாகத்துக்குப் பொறுப்பாளி. அவருக்கு உதவியாக ஒரு கணக்கப்பிள்ளை உண்டு. கிராமத்தைச் சேர்ந்த நிலபுலன்கள், அததன் சொந்தக்காரர், அவர்கள் நிலத்தை உழுது பயிர்செய்யும் ஒப்பந்தமுறை, முதலிய வரலாறுகளெல்லாம் கிராமக் கணக்கனிடமுண்டு. கிராமத்து ரெஜிஸ்டிராரும், கிராமத்தாருக்கு வேண்டிய கடிதங்கள் எழுதுவதும் கிராமக்கணக்கனே. பின்னர் முறையே போலீஸ் அதிகாரியும் புரோகிதனும் உபாத்தியாயரும் கிராமங்கள் தோறும் உண்டு. இவர்களெல்லாம் கூலிச் சம்பளக்காரரல்ல. வமிச பரம்பரை உரிமையுடைய கிராமவாசிகளே. கிராமத்தின் நன்மை தின்மைகளில் அவர்களுக்கும் பங்குண்டு. உபாத்தியாயர் அநேகமாக ஜோசியராயுமிருப்பார். ஆனால் இந்த உத்தியோகங்கள் எல்லாம் இப்பொழுதும் அடியோடு ஒழிந்துவிடவில்லை. புது நாகரிகம் பரவாத கிராமங்களிலெல்லாம் அவர்கள் இப்பொழுதும் இருந்து வருகிறார்கள். பஞ்சமர்களைத் தவிர ஏனைய ஜாதிச் சிறுவர்களெல்லாம் எழுதப்படிக்கவும் கணக்கு வைக்கவும் சக்தியுடையவர்களா யிருக்கிறார்கள்."

ஈஸ்டிந்தியா கம்பெனி டைரக்டர்கள் இந்தியர்களுக்காகப் பிரசாரம் செய்பவர்களல்ல. எனினும், 1854-க்கு

முன்னும் 1870—71-லும் (இருந்து வந்த) பிரிட்டிஷ் இந்திய கல்வி முறை என்ற நூலில் அதன் ஆசிரியர் ஸ்ரீ. எ. பி. ஹோவல், கம்பெனி டைரக்டர்கள் 1814 ஜூன் மாதத்தில் அனுப்பிய யாதாஸ்திலிருந்து பல பகுதிகளை மேற்கோளாக எடுத்துக் காட்டி யிருக்கிறார். நாட்டுப் பள்ளிக்கூடங்கள் எவ்வளவு சீரான நிலைமையில் இருந்தனவென்றும் அப்பள்ளிக்கூட நிர்வாகத்துக்குத் தேவையான பணம் எவ்வாறு கிடைத்தனவென்றும் அம்மேற்கோள்கள் செவ்வனே விளக்கிக் காட்டுகின்றன. கன்னி மேயோவின் பிதற்றலை அறிந்தவர்களுக்கு ஸ்ரீ. எ. பி. ஹோவல் எழுதிய நூலிலடங்கியுள்ள விஷயங்கள் எவ்வளவோ ஆறுதலளிக்குமென்பது நிச்சயம்.

டைரக்டர்கள் யாதாஸ்து கூறுவதாவது:—"இந்தியாவில் வழங்கும் நாட்டுக் கல்வி முறையைப்பற்றி இந்த சந்தர்ப்பத்தில் சிறிது கூற விரும்புகிறோம். கிராம மாணவர்களின் படிப்புச் செலவுக்காகக் கிராம மாசூலில் ஒரு பகுதி ஒழுங்காகக் கொடுக்கப்படுகிறது. பொதுஜன ஊழியர்களாகக் கருதப்படும் ஆசிரியர்கள்உதவிக்காக ஏராளமான மானியங்களும் பிரபுக்களால் விடப்பட்டிருக்கின்றன."

"இந்த ஆசிரியர்கள் வமிச பரம்பரையாகக் கையாண்டு வரும் போதனு முறையை, முன்னம் சென்னையில் பாதிரியாராயிருந்த டாக்டர் பெல்லின் உபதேசப்படி எங்களால் ஒப்புக்கொள்ளப்பட்டு ஆங்கில தேசீயப் பள்ளிக்கூடங்களிலும் அப்போதனுமுறை நடப்பாக்கப்பட்டிருக்கிறது. இந்திய பாஷைகளைக் கற்றுக்கொள்வதற்குஅம்முறை மிக எளிதாகவும் உபகாரமாகவும் இருக்கிறது."

'அரசியல் புரட்சியா லுண்டாகும் மாறுதல்களையும் குழப்பங்களையும்கூட ஹிந்துக்களின் மதிக்கத்தக்க இந்தப் போதனுமுறை எதிர்த்து நின்றிருக்கின்றது. இப்போதனு

முறையால் கிராமவாசிகள் தேர்ச்சி பெற்ற கணக்கர்களாகவும் ராயசக்காரர்களாகவும் சிறப்புப் பெற்றிருக்கிறார்கள். அந்தப் போதனுமுறை மிகவும் நன்மை பயக்கக்கூடியதென்று நாங்கள் பூரணமாய் நம்புவதனால் அம்முறையின் தற்கால நிலைமையைப்பற்றி நீங்கள் செவ்வையாக ஆராய்ச்சி செய்யவேண்டுமென்றும், அவ்வாராய்ச்சியின் முடிவை விரைவில் எங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்றும் நாங்கள் விரும்புகிறோம். அத்துடன் கிராம ஆசிரியர்களின் உரிமைகளையும் சுதந்தரங்களையும் நீங்கள் நன்கு மதித்து சர்க்கார் உதவியும் அளிக்கவேண்டுமே; விசேஷ பாண்டித்தியமுடைய ஆசிரியர்களுக்குப் பிரத்தியேக வரிசைகளும் நீங்கள் வழங்கவேண்டும் ஏனெனில் உத்தியோகத் தோரணையில் அவர்கள் சாமானியர்களாகக் காணப்பட்டாலும் இந்தியர்களெல்லாம் கிராம ஆசிரியர்களிடம் மிகுந்த பக்தி விசுவாசத்துடன் நடந்துகொள்வதாக நாங்கள் அறிகின்றோம்."

டைரக்டர்களின் மேற்கூறிய அபிப்பிராயத்தைப் பற்றி ஸ்ரீ. ஹேளவல் கூறுவதாவது:—"இந்த யாதாஸ்தில் குறிப்பிட்டிருக்கிறபடி மிகப் புராதன காலம் முதற்கொண்டே கிராமப் பள்ளிக்கூடங்கள் இந்தியா முழுதும் இருந்து வந்தன என்பது நிச்சயம். வங்காளத்தில் மட்டும் **1835-ல் 100,000** கிராமப் பள்ளிக்கூடங்கள் இருந்ததாக ஸ்ரீ. ஆதம் மதிப்பிட்டிருக்கிறார். சென்னையில் ஸர் தாமஸ் மன்ரோ 1822ல் செய்த ஒரு விசாரணைப்படி 12,498 பள்ளிக்கூடங்களும் 188,650 மாணவர்களும் இருந்ததாகத் தெரிகிறது. அதே காலத்தில் பம்பாய் மாகாணத்திலும் ஏராளமான கிராமப் பள்ளிக்கூடங்கள் இருந்து வந்ததாகவும் தெரிகிறது. ஒவ்வொரு மாகாணமும் நமது (பிரிட்டிஷ்) ஆளுகைக்குள் வந்து, கொடுங்கோன்மையி லிருந்து மீட்டதற்கு இந்தியர்கள் நம்மிடம் பக்தியும் விசுவாசமும் காட்டி வந்த காலத்தில், நாடெங்கும் பரவியிருந்த கிராமப் பள்ளிக்கூடங்களை விருத்தி செய்து கல்வியபிவிர்த்திக்குரிய எத்தனங்கள் நாம் செய்யாதொழிந்தது மிக வருந்தத்தக்கதாகும்."

டைரக்டர்கள் யாதாஸ்தின் இரண்டாவது பாரா (Paragraph) பிரத்தியேகம் கவனிக்கத் தக்கதென்று டாக்டர் லீட்னர் கூறுகின்றார். அது வருமாறு:—"இந்திய கைத்தொழிற் சாமான்களை இங்கிலாந்தில் கொண்டு சென்று பரவச் செய்தது முதல், இங்கிலீஷ் தொழிலாளர்கள் கைத்தொழிற் றேர்ச்சி பெற்றது போலவே இந்திய கிராமப்பள்ளிக்கூடப் போதனுமுறையை நமது பள்ளிக்கூடங்களில் நடப்பாக்கியதுமுதல் நமது கல்வி முறையும் சிறப்படைந்தது."

பாஞ்சாலப் பள்ளிக்கூடங்களைப் பார்த்து வரும்படி 1688-ல் அனுப்பப்பட்ட ஒரு வங்காளப்பள்ளிக்கூட இன்ஸ்பெக்டர் சர்க்காருக்கனுப்பிய யாதாஸ்தில் பின்வருமாறு கூறியிருக்கிறார்:-"கிராமக் கல்வித்திட்டம் சாஸ்திரங்களை ஆதாரமாகக் கொண்டு அமைக்கப்பட்டிருக்கிறதனால் கல்விப் பயிற்சி ஒரு மதச் சடங்காகக் கருதப்படுகிறது; ஆகவே ஹிந்துக்களின் தினசரி வேலைகளுக்குக்கூட ஒரு புனிதத் தன்மை ஏற்பட்டிருக்கிறது. கிராமப் பஞ்சாயத்துமூலம் கிராம நிருவாக முழுதும் கிராமத்தார் கையிலே இருந்து வருகிறது. இது கிராமக் கல்வியபிவிர்த்திக்குப் பெரிதும் அனுகூலமாக இருக்கிறது. தற்காலமுள்ள கிராமப்பள்ளிக்கூடங்கள் அழிந்தொழிந்து போகும் நிலைமையிலிருந்தாலும் கிராமக் கல்வியின் மகிமை குறைந்து போகவில்லை. தற்காலத்திலே, கல்விப்பயிற்சி ஒரு மதச்சடங்கு என்னும் உணர்ச்சி தேய்ந்துகொண்டு வருகிறது; கிராமப் பஞ்சாயத்து நிருவாகமும் அநேகமாக ஒடுங்கிவிட்டதென்றே சொல்லலாம்; கிராமக் கைத்தொழில்களெல்லாம் பாழாகிவிட்டன. வரிப்பளுவு ஜனங்களை வாட்டி வருகிறது. ராஜாங்க பாஷையும் அந்நிய பாஷையாய்விட்டது. தேசியக் கல்வியில் பொது ஜனங்களுக்குள்ள அவா நாள் தோறும் குறைந்து வருவதனுல், அன்னிய ஆட்சியால் விளைந்த இந்தத் தீமையைப் பரிகரிக்க சர்க்கார் ஏதாவது செய்துதான் ஆகவேண்டும். பிரிட்டிஷ் பாதுகாப்பில் ராஜீயமாகவும் சமுதாயச் சார்பாகவும் செல்வநிலைச் சார்

யாகவும் சீர்திருத்தம் பெற்ற ஒரு வாழ்க்கை முறை ஏருப் படும்வரை, தற்காலீகமாவது சர்க்கார் ஒரு ஏற்பாடு செய்ய வேண்டியது இன்றியமையாததா யிருக்கின்றது."

இந்தியர்கள் கல்லாமையையும் மடமையையும் விரும்பு கிறார்கள் என்று கன்னி மேயோ கூறுவது விஷமத்தனமா கும்; அவரது பொய் மூட்டைக்கு எள்ளளவும் ஆதாரம் கிடையாது.

டாக்டர் லீட்னர் யாதாஸ்தின் ஒரு பகுதி கூறுவதா வது:—"ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் சீக்கியர்களுக் கும் கல்விப் பயிற்சியிலுள்ள விருப்பத்தையும் அபிமானத் தையும் என்னால் ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியவில்லை. எத்தொழில் செய்யவும் அவர்கள் வாசனையும் லாயக்கு முடையவர்களா யிருக்கிறார்கள். 3000 வருஷங்களுக்கு முன் இருந்தது போலவே, இந்தியா இப்பொழுதும் இந்தி ரிய நிக்கிரகம், அறிவாராய்ச்சி, தியானம் முதலிய உயர்ந்த லட்சியங்களுக்கு இருப்பிடமாகவே இருந்து வருகிறது. நாம் கேவலமாக நினைக்கும் இந்தியர்கள் இந்த அம்சங்க ளில் நம்மைவிட மேலானவர்களாகவே இருக்கிறார்கள். விளம்பர சௌகரியங்கள் இல்லாமையினாலேயே இந்தியர் பெருமை மேனாட்டில் சரியாக எட்டுகிறதில்லை. ஐரோப் பியர்களில் ஆயிரத்தி லொருவர் ஏதாவது ஒரு பெரிய காரி யம் செய்துவிட்டால் அது மேனாட்டு நாகரிகப் பயன் என்று மிகவும் பாராட்டிப் பேசப்படுகிறது. கீழைத்தேசங் களில் மலிவான பத்திரிகைகள் பிரசுரிக்கப்படவும் ஏராள மாக இருப்புப்பாதைகள் போடப்படவும், கீழைத் தேசத் தார் போலி மேனாட்டு நாகரிகத்தைப் பின்பற்றாதிருக்கவும் நேர்ந்தால், பண்டைக்காலத்திற் போலவே, இந்தியாவின் பெருமையை உலக முழுதும் ஒப்புக்கொண்டு புகழுமென் பது திண்ணம்."

இதுபோன்ற ஆதாரங்கள் இன்னும் எத்தனைவேண்டு மானாலும் காட்டலாம். ஆனால் மேலே எடுத்துக்கூறிய

திருஷ்டாந்தங்கள் போதுமானவை. பிரிட்டிஷ் நூலாசிரியர்களும், உத்தியோகஸ்தர்களும், ஈஸ்டிந்தியா கம்பெனி டைரக்டர்களும் இந்தியர் மீது பரிவுடையவர்கள் என்று கன்னி மேயோ கூறுவாராகுல் அவர் ராஜாவைவிட மிகுந்த ராஜபக்தி யுடையவரென்று தான் எண்ணவேண்டும். எனினும் வாசகர்களுக்குக் கொஞ்சம் கூட திருப்தியளிக்கும் பொருட்டு டாக்டர் லீட்னர் யாதாஸ்தின் சில பகுதிகளைக் கீழே தருகின்றோம். பாஞ்சாலம் பிரிட்டிஷார் ஆளுகைக்கு வருமுன் பாஞ்சாலக் கல்வி நிலை எத்தன்மைத்தா யிருந்த தென்று அவை நன்கு விளக்கும். அவை பின்வருமாறு:—

"கல்வி விஷயத்தில் பிற்போக்கான நிலைமையி லிருக்கும் ஹூஷியர்பூர் போன்ற ஜில்லாக்களில் ஆண்மக்களில் 100-க்கு 19.65 பேர்கள் கல்வி கற்று வந்ததாக 1852-வது வருஷத்திய செட்டில்மெண்டு ரிப்போர்ட்டினுல் தெரிய வருகிறது; தற்காலத்திலோ 28187 ஜனங்களுக்கு ஒரு துரைத்தன அல்லது துரைத்தன உதவி பெற்ற பள்ளிக்கூடம் வீதமே இருந்து வருகிறது. பிற்காலத்தில் பாஞ்சாலத்தோடு சேர்த்துக்கொள்ளப்பட்ட டெல்லி ஹிச்சார் மாகாணங்களில் 4476 நகரங்களும் கிராமங்களும் இருந்தன. 1854-ல் எடுத்த ஜனத்தொகைக் கணக்கின்படி டெல்லி ஹிச்சார் மாகாணங்கள் உட்பட்ட பாஞ்சாலத்தில் 33,355 நகரங்களும் கிராமங்களும் இருந்தனவென்று தெரியவருகிறது. 1849ல் எடுத்த சென்சஸ்ஸிலும் அதே தொகை இருந்திருக்க வேண்டும். 1854-ல் வெளிவந்த கணக்குப்படி இருந்துவந்த 3,372 குடிப்பள்ளிக் கூடங்களையும், மற்றும திண்ணைப் பள்ளிக் கூடங்களையும் விட்டுவிட்டு, பாஞ்சாலத்தில் கல்வி கற்பிக்கும் 33,355 மசூதிகளும் ஆலயங்களும் தர்மசாலைகளும் இருந்ததாகவும், ஒவ்வொன்றிலும் 10-மாணவர் படித்து வந்ததாகவும் வைத்துக் கொண்டால், பாஞ்சாலத்தில் அக்காலத்தில் 335,550 மாணவர்கள் கல்வி கற்றிருக்க வேண்டும். தற்காலத்தில் சர்க்கார் பள்ளிக்கூடங்களிலும், உதவிப் பள்ளிக்கூடங்களிலும் கல்வி கற்கும் மாணக்கர் தொகையோ 113,000 தான். இத்துடன் திண்ணைப் பள்

ளிக்கூட மாணவர்கள் தொகையைச் சேர்த்துக் கொண்டா லும் ஆக மொத்தம் 157,623 மாணவர்களே கல்விகற்று வருவதாக ஏற்படும். சீக்கிய ஆசிரியர் வரலாறுகளிலிருந்து ரஞ்சித் சிங்கு காலத்தில் பாஞ்சாலக் கல்வி நிலை எத்தன் மைத்தாயிருந்த தென்று இலேசாய் அறிந்துகொள்ளலாம். ஏனைய வகுப்புகளிலும் படிப்பாளிகள் தொகை மிகுந்தி ருந்த தாகவே காணப்படுகிறது. அரசியல் நிருவாக ஜனத் தொகை ரிப்போர்ட்டுகளாலும் பாஞ்சாலத்தில் கல்வி மிகப் பரவி இருந்ததாகவே தெரியவருகிறது. பழைய பள்ளிக் கூடங்களை அடியோடு தொலைத்த பிரிட்டிஷார், அவைகளின் ஸ்தானத்தில் வேறு பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தாமையி னல் ஜனங்களுக்குப் பெரிய துரோகம் செய்துவிட்டார்க ளென்றே சொல்லவேண்டும். பழைய பள்ளிக்கூடங்கள் அழிந்த வகையை டாக்டர் லீட்னர் விளக்கி, கடைசியாக அவர் கூறும் முடிவாவது:—

(1) பிரிட்டிஷார் பாஞ்சாலத்தைக் கைப்பற்றுமுன் ஆரம்பக் கல்விச்சாலைகளும், உயர்தரக் கல்விச்சாலைகளும் ஏராளமாக இருந்தன.

(2) பாஞ்சால நிருவாக "போர்டார்" பள்ளிக்கூட மானிய நிலங்களை யெல்லாம் கைப்பற்றிக் கொள்ளும்படி கட்டளை யிடப்பட்டனர்; ஆலயங்கள், தருமசாலைகள் ஆதி யனவற்றின் மானியங்களுங்கூட கைப்பற்றப்பட்டன. ஆலய, தருமசாலை மானியங்கள் பெருவாரியான வருமான முடையவைகளா யிருந்தன.

(3) அதன் பயனக தருமசாலைகளும் வித்யாலயங்க ளும் அழிந்தொழிந்தன.

(4) எவ்வளவோ எச்சரிக்கை செய்தும் பாஞ்சாலக் கல்வி இலாகா அதிகாரிகள் கிராமப் பள்ளிக்கூடங்களை அழித்ததுமன்றி தமது சொந்தப் பள்ளிக்கூடங்களையும் அலட்சியம் செய்தனர்.

இவையாவும் நடைபெற்றது நாகரிகம் வாய்ந்த 1880-வது வருஷத்தில் என்று வாசகர்கள் ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

இந்தியாவிலே 'பெண் கல்வி' குதிரைக் கொம்பா யிருந்ததென்று கன்னி மேயோ கருதுவதாகத் தெரிகிறது. இந்தியர்கள் பெண்கல்விக்கு எப்பொழுதும் எதிரிடையா கவே இருந்துவந்ததாக அவர்கூறுகிறார். இதுமுதல் பொய், இந்தியாவின் கல்லாமையை நிர்ணயிப்பதற்கு அவர் மிகக் குறும்புத்தனமாகக் கணக்குப்போட்டுப் பார்க்கிறார். பிரிட்டிஷ் இந்திய ஜனத்தொகை 247,000,000. இதிற் பகுதி பெண் பாலார். ஆகவே, கல்விப் பயிற்சி யுடையவர்களாகக் கணிக்கப்பட வேண்டியவர்களில் 127,000,000 பேரை அவர் ஒதுக்கித் தள்ளிவிடுகின்றனர். மீதமுள்ள தொகையி லிருந்து 6 கோடி தீண்டாச் சாதியாரையும் கழித்து தள்ளி விடுகின்றனர். இது இரண்டாவது பொய்.

கன்னி மேயோவின் முதல் பொய்யை இப்பொழுது சிறிது ஆராய்வோம்.

ஹிந்துக்கள், மாதர்களை எவ்வாறு மதித்துவந்தன ரென்று பின்னர் விளக்குவோம். இப்பொழுது பெண்க ளின் கல்வி நிலையைப்பற்றி மட்டுமே ஆராய்ச்சி செய்யப் புகுகிறோம். பாஞ்சாலத்தைக் கைப்பற்றுமுன் பாஞ்சாலத் தில் பெண்கல்வி எவ்வாறிருந்ததென்று நமது டாக்டர் லீட்னர் வெகு அழகாகக் கூறியிருக்கிறார். அவர் கூறுவதா வது:—"பாஞ்சால மாதர்கள் பொதுவாகக் கல்விப் பயிற்சி யுடையவர்களா யிருந்ததுமன்றி, பிறருக்குக் கல்விபுகட்டும் ஆற்றலுடையவராகவும் இருந்தனர். பாஞ்சாலத்தை பிரிட்டிஷார் கைப்பற்றுமுன் டெல்லியில் ஆறுபெண் பள்ளிக் கூடங்கள் இருந்தன; அவ்ஆறு பள்ளிக்கூடங்களையும் பாஞ் சால மாதர்களே நடத்தி வந்தனர். வேறு பல இடங்களி லும் பாஞ்சால மாதர்கள் இவ்வண்ணம் பள்ளிக்கூடங்கள்

ஸ்தாபித்து நடாத்தி வந்திருக்கிறார்கள். முஸ்லிம் விதவைகளில் பெரும்பாலார், சிறுமிகளுக்கு குர்ஆன் கற்பிப்பதை ஒரு புண்ணிய கைங்கரியமாக மதித்துவந்தனர். மேற்கு மாகாணங்களைவிட பெண்கல்வி விஷயத்தில் டெல்லி மாகாணம் பிற்போக்குடையதாக விருப்பினும் 1845ல் டெல்லியில் அனந்தம் திண்ணைப் பள்ளிக்கூடங்கள் இருந்ததாகத் தெரியவருகிறது.

1822-ல் கல்விக் கமிஷனர்கள் முன் டாக்டர் லீட்னர் கூறிய கீழ்வரும் சாட்சியங்களால் நாட்டுப் பெண்கல்வி வரலாறு விசதமாகும்:—

கேள்வி. 41. தங்களுக்குப் பழக்கமுள்ள மாகாணங்களில் பெண்களுக்குக் கல்வி கற்பிக்கும் சுதேச முறை ஏதாவதுண்டா? உண்டானால் அது எத்தன்மையது?

விடை. 41. ஆம். மௌல்விகளும், பாயிகளும் தத்தம் மனைவிகளுக்குத் தாமே கல்வி கற்பிக்கின்றனர். அம் மனைவிகள் தம் மக்களுக்கு ஒரு குறிப்பிட்ட வயது வரை கல்வி புகட்டுகிறார்கள். உயர் குடிப் பிறந்த முஸ்லிம்களின் மனைவிகளுக்கும் எழுதப் படிக்கத் தெரியும். முஸ்லிம் மாதர்களில் பலர் பாரசீக பாஷையில் தேர்ச்சி பெற்றவர்களாக இருக்கிறார்கள். எனக்குப் பழக்கமுள்ள ஒரு முஸ்லிம் கனவான் வீட்டில் அனேக மாதர்கள் கவி எழுதக் கூடியவர்களென்றும் அறிந்திருக்கிறேன். சாதாரணமாய் எண்ணப் படுவதைவிட முஸ்லிம், சீக்கிய மாதர்கள் நிலை மேலானதாகவே இருக்கிறது. குடும்ப வாழ்க்கைக்குப் பங்க மேற்படாமல் மாதர்களுக்குக் கல்வி கற்பிக்க சௌகரிய மிருந்தால் அவர்களுக்கு கல்வி கற்பிப்பதைப்பற்றி ஒருவரும் தடை கூறமாட்டார்கள். பிரிட்டிஷ் ராஜ்யங்களில் செய்யப்படும் விளம்பர ஆர்ப்பாட்டங்கள் ஒன்றுமின்றி சுதேச சமஸ்தானங்களில், பிரிட்டிஷ் ராஜ்யங்களில் உள்ள அளவு கல்வி யறிவுடைய மாதர்கள் இருக்கத்தான்

செய்கிருர்கள். சினப். அட்டாக்கு ஜில்லாக்களில் சிக்கிய மாதர்களுக்கு பிரத்தியேக பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. மதாசிரியர் மனைவிகள் அவரவர் வகுப்பு மாதர்களுக்கு கல்வி கற்பித்து வருவது மிகவும் உத்தமமான ஏற்பாடு. கலியாணப் பருவமுடைய பெண்கள் கடை வீதி வழி சென்று பள்ளிக்கூடங்களில் படிப்பது தடுக்கப்பட வேண்டியதுதான். மத நூல்கள் வாசித்தல், தையல், பின்னல், சமையல், உடலையும் உடையையும் துப்பரவாக வைத்தல் முதலியன பெண்களுக்குப் போதிக்கப் படுகின்றன. பெண்களிடம் புருஷர்கள் காட்டி வரும் பயபக்தி விசுவாசம் ஐரோப்பாவில் நம்மவரிடையில் மருந்துக்குக்கூடக் கிடையாது."

பிரிட்டிஷார் வந்ததுமுதல் பெண் கல்வி ஒழியத் தொடங்கிற்று. டாக்டர் லீட்னரின் சாட்சியத்தினுல் மேற்கூறிய முடிபே பெறப்பட்டது.

பெண் கல்வி அழிவதற்குள்ள காரணங்களை டாக்டர் லீட்னர் பின் வருமாறு தொகுத்துக் கூறுகிருர்:—

(1) முற்காலத்தில் தாய்மார், தம் குழந்தைகளுக்குப் பஞ்சாபி பாஷை கற்பிக்க சக்திபுடையவர்களா யிருந்தார்கள். இப்பொழுது சிறுவர்களுக்கு உருது பாஷை கற்பிக்கப் படுவதினுல் தாய்மாருக்குக் கல்வி கற்பிக்க முடியவில்லை.

(2) மதப்பற்று மாய்ந்து போனதினுல் நாட்டுப் பள்ளிக்கூடங்கள் பூண்டற்றுப் போய்விட்டன. ஆகவே, பெண் பள்ளிக்கூடங்களும் கூட மறைந்துவிட்டன.

(3) முற்காலங்களில் துர்நடவடிக்கை யுடைய பெண்களுக்கு நாட்டாசாரப்படி கிரிமினல் தண்டனை வழங்கப் பட்டது. ஆகவே பெண்கள் நன்னடக்கை யுடையவர்களா யிருந்தார்கள். அவர்களுக்குக் கல்வி கற்பிக்கப் புருஷர்

களும் தடை கூறவில்லை. இப்பொழுது நம்முடைய சட்டம் அமுலுக்கு வந்ததுமுதல் பெண்கள் வியபிசாரம் செய்தாலும் தண்டனை பெருமல் தப்ப வசதி ஏற்பட்டுவிட்டது. ஆகவே, பெண்கள்மீது புருஷர்களுக்கு சந்தேக மேற்பட்டு அவர்களது விடுதலைக்கான முயற்சிகளில் தடையாக நிற்கிருர்கள்.

(4) நமது பெண் கல்வி முறை உயர்குடிக் கனவான்களுக்குப் பிடிக்கவில்லை. நமது கல்வி முறையால் ஏற்படும் பழக்க வழக்கங்கள் துர்நடவடிக்கைகளுக்கு வழிகாட்டியாயிருக்குமென்று அவர்கள் பயப்படுகிருர்கள்.

(5) பெண் பள்ளிக்கூடங்கள் பொது ஸ்தலங்களில் கட்டப்பட் டிருப்பதாலும், அவைகளுக்கு சரியான மேற்பார்வை இல்லாததாலும் அப்பள்ளிக்கூடம் கட்ட உதவி செய்தவர்கள்கூட தம் பெண் குழந்தைகளைப் பள்ளிக்கனுப்ப மறுக்கிருர்கள். ஆகவே, பெண் கல்வி இழிவடைந்துவிட்டது."

நாம் எவ்வளவோ ஜாக்கிரதையாக இருந்தும் இவ்வளவு நீண்ட மேற்கோள்கள் எடுத்துக் காட்டவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. கன்னி மேயோவின் பொய் மூட்டைகளின் யோக்கியதைகளை விளக்குவதற்கு நாம் பகீரதப் பிரயத்தினம் செய்ய வேண்டியதாயிற்றென பிறர் எண்ணக் கூடாதென்று நினைத்தே மேற்கோள்களை இயன்றமட்டும் சுருக்கமாக எடுத்தாண்டோம்.

இவ்விஷயமாகச் சொற்ப ஆராய்ச்சி செய்பவர்களுக்குக்கூட பின் வரும் முடிபுகள் தோன்ருதொழியா:—

(1) தொன்றுதொட்டே இந்தியாவில் ஒரு உருவான கல்வித் திட்டம் இருந்து வந்தது.

(2) இத்திட்டம் இரு பிரிவுடையது; ஒன்று உயர் குடி மக்களுக்கு; மற்ருென்று சாமானிய ஜனங்களுக்கு.

(3) பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வரும் வரை அந்தத் திட்டம் கிராமப் பஞ்சாயத்துகளால் செவ்வனே கையாளப்பட்டு வந்தது.

(4) கல்வி முறைகளைக் கையாள வேண்டியது துரைத்தனத்தைப் பொறுத்ததென்ற தப்பெண்ணத்தினால் பழைய முறை அழிக்கப்பட்டு, லார்டு மேக்காலே காலமுதல் குமஸ்தாக்களையும், உத்தியோக அடிமைகளையும் சிருஷ்டிக்கும் தற்காலக் கல்வி நடப்பாக்கப்பட்டது.



## அத்தியாயம் 3.

---

# பயனற்ற படிப்பு.



பிரிட்டிஷ் சர்க்கார் வெளியீடுகளி லிருந்தும் பிரிட்டிஷ் ஆசிரியர்கள் நூலிலிருந்தும் நாம் முன் அத்தியாயத்தில் எடுத்தாண்டிருக்கிற மேற்கோள்களினல், பிரிட்டிஷார் வருவதற்கு முன் இந்தியாவில் கல்வித்திட்டமே இல்லாதிருந்த தென்றும், இப்பொழுதும் கல்வி பரவுதற்கு இந்தியர்கள் விரோதிகளாகவே இருந்து வருகிறார்கள் என்றும் கன்னி மேயோ கூறுவது முழுதும் பொய் யென்று நன்கு ருசுவாகும். பிரிட்டிஷ் அரசாட்சி நிலைபெற்று 175 ஆண்டுகள் சென்ற இக்காலத்து காணப்படுவதை விட, பிரிட்டிஷார் வருமுன் அநேக மாகாணங்களில் மிகுதியாகவே கல்வி பரவியிருந்தது. இந்தியர்களின் பழைய கல்வித்திட்டம் இந்திய மாக்களின் வாசனைக்கும் தேவைக்கும் பொருத்தமான தா யிருந்தது. ஒரு நோக்கமுமின்றி பிரிட்டிஷார் பழைய கல்வி முறையைத் தொலைத்து விடவுமில்லை. வேண்டு மென்றே அவர்கள் நமது கிராமப் பள்ளிக்கூடங்களை நாசஞ்செய்தார்கள். இந்திய சர்க்கார் கல்வித்திட்டத்தின் அந்தரங்கத்தை அறிய வேண்டுமானல் அந்த திட்டத்தை உருப்படுத்திய அதிகாரிகளின் மனப்பான்மையையும் 18-ஆவது நூற்றாண்டு சம்பவங்களின் போக்கையும் நாம் நன்கு ஆராய்தல் வேண்டும்.

18-ஆவது நூற்றாண்டின் இறுதியில் ஸ்ரீ. சாாலஸ் கிராண்டு என்பார் இந்தியர் கல்வி விஷயமாக வெளியிட்டுள்ள ஒரு நூலில் அவர் கூறி யிருப்பதாவது:—நாம் அமுலில் கொண்டுவரும் புதிய கல்வித்திட்டத்தின் வெற்றியிற்றான் நமது க்ஷேமம் அடங்கி யிருக்கிறது. இந்தியாவின்

உள்நாட்டுக் கலகங்களை அடக்கவும், நம்மிடம் ஹிந்துக்களுக்குப் பரிவுண்டாகவும், நமது உடைமைகளையும் தேசங்களையும் பாதுகாக்கவும் மிகவும் தகுதியான ஏற்பாடுகளை நாம் செய்தல் வேண்டும்."

லார்டு மேக்காலேயின் பந்துவும், கம்பெனியில் பல உத்தியோகங்கள் வகித்தவரும், பின்னர் சென்னைக் கவர்னர் ஆனவரும், இந்தியா சுப்ரீம் கௌன்சில் மெம்பராயிருந்த வருமான சர். சாரல்ஸ் டிரிவேலியன்; சுமார் 40 வருஷங்களுக்குப் பின் இந்தியர் கல்வியைப் பற்றி ஒரு புஸ்தகம் வெளியிட்டார். இந்தியர் கல்விக்காக பத்து லட்சம் பவுன் வருஷந்தோறும் செலவு செய்தால், இந்தியர்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு அடங்கி நேசபாவனையி லிருப்பார்கள் என்று அவர் அந்நூலில் முடிவு கூறியிருக்கிறார். அவர் கூறுவதாவது:—"நாம் பின்பற்றப் போகும் முறை புதியதல்ல. உரோமர்கள் தமது இலக்கியங்களையும் கலைகளையும் ஐரோப்பியர்களுக்குக் கற்பித்து உரோம நாகரீகத்தை ஐரோப்பா முழுதும் பரப்பி உரோம மய மாக்கியதனால் ஐரோப்பா முழுதும் உரோமாபுரிக்கு அடிமையாயிற்று. யுத்த மூலம் பெற்ற வெற்றியை அவர்கள் தமது கல்வி முறையால் வலுப்படுத்திக் கொண்டார்கள். இத்தாலியா, ஸ்பெயின், ஆபிரிக்கா, கால் முதலிய தேசங்கள் முன்னேற்ற உணர்ச்சி எதுவுமின்றி, உரோம நாகரீகத்தை குருட்டு நம்பிக்கையுடன் பின் பற்றி, கடைசிவரை உரோம சாம்ராஜ்யத்துக்கு அடிமைகளாகவே இருந்தன. இறுதியில் அந்நாடுகள் உரோமர் பந்தத்திலிருந்து விடுபட்டது உள்நாட்டுப் புரட்சியாலல்ல; வெளிநாட்டு அரசியல் நிலையில் ஏற்பட்ட மாற்றம் காரணமாகவே அவை பிரிய நேரிட்டது. நாம் ஒரு காலத்தில் உரோமர்களுக்கு எவ்வாறு கீழடங்கியிருந்தோமோ அவ்வாறே இந்தியர்களும் நமக்குக் கீழடங்கி விடுவார்கள் என்பது நிச்சயம். பிரிட்டிஷ் தலைவர்களின் மக்களுக்கு உரோமக்கலைகளையும் இலக்கியங்களையும் சாஸ்திரங்களையும் போதித்து உரோம நாகரிகத்தில் சுவையூட்டு

வது ஜூலியஸ் ஆக்ரிகோலாவின் வழக்கமாயிருந்ததென்று டாசிட்டஸ் என்னும் ஆசிரியர் கூறுகிறார். அவரது யுக்தி சரியாக பலித்ததென்று நாமனைவரும் அறிவோம். பிரிட்டிஷார் உரோமர்களுக்கு சத்துருவாயிராமல் நம்பிக்கையுள்ள நேயர்கள் ஆனார்கள். உரோமர் ஆக்கிரமிப்பைத் தடுக்க அவர்களது முன்னோர்கள் எவ்வளவு முயன்றார்களோ அவ்வளவு இவர்கள் உரோமநாகரீகத்தைப் பின்பற்ற முயன்றார்கள்."

வங்காளத்தில் ஆங்கிலக் கல்வியைப் பரப்பிய ரேவரேண்டு அலக்சாண்டர் டப்பும் இந்த உரோம—பிரிட்டிஷ்வரலாற்றை வற்புறுத்திக் கூறியிருக்கிறார். சர்டிரிவேலியன் நூல் வெளிவந்த அதே காலத்தில் ரேவரேண்டு அலக்சாண்டர் டப் வெளியிட்ட ஒரு புஸ்தகத்தில் அவர் எழுதியிருப்பதாவது:—

"உரோமர்கள் ஒரு மாகாணத்தைப் பிடித் தடக்கியவுடனே அதை உரோம மயமாக்க முயற்சி செய்தனர்; அதாவது உரோம இலக்கியம் கலை சாஸ்திரம் வீரப்பாடல்கள் இவைகளில் தாம் அடக்கிய தேசத்தாருக்குச் சுவையூட்டினர். உரோமர்கள் தம் முயற்சியில் வெற்றி பெறவில்லையா?

சுதேசக் கல்விமுறை பிரிட்டிஷார் க்ஷேமத்துக்கு ஆபத்து விளைவிக்குமென்று சர். டிரிவேலியன் நினைத்தார். ஆகவே இந்தியச் சிறுவர்கள் ஆங்கிலக் கல்வியிலும் ஆங்கில நாகரீகத்திலும் மூழ்கி ஆங்கில மயமாக வேண்டுமென்று அவர் விரும்பினர்.

ஆங்கில இலக்யத்தின் போக்கு ஆங்கில பந்தத்துக்கு அனுகூலம் செய்யத் தவறாது. ஆங்கில இலக்கியத்தில் பழகிய இந்தியர்களுக்கு நாம் அன்னியர் என்ற உணர்ச்சி நீங்கிவிடும். அவர்கள் நமக்கு ஜன்ம விரோதிகளாயிராமல், பட்சமிகுந்த நேயர்களாகவும் ஒத்துழைப்பாளர்களாகவும் மாறிவிடுவார்கள்."

மேலே கூறியவற்றுள் அடங்கிய அரசியல் சூழ்ச்சியை இதை விடத் தெளிவாக நமக்கு விளக்கமுடியாது.

இனி, சர். டிரிவேலியனின் கண்யம் வாய்ந்த பந்துவான லார்டு மேக்காலே கூறுவதைக் கவனியுங்கள்.

> " நமக்கும் நாம் ஆளும் கோடிக் கணக்கான இந்திய மக்களுக்கும் இடையே ஒருவகைத் தரகரை சிருஷ்டி செய்ய நாம் இப்பொழுதே முயல வேண்டும். பிறப்பினுலும் நிறத்தினுலும் அவர்கள் இந்தியர்களா யிருந்தாலும் இலக்கிய வாசனையிலும் ஆசார அநுஷ்டானங்களிலும் அவர்கள் ஆங்கிலேயர்களாகவே இருத்தல் வேண்டும்"

நாம் மேலே கூறிய மகாகனம் சாரல்ஸ் கிராண்டு "நமது பிரஜைகளை அன்பினுலும் அனுதாபத்தினுலும்,நமது மதத்துக்குத் திருப்பவேண்டும்" என்று விரும்பினுர். அம் முறையால் பிரிட்டிஷ் அரசாங்கம் வலுப்பெற்று சாசுவதமாகுமென்றும் அவர் கருதினுர்.

பிரிட்டிஷ் அதிகாரிகள் இத்தகைய அரசியல் சூழ்ச்சிகளுடன் ஆங்கிலக் கல்விமுறையை இந்தியாவில் புகுத்தியிருக்கும்போது, சம்ஸ்கிருத பண்டிதரான ஸ்ரீ. எச். வில்சன் பின்வருமாறு எதிர் நியாயம் கூறுவது வீணுகும்.

"நமது தாய்பாஷையை கீழைத்தேசம் முழுதும் பரவவொட்டாமல் தடுத்து சுதேச பாஷைகளை விருத்தி செய்ய வேருெரு புதிய முறையைக் கையாள வேண்டுமென்று கல்கத்தா பத்திரிகைகளில் கொஞ்ச நாளாக வாதம் நடந்து வருகிறதை நான் கவனித்தேன். பத்திரிகை வாயிலாக இவ்விநோத வாதங்கள் நடைபெறுவதனுல் யாருக்கும் எவ்வித கெடுதல்களும் இல்லை. ஆனுல் அவர்கள் கொள்கையை வலுப்படுத்த உருவான முயற்சி எடுக்கப்

படுவதாகக் காணப்படுவதுதான் ஆபத்துக் கிடமானதாக இருக்கிறது. மேனாட்டு நூல்களை சுதேசிகளுக்கு விளங்காத ஒரு எழுத்தில் அச்சிடத் தொடங்கி யிருப்பதாகத் தெரிகிறது."

மேலே கூறிய திருஷ்டாந்தங்களால் பிரிட்டிஷார் ஆங்கிலக் கல்வியை இந்தியாவில் பரப்பும் நோக்கம் என்னவென்பது விளங்க வில்லையா? அரசியல் காரணங்களை முன்னிட்டே நடைமுறைக் கல்விக்கு அவர்கள் விரோதிகளா யிருக்கிறார்கள். இந்தியாவில் அவர்கள் புகுத்திய புதுமுறைக் கல்வி, இந்தியர்களின் செல்வ வளர்ச்சிக்கும், அறிவு வளர்ச்சிக்கும் உதவியாக விருக்க வேண்டுமென்று அவர்கள் எண்ணவில்லை. அவர்களது அரசியல் நிருவாகம் சுகமாக நடைபெறுவதற்காகவே அக் கல்வியை அவர்கள் நடப்பாக்கினார்கள்.

1828 ல் பம்பாய் கவர்னர் சர். ஜான் மால்காம் வெளியிட்ட ஒரு யாதாஸ்தில் அவர் கூறியிருப்பதாவது :— இந்தியர்களுக்கு ஆங்கிலக் கல்வி புகட்டுவதின் முக்கியமான நோக்கம், நமது அரசியல் நிருவாகத்தில் அவர்களை ஜாஸ்தியாகப் பழக்குவிப்பதே யாகும். செலவுச் சுருக்கத்தையும், அபிவிர்த்தியையும், நமது க்ஷேமத்தையும் கவனித்தால் இம்முறை மிகவும் முக்கியமான தென்றே தோன்றும். ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தைக் குறைத்து, அரசாங்கச் செலவைக் குறைப்பதை நான் சம்மதிக்க முடியாது; குறைந்த சம்பளத்தில் சுதேசிகளை உத்தியோகத்தில் நியமனம் செய்து அரசாங்கச் செலவைக் குறைப்பதை நான் ஆதரிக்கிறேன்.

"குறைந்த சம்பளத்தில் சுதேசிகளைப் பெறுவதுதான் ஆங்கிலக் கல்வியின் நோக்கம் போலும்! 1854ல் ஒரு யாதாஸ்து அனுப்பியவர்களும் இதனையே வற்புறுத்தியிருக்கிறார்கள்.

"ஆங்கிலக் கல்வி, இந்தியாவில் ஜாஸ்தியாகப் பரவப் பரவ, புத்தி கூர்மையும் நம்பிக்கையும் உடைய இந்திய உத்தியோகஸ்தர்களை இலகுவாகப் பெறவும், அதன்மூலம் இந்திய அரசியல் நிருவாகம் சிறப்படையவும் வசதியுண்டாகு மென்றும், இந்தியர்கள் உத்தியோகம் பெறப் பெற அவர்களுக்கு ஆங்கிலக் கல்வியில் ஜாஸ்தி விருப்ப முண்டாகுமென்றும் நாம் ஏற்கனவே அபிப்பிராயப்பட்டிருக்கிறோம்."

சர். ஜான் மால்காம் வேறொரு சந்தர்ப்பத்தில் கூறுவதாவது:—இதர இடங்களிலும் ஆங்கிலக் கல்விச்சாலைகளை ஸ்தாபிக்காமல் பம்பாயில் மட்டும் ஸ்தாபித் திருப்பதினால் கணக்கர்களுக்கும், குமாஸ்தாக்களுக்கும் ஜாஸ்தி சம்பளம் கொடுக்க வேண்டியதாக விருக்கிறது. இவர்கள், தலைநகரத்திலிருந்து வெளியூர்களுக்கு மாற்றப்படும்போது ஜாஸ்திச் சம்பளம் கேட்கிறார்கள். செவ்வையாகப் பழக்கம் பெற்ற உத்தியோகஸ்தர்கள் தொகை குறைவாக இருப்பதினால் அவர்கள் கேட்ட சம்பளம் கொடுக்க வேண்டியதாக வருகிறது. இதனால் நமது இலாகாக்களி லெல்லாம் ஜாஸ்திச் செலவு ஏற்படுகிறது. இதற்குள்ள பரிகாரங்களை நான் பின்னர் விஸ்தாரமாகக் கூறுகிறேன்.

> " ஆனால் விலையைக் குறைப்பதற்கு ஏற்ற வழி, சரக்கை அதிகப்படுத்துவதுதான். ஆகவே சூரத்திலும், புனாவிலும் ஆங்கிலப் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கவேண்டும்.

"உத்தியோகம் கொடு; அல்லது உயிரை மாய்த்து விடு" என்னும் மனப்போக் குடையவர்களை சிருஷ்டிப்பதே பிரிட்டிஷ் அதிகாரிகளின் நோக்கமாக இருந்து வருகிறது. இதற்கு அவர்கள் நிர்மாணம் செய்த கல்வி இயந்திரம் மிகப் பொருத்தமானதாகவும் இருக்கிறது. இத்துடன் இந்திய கைத்தொழில்களை பிரிட்டிஷ் அதிகாரிகள் மனப்பூர்வமாக

அழித் தொழித்ததையும் கவனியுங்கள். இந்திய பருத்தித் தொழில் ஒழியவே லங்காஷயர் உயர்ந்தது. வர்த்தக சுதந்தரத்தின் பேரால் பால்ய தசையிலிருந்த கைத்தொழில்களுக்குப் பாதுகாப் பளிக்காமல், அவைகளின் வளர்ச்சிக்கு அதிகாரிகள் தடையுண்டு பண்ணினார்கள். நாணயச் செலாவணி முறையும், பாங்கி நிருவாக முறையும் இந்தியக் கைத்தொழிலாளருக்குத் தீமை விளைப்பனவாகவே இருக்கின்றன. சாஸ்திர வளர்ச்சியால் இதரநாடுகள் விவசாயம் மிக விருத்தி யடைந்திருக்கிற தாயினும் இந்திய விவசாயிகளுக்கு அதனால் ஒரு நன்மையும் ஏற்படவில்லை, சாஸ்திரீக விவசாய முறையில் இந்திய சர்க்கார் சிறிது கவனம் செலுத்தத் தொடங்கி யிருப்பதாகத் தெரிகிறது. ஆனால் நமது விவசாயக் கல்விச்சாலைகளிலிருந்து வெளிவந்த பட்டதாரிகள் ஏட்டுச் சுரைக்காய்களா யிருக்கிறார்களே யன்றி அநுபவ ஞான முடையவர்களா யில்லை. லயால்பூர் விவசாயக் கல்லூரியில் பட்டம்பெற்ற சிலர், போலீஸ் இலாகாவில் உத்தியோகம் பெறத் தம்மிடம் சிபார்சுக் கடிதம் கேட்டதாக காலஞ்சென்ற சர். கங்காராம் கொஞ்ச காலத்துக்கு முன் ஒரு பிரசங்க மத்தியில் பிரஸ்தாபித்தார். கைத்தொழில், விவசாயம் முதலியவற்றின் கதியே இவ்வாறானால் இந்தியர்கள், சர்க்காரே தமக்குத் தஞ்சமென்றெண்ணி குமாஸ்தா வேலைக்குப் போவது ஆச்சரியமா?



# அத்தியாயம் 4.

# படிப்பும் பணமும்—அமெரிக்கர் நோக்கம்

அறிவு வளர்ச்சியே கல்விப் பயிற்சியின் நோக்கம் என்று சொல்வது எளிதுதான்; ஆனால் இந்த வேதாந்தப் பேச்சு ஒரு அமெரிக்கன் வாயிலிருந்து வராது. இவ்விஷயத்தில் ஐரோப்பிய, அமெரிக்க லட்சியங்களைவிட நமது பூர்வீக ஹிந்துக்களின் லட்சியம் மிகவும் உயர்வானது. மேனாடுகளில் மதிப்பு பணத்துக்குத்தான்; கன்னி மேயோவின் அமெரிக்காவிலே பணந்தான் குலதெய்வம். சர்வகலாசாலைகள் ஸ்தாபிப்பதற்குச் செலவான பணத்துக்குத் தக்கபடியே அவை மதிப்புப் பெறுகின்றன. அமெரிக்கருக்கு பணமே முக்கியமான அளவுகோல். அவர்கள் புஸ்தகம் வெளியிடுவதும், சித்திரம் எழுதுவதும், சினிமாப் படக்காட்சி காட்டுவதும், நாடகமாடுவதும், சர்வகலா சங்கம் ஸ்தாபிப்பதும்—சுருக்கிக் கூறின் அவர்களது முயற்சி அனைத்தும்—பணந் தேடும் பொருட்டேயாகும். கோடீசுவரரான ஒரு தம்பதிகள், இறந்துபோன தம் மகனது ஞாபகார்த்தமாக, அவர் பெயரால் ஒரு சர்வகலா சங்கம் ஸ்தாபிக்க எண்ணினர். அதற்காக அமெரிக்கா முழுதும் பிரயாணம் செய்து சர்வகலா சங்கங்களை யெல்லாம் நேரில் பார்வையிட்டு, அவரது ஞாபகச் சின்னத்துக்கேற்ற ஒரு சர்வகலா சங்கம் நிறுவ எண்ணி அமெரிக்கா முழுதும் சுற்றினர். போகுமிடங்களி லெல்லாம் சர்வகலா சங்கம் கட்டுவதற்கும், பின்னர் அதை நடத்துவதற்கும் செலவாகும் பணத்தைப் பற்றியே முக்கியமாக விசாரித்தனர். மசாச்சுசெட்ஸ் மாகாணத்தில் ஒரு பெயர்பெற்ற சர்வகலா

சங்கத்தைப் பார்வையிடச் சென்றபொழுது, அந்த சர்வ கலா சங்கத்தின் பல பகுதிகளையும் அவர்களுக்குக் காட்டிய கனவானிடம் பணச் செலவைப்பற்றியே கேள்விகள் கேட்டனர். அந்தக் கனவான் பதிலளித்து முடிவதற்குள் "அன்பே! நமக்கு இதுபோன்ற ஒரு சர்வகலா சங்கம் அமைத்துவிடலாம்" என்று கணவன் தன் நாயகியிடம் சொன்னாராம். அந்த சர்வகலா சங்கத்துக்குப் பெருமிதமான பணம் செலவழிக்கப் பட்டதினால் அதுதான் அவர்கள் மனதுக்குப் பிடித்தது. அவர்களால் ஸ்தாபனம் பெற்ற சர்வகலா சங்கம் அமெரிக்காவிலேயே மிகவும் பெயர் பெற்றவைகளில் ஒன்றாகும். ஆனால் அதன் பெருமைக்குள்ள முக்கிய காரணம் அது விழுங்கியுள்ள பணமே. சாமானிய அமெரிக்கரின் நோக்கமெல்லாம் பணம் தேடுவதும், தேடிய பணத்தைச் செலவழிப்பதுமேயாம்.

நம்மவர்களில் உயர் பதவியில் இருப்பவர்கள் "அறிவு வளர்ச்சிதான் கல்விப் பயிற்சியின் நோக்கம்" என வாய் கூசாமல் வேதாந்தம் பேசுவது சர்வ சாதாரணமாயிருக்கிறது. இவ்விஷயம் மிக முக்கியமான தாகையால் இதைப் பற்றிச் சிறிது ஆராய்ச்சி செய்ய எண்ணுகிறேன். அளவுக்கு மிஞ்சி மேற்கோள்கள் எடுத்தாண்டு புஸ்தகப் பாரத்தை அதிகப்படுத்தக் கூடாதென்ற பயம் எனக்கிருந்தாலும், இந்த முக்கிய விஷயத்தை ஒதுக்கித் தள்ள எனக்கு இஷ்டமில்லை. இந்திய தேசீயக் கல்விப் பிரச்சினை (The Problem of National Education in India) என்னும் எனது நூலிலிருந்து கன்னி மேயோ பல மேற்கோள்களை எடுத்தாண்டிருக்கிறார்; நானும் அதிலிருந்து சிலவற்றை இங்கு எடுத்துக் கூற விரும்புகிறேன். அந்தப் புத்தகம் 12-வது அத்தியாயத்தில் கல்வியின் மதிப்பைப்பற்றி எழுதி யிருக்கிறேன். அமெரிக்க சர்வகலா சங்க விளம்பர சங்கத்தாரின் ஒரு வெளி யீட்டிலிருந்து ஏராளமான மேற்கோள்களும் அதில் எடுத்தாண்டிருக்கிறேன். நான் அப் புத்தகத்தில் கூறியுள்ளதாவது:—"தேசீயக் கல்வியின்

முதல் நோக்கம் ஒவ்வொருவனும் சுகமாய் வாழவும்—பிறர் சுகமாய் வாழும்படி செய்யவும் சக்தியுடையவ னுக்குவதே யாகும். சுகமாய் வாழ ஒவ்வொருவருக்கும் உணவு, ஆடை, தங்குமிடம், ஓய்வு நேரம், உயரிய நோக்கங்களைப் பூர்த்தி செய்ய சௌகரியங்கள் முதலியன இருத்தல் வேண்டும். தேச மக்கள் ஒவ்வொருவரும் தத்தமக்கு அகத்தியம் தேவையானவற்றைப் பெறமுடியாத ஒரு தேசம், உலகத் துக்கு ஒரு பாரமாகும். ஆனால் 31½ கோடி ஜனங்களும் நீர்வளம் நிலவளம் பொருந்திய பூமியும் கொண்ட இந்தியா வைப்போன்ற ஒரு பெரிய தேசம், அங்கு வாழும் மக்களில் பாதிப்பேருக்கு ஒரு வயிறு கஞ்சி யளிக்க சக்தியற்றிருக்கு மானல் அதைவிடப் பரிதாபகரமான விஷயம் வேறுண்டா? இந்தியாவின் வறுமை மிகவும் வருந்தத் தக்கதாகும். கல்வி வளர்ச்சிக்கு இன்றியமையாத சாதனங்கள் இல்லாமையே அதற்குக் காரணம்.

இந்த நிலைமையில் பொதுப் பள்ளிக்கூடங்களில் வழங்கப் படும் கல்வியின் முழு நோக்கம், மாணவர்களின் பொரு ளீட்டும் சக்தியை விருத்தி செய்யக் கூடியதாகவே இருத்தல் வேண்டும். இந்தியாவைப் போன்ற ஒரு தேசத்துக்குக் கல்வியே முக்கிய தேவை; ஆகவே, அத்தேச வருமானத் தின் முக்கிய செலவினம் கல்விக்காகவே இருத்தல் வேண் டும். தேச முழுதும் ஏராளமான தொழிற் கல்விச்சாலைகள் ஸ்தாபித்து சாஸ்திரீக முறையில் தொழிற்கல்வி கற்பித் தலே அதற்கு ஏற்ற மார்க்கமாகும்.

"அத்தகைய பிரம்மாண்டமான கல்வித் திட்டத்துக் குப் பெருந் தொகையான பணம் வேண்டும். அதற்குத் தேவையான பணம் (1) தற்கால தேச வருமானத்திலிருந் தும், (2) புது வரி மூலமும், (3) இதர இலாகாக்களின் செலவினங்களைச் சிக்கனம் செய்தும், (4) தேசீய அல்லது மாகாணக் கடன் மூலமும் திரட்டல் வேண்டும். கல்வி வளர்ச்சிக்கு பணம் தேவை என்னும் விஷயத்தை ஜனங்

களுக்கு வற்புறுத்தும் பொருட்டு கல்வியினல் வரக்கூடிய பண லாபத்தை ஜனங்களுக்கு விளக்கிக் காட்டவேண்டும்."

மேற் கூறிய உதாரணத்தின் கடைசி வாக்கியம் அமெரிக்க சர்வகலா சங்க விளம்பர சங்கத்தார் வெளியீட்டிலிருந்து எடுத்ததாகும். இவ்விஷயமாக "டெக்ஸாஸ்" சர்வகலா சங்கத்து தத்துவஞான போதகாசிரியரான டாக்டர் எ. காஸ்வெல் எல்லிஸ் ஜெர்மனி, ஜப்பான், ருஷியா முதலிய வெளிநாடுகளுக்குச் சென்றும், அமெரிக்கா முழுதும் சஞ்சரித்தும் பல ஆராய்ச்சிகள் நடத்தி தமது அனுபவங்களை வெளியிட்டிருக்கிறார். அவர் ஜெர்மனியைப் பற்றிக் கூறுவதாவது—"தேசியச் சார்பாகவோ, தனி நபர் சார்பாகவோ பார்க்குமிடத்து கல்விப் பயனல் கைத்தொழில் விருத்தி யடைந்திருப்பது பிரத்தியட்சமாக விளங்குகிறது. ஜெர்மனி இயற்கை வளம் குன்றிய நாடு; எனினும் பொதுக் கல்விச்சாலைகள் அங்கே ஏராளமா யிருக்கின்றன. ருஷியாவோ இயற்கை வளம் மிகுந்த நாடு; ஆனல் கல்விச் சாலைகள் இல்லை. ஜெர்மனி, ருஷியாவைவிட வெகு சீக்கிரத்தில், செல்வ நிலையிலும், செல்வாக்கிலும் உயர்ச்சி யடைந்துவிட்டது. காரணமென்ன? கல்விப் பயிற்சியே யாகும். ஜெர்மனியின் வியக்கத்தக்க வெற்றிக்கு அதன் கல்வித் திட்டமே காரண மென்பது சர்வ சம்மதமான விஷயம்."

அமெரிக்காவைப்பற்றி அவர் கூறுவதாவது:—"கல்வி எங்கணும் பரவிய பிறகு பொது ஜனங்களிடம் பணம் ஏராளமாகப் பெருகி யிருப்பதனல் கல்விக்குப் பொருளீட்டும் சக்தியை விருத்தி செய்ய முடியுமென்பது விளங்குகின்றது. 1492 முதல் 1860 வரை அமெரிக்காவின் சம்பாத்தியத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால் நபர் ஒன்றுக்கு 514 டாலராகும். 1860 முதல் 1904 வரை 44 வருஷ வருமானத்தைக் கணக்கிட்டால் நபர் ஒன்றுக்கு 1318 டாலர் ஆகிறது. அதாவது 34 வருஷத்தில் ஒரு தனி நபரின் சம்பாத்தியத்தில் 802 டாலர் கூடி யிருக்கிறது.

"அது முதல், வருமானம் நாளுக்கு நாள் ஜாஸ்தியாகிக் கொண்டே வருகிறது. இதற்குக் காரணம் அமெரிக்க கல்வித் திட்டமே. கல்லாமை மிகுந்த தேசத்தாரின் சம்பாத்திய சக்தி அவ்வளவு விரைவாக விருத்தியடைவதில்லை.

கல்வியறிவில்லையானால் இயற்கை வளங்களால் யாதொரு பயனுமில்லையென்று டாக்டர் காஸ்வேல் எல்லிஸ் அபிப்பிராயப்படுவது வாஸ்தவமே. இந்தியர்களின் வறுமைக்குக் காரணம் கல்லாமையே என்றும், ஜனங்களின் அறியாமைக்கு சர்க்காரே ஜவாப்தாரிகள் என்றும் இந்திய சர்க்கார் மட்டுந்தான் ஒப்புக்கொள்ளாமலிருக்கிறார்கள்.

"கல்விப் பயிற்சி யில்லாத ஒரு தேசத்தார், கல்விப் பயிற்சி மிக்க தேசத்தாரோடு போட்டி போடுவது ஒரு மாட்டுவண்டி மெயில் வண்டியோடும், மீன் படகு ஆகாய விமானத்தோடும், தபால்காரன் தந்தி டெலிபோன்களோடும் போட்டி போடுவதற்கே ஒப்பாகும். ஒரு தலைமுறைக்கு ஜனங்களுக்கு கல்வி கற்பிக்காமல் இருந்துவிடுங்கள். ஜனங்கள் பூர்வ குடிகளைப்போல் நாட்டுக் கலப்பையையும், மாட்டு வண்டியையும் தான் தேடுவார்கள். ஏனென்றால் கல்வியறிவின்றி உலோக ஆயுதங்களும், எஞ்சின்களும், ஆவிக் கப்பல்களும், ஆகாய விமானங்களும், தந்தி டெலிபோன்களும், புஸ்தகம், நூல் நிலையம், பத்திரிகை, சுகாதாரம், மருத்துவம் முதலியனவும் உண்டாக மாட்டா."

இவ்விஷயங்களை நமது இந்திய சர்க்கார் கவனிக்கின்றார்களில்லையே.

பொருளீட்டுவதற்கு கல்வி தேவையானது என்று அமெரிக்க அதிகாரிகள் ஒருபுறம் பிரசாரம் செய்து வருகையில், நமது சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், படித்தவர்கள் பணந்தேட விரும்புவதைக் குறித்து ஒப்பாரி வைத்துக்

கொண்டிருக்கிறார்கள். ஒரு தேசிய சர்க்காருக்கும், கொள்ளைக்காரர்களான வெளிநாட்டு சர்க்காருக்கும் உள்ள வித்தியாஸத்தைப் பாருங்கள்!

இந்திய மாதா 184-வது பக்கத்தில், என் நூலிலிருந்து எடுத்த ஒரு உதாரணத்தைப்பற்றி வியாக்கியானம் செய்கையில் கன்னி மேயோ எழுதுவதாவது:—1923—24ல், கல்வியினத்தில் இந்திய சர்க்கார் செலவு 19.9 கோடி ரூபாய்; அதாவது 13,820,000 பவுன். இந்தியாவின் தேவைக்கு இது ஒரு சிறு தொகைதான். எனினும் இந்தியாவின் மொத்த வருமானத்தைக் கவனித்தால், இது அவ்வளவு சிறிய தொகையல்ல. கணக்கு விஷயமான புள்ளி விவரங்களில் இத்தகைய செப்பிடு வித்தைகாட்டுவது தான் கன்னி மேயோவின் வழக்கமாக இருக்கிறது. இந்திய சர்க்காரின் கல்விச் செலவில் முனிசிபல், ஸ்தல ஸ்தாபன உதவியையும், பள்ளிப்பீஸ் வருமானத்தையும், மானிய வருமானங்களையும் கூட சேர்த்து விடுகிறார். மத்திய மாகாண அரசாங்க வருமானத்திலிருந்து 1923—24ல் இந்திய சர்க்கார் அளித்த தொகை 9,74,76,000 ரூபாய் மட்டுமே. அதாவது மொத்தச் செலவில் நேர்பகுதி.

1924—25ல் மொத்த கல்விச் செலவு 20,87,48,000 ரூபாய். அதில் இந்திய சர்க்கார் அளித்தது 9,98,02,000 ரூபாய். 1924—25-ல் வெளியான சர்க்கார் ரிப்போர்ட்டில் கூறியிருப்பதாவது. "கல்வியினத்தில் சர்க்கார் செய்த செலவு 9,98,01,594 ரூபாய். அதாவது நபர் ஒன்றுக்கு 4. அணா. மொத்தச் செலவில் சர்க்கார் அளித்துவந்த விகிதம் 48.9ல் இருந்து 47.9 ஆகக் குறைந்துவிட்டது. பீசின் விகிதமோ 21.8ல் இருந்து 22.4 ஆக உயர்ந்துவிட்டது. "இந்தியாவிலுள்ள சுமார் 50,000 ஐரோப்பிய மாணவர்களுக்காக இந்திய சர்க்கார் வருமானத்திலிருந்து வருஷந்தோறும் 50 லட்சம் ரூபாய் செலவு செய்யப்படுகின்றது." இதன்படி நபர் ஒன்றுக்கு 100 ரூபா செலவு ஏற்படுகிறது. இந்தச்

செலவினத்தை இந்தியாவில் வாழும் சுமார் 2 லட்சம் ஐரோப்பியர்களுக்கும் வீதம் போட்டுப் பார்த்தால் நபர் ஒன்றுக்கு 25 ரூபா ஆகிறது. இந்தியர் விஷயத்திலோ நபர் ஒன்றுக்கு 4 அணுத்தான் செலவு செய்யப்படுகிறது. "25 ரூபாய்க்கும்" 4 அணுவுக்கும் எவ்வளவு வித்தியாசம் பாருங்கள். இந்திய சர்க்காரைத் தவிர வேறெந்த தேசீய சர்க்காரும் இவ்வளவு மோசமாக நடவாது. செல்வச் செழிப்பும், ஆற்றல் மிகுதியு முடைய அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் முதலிய தேசங்களை நாம் கவனிக்கவேண்டாம். ஏழையான மெக்ஸிகோ சர்க்கார் கல்வி விஷயமாக எவ்வளவு பணம் செலவிடுகிருர்கள் தெரியுமா? மொத்த வருமானத்தில் 100-க்கு 40 வீதம் மெக்ஸிகோ சர்க்கார் கல்வி விஷயமாகச் செலவு செய்கிருர்களாம். இந்திய சர்க்கார் இவ் விஷயத்தைக் கவனிப்பார்களா?



## அத்தியாயம் 5.

# ஞானோபதேசம்.

சாமானியக் கல்வியும், உயர்தரக் கல்வியும், தொழிற் கல்வியும் விருத்தியடைவதற்கு தேசாபிமானிகளான பிரபுக்கள் தம்மாலான முயற்சிகளெல்லாம் செய்துகொண்டு தான் வருகிறார்கள். உயர்தர சாஸ்திரீகக் கல்விவளர்ச்சிக்காக, காலஞ்சென்ற ஸ்ரீ. ஜெ. என். டாட்டா அவரது சம்பாத்தியத்தில் பெரும் பகுதியை உதவினார். அவரது பொருளுதவியினாலேயே பங்களூர் சாஸ்திரக் கல்லூரி இப்பொழுதும் நடைபெற்றுவருகிறது. கல்கத்தாபோஸ் வித்தியா சாலையும் டாக்டர் பி. ஸி. ரேயின் முயற்சியால் ஸ்தாபனமான சாங்கேதிகக் கல்விச்சாலையும், தேசீய வைத்திய கலாசாலையும் பொது ஜனப் பொருளுதவியால் ஸ்தாபனம் பெற்றனவே. சர்க்கார் சர்வகலா சங்கங்களுக்குக்கூட சர் குருதாஸ் பானர்ஜிபோன்ற சீமான்கள் ஏராளமாகப் பொருளுதவி யிருக்கிறார்கள். ஸ்ரீகாசி ஹிந்து சர்வகலா சங்கத்தார் உயர்தர இலக்கிய கல்வி கற்பிப்பதுடன் ஒரு இஞ்சினீயரிங் கலாசாலையும் ஸ்தாபித்து நடத்திவருகிறார்கள். உண்மை இவ்வாறிருந்தும் கல்வி யபிவிருத்திக்காக இந்தியர்கள் எதுவும் செய்யவில்லை யென்றும், அரசியல் வாதிகள் சர்க்காரைக் குறை கூறுவது வீண் என்றும் கன்னிமேயோ கூறுகின்றார். அவர் இந்தியரைக் குற்றம் சாட்டுவதற்குள்ள ஆதாரம் ஒரு அநாமதேய கல்கத்தா வக்கீலுடன் அவர் நடத்திய சம்பாஷணையே. அவர் வைக்கீல் தொழிலில் ஏராளமான பணம் சம்பாதித்தாராம். ஆனால் கல்வி வளர்ச்சிக்காவது அவரது கிராமத்து சுகாதார விருத்திக்காவது அவர் எதுவும் உதவ வில்லையாம்.

"இந்திய தேசீயக் கல்விப்பிரச்சினை" என்ற எனது நூலில், கல்வி யபிவிருத்தி விஷயமாக 1918-வரை பொது ஜனங்கள் செய்த முயற்சிகளை யெல்லாம் விரித்துக் கூறியிருக்கிறேன். இவ்விஷயமாக யார் என்ன சொன்னாலும் சரி, பிரஜைகளுக்குக் கல்வி புகட்ட வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தாருக்கு என்ற உண்மையை ஒருவருக்கும் மறுக்கமுடியாது. பொது ஜனங்கள் எவ்வளவு அக்கறையுடன் முயற்சி செய்தாலும், தற்கால முறைப்படி கல்விச் சாலைகள் ஸ்தாபிப்பதற்கு அவர்களது முயற்சி போதியதாகாது. எனது நூலில், பிரிட்டிஷ் கல்விபோர்டு தலைவராயிருந்த ஸ்ரீ. எச். ஏ. எல். பிஷரின் பிரசங்கத்திலிருந்து ஏராளமான திருஷ்டாந்தங்களை எடுத்தாண்டிருந்தேன். நாகரிகம் பெற்ற தேசங்களிலெல்லாம் பிரஜைகளுக்குக் கல்வியளிக்கும் பொறுப்பு அரசாங்கத்துக்கென்று ஒப்புக்கொள்ளப் பட்டிருப்பதாக அவர் தெளிவாகக் கூறுகிறார். தமது பிரஜைகள் கல்விப் பயிற்சியின்றி யிருப்பதைத் தடுப்பது சர்க்காரின் கடமையும் உரிமையுமாகும். ஒரு பிரசங்கத்தில் ஸ்ரீ. பிஷர் கூறுவதாவது:—

"சிறுவர்கள் வேலை செய்து பிழைப்பதைத் தடுக்க சர்க்காருக்கு உரிமை யில்லையாயினும் (ஏன் இல்லை) பிழைப்புக்கும், படிப்புக்கும் ஒருவழி வகுக்கவேண்டியது சர்க்காரைப் பொறுத்த கடமையே. பொது ஜனக்கல்வியில் தமக்கு நம்பிக்கையுண்டு என்று ஜனங்களுக்கு உறுதிகூற வேண்டியதும் சர்க்கார் பொறுப்பே. கல்வி யென்றால் வெறும் போலிக் கல்வியல்ல; சிறுவர் மனதிலும், நெறியிலும் ஒரு உணர்ச்சியை உண்டு பண்ணும் சத்தான கல்வியே மெய்யான கல்வி. பணச் செலவுக்குப் பயந்துப் பிரஜைகளுக்குக் கல்வி கற்பிக்க, துரைத்தனத்தார் பின் வாங்கலாகாது. பிரஜைகளுக்குத் தேவையான ஒரு கல்வித்திட்டத்தை யமைத்து அது அமுலில் வருவதற்கு வேண்டிய உதவிகளெல்லாம் துரைத் தனத்தார் செய்ய வேண்டும்."

பொது ஜனங்களுக்குத் தகுதியான கல்வி புகட்டுவது சர்க்கார் கடமையும் உரிமையுமாம். ஆகவே பொது ஜனங்களுக்குக் கட்டாயக் கல்வி கற்பிக்க வேண்டுமென்று கிளர்ச்சி செய்வது இந்திய அரசியல் வாதிகள் பட்டுமல்ல. பிரிட்டிஷ் ராஜ்ய தந்திரிகளும் அவரது சொந்த நாட்டு விஷயத்தில் இவ்வண்ணமே கூறுகிறார்கள்.

தற்கால ராஜ்ய தந்திரிகளின் கல்வி லட்சியங்களை விளக்கிக் காட்டுவதற்காக ஸ்ரீ. பிஷரின் ஒரு பிரசங்கத்திலிருந்து சில பகுதிகளைக் கீழே எடுத்துக் கூறுகிறேன். "ஒரு தேசத்து புருஷர்களையும், மாதர்களையும், பிரஜைகளுக்குரிய கடமைகள் ஆற்றுவதற்குத் தகுதியுடையவராக்குவதே பொது ஜனக் கல்வியின் தலையான நோக்கம். தத்தம் சமூகங்களுக்காக சிலர் வாழவேண்டியவர்களாகவும், சிலர் இறக்கவேண்டியவர்களாகவும் இருக்கிறார்கள். அவர்கள் அறியாமைப் படுகுழியில் வீழ்ந்துழலாது பாதுகாக்க வேண்டியது தேவ கட்டளை யல்லவாயினும், விவேகமுள்ள ராஜாங்கத்தின் முக்கிய கடமையாகும். ஆனால் அரசியல் காரணங்கள் மட்டும் இதற்கு ஆதாரமாக நிற்கவில்லை. நமது சமூக வாழ்வு எவ்வளவு அபூர்ணமாக விருப்பினும் உலக இன்பங்களில் சர்வ ஜனங்களும் சம பங்கு பெறும்படி பார்த்துக்கொள்ள வேண்டியது மனிதராய்ப் பிறந்தவர்கள் கடமையல்லவா?"

பிராட்போர்டில் செய்த ஒரு பிரசங்கத்தில் ஸ்ரீ. பிஷர் பேசியதாவது:—தேசீயக் கல்வி யாராய்ச்சியை நான் ஆரம்பித்தபோது, உலக வாழ்க்கையின் பயனைப் பூரணமாக அனுபவிக்க இயலாத லக்ஷோபலக்ஷம் ஜனங்கள், நமது நாட்டில் (பிரிட்டனில்) இருந்து வருவதாக நான் உணர்ந்தேன். என்னைப்போலவே ஏனையோரும் உணர்ந்திருக்கக் கூடும். நமது நாட்டில் வெளியாகிக்கொண் டிருக்கும் கோடா கோடிப் புத்தகங்களால் உண்டாகும் நன்மையையும், சங்கீதக் கச்சேரி, நாடகசாலை, சினிமாப் படக்காட்சி முதலியவற்றால் எழும் இன்பத்தையும், இயற்கை வனப்பை

நோக்குவதால் வரும் மகிழ்ச்சியையும் அனுபவிக்க இயலாத புருஷர்களும் லக்ஷக்கணக்காக இருந்து வருகிறார்கள். அல்லும் பகலும் குறுக்கெலும்பொடியப் பாடுபட்டுத் தம் வாழ்நாளைத் தொலைப்பதே அவர்களது நீங்காப் பொறியாக ஏற்பட்டிருக்கிறது. கவிதா வாசனை, மனோ கற்பித சக்தி, உலக மாட்சியை யுணரும் உணர்ச்சி, வாழ்க்கையின் பம் பருக அவா, அவரவர் செய்யும் தொழிலைப்பற்றிய பூரணமான சாஸ்திரீய ஞானம் முதலியன, அன்னோரிடம் எட்டுணையும் காணப்படுவதில்லை. இத்தகைய காட்சிக்கு இடமளிக்கும் தற்கால நாகரீகத்தை நாம் திருப்தியுடன் ஏற்றுக் கொள்வதா? இந்நிலையில் மாறுதல் ஏற்படுத்தி, பிற்காலத்தவராவது உத்தம வாழ்க்கை வாழும்படி நாம் உதவி புரிய வேண்டாமா?"

'காமன்ஸ்' சபையில் அவர் ஒரு முறை பேசியபொழுதும் இதே விஷயத்தை வற்புறுத்திப் பின்வருமாறு பேசினார்:—"பொதுவாக, நமது ஜனங்களுக்கு நன்மை யளிக்கக் கூடியதாக நாம் விரும்புவது யாது? அவர்கள் உத்தம வாழ்க்கை நடாத்தும் பிரஜைகள் ஆகவேண்டும். உளச் சுகமும் உடல் வளமும் அவருக்குப் பெருகுதல் வேண்டும். அவரவர் தொழிலில் அவர்கள் தேர்ச்சி பெறவேண்டும். ஓய்வு நேரங்களை நல் வழியில் போக்க அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும்."

1917-ல் இங்கிலாந்தில் நிலவரியிலிருந்து 16,000,000 பவுனும், மற்றத் தீர்வைகளிலிருந்து 17,000,000 பவுனும், மானியங்களி லிருந்து 7,000,000 பவுனும் ஆகமொத்தம் 40,000,000 பவுன் அதாவது 60 கோடி ரூபாய் கல்விக்காக அளிக்கப்பட்டன. இத்தொகை நாட்டின் தேவைக்குப் போதாதென்றும், ஜாஸ்தித் தொகை வேண்டுமென்றும் ஸ்ரீ. பிஷர் கேட்டுக்கொண்டபோது அவர் கூறியதாவது:— "கல்வி விஷயமாக நாம் செய்யும் செலவு பாழ்ச் செலவல்ல; பிற்காலத்தில் நமக்குப் பன்மடங்கான வருமானம் தரக் கூடியது. ஆகவே இவ்விஷயத்தில் நாம் எவ்வளவு செலவு

செய்தாலும் மிகையாகாது. இவ்வளவுபெரும் செலவுசெய்ய நமக்கு சக்தியுண்டாவென்று நாம் எங்கவும் கூடாது." ஒரு தேசத்தின் சிறப்பு அந்நாட்டு மக்களின் கல்வியையே பொறுத்து நிற்கின்றது எனவிளக்க அவரது பிரசங்கத்தின் பல பகுதிகள் மிக உபகாரமாக இருக்கின்றன.

ஐரோப்பிய மகா யுத்தம் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்த 1917 ஆகஸ்டு 10வ அவர் புது கல்வி மசோதாவை பார்லிமெண்டில் கொண்டு வந்து பின் வருமாறு பேசினர்:—"கல்விப் பயிற்சிக்கும், உடல் வளர்ச்சிக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தத்தை யாவரும் உணரத் தலைப்பட்டிருக்கிறார்கள். மாணவர்களுக்காக வைத்திய பரிசோதகர்களை நியமனம் செய்த 1907-வது வருஷம் நமது தேசீய வாழ்வில் மிகவும் முக்கியமான வருஷமாகும். தேகாரோக்கிய விஷயம் கவனிக்கப்படாமையால் கல்வியின் பயன் எவ்வாறு சீரழிந்து வருகிறதென்றும், நாம் கல்வி விஷயத்தில் செலவு செய்யும் ஏராளமான பணம் பாழாகாதிருக்க வேண்டுமானல் ஏழை மாணவர்களின் உடல் வளத்தைப் பெருக்க முயற்சி செய்ய வேண்டியது எவ்வளவு இன்றியமையாததென்றும் அறிந்துகொள்ள இப்பொழுது நமக்கு வசதி வாய்த்திருக்கிறது.

கல்வி யறிவினல் ஒரு தேசத்தாரின் திராணி விருத்தியாகும் என்ற படிப்பினையை ஸ்ரீ. பிஷர், கழிந்த மகா யுத்த மூலம் கற்றுக்கொண்டிருக்கிறார்.

'பிராட்போர்டு' பிரசங்கத்தில் அவர் கூறியதாவது:— "கனவான்களே! சீமாட்டிகளே! கல்விப் பயனல் மஹா யுத்தப்போக்கு எத்தகைய மாறுதலடைந்ததென்று நீங்கள் கவனித்தீர்களா? நவீனக் கல்வி முறை விருத்தியடைந்த நாடுகள் யுத்தத்தில் விரைவில் ஜெயம் பெற்றதையும், கல்வி விஷயத்தில் பிற்போக்கடைந்த தேசங்கள் தோல்வியுற்றதையும் நீங்கள் கவனித்தீர்களா? தற்கால மகா யுத்தத்தில் பங்குகொண்ட சேனைகளைப்போல் சாஸ்திரீகக் கல்விப் பயிற்சியுடைய சேனைகள் இதற்குமுன் ஒரு

காலத்தும் ஒரு யுத்தத்திலும் கை கலந்ததில்லை. போர்முனை யில் நிற்கும் உத்தியோகஸ்தர்களிடம் நீங்கள் சம்பாஷணை நடத்த நேர்ந்ததால் கல்விப் பயிற்சியுடைய வீரர்களால் உண்டாகும் நன்மைகளை அவர்கள் விளக்கிக் கூறுவார்கள். யுத்தத் தலைமை ஆபீசிலும், யுத்த தளவாடங்கள் உண்டு பண்ணுமிடத்திலும், போர்க் கருவிகள் சேகரம் செய்து வைத்திருக்குமிடத்திலும் நீங்கள் சென்று விசாரித்தால் மேற்கூறிய விடையே உங்களுக்குக் கிடைக்கும். "மக்கள் திராணிக்கு கல்வியே ஆதாரம்" என்ற விடையே உங்க ளுக்கு எப்பொழுதும் கிடைக்கும்."

கல்வி கற்பதையும், பணம் சம்பாதிப்பதையும் பற்றி கன்னி மேயோ வியாக்கியானம் செய்யப் புறப்படுகிறார். "உத்தியோகம் கொடு அல்லது உயிரை மாய்த்துவிடு" எனத் தலையங்கமிட்ட அத்தியாயத்தில் இந்தியரிடம் அவ ருக்குள்ள வெறுப்பு முழுதையும் கக்கியிருக்கிறார். ஸ்ரீ. பிஷர், மான்சஸ்டர் நகரத்தில் பேசிய கீழ் வரும் வார்த்தை கள் கன்னி மேயோவின் புளுகுகளைவிட எவ்வளவோ மேலானவை.—"கல்வி கற்பதை முதன்மையாகவும், பணம் தேடுவதை இரண்டாவதாகவும் மதிக்கும் ஒரு சமூக வாழ்வு அமைய வேண்டுமென்று நான் விரும்புகிறேன். ஏழை, பணக்காரர் என்ற வித்தியாசமின்றி எல்லாஇளைஞர் மனத்திலும் இவ்வுணர்ச்சி எழவேண்டும். தற்காலத்திலே செல்வர்கள் படிக்கிறார்கள்; ஏழைகள் பாடுபட்டுப் பிழைக் கிறார்கள்.

"கல்வி, மூத்தோர் இளையோருக்குக் கொடுக்க வேண் டிய நீங்காக்கடன். இளைஞர்கள் ஏழைகளாகவோ செல்வர்க ளாகவோ இருக்கட்டும். அவர்கள் எல்லோரும் கல்வி கற்க வேண்டியது தான்; நம்மால் அளிக்கக்கூடிய கல்விப்பயிற்சி முழுதும் நாம் அவர்களுக்கு அளிக்கத்தான் வேண்டும்." மூத்தோர், இளையோருக்குச் செலுத்த வேண்டிய நீங்காக் கடன் (கல்வி) சரியாகச் செலுத்தப்படாத தற்கால இந்தி யாவிலே கல்விப் பயிற்சியை முதலாவதாகவும் பணத்

தேட்டத்தை இரண்டாவதாகவும் மதிக்க வேண்டுமென்று ஞானோபதேசம் செய்வது பயனற்ற வேலையாகும்.

அமெரிக்காவில் இருந்துவந்த கன்னி மேயோ இந்தியக் கல்விப் பிரச்சினையை விசால மனத்துடனும், பரந்த நோக்குடனும் பார்த்திருக்க வேண்டும். ஆனால் அவரது முயற்சியெல்லாம் பிரிட்டிஷாரைப் புகழ்வதும், இந்தியரைத் தூற்றுவதும் ஆகவே காணப்படுகிறது. 1919-வது வருஷத்திய சீர்திருத்தத்தின்படி கல்வி யிலாகா மாற்றப்பட்ட இலாகாவா யிருப்பதைப்பற்றி கன்னி மேயோ பிரமாதமாக நினைக்கிறார். கல்வி நிருவாகம் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திய மந்திரிகளின் அதிகாரத்தில் இருப்பதினால் கல்வி விஷயமான குறைகளுக்கெல்லாம் இந்திய மந்திரிகளே ஜவாப்தாரிகள் என்று நமது அம்மையார் வியாக்கியானம் செய்கிறார். இங்ஙனமாகவும் விஷயங்களின் உள் அந்தரங்கத்தை அறிய அவர் முயலவில்லை. இவ்விஷயத்தில் இந்திய மந்திரிகள் தம்மிஷ்டப்படி எதுவும் செய்ய முடியாதவர்களாயிருக்கிறார்கள் என்ற உண்மையை அவர் அறிந்திருப்பதாகத் தெரியவில்லை. மாற்றப்பட்ட இலாகாக்களுக்கும் ஒதுக்கப்பட்ட இலாக்காக்களுக்கும் மான்யம் வழங்கப்படும் தோரணையை இந்தியத் தேசிய வாதிகள் மிக வன்மையாகக் கண்டித்து வருகிறார்கள். மான்யம் வழங்கும் பொறுப்பு ஜனப் பிரதிநிதிகளுக்கும் மந்திரிகளுக்கும் இல்லை. அதிகார வர்க்கத்தினரே அப்பொறுப்பை வகித்துக்கொண்டு வருகிறார்கள். உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் சம்பளம் எவ்வளவோ உயர்வானதாக இருந்தும் மேலும் மேலும் அவர்களது சம்பளத்தை உயர்த்த அதிகாரவர்க்கத்தார் பின் வாங்குவதில்லை; இராணுவத்துக்காக வருஷாவருஷம் 80 கோடி ரூபாய் செலவிடவும் அவர்கள் அஞ்சுவதில்லை. ஆனால் மந்திரிகள் அதிகாரத்துக்கு மாற்றப்பட்ட தேச நிர்மாண இலாகாக்களுக்குப் பணம் வழங்குவதென்றால் அதிகார வர்க்கத்தினருக்கு வயிற்றுக்கடுப்பு வந்துவிடுகிறது. இந்திய சர்க்கார் கல்வி யிலாகாக் கமிஷனரான ஸ்ரீ. ரிச்சீ

கூறுவதாவது:—"மத்திய அரசாங்கத்துக்கும் மாகாணத் துரைத்தனங்களுக்கும் போதிய வருமான மில்லாதிருப்ப தால் சமீப காலத்தில் கல்வி யபிவிருத்திக் குரிய சீர்திருத் தங்கள் செய்ய முடியுமென்று தோன்றவில்லை. தமக்குத் தேவையான பணம் கிடைக்கும்போது, எத்தகைய கல்வி அபிவிருத்திக் குரிய சீர்திருத்தங்கள் செய்யலாமென்று மாகாண மந்திரிகள் யோசித்து வருகிறார்கள். சட்ட சபை களின் போக்கை கவனிப்பவர்களுக்கு ஜனப் பிரதிநிதிக ளெல்லாம் சீர்திருத்த விஷயத்தில் கவலை யுடையவர்களா யிருப்பதை உணர்ந்துகொள்ள முடியும்."

இங்கிலாந்தில் ஸ்ரீ. பிஷரைப் போன்ற ராஜ்ய தந்திரி கள் கல்விக்குச் செலவு செய்யும் பணம் எந்நாளும் அழியா முதலீடு என்று மகாயுத்த காலத்திலும் கூடச் சொல்லக் கூடும். பொதுஜனக் கல்வி விருத்திக்காக பென்னம் பெரிய திட்டங்களை உருப்படுத்த, உலக முழுதும் கேட்கப்படும் சிக்கன முழக்கம் அவர்களுக்கு எத்தகைய தடையும் உண்டுபண்ணுவதில்லை. ஸ்ரீ. பிஷர் ஒரு இந்திய மந்திரியா யிருந்திருந்தால், "கல்வி வளர்ச்சிக்குக் குறுக்கு வழி எதுவு மில்லை" என்று ஸ்ரீ. ரிச்சீ அவரிடம் கூறி யிருப்பார்."

பண முடையே மந்திரிகளின் முக்கியமான கஷ்டம் என்று ஸ்ரீ. ரிச்சீ தெளிவாக விளக்குகிறார். அவர் கூறுவ தாவது:—மாகாண வருமானங்களின் ஏற்றத் தாழ்வினால் பொதுஜனக் கல்வி வளர்ச்சிக்கு பாதக மேற்படாமல் போகாது. பம்பாயின் வருமானம் மிகுதியா யிருப்பதா லும், அது நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டு வருவதாலும் கட்டாய ஆரம்பக் கல்வி நடப்பாக்க பம்பாய் சர்க்காருக்கு விரைவாக வசதி யேற்படலாம். வங்காளத்துக்கு அந்த சௌகரியமில்லை. அதன் வருமானம் மிகக் குறைவு; அது வும் வருஷத்துக்கு வருஷம் கூடிக் குறையும் தன்மை யதா யிருக்கிறது. செல்வ, சமூக, அரசியல் அபிவிருத்திக்கு கட்டுப்பாடான ஒரு சர்வ வியாபகக் கல்வித்திட்டம் மிகவும்

இன்றியமையாத தாகையால், இத்தகைய மாகாண வருமானங்களின் ஏற்றத் தாழ்வினுல் உண்டாகும் பலா பலன்களை நாம் விரித்துக் கூறத் தேவையில்லை.

ஸ்ரீ. பிஷர் பிரசங்கத்தின் சில பகுதிகளைப்பற்றி வியாக்கியானம் செய்கையில் நான் எனது நூலில் பின்வருமாறு எழுதினேன்—"நாம் இங்கிலாந்தோடு அரசியல் சம்பந்த முடையவராயிருப்பதால்,வெளிநாட்டு மேதாவிகளின் அபிப்பிராயங்களை விட ஸ்ரீ. பிஷரது அபிப்பிராயங்கள் நமக்கு மிகவும் முக்கியமானவை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் முக்கிய கல்வி உபதேசகரான அவர், சுயமரியாதையும் முன்னேற்ற விருப்பமும் உடைய சமூகத்தாருக் கெல்லாம் பொருத்தமான சில தத்துவங்களையும், கொள்கைகளையும் வெளியிட்டிருக்கிறார். மாகாணங்களுக்கு கல்வி விஷயத்தில் சுயராஜ்யம் அளிக்கப்படுமென்று வாக்களிக்கப் பட்டிருந்தாலும், அதுவிஷயமான கடைசி முடிவு ஏகாதிபத்திய சர்க்கார் கையிலேயே அடங்கியிருக்கிறது. அரசிறைப்பாதுகாப்புக்கும், நிருவாக முறைக்கும் பொறுப்பு வகிக்கும் பிரிட்டிஷ் அதிகாரிகளின் தயவிலேயே இந்தியர் கல்வியின் உயர்ச்சியும் தாழ்ச்சியும் அடங்கி யிருக்கிறது."

1918-ல் இவ் வார்த்தைகள் எவ்வளவுக்கு உண்மையாயிருந்தனவோ அவ்வளவுக்கு இன்றும் உண்மையாகவே இருக்கின்றன. நாகரிகம் பெற்ற அநேக தேசத்தாரின் கல்வித் திட்டங்களை ஆராய்ச்சி செய்தபிறகே நான் சில முடிபுகளை என் நூலில் கூறி யிருக்கிறேன். அவைகளைக் கீழே சுருக்கிக் கூறுகிறேன்.

(1) "தேசியக் கல்வி மிகவும் இலாபகரமான ஒரு அழியா முதலீடு; தேசப் பாதுகாப்புக்கு இராணுவம் எவ்வளவுக்கு இன்றியமையாததோ அவ்வளவுக்கு தேசியக் கல்வியும் இன்றியமையாததாகும். சர்வ வியாபகமான பிரதமக் கல்விக்கு சர்க்காரே பொருளுதவி செய்யவேண்டும். வரவு செலவு திட்டத்தின் முதல் செலவினம், கல்விக்காக இருக்கவேண்டும். சீமான்கள் நன்கொடைகளாலும்,

மானியங்களினுலும் தேசியக் கல்வியை நடத்திவிடலாம் என்று எண்ணுவது பகற்கனவே யாகும். அதனுல் சர்க்கார் கடமையில் பொதுஜனங்கள் கவலே செலுத்த வேண்டியதாக ஏற்படுகிறது. தேசியக் கல்வியை உருப் படுத்துவதும் நடாத்துவதும், மேற்பார்ப்பதும் தேசத் தாரின் கடமை; இந்தக் கடமையை தேச மக்கள், தேச சர்க் காரின் பிரதிநிதிகள் நிலேமையிலேயே நடத்தவேண்டும்.

(2) ஆரம்பக் கல்விக்கு மட்டுந்தான் துரைத்தனத் தார் பொருளுதவ வேண்டும் என்ற பழைய கொள்கை இப்பொழுது அடிபட்டுப் போய்விட்டது. ஆரம்பக்கல்வி யோடு துரைத்தனத்தார் கடமை முடிந்துவிடவில்லே யென்று எல்லா அரசாங்கங்களும் ஏகமனதாக ஒப்புக்கொள் கின்றன. ஒரு தேசத்தாரின் செல்வப் பெருக்குக்கும் கைத்தொழிற் சிறப்புக்கும் சாங்கேத தொழிற்கல்விகளே மூல காரணங்களாக இருக்கின்றன; ஆகவே அவைகளுக் கேற்படும் செலவையும் சர்க்காரே வழங்கவேண்டும்; உயர் தரக் கல்வியையும் சர்க்கார் புறக்கணித்தல் கூடாது; உயர் தரக் கல்வி வளர்ச்சி யடைந்தாலே புத்தி நுட்பமும் திரா ணியு முடைய தலேவர்கள் உண்டாக முடியும்.

(3) எழுதப்படிக்க, கணக்கெழுதக் கற்றுக் கொடுப்ப து கல்வியாகாது. மாணவர்களின் உடல் வளம் பெருக்கு தல், தேகாரோக்கியத்தைக் கவனித்தல் முதலியனவும் கல் வியில் அடங்கும். இதற்காக மாணவர்களுக்கு உணவளித் துப் போஷிக்க வேண்டியதாக ஏற்படடால் அந்தச் செல வையும் சர்க்கார் தாங்கவேண்டியதுதான்.

(4) சுருங்கக் கூறின் ஒரு சிறுவனே ஒரு உத்தம பிர ஜையாக உருப்படுத்துவது சர்க்கார் பொறுப்பு. அதற்குப் பெற்ருேர்களே பொறுப்பென்ற கொள்கை எடுபட்டுப் போய்விட்டது.



## அத்தியாயம் 6.

---

# கட்டாய ஆரம்பக் கல்வி.

---

இந்திய கட்டாய ஆரம்பக் கல்வியின் சரித்திரத்தை ஆராய்பவர்களுக்கு இந்திய சர்க்காரின் மாற்றாந்தாய் மனப்பான்மை பிரத்தியட்சமாகும். இந்த சீர்திருத்தத்துக்குத் தேவையான முதல் மசோதா பழைய இந்தியச் சட்ட சபையில் காலஞ்சென்ற ஸ்ரீ. கோக்கலேயினுல் 1911-ல் கொண்டுவரப்பட்டது. அத்தகைய மசோதாவுக் கேற்ற காலம் வரவில்லையென்றும், அதனு லுண்டாகும் செலவைத் தாங்க முதலில்லை யென்றும், சமயச் சார்பான காரணங்களால் சாமானிய ஜனங்கள் கட்டாயக்கல்விக்கு எதிரிடையா யிருக்கிறுர்கள் என்றும் போலிக் காரணங்கள் கூறி சர்க்காரே அம்மசோதாவை எதிர்த்தார்கள்.

இரண்டாவதாக 1916ல் ஸ்ரீ. வி. ஜெ. படேல் பம்பாய் சட்டசபையில் ஒரு மசோதா கொண்டு வந்தார். பம்பாய் மாகாணத்தில் முற்போக்கடைந்த சில ஜில்லாக்களில் அந்த ஜில்லா அதிகாரிகள் விரும்பினுல் நகர சபைகள் மூலம் கட்டாய ஆரம்பக்கல்வி ஏற்படுத்த வேண்டுமென்று அந்த மசோதா விரும்பிற்று. "கட்டாயக் கல்விக்கு ஏற்றகாலம் வரவில்லை" என்று 1913-ல் இந்தியச் சர்க்கார் கூறியிருப்பதால் இந்திய சர்க்காரின் கல்வித்திட்டத்துக்கு அந்த மசோதா முரணுகுமென்ற காரணங்கூறி உத்தியோகஸ்தர்களின் 'மெஜாரட்டி' பலத்தால் அந்த மசோதாவும் தோல்வியுற்றது.

பிற்காலத்திய கட்டாயக்கல்வி சரித்திரம் 1917 முதல் 1920-வரையிலுள்ள கல்வியிலாகா ரிப்போர்ட்டின் 190; 191 பக்கங்களில் விளக்கப்பட்டிருக்கிறது; அதைப்படிப்ப

வர்களுக்கு இந்த சீர்திருத்தம் செய்ய விரும்பியவர்கள் அநேகமாக ஹிந்துப்பிரதிநிதிகளே என்பது தெரியவரும். ஆரம்பக்கல்வி எற்பாடு ஸ்தலஸ்தாபனங்களின் பொறுப்பில் விடப்பட்டது. இந்த எற்பாட்டைப்பற்றி யெழுதும்போது, பாஞ்சால விஷயமாக, ஸ்ரீ. ரிச்சீயின் ரிப்போர்ட்டிலிருந்து, ஒரு பகுதியை எடுத்தாளப்பட்டிருக்கிறது. இதர மாகாணங்களில் இத்திட்டம் எவ்வாறு வெற்றிபெற நடத்தப்பட்டதென்றும், விரைவாக அது வெற்றியடையாதற்குக் காரணம் என்ன வென்றும் புத்திசாலியான கன்னி மேயோ ஒன்றும் கூறாது விட்டுவிடுகிறார். உதாரணமாக 195-பாராவில் ஸ்ரீ. ரிச்சீ கூறுவதாவது:—"1920-வது வருஷத்திய ஆக்டின்படி பம்பாய் நகரத்தில் அநேக பேட்டைகளில் கட்டாயக் கல்வி எற்பாடு நடப்பாக்கப்பட்டது. பள்ளிக்கூடங்களும் மாணவர்களும் 100க்கு 50விகிதம் உயர்ந்தன. அதற்குத் தக்கபடி வைத்திய பரிசோதர்கள் தொகையும் மிகுந்தது. மேல் பார்வைக்காக மாதர்கள் நியமனம் செய்யப்பட்டதும் ஒரு விசேஷ சம்பவமாகும். இதனால் நகரசபையின் கல்விச்செலவு மூன்றரை மடங்கு அதிகமாயிற்று.

தீண்டாச் சாதியார் பள்ளிக்கூடங்களில் படிக்காது விலக்க ஹிந்துமெம்பர்கள் பாஞ்சாலச் சட்டசபையில் முயற்சி செய்ததாக கன்னிமேயோ கூறுவது வெறும் பச்சைப் பொய்யாகும்.

1922-23 ஆவது வருஷத்திய பாஞ்சால சட்டசபை நடவடிக்கைகளிலிருந்து கீழே உதகரிக்கப்பட்டிருக்கும் கேள்விகளையும் விடைகளையும் கவனித்தால் தீண்டாச்சாதியார் விஷயத்தில் ஹிந்து மெம்பர்கள் எவ்வளவு அக்கறையுடையவராயிருக்கிறார்கள் என்பது தெரியவரும்.

கேள்வி:—2211. லாலா ஆத்மராம்:—

(a) ஒடுக்கப்பட்ட வகுப்பாரின் கல்வி யபிவிர்த்திக்காக மற்ற மாகாண துரைத்தனங்கள் என்ன முயற்சிகள் செய்கின்றனவென்று சர்க்கார் விசாரணைசெய்ய முன் வருவார்களா?

(b) ஆரம்பப் பள்ளிக்கூடங்களிலும், செக்கண்டரிப் பள்ளிக்கூடங்களிலும் அவர்களுக்கு பொருளுதவி யளிக்கவும், விசேஷ செளகரியங்கள் வழங்கவும் சர்க்காருக்குத் தயவு வருமா ?

கல்வி மந்திரி கான்பகதூர் மியான்-பசல்-இ ஹுசேன் பதில்:—

(a) இவ்விஷயமாக மற்ற மாகாண அரசாங்கத்தாருக்கு எழுதியிருக்கிறோம்; அவர்களுடைய பதில் ஆவலோடு எதிர்பார்க்கப்படுகிறது.

(b) ஒடுக்கப்பட்ட வகுப்பாரின் கல்வி யபிவிர்த்திக்காக சர்க்கார் எற்கனவே முயற்சி செய்து வருகிறார்கள். அதற்கான இரண்டு முயற்சிகளும் செய்யப்பட்டிருக்கின்றன. 'மோகா' ஆசிரியர் கல்விச்சாலைக்கு சர்க்கார் அங்கீகாரம் கொடுத்து அதற்குப் பொருளுதவியும் வழங்கப்பட்டிருக்கிறது. பழக்கம் பெற்ற ஆசிரியர்களையும் பள்ளிக்கூடங்களுக்கு புதுப் பொருளுதவிச் சட்டப்படி, ஜாஸ்தியாகப் பொருளுதவியும் செய்யப்படுகிறது. கட்டாயக் கல்வி ஜாதி மத வித்தியாசமின்றி எல்லா ஜாதியாருக்கும் வழங்க வேண்டுமென்றும், அந்த நோக்கத்துடனேயே பொருளுதவி யளிக்கப்படுகிறதென்றும் சர்க்கார் பிரத்தியேகமாக வற்புறுத்தியிருக்கிறார்கள். ஆனால் ஒடுக்கப்பட்ட வகுப்பாருக்கு கல்விப் பயிற்சி வழங்க வேண்டியது தனிப் பள்ளிக்கூடங்கள் மூலமா பொதுப் பள்ளிக்கூடங்கள் மூலமா என்று முடிவு செய்ய வேண்டியது ஸ்தல ஸ்தாபனங்களின் பொறுப்பாகும். இவ்விஷயத்தில் நிர்ப்பந்தமான விதிகள் எற்படுத்த சர்க்கார் விரும்பவில்லை.

ஒடுக்கப்பட்ட வகுப்பாரின் நன்மைக்காக 10 லட்சம் ரூபா ஒதுக்கி வைக்க வேண்டுமென்று 1922 ஜனவரியில் ஸ்ரீ கே. எல். ராலியாராம் ஒரு தீர்மானம் கொண்டு வந்

தார். அந்தத் தொகையை 3 லட்சமாகக் குறைக்க வேண்டுமென்று ஒரு திருத்தமும் பிரேரணை செய்யப்பட்டது. ராவ்பகதூர் லெப்டினண்டு பல்பீர் சிங்கும், ஸ்ரீ. மதிலால் காயஸ்தாவும் திருத்தத்தை எதிர்த்து முதல் தீர்மானத்தை ஆதரித்தார்கள். இந்தத் தீர்மானத்தை சர்க்கார் எதிர்த்து அதைப்பற்றி அனுதாபத்துடன் கவனிப்பதாக வாக்குறுதியளித்ததினால், தீர்மானம் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது. மீண்டும் 1823-ல் ஒரு ஹிந்து மெம்பர் கீழ் வரும் கேள்விகளைக் கேட்டார்.

கேள்வி:—2721. ராய்சாகிப் லாலா தாகூர் தாஸ்:— (1) 1921 ஜனவரி 1-தேதி முதல் ஒடுக்கப்பட்டவர்களின் கல்வி யபிவிர்த்திக்காக என்னென்ன முயற்சிகள் செய்யப்பட்டனவென்றும் (2) 1921 ஜனவரி முதல் நாளிதுவரை அதற்காக எவ்வளவு செலவு செய்யப்பட்டன; மேலும் எவ்வளவு செலவு செய்ய உத்தேசிக்கப்பட்டிருக்கின்றன என்றும் (3) இது வரையிலும் சர்க்கார் உதவியால் நேர்ந்த பலன் என்னவென்றும் சர்க்கார் தயவு செய்து தெரிவிப்பார்களா ?

கனம் தங்கிய கான்பகதூர் சர். பஸ்லி ஹுசேன் பதில்:—"மேஜை மீது வைக்கப்பட்டிருக்கும் ஒரு சுற்றுக் கடிதத்திலிருந்து கனம் தங்கிய மெம்பர் விரும்பும் விஷயங்களெல்லாம் அறிந்துகொள்ளலாம்.

இந்தப் பதிலில் குறிப்பிடப்படும் சுற்றுக் கடிதத்தின் கடைசிப் பாகத்தை இங்கே உதகரிக்க வேண்டுவது முக்கியமாகும்.

ஒடுக்கப்பட்ட வகுப்பாருக்காக ஸ்தல ஸ்தாபனங்களும், பரோபகார சிந்தையுடைய சங்கங்களும் செய்துள்ள உதவிகளுக்கு மந்திரி மிகவும் நன்றி பாராட்டுகின்றார்;

பணமுடை மிகுந்த இந்தக் காலத்திலும் தம்மாலியன்ற உதவிகளெல்லாம் செய்ய அவர் ஆயத்தமாகவே இருக்கிருர். இந்தப் புனித முயற்சியில் தரும சிந்தனையுடைய பொது ஜனங்களின் ஒத்துழைப்பும், ஒடுக்கப்பட்டார் ஒத்துழைப்பும் கிடைக்குமென்று அவர் நம்புகிருர். ஒடுக்கப்பட்டோர் அநேக மாகாணங்களில் முன்னேற்ற முயற்சிகள் செய்து வருவது அவருக்கு மிக மகிழ்ச்சியை யளிக்கிறது. ஆகவே மிகவும் சமீப காலத்தில் நற்பயன் ஏற்படுமென்று அவர் நம்புகிருர்."

இது ஒரு மாகாணத்தைப் பொறுத்த விஷயம். இதர மாகாணங்களிலும் கல்வியறிவுடைய ஹிந்துக்களெல்லாம் ஒடுக்கப்பட்டவர்களை முன்னுக்குக் கொண்டு வரவும், கல்வி கற்பிக்கவும் பல முயற்சிகள் செய்துகொண்டே இருக்கிருர்கள். எனினும் ஹிந்துக்கள் ஒடுக்கப்பட்டவர்களின் சத்துருக்கள் என்று கன்னி மேயோ கூறுகிருர். இத்தகைய வேலையில் ஈடுபட்டு அநுபவமுடைய நானும், என் சகாக்களும் லட்சக் கணக்கான ரூபாய் ஒடுக்கப்பட்டோர் முன்னேற்றத்துக்காகச் செலவு செய்திருக்கிரும். 1910 முதல் என் சொந்தப் பணத்தை ஏராளமாகச் செலவு செய்து இந்தப் புண்ணிய கைங்கரியத்தை நடத்தி வருகிறேன்.



## அத்தியாயம் 7.

# கல்வி விருத்தியடையாத தேன்?



இந்திய சர்க்கார் பிரசுரங்கள் மூலம் வெளியாகும் பிரத்தியட்ச சாட்சியங்களேயும் கன்னி மேயோ அலட்சியம் செய்துவிடுகிறுர். உண்மையை ஒட்டி யெழுதும் நூல்கள் பெருவாரியாக விலேயாகமாட்டா; பொய்யும், புளுகும் புனேந் துரைகளுமடங்கிய நூல்களோ ஆயிரம் பதினுபிரக் கணக் காகச் செலவாகும். இது உலக இயற்கை. ஆகவே கன்னி மேயோ "இந்திய மாதா" என்னும் கட்டுக் கதை வெளியிட் டது ஆச்சரியமா? இந்தியாவின் குறைகளுக்கெல்லாம் இந்தியர்களின் காமப் பைத்தியமே காரணமென்று அவர் முடிவு கட்டியதில் புதுமை எதுவுமில்லே.

"கல்வி விருத்தி யடையாத தேன்" என்னும் தலேப் புடைய அத்தியாயத்தில் இந்தியாவில் கல்லாமை சர்வ வியாபகமா யிருப்பதற்கு கன்னி மேயோ காரணம் காண முயல்கின்ருர். உபாத்திச்சிகளின் உதவியின்றி கிராமக் கல்வி விருத்தியடையாதாம். உபாத்திச்சிகளோ கிராமங் களுக்குச் செல்லப் பயப்படுகிருர்களாம். கட்டுக் காவல்கள் இல்லாதிருந்தால் காம வெறிபிடித்த கிராமவாசிகள் உபாத் திச்சிகளின் கற்பை யழித்துவிடுவார்களாம். இந்திய ஜன சமூகத்தின் மீது கன்னி மேயோ சுமத்தும் இந்த அபாண் டப் பழிக்கு எட்டுணேயும் ஆதாரமில்லே. இந்தியர்களேப் போல் பெண்களிடம் ஒழுங்காகவும், மரியாதையாகவும் நடக்கும் ஜாதியார் வேறில்லவே இல்லே. ஐரோப்பிய அமெரிக்க கிராமவாசிகளேவிட இவ்விஷயத்தில் இந்தியர் கள் எவ்வளவோ உத்தமர்களா யிருக்கிருர்கள். உலகம் முழுதும் சுற்றி நான் பெற்ற அனுபவத்தின் பயனுகவே

நான் இவ்வண்ணம் துணிந்து கூறுகிறேன். தன் கூற்றுக்கு ஆதாரமாக கல்கத்தா சர்வ கலாசங்க கமிஷன் ரிப்போர்ட்டிலிருந்து ஒரு வாக்கியத்தை கன்னி மேயோ எடுத்துக் காட்டுகிறார். தன் கட்சியை ஸ்தாபிக்கும் பொருட்டு அவ் வாக்கியம் கமிஷனர்களின் வாக்கியமென்றும் திரித்துக் கூறுகிறார். வாஸ்தவத்தில் அந்த வாக்கியம் கமிஷனர்களால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்ட ஒரு வாக்கியமாகும். பொதுவாகப் பெண்களைச் சூழ்ந்து நிற்கும் அபவாதங்களால் உபாத்திச்சிகளின் நிலைமை மிகக் கஷ்டமானதாகவே இருக்கிறது என்று மட்டுமே கமிஷனர்கள் அபிப்பிராயப் பட்டிருக்கிறார்கள். உண்மை யிப்படியிருக்க, கன்னி மேயோ வேண்டுமென்றே விஷயங்களைத் திரித்திக் கூறி யிருப்பது முற்றும் குறும்புத்தனமாகும். கமிஷனர்கள் தமது ரிப்போர்ட்டில் எடுத்தாண்டிருக்கும் மேலே குறிப்பிட்ட வாக்கியம் ஒருவர் கூறிய சாட்சியத்தில் அடங்கியதாகும். கோஷா முறை யனுசரியாத பெண்களைப் பற்றி அந்த சாட்சி அவ்வாறு பழி கூறுவது தப்பென்றும் கமிஷனர்கள் கண்டித்திருக்கிறார்கள். குடும்பப் பெருமையைக் காப்பாற்றுவதற்கு, கோஷா முறை தேவையென்று சரியாகவோ தப்பாகவோ வங்காள நாட்டுப் புறங்களில் நம்பப்பட்டு வருகிறது. வங்காளத்தைமட்டும் சுட்டிக் கூறப்பட்ட ஒரு விஷயத்தை ஆதாரமாகக் கொண்டு இந்தியர்களனைவரையும் கன்னி மேயோ தூற்றத் தொடங்குவது அக்கிரம மல்லவா?

இதுபோலவே வட இந்தியாவிலுள்ள ஒரு அமெரிக்க கமிஷன் கலாசாலைத் தலைவர் கூறியதாக கன்னி மேயோ வெளியிட்டிருக்கும் வேறொரு பழியும் மிகவும் குரூரமானதாகும். அது உண்மையா பொய்யா வென்று ஆராய்ந்தறிவதற்கு ஒரு மார்க்கமும் காணவில்லை.

மத்திய மாகாணக்கல்வி இலாகா டைரக்டராக விருந்த ஸ்ரீ. ஆர்தர் மேஹ்யூ வெளியிட்டிருக்கும் "இந்தியக் கல்வி"

என்னும் நூலிலிருந்து ஒரு பகுதியை கன்னி மேயோ "இந்திய மாதா" 191-வது பக்கத்தில் திருஷ்டாந்தமாக எடுத்துக் காட்டுகிறார். வாசகர்கள் மனதில் தப்பெண்ணம் உண்டுபண்ணும் பொருட்டு அந்த மேற்கோளில் சில வார்த்தைகளைக் கன்னி மேயோ குறும்புத்தனமாகவும், தந்திரமாகவும் மறைத்துவிடுகிறார். அவர் திருஷ்டாந்தமாகக் கூறும் பகுதி வருமாறு:—

"வெளியூர்களில் உபாத்திமைத் தொழில் நடத்தச் செல்லும் பெண்களுக்கு இட வசதியும், தக்க துணையும் ஏற்படுத்துவதில் உண்டாகும் கஷ்டமே, பெண்கள் உபாத்திமைத் தொழிலில் இறங்குவதற்குப் பெரும் தடையாக இருந்து வருகிறது. இடவசதியும் பாதுகாப்பு முள்ள மிஷன் பள்ளிக்கூடங்களில் மட்டுமே பெண்கள் நிர்ப்பயமாக உத்தியோகம் நடத்த சௌகரிய மிருக்கிறது."

தந்திரசாலியான கன்னி மேயோ மேலே கூறிய திருஷ்டாந்தத்தின் முதல் வாக்கியத்தில் "இட வசதியும், தக்க துணையும் ஏற்படுத்துவதில்" என்ற மூன்று பதத் தொடர்களை குறும்புத்தனமாக மறைத்துவிட்டு அவைகளின் ஸ்தானத்தில் மூன்று கீற்றுகளை பிரதிஷ்டைத் செய்துவிட்டார். ஆகவே அந்த வாக்கியம் பின்வருமாறு அமைந்துவிடுகிறது. "வெளியூர்களில் உபாத்திமைத் தொழில் நடத்தச் செல்லும் பெண்களுக்கு — — — உண்டாகும் கஷ்டமே பெண்கள் உபாத்திமைத் தொழிலில் இறங்குவதற்குப் பெரும் தடையாக இருந்து வருகிறது."

மூல வாக்கியத்துக்கும், இந்த வாக்கியத்துக்கும் உள்ள பொருள் வித்தியாசத்தை வாசகர்களே! நன்கு கவனியுங்கள்!

இத்தகைய இழிவான தந்திரங்களில் கன்னி மேயோ மிகவும் கைதேர்ந்தவராகக் காணப்படுகிறார். உத்தியோ

கம் நிமித்தம் தூர ஸ்தலங்களுக்குச் செல்லும் பெண் களுக்கு வீட்டு வசதியும், தக்க துணையும் இல்லாவிட்டால் அவர்கள் பாடு கஷ்டந்தான். இவ்வாறு கூறுவதினால் காமப் பைத்தியங் கொண்ட கிராமவாசிகள் அவர்களை விழுங்கி விடுவார்கள் என்று அர்த்தம் ஏற்படுமோ?

ஐக்கியமாகாண சென்சஸ் ரிப்போர்ட்டிலிருந்து கன்னி மேயோ எடுத்துக் காட்டியிருக்கும் ஒரு உதாரணத்தில் உபாத்திச்சிகள் கிடையாமைக்குள்ள காரணம் விளக்கப் பட்டிருக்கிறது. அது கூறுவதாவது:—சாமானியப் பெண் கள் உபாத்திமைத் தொழில் நடந்த விரும்புகிறார்களில்லை. ஆனால் இதற்குப் பிரத்தியேக காரணங்கள் எதுவு மிருப்ப தாகத் தெரியவில்லை. எனினும் பின் வருமாறு ஒரு தடை கூறப்படுவதாகத் தெரிகிறது. 'பெண்களின் ஜீவித நோக் கம் விவாகம். விவாகமான பெண்கள் உபாத்திமைத் தொழிலில் இறங்கினால் குடும்பக் காரியங்கள் சீர்குலையும்; உபாத்திச்சியானால் அவளுக்குக் குடும்ப வேலைகள் இருத் தல் கூடாது; அல்லது அவள் குடும்ப வேலையை அலட்சி யம் செய்ய வேண்டும். அவள் குடும்பப் பொறுப்பற்றவளா யிருக்க வேண்டுமானால் கன்னியாக இருக்க வேண்டும். விவாகம் செய்யாமல் கன்னியாக இருக்கும் பெண்கள் நிலைமையைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. குடும்பப் பொறுப்பை அலக்ஷியம் செய்யும் விவாகமான பெண்களின் கதி அதோ கதிதான்."

இந்தியாவில் ஜீவித கால முழுதும் விவாகம் செய்து கொள்ளாமல் கன்னியா யிருக்கும் பெண்கள் இல்லாமையே உபாத்திச்சிப் பஞ்சத்துக்குக் காரணமா யிருக்கலாம்.

பிரிட்டனில் பெண்கள் தொகைக்கும், புருஷர் தொ கைக்கும் ஏற்றத் தாழ்வு இருந்து வருவதினால் சமுதாயச் சிக்கல்கள் பல இருந்து வருகின்றன. அந்தச் சிக்கல்களால் உபாத்திச்சிகள் உண்டாக சௌகரியம் ஏற்படுகிறது. அவர்

கள் பொது ஜனோபகாரமான உபாத்திமைத் தொழில் நடத்தி வாழ்நாள் கழிக்கிறார்கள். ஐரோப்பிய நாடுகளில் விவாகம் செய்த உபாத்திச்சிகளைக் காண்பது மிக அருமை. கலியாணம் செய்துகொண்ட பெண்கள் உபாத்திமைத் தொழிலில் ஈடுபடாமல் தடுக்க, மகா யுத்தத்துக்கு முன் பிரிட்டனில் பல ஏற்பாடுகள் செய்யப்பட்டதாகவும் தெரிகிறது.

அசாம்—வங்காளம் கல்வி யிலாகா ரிப்போர்ட்டிலிருந்து கன்னி மேயோ எடுத்துக் காட்டும் ஒரு திருஷ்டாந்தத்தில் "கிறிஸ்தவ, பிரம்மோ, மாதர்கள்தான் உபாத்திமைத் தொழிலுக்கு முன் வருகிறார்கள்; ஹிந்து மாதர்களை உபாத்திமைத் தொழிலில் இறங்கும்படி தூண்டுவது மிகக் கஷ்டமா யிருக்கிறது. ஒருகால் உபாத்திச்சிகள் ஆனாலும் தூர ஸ்தலங்களுக்குச் செல்ல மறுக்கிறார்கள்" என்று கூறப் பட்டிருக்கிறது.

ஆம்! ஆரம்ப ஆசிரியர்களுக்குத் தற்காலம் கொடுக்கப்பட்டுவரும் சொற்ப சம்பளத்தில், அந்தஸ்துள்ள குடும்பப் பெண்கள் வெளியூர்களில் சென்று எவ்வாறு வாழ முடியும்!

ஆரம்ப ஆசிரியர்கள் எலும்புக் கூடுகளா யிருப்பதாக கன்னி மேயோ கேலி பண்ணுகிறார். ஆனால் அவர்களது மாதச் சம்பளம், கன்னி மேயோவின் "இந்திய மாதா" வில் ஒரு பிரதிகூட வாங்கப் பற்றாதென்று அவர் உணர்கின்றாரில்லை.

இந்தியக் கல்வியைப் பற்றி கன்னி மேயோ கூறியிருக்கும் புளுகுகளி லிருந்து நாம் ஒரு 'படிப்பினை' கற்றுக் கொள்ள வேண்டியதாக விருக்கிறது. 'ஞானோபதேசம்' என்ற அத்தியாயத்தில் "ஒரு இந்தியக் கனவான், வக்கீல் தொழிலில் ஏராளமாகப் பணம் சம்பாதித்தும், பரோபகார

மாக அவர் ஒன்றும் செய்ய வில்லையென்று கன்னி மேயோ குறை கூறுகிறார். அடுத்தாற்போல் பாஞ்சாலத்திலுள்ள ஒரு முஸ்லிம் ஜெமீந்தார் தன் குடிகளுக்கு எவ்வளவோ நன்மை செய்திருப்பதாகவும் புகழுகிறார். ஆனால் முஸ்லிம் ஜெமீந்தாரை கன்னி மேயோ புகழக் காரணம் என்ன? உத்தியோக மண்டலத்தை இந்திய மயமாக்க அவர் விரும்ப வில்லையாம்; சுயராஜ்யக் கிளர்ச்சியிலும் அவர் ஈடு படுவதில்லையாம். ஆகவே, நாம் கற்றுக்கொள்ள வேண்டிய படிப்பினை என்ன? வாசகர்களே! நீங்களே விடை யளியுங்கள்.



## அத்தியாயம் 8.

# ஜாதி ஏற்பாடு.

இந்திய ஜாதி ஏற்பாடு மிகவும் பழமையானது. பண்டைக் காலங்களில் அது அவ்வளவு கட்டுப்பாடுடையதாயிருக்கவில்லை. பௌத்த காலத்திலும், அதற்குப் பின்னும் ஜாதியில் பல பிரிவினைகள் ஏற்பட்டு ஒவ்வொன்றும் தனித் தனி கட்டுப்பாடுடையதாயிற்று. பின்னர் தொழில் பற்றி பல ஜாதிகள் உண்டாயின. தொழில் பற்றி ஜாதியா, பிறப்புப் பற்றி ஜாதியா என்ற வாதம் இன்னும் முடிந்தபாடில்லை.

ஆதியில் பிறப்புப் பற்றியே ஜாதி ஏற்பட்டதென்றும், பிற்காலத்தில் புரோகித வகுப்பு உயர்ந்த ஜாதியாக மதிக்கப்பட்டதென்றும், சமுதாயச் சட்ட திட்டங்கள் வலுக்க வலுக்க ஜாதிக் கட்டுப்பாடு மிகுந்ததென்றும் சேன்சஸ் கமிஷனரா யிருந்த சர். டேன்சில் இப்பேஸ்டன் கூறுகிறார்.

ஆக்ரா அயோத்தி சேன்சஸ் கமிஷனரா யிருந்த ஸ்ரீ. நேஸ்பீல்டு, தொழில் பற்றியே ஜாதியுண்டாயிற்றென்றும், தொழில்களின் ஏற்றத் தாழ்வுக்குத் தக்கபடி ஜாதியிலும் உயர்வு தாழ்வு ஏற்பட்டதென்றும் கூறுகிறார்.

சேன்சஸ் உத்தியோகஸ்தர்களின் அபிப்பிராயத்தை இம்மட்டில் நிறுத்திவிட்டு, சரித்திரகாரர் அபிப்பிராயத்தைக் கவனிப்போம். "புராதன ஆரியர்களின் ஆசாரத் திட்டங்கள் நாளடைவில் முதிர்ச்சி பெற்று இந்திய நிலைமைக்குப் பொருத்தமாக, தற்கால ஜாதி ஏற்பாடாய் மாறியதென்று பிரஞ்சு சரித்திராசிரியர் ஸ்ரீ. சேனார்ட்டு அபிப்பிராயப்படுகிறார். புராதன கிரேக்க, உரோம சமுதாய

ஆசாரத் திட்டங்களுக்கும், ஹிந்து சமுதாய ஆசார திட்டங்களுக்கும் பொதுவாகவுள்ள ஒற்றுமையை ஆதாரமாகக் கொண்டே ஸ்ரீ. செனர்ட்டு அவ்வாறு அபிப்பிராயப்படுகிறார். உரோம, ஜென்ஸ், குரியா, ட்ரைப் என்னும் மரபுப் பெயர்களுக்கும், கிரேக்க பிராட்ரியா, பூலி என்னும் மரபுப் பெயர்களுக்கும் இந்திய கோத்திரம் என்னும் மரபுச் சொல்லுக்கும் அந்தரங்கத் தொடர்புண்டென்று அவர் நம்புகிறார்.

புராதன இலக்கிய ஆதாரங்களைக் கொண்டு, இந்த ஜாதிப் பாகுபாடு ஆரியர்களுக் கெல்லாம் பொதுவானதென்று அவர் முடிபு கூறுகிறார். ஒரே கோத்திரத்தார் விவாகக் கலப்பு வைத்துக் கொள்ளல் கூடாதென்ற தடை இந்தியாவில் மட்டும் காணப்படுவதன்று. உரோமர்களும் தம் சொந்த கோத்திரப் பெண்களை விவாகம் செய்ததில்லை என்று புளூட்டார்க்கு கூறுகிறார். ஏதன்ஸ் நகரத்திலும், உரோமா புரியிலும் இவ்வழக்கு நடைமுறையி லிருந்ததாகவும் தெரிய வருகிறது. உரோமர்களும், கிரேக்கர்களும் தமது மரபுக் கொத்த குலப் பெண்களை விவாகம் செய்வதே வழக்கமாயினும், தம்மினும் தாழ்ந்த குலப் பெண்களையும் சில சமயங்களில் விவாகம் செய்வதுண்டு. ஆனால், தாழ்ந்த குலப் பெண்களின் சந்ததிகள், இந்தியாவில் சூத்திர மாதர்களுக்குப் பிறந்த சந்ததிகளைப் போலவே, அந்தஸ்தில் குறைந்தவர்களாகக் கருதப்பட்டனர். சூத்திரர் செய்யும் பூஜையைக் கடவுள் ஏற்றுக் கொள்வதில்லையென்று மனு கூறுகிறார். உரோமா புரியில் ஜென்ஸ் என்னும் உயர்குலத்தார் செய்யும் பூஜையில் தாழ்ந்த வகுப்பார் கலவாதபடி தடுக்கப்பட் டிருக்கிறார்கள்.

புருஷன் வீட்டுப் பாத்திரத்தில் உண்ணத் தொடங்கியது முதல் மனைவி, தன் பெற்றோர் கோத்திரத்தைவிட்டு புருஷன் கோத்திரத்தில் புகுந்து விடுவதாக பாஞ்சாலத்தில் ஒரு நம்பிக்கை இருந்து வருகிறது. உரோமா புரியிலும் இத்

தகைய நம்பிக்கை யிருந்து வந்தது. "உரோமாபுரியில், பூர்வீகர்களுக்குப் பிரதிதின வழிபா டியற்றும் வழக்கம் இருந்து வந்தது. சரமக் கிரியைகளின் போது உரோமிலும், கிரேக்க தேசத்திலும் நடத்தப்படும் விருந்து, இந்தியர்களின் சிராத்தத்தை நினைப்பூட்டுகிறது" என்று ஸ்ரீ. செனார்ட்டு கூறுகிறார். பாரசிகத்திலும், உரோமிலும் சமுதாய விருந்துகளில், அந்நியர்களையும் சமுதாயப் பிருஷ்டம் பெற்றவர்களையும் சேர்த்துக்கொள்வதில்லையாம். உரோமா புரியில் சமுதாயப் பிருஷ்டம் செய்யும் உரிமை சமுதாயப் பஞ்சாயத்தாருக்கு இருந்து வந்ததென்று ஸ்ரீ. செனார்ட்டு சொல்லுகிறார். கிரீஸ், ஜெர்மனி முதலிய தேசங்களிலும் இத்தகைய சமுதாயப் பஞ்சாயத்துகள் இருந்து வந்தனவாம். இந்தியாவில் தொழில்க ளெல்லாம் பரம்பரைக் காணியாட்சியா யிருப்பது போலவே உரோமாபுரியிலும் ராஜாங்க சபை உத்தியோகஸ்தர் முதல் வாயிற் காவல்காரன் வரை எல்லா உத்தியோகஸ்தர்களும் பரம்பரையாகவே நியமனம் பெற்று வந்தன ரென்று சர். எஸ். டில் எழுதி யிருக்கிறார். படகோட்டுதல், தானியம் விற்றல், கசாப்பு வேலை முதலிய பல தொழில்கள் வம்ச பரம்பரைத் தொழில்களாகவே கருதப்பட்டு வந்தன. ஒவ்வொரு ஜாதியாரும் தத்தம் ஜாதித் தொழிலையே செய்யவேண்டுமென்று கட்டுப்படுத்தப் பட்டிருந்தார்கள். புருஷன் தன் சொந்த ஜாதிப் பெண்களையே விவாகம் செய்யவேண்டுமென்றும், பெண்கள் அந்நிய ஜாதிப் புருஷர்களை மணந்தால், அப் புருஷர்கள் பெண்களின் மரபைச் சேர்ந்தவர்கள் ஆய்விடுவார்க ளென்றும் ஒரு விநோதச் சட்டமும் உரோமில் வழக்கில் இருந்ததாம். உரோம ஜாதிக் கட்டுப்பாட்டின் வன்மையை கீழ் வருவனவற்றால் எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

"ஆபிரிக்காவி லிருந்து ஆஸ்டியா சர்க்கார் பண்டசாலைகளுக்குத் தானியம் கொண்டு வருபவர்களும், அத் தானியத்தை மாவாக்கி ரொட்டி செய்கிறவர்களும், சாம்னியம்,

ஹூகானியா முதலிய இடங்களிலிருந்து பன்றிகள் கொண்டு வந்து கசாப்புத் தொழில் செய்பவர்களும், முந்திரிச் சாராயம், எண்ணெய் முதலியன விற்பவர்களும் பொது ஸ்நான கட்டங்களில் அடுப்பெரிக்க விறகு கொண்டு வருபவர்களும் தத்தம் தொழிலே பரம்பரைத் தொழிலாக நடத்தி வரவேண்டும். இக் கட்டுப்பாட்டிலிருந்து ஒருவரும் தப்ப முடியாது. தாய் வழியாகவும், தந்தை வழியாகவும் மரபுத் தொழில் செய்ய யாவரும் கட்டுப்பட்டிருக்கிறார்கள். அந்நிய ஜாதிப் பெண்களை புருஷர்கள் விவாகம் செய்யக் கூடாது. ரொட்டி செய்பவன் மகள் வேறு ஜாதிப் புருஷனை மணந்தால் அந்தப் புருஷன் ரொட்டி செய்யும் தொழிலேயே நடத்தவேண்டும். இத்தகைய கட்டுப்பாட்டிலிருந்து தப்புவதற்கு எவ்வித மார்க்கமும் கிடையாது. இந்தக் கட்டுப்பாட்டிலிருந்து ஒருவனை விடுதலை செய்ய மதாசிரியர்களுக்குக் கூட அதிகாரமில்லை."

இப்பொழுதும் ஜாதிப் பாகுபாடு முறையைப் பின்பற்றாத தேசம் எங்கேனும் உண்டா? முழங்கை இல்லாதவன் சுண்டு விரல இல்லாதவனைப் பார்த்துக் கேலி செய்தது போல ஐரோப்பியர்கள் நம்மைக் குறை கூறுகிறார்கள். வெள்ளையர்கள் கறுப்பு ஜாதியாரை எவ்விதமாக நடத்துகிறார்கள் என்று வேறொரு அத்தியாயத்தில் விரித்துக் கூறுவோம். ஐரோப்பாவில் செல்வத்தையும், உயர்குடிப் பிறப்பையும் ஒட்டி ஜாதிப் பாகுபாடு இருந்துதான் வருகிறது. ஆனால் அப் பாகுபாட்டுக்கு அவர்கள் ஜாதி எனப் பெயர் சூட்டுவதில்லை. அதற்கு எப்பெயர் சூட்டினால் என்ன? வித்தியாசம் வித்தியாசமே. எப்பெயரிட்டாலும் பாம்பின் குணம் மாறுமா?

மேனாடுகளில் இப்பொழுது வகுப்பு (Class) ஏற்பாடு இருப்பது போலவே இந்தியாவிலும் சமுதாய ஆசாரங்களையும் தொழில் முறைகளையும் தழுவி ஜாதி ஏற்பாடு உருப் பெற்றிருந்தது. ஜாதிக் கட்டுப்பாட்டினால் தொழி

லாளர்கள் தத்தம் தொழில் முறையில் தேர்ச்சி பெற்ருர் கள் எனினும், சமுதாய வளர்ச்சி அதனல் தடைபட்டது; இதுதான் ஜாதிப் பாகுபாட்டின் ஒரு முக்கிய குறை. இந்த ஜாதிப் பிரிவினை ஒரு குற்றமற்ற எற்பாடல்ல; வகுப்புத் துவேஷத்தால் நமது நாகரிகம் சீரழியா திருப் பதற்கு ஒரு வழி கண்டு பிடிப்பதுதான் அறிவாளிகள் கடமை.

ஹிந்துக்கள் ஜாதி வித்தியாசம் பாராட்டுகிறவர்களா யிருப்பதால் ஜன நாயக ஆட்சி நடத்தத் தகுதியற்றவர்கள் எனக் கூறப்படுகிறது. ஆனல் உரோமாபுரியிலும், எதன்ஸ் நகரத்திலும் பண்டு நிலைபெற்றிருந்தது போன்ற ஜன நாயக ஆட்சி நமது புராதன இந்தியாவிலும் நிலை பெற் றிருந்த தென்ற உண்மையை ஒருவரும் உணர்வதில்லை. ஜப்பான் விஷயத்திலும் மேனாட்டார் இவ்வாறுதான் கூறிக் கொண்டிருந்தனர்.

லாப் கரடியோ ஹேர்ன் என்பவர் ஜப்பானியரைப் பற்றிப் பின்வருமாறு எழுதி யிருக்கிருர்:—"ஜப்பானி லும் காமேன் அல்லது சீ என்னும் பேரால் ஒரு ஜாதி எற் பாடு இருந்தது. ஜப்பான் சமுதாயத்தின் மூன்று முக்கிய பிரிவுகளும் எதேனும் ஒரு ஜாதியைச் சேர்ந்தவை களா யிருந்தன. ஒவ்வொரு ஜாதிக்கும் ஒவ்வொரு தொழி லும் வகுக்கப்பட்டிருந்தது."

மாக்கள் (மக்களைவிடத் தாழ்ந்தவர்கள்) என்னும் பொருளுடைய ஒரு ஜாதியாரும் ஜப்பானில் இருந்துவந்த னர். அவர்களைப்பற்றி ஸ்ரீ. ஹேர்ன் கூறுவதாவது:— "மூன்று முக்கிய வகுப்பாருக்கும் புறம்பாக ஒரு வகுப்பார் இருந்தார்கள். அவர்களை ஜப்பானியர்கள், மனிதர்கள் என்று கூட மதிக்கவில்லை. உத்தியோக முறையில் அவர் கள் சோரி என அழைக்கப்பட்டு வந்தார்கள். சர்க்கார் தஸ்தாவேஜிகளில், மிருகங்களை எண்ண வழங்கப்படும் எண்

களாலேயே அவர்கள் குறிக்கப்பட்டு வந்தனர். இப்பொழுதும் அவர்கள் மனிதர்களைக் குறிக்கும் ஹதோ எனும் சொல்லால் வழங்கப்படுவதில்லை; பொருள்களைக் குறிக்கும் மோனே என்னும் சொல்லாலேயே வழங்கப்படுகின்றனர். அவர்களை ஜப்பான் பறையர்கள் என்று சொல்லலாம்."

அவர்கள், நகரத்துக்கு வெளியே அவர்களுக்கென வகுக்கப்பட்டுள்ள தனி ஒதுக்கிடங்களில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் செய்த சாமான்களை விற்கவும், இதர சாமான்கள் வாங்கவும் பட்டணத்துக்குள் பிரவேசிக்கலாம்; ஆனால், செருப்புக் கடைகளைத் தவிர வேறு கடைகளுக்குள் அவர்கள் பிரவேசிக்கக் கூடாது. பாட்டுப் பாடுவதும் அவர்களது குலத்தொழிலாக இருந்ததினால் தெருக்களிலும் தோட்டங்களிலும் நின்று அவர்கள் பாட அனுமதியளிக்கப் பட்டிருந்தது. அவர்கள் எக்காரணத்தை முன்னிட்டும் வீட்டுக்குள் பிரவேசிக்கக் கூடாது. உத்தியோக முறையில் போகும்படி நிர்ப்பந்தம் ஏற்பட்டாலன்றி ஜப்பானியர், அவர்கள் வாழும் இடங்களுள் போவதுமில்லை."

ஹினின் என்னும் மரபுப் பெயருடைய இந்தப் பறைய ஜாதியில் பிச்சைக்காரர்களும், கிராமப் பாட்டுப் பாடுபவர்களும், கூத்தாடிகளும், வியபிசாரிகளும், சமுதாயப் பிருஷ்டம் செய்யப்பட்டவர்களும் உட்படுத்தப் பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கென சொந்தத் தலைவர்களும், சட்டங்களும் உண்டு. சமுதாயப் பிருஷ்டம் செய்யப்பட்டவர்கள் எல்லாம் அந்த ஜாதியில்தான் சேரவேண்டும். அவர்கள், பின்னர் மனிதர்களாகவே கணிக்கப்பட மாட்டார்கள்."

இவ்வண்ணம் ஜாதி வித்தியாசம் பாராட்டும் ஜப்பானியர், ஜன நாயக ஆட்சிக்குத் தகுதி யற்றவர்கள் ஆனார்களா? ஸ்ரீ. ஹேர்ன் கூறுவதைக் கவனியுங்கள்:—"ஜப்பானியர், ஜன நாயக உணர்ச்சியும், நிருவாகத் திறமையும் உடையவர்களா யிருப்பதால் ஜன நாயக ஆட்சி நடத்தத் தகுதி யுடை

பவராயிருக்கிறார்கள் என்று புகழ்ந்து கூறுபவர்கள், உண்மையில் வெளித் தோற்றத்தினால் ஏமாந்தவர்களே யாவர். சமூகத் திட்டங்களும், ஸ்தாபனங்களும் ஏற்படுத்துவதற்கு அவர்கள் உண்மையில் சமர்த்துடையவர்களாய்க் காணப்படுவதால், தற்கால முறைப்படியுள்ள ஜன நாயக ஆட்சிக்கு அவர்கள் தகுதி யுடையவர்களே யல்ல. வெளிப் பார்வைக்கு அவர்களது சமூக ஸ்தாபனங்களுக்கும், மேனாட்டு சுய ஆட்சி ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் உள்ள வித்தியாசம் அற்பமாகத் தோன்றலாம்; ஆனால் ஜப்பானிய வகுப்புகளின் கட்டுப்பாட்டைப் பார்த்து நாம் வியப்படைய வேண்டியதுதான். எனினும் அவ்விரண்டுக்குமுள்ள வித்தியாசம் அபாரமானதே; பல்லாயிரம் வருஷங்களுக்குப் பின்னரே அவ் வித்தியாசம் மாய்ந் தொழியக் கூடும்."

ஸ்ரீ. ஹேர்ன் இவ்வாறு அபிப்பிராயப் பட்டாலும், ஜப்பானில் ஜாதி வித்தியாசம் அநேகமாக ஒழிந்துவிட்டதென்றே சொல்ல வேண்டும்; துரைத்தனத்தாரும் பொது ஜனங்களும் ஒத்துழைத்ததினால், ஜாதிக்கட்டுப்பாடுகளெல்லாம் விரைவாக ஒழிந்து விட்டன. இந்தியர்களும் சுதந்தரம் பெற்றால் அவ்வாறு செய்யக்கூடும்.

இந்தியாவில் சீர்திருத்தக்காரர்கள் அநேக தடைகளுக்கு எதிராக வேலைசெய்ய வேண்டியிருக்கிறது. சர்க்கார், அவர்களுக்கு எத்தகைய உதவியும் செய்வதில்லை. வாஸ்தவத்தில், ஜாதிப் பிரிவினையை நிலை நிறுத்தி, தமது நிலைமையைச் சரிப்படுத்திக் கொள்ளவே அந்நிய அரசாங்கத்தினரான அதிகாரவர்க்கத்தினர் முயற்சிசெய்து வருகின்றனர். இராணுவ வகுப்பிலிருந்தே இராணுவத்துக்கு ஆளெடுக்கப்படுகிறது. பிரியமுடையவர்களெல்லாம் இராணுவத்தில் சேர முடியாதவர்களா யிருக்கிறார்கள். அன்றியும், நிலங்கள் வாங்கும் உரிமையும் சில ஜாதியாருக்கே வழங்கப்பட்டிருக்கின்றன. பாஞ்சாலத்தில், உழவுத் தொழில் நடத்தும் சில ஜாதியாரே நிலங்கள் வாங்கலா மென்று சட்டம் இயற்றப்

பட்டிருக்கிறது. வெகு காலமாக உழவுத் தொழிலை விட்டு, வர்த்தகம், கைத்தொழில் சர்க்கார் உத்தியோகம் முதலியன நடத்தும் உழவுத்தொழில் ஜாதியாருக்கும் நிலம் வாங்கும் உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. ஏனையோர் உழவுத் தொழில் நடத்தவும், நிலம் வாங்கவும் உரிமையற்றவர்களாயிருக்கிறார்கள். இத்தகைய மூட ஏற்பாடுகளுக்குக் காரணமாயிருப்பது இந்தியஜாதி ஏற்பாடல்ல, இராணுவவகுப்புகளுக்கும், உழவு வகுப்புகளுக்கும் உட்பகையை மூட்டவே இந்திய சர்க்கார், இத்தகைய சட்டதிட்டங்கள் ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

ஜாதித் தொல்லையைத் தொலைக்க பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும் பாதிரிமாரும் உதவி புரிவார்கள் என்றெண்ணுவது பகற் கனவேயாகும். தன் காரியக்குட்டிகளான சர்க்கார், சுயநலங்கருதி ஜாதிக்குப் புது வியாக்கியானங்கள் வழங்கவே முயற்சி செய்து வருகிறார்கள். கீழ்ச்சாதியாரின் முன்னேற்றத்துக்குப் பாதிரிகள் உதவிபுரிகிறார்கள் என்றெண்ணுவதும் வீண் நம்பிக்கையாகும். மேனாட்டாரிடமிருந்து உதவிபெறவிரும்பும் பாதிரிகள், மதமாற்றம் செய்தவர்களின் தொகையைப் பெருக்க மட்டுமே முயற்சி செய்து வருகிறார்கள்; அவர்களது முன்னேற்றத்துக்காக பாதிரிகள் ஒரு முயற்சியும் செய்வதில்லை.

இந்தியாவில் ஜாதி வித்தியாசம் பாராட்டுபவர் ஹிந்துக்கள் மட்டுமன்று. தீண்டாமை முதலிய அநாசாரங்கள் முஸ்லிம்களுக்குள் இல்லையாயினும், அவர்களுக்குள்ளும் ஒருவித ஜாதி வித்தியாசம் இருந்துதான் வருகிறது. கிறிஸ்தவர்களுக்குள் தீண்டாமை ஒழிந்துவிட்டதென்று சொல்வதற்கில்லை. அடுத்த அத்தியாயத்தில் அதைப்பற்றிக் கூறுவோம்.

இந்தியா சுதந்தரம் பெறுவதே நமது கதிமோட்சத்துக்குச் சிறந்தவழி. இந்தியா சுதந்தரம் பெறும்போது,

சீர்திருத்தக் காரர்களுக்கு, தட்டுத்தடையின்றி சீர்திருத்தங்கள் உண்டுபண்ண முடியும். இந்தியா சுதந்தரம் பெறும் வரை ந(து முன்னேற்றத்துக்குத் தடையா யிருப்பவைகளை ஒழிக்க நாம் தீவிரமாக உழைக்கத்தான் வேண்டும். ஆனால் நாம் எதிர்பார்க்கும் அளவுக்குப் பலன் உண்டாக மாட்டா.



# அத்தியாயம் 9.

## தீண்டாமை.

தீண்டாமையைப் பற்றி கன்னி மேயோ மிக விரிவாக எழுதி யிருக்கிருர். தீண்டாமை இந்தியாவில் வேரூன்றி விட்டதென்று ஸ்தாபிப்பதே அவரது நோக்கமெனத் தெரிகிறது. இந்தியாவில் தீண்டாமை நிலைபெற்றிருப்பது வாஸ்தவமே. ஆனல் உண்மையைக் கடைப்பிடித்தால் அவர் கன்னி மேயோ ஆக மாட்டார்; ஆகவே அவர் இங்கும் உண்மையைப் பின்பற்றவில்லை. ஏற்கனவே அமெரிக்க பத்திரிகை நிருபர்களிடம் காணப்படும் புனைந்துரைகளும், பொய் மூட்டைகளும் அம்மையாரிடம் வண்டி வண்டி யாய்க் காணப்படுகின்றன. தம் மனதில் தோன்றியபடி என்னென்னவெல்லாமோ அவர் பிதற்றுகிருர். சாயத்தை மிக அதிகமாகத் தீட்டிவிட்டதனல் அவரது சித்திரங்கள் மிகப் பயங்கரமாகத் தோற்றுகின்றன. தீண்டாமையை ஒழிப்பதற்கு சீர்திருத்தக்காரர்களும் தேசாபிமானிகளும் செய்துவரும் முயற்சிகள் அவரது கண்ணுக்குப் புலனுகவே இல்லை. இவ்விஷயமாக இந்திய சீர்திருத்தக்காரர்கள் செய்யும் அரும்பெரும் முயற்சிகளை வியந்து கூற அம்மை யாருக்குப் பிரியமும் காணவில்லை. கீழ்ச்சாதியாரின் விடு தலையே கிறிஸ்து மதத்தின் தலை சிறந்த நோக்கமென அவர் மனப்பால் குடிப்பதாகவும் தெரிகிறது. தீண்டாச் சாதியாருக்கு பிரிட்டிஷ் சர்க்காரே உண்மையான நண்பர் கள் என்றும், அவருக்குக் கைக்கொடுத்து உதவி புரிதலே சர்க்காரின் முக்கிய முயற்சியாக இருந்து வருகிறதென் றும் ஒரு நம்பிக்கையை உண்டுபண்ண அவர் மிக சிரமப் படுகிருர். தீண்டாச் சாதியாரைப்பற்றிய அவரது வர லாறுகளில் மெய்யும் பொய்யும்—இவைகளைவிடப் பயங்கர மான அரை மெய்யும்—மிக மெலிந்து கிடக்கின்றன.

கிறிஸ்தவர்களான தீண்டாச் சாதியார் ஜாதித்தொல்லைகளி லிருந்து விடுபட்டுப்போனதாக அவர்கூறுகிறார். வாஸ்தவத்தில் அவர்கள் விடுதலையடையவில்லை; அவர்கள் அடைந்துவிட்டதாகக் கூறுவது முழுப் பொய்யாகும். மைசூர் சென்சஸ் ரிப்போர்ட்டில் ஸ்ரீ. வி. என். நரசிம்ம ஐயங்கார் கூறும் கீழ்வரும் வரலாறுகள் சென்னை ராஜதானிக்கு மட்டுமன்றி இந்தியா முழுமைக்கும் பொருத்த மானவைகளே.

ஸ்ரீ. ஐயங்கார் கூறுவதாவது:—"இந்திய சமூக அமைப்பில் ஜாதி ஒரு முக்கிய அமிசமாக இருக்கிறது. கத்தோலிக்கப் பாதிரிகள் ஜாதியாசாரங்களை அனுஷ்டிக்க சம்மதித்திருப்பதால் ஏராளமான ஹிந்துக்கள் கத்தோலிக் மதத்தில் சேர்ந்து விட்டார்கள். சென்ஸஸ் உத்தியோகஸ்தர்கள் செய்த ஆராய்ச்சியினால், கிறிஸ்தவர்கள் ஆகுமுன் அவர்கள் அனுஷ்டித்து வந்த ஜாதி ஆசாரங்களைக் கிறிஸ்தவர்கள் ஆன பிறகும் அவர்கள் அனுஷ்டித்து வருவதாக விளங்குகிறது. கலியாண காலங்களிலும் மற்றும் விசேஷ தினங்களிலும் அவர்கள் இப்பொழுதும் கும்பம் வைத்து வணங்கி வருகிறார்கள். விவாக நிச்சயம் செய்வது பிராமண ஜோசியர்கள்; விவாகம் நடத்தி வைப்பதும் பிராமணப் புரோகிதர்களே. ஹிந்துக்களைப்போலவே திலக மணிதல் முதலிய ஆசாரங்களையும் பின்பற்றி வருகிறார்கள். கிறிஸ்தவர்கள் இவ்வண்ணம் ஹிந்து ஆசாரங்களையும் அனுஷ்டித்து வருவதனால், ஹிந்துக்களான அயலாரோடு மிக ஐக்கியமாக வாழ்ந்து வருகிறார்கள்."

1911 சென்சஸ் ரிப்போர்ட்டில் "பொதுவாகப் பார்த்தால் கத்தோலிக்க மதம் ஜாதி ஆசாரத்தை ஒப்புக்கொள்ளுகிறது; புராடஸ்டண்டு மதம் கண்டிக்கிறது" எனக் கூறப்பட்டிருக்கிறது. அதே ரிப்போர்ட்டில் ஒரு கத்தோலிக்க பிஷப் கூறிய சில விஷயங்கள் காணப்படுகின்றன. அவை பின்வருமாறு:—"ஒருவன் கிறிதவன் ஆவதற்கு ஜாதி

யாசாரங்களை விட்டுவிட வேண்டுமென்று கட்டாயமில்லை. கிறிஸ்தவர்கள் ஆன பின்னும் ஹிந்துக்கள் ஹிந்துக்களே. அவர்களது குலாசாரங்களை அனுஷ்டிக்கவும் அவரவர் மரபுக்குரிய ஸ்தான வெகுமானங்களைப் பெறவும் அவர்களுக்கு உரிமையுண்டு."

1921-ல் ஐரோப்பியர்கள், ஆங்கிலோ இந்தியர்கள், இந்தியர்கள் உட்பட மொத்தம் 4,754,064 கிறிஸ்தவர்கள் இருந்தனர். அவர்களில் 30 லட்சம் பேர் தென்னிந்தியாவில் உள்ளவர்கள். இந்தியா முழுவதும் உள்ள உரோமன் கத்தோலிக்கர் தொகை 1,823,074. இவர்களைத் தவிர ஜாதி ஆசாரங்களை கைக்கொண்டொழுகும் சிரியன் கிறிஸ்தவர்களும் இதர கிறிஸ்தவர்களும் ஒரு பக்கம் இருந்துதான் வருகிறார்கள். தென்னிந்தியாவிலுள்ள அநேக கத்தோலிக்க ஆலயங்களில் ஒவ்வொரு ஜாதியாருக்கும் தனியிடம் வகுக்கப் பட்டிருக்கிறது.

ஒடுக்கப்பட்டார் முன்னேற்றத்துக்காக பிரிட்டிஷ் சர்க்கார் கண்ணும் கருத்துமாக உழைத்து வருவதாய் கன்னி மேயோ புகழ்ந்துரைப்பதும் வீண்புளுகு ஆகும். தீண்டாச் சாதியார் முன்னேற்றத்துக்கு ஹிந்துக்கள் செய்துவரும் சிரமத்தை கன்னி மேயோ மிகக் குறும்புத்தனமாக வியாக்கியானம் செய்கிறார். தீண்டாச் சாதியார் பேரிலுள்ள அன்பினால் ஹிந்துக்கள் முயற்சி செய்யவில்லையாம். தீண்டாச் சாதியார் முன்னேற்ற மடையாதிருந்தால் சுயராஜ்யம் பெற தடையேற்படுமெனப் பயந்தே ஹிந்துக்கள் அவ்வாறு முயற்சி செய்கிறார்களாம். ஆனால் தீண்டாச் சாதியாரின் ஞாபகம் சமீபத்தில்தான் துரைத்தனத்தாருக்கு வந்தது. இந்தியர்களின் சுயராஜ்யப் போராட்டத்துக்கு முட்டுக்கட்டை போட தீண்டாச் சாதியார் ஒரு நல்ல கருவி யென்று அதிகார வர்க்கத்தினர் உணர்ந்து கொண்டனர். ஜனநாயக ஆட்சிபெறத் தகுதியற்றவர்கள் என்று ஒரு போக்குக்கூற, தீண்டாச் சாதியாரை,

அதிகாரவர்க்கத்தின் பக்கபலமாகக் கொண்டிருக்கிறார்கள். தீண்டாச் சாதியார் பேரால் சட்டசபைகளில் சில ஸ்தானங்களை ஒதுக்கிவைத்து, அந்த ஸ்தானத்தில் தமக்கு இஷ்டமானவர்களை நியமனம் செய்ய சர்க்காருக்கு சௌகரியம் ஏற்பட்டிருக்கிறது. தீண்டாச் சாதியாருக்கு ஓட்டுரிமை கொடுப்பது சர்க்காருக்கு ஆபத்தாக முடியலாம். சட்டசபையில் நியமன மெம்பர்களின் துணைகொண்டு தமது காரியங்களை நடத்தும் சர்க்கார் தீண்டாச் சாதியாருக்கு பிதுர்ஸ்தானம் வகிப்பதாய்க் கூறுவது வேடிக்கையாகவே இருக்கிறது.

ஒடுக்கப்பட்ட வகுப்பாரிடம் தமக்குள்ள அன்பைக் காட்டப் பல முறைகளை அதிகார வர்க்கத்தார் கையாண்டு வருகின்றனர். அவற்றுள் ஒன்று அவர்களது தொகையை வேண்டுமென்றே பெருக்கிக் கூறுவதாகும். சேன்சஸ் கமிஷனர் தமது பென்முனையால் பல்லாயிரக் கணக்கான ஹிந்துக்களை பேய் பிசாசுகளை வணங்குபவர்கள் என்று முடிவு செய்த கதையைப் பலர் அறிந்திருக்கலாம். தீண்டாச் சாதியாரின் தொகையைப் பெருக்கிக் காட்டுவதற்கும் சர்க்கார் அம்மாதிரி இந்திர ஜாலத்தையே உபயோகித்திருக்கிறார்கள். 1917-ல் வெளிவந்த கல்வி அறிக்கையில் சர்க்கார் தீண்டாதார் தொகையை முதன் முதலாக நிர்ணயம் செய்யத் தொடங்கினார்கள். அந்தக் கணக்கின்படி தீண்டாச் சாதியார் தொகை 3 கோடி 10 லட்சம். அது முதல் தீண்டாச்சாதியார் தொகை பெருகிக்கொண்டே வருகிறது. 1921-ல் வெளி வந்த கணக்கில் அவர்களது தொகை சுமார் ஐந்தரை கோடி ஆகிவிட்டதாகத் தெரிகிறது. வாஸ்தவத்தில் தீண்டாச் சாதியா ரல்லாதவர்களையும் சர்க்கார், தீண்டாச் சாதியாராக்கத் துணிந்திருப்பதாகத் தெரிகிறது. ஒரு மாகாணத்தில் தீண்டாதவர்களாகக் கருதப்படுகிறவர்கள், பிற மாகாணங்களில் அவ்வாறு கருதப்படுவதில்லை. ஆனாலும் தீண்டாச்சாதியார் தொகை 5½ அல்லது 6 கோடியாக இருக்கக் கூடுமென்று ஊகித்துவிடுகிறார். நானும்

இந்த சந்தர்ப்பத்தில் ஒரு உத்தேசக் கணக்குக் கூற விரும்புகிறேன்.

சர். ஹென்ரி ஷார்ப்பு ஒரு கல்வி ரிப்போர்ட்டில் தீண்டாச் சாதியாரின் மொத்தத் தொகை 3 கோடியே 15 லட்சமென்று கூறியிருக்கிறார். இந்தக் கணக்கு வெளிவந்த பட்டிகையில், பூர்வ குடிகளின் தொகை சுமார் 1 கோடியென்றும், கள்ள ஜாதியார் $\frac{1}{2}$ கோடியென்றும் கூறப்பட்டிருக்கின்றன. தக்க காரணம் இருப்பதினாலேயே இந்த மூன்று இனங்களும் தனித் தனி வெளியிடப்பட்டன. ஆனால் தீண்டாச் சாதியார் தொகை பெருக வேண்டியது அவசியமென்று நினைத்தால் இந்த மூன்று தொகைகளையும் ஒன்றாகக் கூட்டிக் கூறுவது ஒரு எளிய வழியல்லவா? இந்தக் கணக்கினால் பிரிட்டிஷ் இந்தியாவில் மட்டும் 4 கோடி 20 லட்சமும், இந்தியா முழுதும் 5 கோடி 20 லட்சமும் இருப்பதாகக் கூறிவிடலாம். 1921-ல் சேன்சஸ் நடத்திய கமிஷனர் இந்தக் கணக்குப்படிதான் தீண்டாச் சாதியார் தொகையை நிர்ணயம் செய்தாரா?

இந்திய சர்க்காரின் வருஷவாரி நூலை வெளியிடும் ஸ்ரீ. கோட்மான் இந்தப் பெரிய தொகையை ஒப்புக்கொண்டு நிலைமையைச் சமாளித்துவிட்டார். அந்தப் புஸ்தகம் முழுதிலும், இந்தியாவில் 6 கோடி தீண்டாச் சாதியார் இருப்பதாக அவர் பிரஸ்தாபித்திருக்கிறார். கன்னி மேயோ,பின்னும் ஒருபடி மேலே போய் பிரிட்டிஷ் இந்தியாவில் மட்டும் 6 கோடி தீண்டாச் சாதியார் இருப்பதாகச் சாதிக்கிறார். சுதேச சமஸ்தானங்கள் உட்பட இந்தியா முழுதும் 5 கோடியே 30 லட்சம் முதல் 6 கோடி வரை தீண்டாச் சாதியார் இருப்பதாக சர்க்கார் தஸ்தாவேஜிகள் கூறுகின்றன. தம் கூற்றை நிலை நாட்ட கன்னி மேயோ அத்தொகையை தம்மிஷ்டப்படி திரித்துக் கூறுகிறார். சீர்திருத்தம் அமுலுக்கு வந்த 1917-வது வருஷத்துக்குமுன் ராஜீயச் சார்பாக தீண்டாச் சாதியார், தமக்கு எவ்வளவு உபகார

மாகக் கூடியவர்கள் என்று சர்க்கார் கண்டு கொள்ளவில்லை. இந்த உண்மையைக் கண்டு கொண்டது முதல் அவர்களது பிதூர்ஸ்தானம் வகிக்க சர்க்கார் முன் வந்துவிட்டனர்.

ஐக்கிய மாகாணத்தில் 8,374,542 தீண்டாதாரில் 10924 பேர் மட்டுமே கல்வி கற்று வருகிறார்கள். பாஞ்சாலத்தில் மொத்த ஜனத் தொகை சுமார் 20 லட்சம் பேரில் 3453 தீண்டாச் சாதியாரும்; மத்திய மாகாணத்தில் மொத்த ஜனத்தொகை 30 லட்சத்தில் 26,668 தீண்டாச் சாதியாரும், சென்னையில் மொத்த ஜனத் தொகை 5,686,342-ல் ஐந்தில் ஒரு பகுதியாரும் கல்வி கற்று வந்ததாகத் தெரிகிறது. இந்தத் தொகையில் கிறிஸ்து மதத்தில் சேர்ந்தவர்களும் உட்பட்டிருக்கிறார்கள். வங்காளத்தில் மொத்தத் தொகை 6,742,913ல் 30,568 தீண்டாதவரும், பீகார் ஒரிசா மாகாணங்களில் மொத்தம் 1,236,300 பேரில் 19,841 தீண்டாதாரும் கல்வி கற்பதாகத் தெரிகிறது.

பொதுவாக தீண்டாச் சாதியாரின் கல்வி யபிவிர்த்திக்காக கிறிஸ்தவப் பாதிரிகள் செய்யும் முயற்சிகளையே கன்னி மேயோ வானமளாவப் புகழ்ந்து கூறுகிறார். சர்வண்டு ஆப் இந்தியா சங்கத்தாரைத் தவிர இதர ஹிந்து சங்கங்களும் பொது ஸ்தாபனங்களும் செய்து வரும் முயற்சியைப் பற்றி அவர் கூறவே இல்லை. ஆரிய சமாஜத்தார் ஊழியத்தைப்பற்றிக் கூட அவர் ஒரு வார்த்தையாவது சொல்லவில்லை.

ஐந்து வருஷத்துக்கு ஒரு முறை வெளிவரும் சர்க்கார் ரிப்போர்ட்டில் கூறப்படுவதாவது:—"சென்னையில் பஞ்சமர் கல்வியே மிக முக்கியமான விஷயம். கத்தோலிக், புராடஸ்டாண்டு பாதிரிகள் இவ்விஷயத்தில் தலையிட்டு அநேகரை தத்தம் மதங்களில் சேர்த்துவிட்டார்கள். சர்க்கார் பள்ளிக்கூடங்கள் தொகையும் பெருகி வருகின்றது; ஒடுக்கப்பட்டவர்கள் முன்னேற்றத்துக்காக உழைக்கும் ஹிந்துக்க

ளும், ஒரு சங்கம் மூலம் அருமையான வேலைசெய்து வருகி றார்கள். பஞ்சம மாணவர்கள் தொகை 72190-ல் இருந்து 120607 ஆக உயர்ந்துவிட்டது. பஞ்சமர்களுக்காக ஏற் படுத்தப்பட்ட தனிப் பள்ளிக்கூடங்களின் செலவு 6.08 லட்சத்திலிருந்து 8.74 லட்சமாக உயர்ந்துவிட் டது. இதில் 4.8 லட்சம் ரூபா சர்க்கார் கொடுக்கிறார் கள். பம்பாயில் 576 தனிப் பள்ளிக்கூடங்கள் இருக் கின்றன. அவற்றுள் 211 பள்ளிக்கூடங்கள் ஸ்தல ஸ்தாபனங்களாலும், 280 பள்ளிக்கூடங்கள் இதர ஸ்தாப னங்களாலும் நடத்தப்படுகின்றன. கடைசியில் கூறப்பட்ட 280 பள்ளிக்கூடங்களும் முக்கியமாக கிறிஸ்தவப் பாதிரி களாலும், பம்பாய் பூனா தீண்டாதார் அபிவிர்த்தி சங்கத்தி னாலும் சர்க்கார் உதவியுடன் நடத்தப்படுகின்றன. மாணவர் கள் தொகை 26204-ல் இருந்து 30,568 ஆக உயர்ந்திருக் கிறது. வங்காளத்தில் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் பஞ்சம மாணவர்கள் தடையின்றி சேர்த்துக்கொள்ளப் படுவதாகத் தெரிகிறது. அப்படியிருந்தும் அவர்கள் ஜாஸ்தியாக வாழு மிடங்களில், சர்க்கார் அவர்களுக்கென தனிப்பள்ளிக்கூடங் களும் ஸ்தாபித்து வருகிறார்கள். வங்காள சமூக ஊழிய சங்கம்போன்ற பொது ஸ்தாபனங்களாலும் 62 தனிப் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றன. ஐக்கிய மாகாணத்தில் தனிப் பள்ளிக்கூடங்களை ஸ்தாபிக்க ஜில்லா போர்டார் முயற்சிசெய்து வருகிறார்கள். பாஞ்சாலத்தில் 44 தனிப் பள்ளிக்கூடங்களில் 3491 மாணவர்கள் படித்து வருகிறார்கள். கிறிஸ்தவ, ஆரிய சமாஜ மிஷனரிகளின் முயற்சியால் தீண்டாதார் முன்னேற்ற இயக்கம் வலுத்து வருகிறது. மற்ற மாகாணங்களிலும் இது போன்ற முயற் சிகள் செய்யப்பட்டு வருகின்றன.

1917—ல் சீர்திருத்தம் அமுலுக்கு வந்தது முதல் தீண்டாச் சாதியாரைப் பற்றிய பேச்சு முக்கியமாக எழுந் தது. இந்தியாவுக்கு சுயராஜ்யம் வழங்க பிரிட்டிஷார் இவர் களை ஒரு முட்டுக்கட்டையாக உபயோகித்து வருகிறார்கள்.

1921—ல் வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு விஜயம் செய்தபொழுது அவரது வரவேற்புக்காக செய்யப்பட்ட ஏற்பாடுகளில் சேராமல் தேசிய வாதிகள் பகிஷ்காரம் செய்தார்கள். ஆகவே, இளவரசருக்கு நல்வரவு கூறுவதற்காக அதிகார வர்க்கத்தார் பல போலி ஏற்பாடுகள் செய்யத் தலைப்பட்டனர். பிரயாணச் செலவும் தருமச் சாப்பாடும் கொடுத்து கிராமாந்தரங்களிலிருந்து அதிகாரிகள் பாமர ஜனங்களை அழைத்துக் கொண்டு வந்தார்கள். வேடிக்கை பார்ப்பதற்காக ஜனங்களும் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். கன்னி மேயோ வியந்து கூறும் ராஜபக்திக் கண்காட்சியும் நடந்தது. ஆனால் தீண்டாதார் பரவசமடைந்ததாகவும், இளவரசர் புன்முறுவல் பூத்ததாகவும் மற்றும் கூறப்படும் வர்ணனைக ளெல்லாம் கன்னி மேயோவால் கட்டப்பட்ட கதைகளாகும். யாவற்றையும் நேரிற் பார்த்து எழுதுவது போல் கன்னி மேயோ எழுதி, வாசிப்போர் மனதில் தப்பெண்ணம் உண்டு பண்ணுகிறார். இளவரசரைத் தரிசனம் செய்தவுடன் தீண்டாச் சாதியார் ஆனந்தக் கூத்தாடி பரவசமடைந்ததாக கன்னி மேயோ கூறுவதெல்லாம் அபாண்டப் பொய் யென்று இந்தியர்கள் அறிவார்கள்.

அரசியல் பிரசாரகர்களைத் தவிர (கன்னி மேயோ அவர்களுள் ஒருவர்) வேறெவரும் அத்தகைய போலிக் கண் காட்சிகளை ஒரு சிறிதும் மதிக்க மாட்டார்கள். கன்னி மேயோவின் வர்ணனையை வாசிப்பவர்களுக்கு பிரிட்டிஷாரைப் புகழ்வதே அவரது பல்லவி என்பது தெரியவரும்.

எனினும் தீண்டாதார் பிரச்சினை மிக முக்கிய பிரச்சினை என்பதையும், அப் பிரச்சினையை திருப்திகரமாக முடிவுசெய்ய ஹிந்துக்கள் பகீரதப் பிரயத்தினம் செய்து வருகிறார்கள் என்பதையும் ஒருவராலும் மறுக்க முடியாது. தீண்டாதார் முன்னேற்றத்துக்காக ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் முயற்சி செய்து வருகிறார்கள்; லட்சக் கணக்கான ரூபாய் செலவிடப்படுகின்றன. தீண்டாமையை ஆதரிப்

போர் இந்தியாவில் லட்சக் கணக்காக இருக்கிறார்கள் என்று கன்னி மேயோ கூறுவது வெறுக்கத்தக்க-இழிவான பொய்யாகும். மகாத்மா காந்தியின் சிஷ்யர்கள் தீண்டாமையை யொழிக்கும் விஷயத்தில் அவரைப் பின்பற்றத் தயாரில்லை யென்று கன்னிமேயோ கூறுவதும் அதைவிடப் பிரம்மாண்டமான பொய்யாகும். 1926-ல் நடைபெற்ற ஹிந்துக்கள் மகாநாட்டில் தீண்டாதவர்களுக்கு ஆலயப் பிரவேசனம் அளிக்கும் விஷயத்தைப் பற்றி சிறிது வாக்குவாதம் உண்டாயிற்று. அதைக் கூட்டிப்பெருக்கி, ஹிந்துக்களெல்லாம் தீண்டாமையை ஆதரிக்கிறார்கள் என்று கன்னி மேயோ கதை கட்டிவிட்டார்.

தீண்டாமை ஹிந்து மதத்துக்கு ஒரு களங்கமென்றும், அதை ஒழிக்க வேண்டியது அவசியமென்றும் படித்த ஹிந்துக்களெல்லாம் ஒரு முகமாக ஒப்புக் கொள்ளுகின்றனர். "தடைகள் பல இருந்தாலும் தீண்டாமை விரைவாக ஒழிந்துகொண்டுதான் வருகிறது" என்று மகாத்மா, காந்தி கன்னி மேயோ விடம் கூறியது சரியே. தீண்டாமை எதிர்ப்பு தேய்ந்து மாய்ந்து வருகிறது. தீண்டாதார் முன்னேற்றத்துக்கான முயற்சிகளோ வலுத்துவருகின்றன.



# அத்தியாயம் 10.

# பறையரிலும் கடையர்



இந்தியாவில் தீண்டாச் சாதியார் இருப்பதினால் ஹிந்துக்கள் சுயராஜ்யம் பெறத் தகுதியற்றவர்களென அமெரிக்கர்கள் கூறுவது ஆச்சரியமே. அமெரிக்காவிலும் பெருந் தொகையான தீண்டாதார் இருக்கின்றனர்; அவர்கள் நிலைமையோ இந்தியத் தீண்டாதார் நிலைமையைவிட மிகக் கேவலமானது. எனினும் அமெரிக்கர் சுய ஆட்சி உரிமையைத் துறக்கவில்லை; அமெரிக்கர் சுய ஆட்சிக்கு அருகரல்லரெனப் பிறர் சொன்னால் அவர்கள் பொறுக்கவும் மாட்டார்கள். சுயேச்சை விஞ்ஞாபனத்தை அமெரிக்கர் வெளியிட்ட காலத்திலும் அடிமைத்தனம் அமெரிக்காவில் வேரூன்றித்தானிருந்தது. இந்த அடிமைத்தனம் நிமித்தம் 70-வருஷங்களுக்கு முன் அங்கே ஒரு பயங்கரமான உள்நாட்டுப் போர் நடந்தது. அதில் பல்லாயிரக் கணக்கான அமெரிக்கர் மாண்டனர். லட்சக்கணக்கான டாலர்கள் பாழாயின. இப்பொழுதும் அமெரிக்காவில் நீக்கிரோவர் நடத்தப்படுவது போல் அவ்வளவு கடுமையாக இந்தியாவில் தீண்டாச்சாதியார் நடத்தப்படுவதில்லை. அமெரிக்க நீக்கிரோவர் நமது பறையரிலும் கடையராகவே இருக்கின்றனர்.

நான் அமெரிக்காவுக்கு இரண்டு முறை சென்றிருக்கிறேன். இரண்டாம் முறை நான் அமெரிக்காவுக்குச் சென்றபொழுது 5-வருஷ காலம் அங்கு தங்கி யிருந்தேன். அமெரிக்கா முழுதும் சஞ்சரித்து நீக்கிரோவர் நிலைமையை நேர்முகமாக ஆராய்ச்சி செய்தேன். “நீக்கிரோவர் அமெரிக்காவில் பறையரிலும் கடையராயிருக்கின்றனர். நீக்கிரோவரும், பறையரும் பல அமிசங்களில் பொருத்தமில்லாதவர்க

ளாயிருப்பினும், சில விஷயங்களில் பொருத்த முடையவர்களாக இருக்கிறார்கள். நீக்கிரோவரின் சமூக வாழ்வு பறையர்களின் சமூக வாழ்வுக்கு ஒப்பாகவே இருக்கிறது. ஆகவே அமெரிக்காவுக்குச் சென்று பிரத்தியட்சமாக விஷயங்களை அறிய ஆர்வம் கொண்டேன்.

1916-ல் நான் எழுதி முடித்த ஒரு புஸ்தகத்தில் அரசியலில் நீக்கிரோவர் பெற்றிருக்கும் ஸ்தானத்தைப் பற்றி விரிவாக எழுதி யிருக்கிறேன். கீழ் வருவன யெல்லாம் அந் நூலிலிருந்து எடுக்கப்பட்டவைகளே.

நீக்கிரோவனைக் கீழடக்கிவைக்கவும், தப்பி யோடாமல் தடுக்கவும், தப்பியோடினால் மீண்டும் பிடிக்கவும், முதலாளிக்கு முற்றும் அடிமைப் படுத்திவைக்கவும் கட்டுப்பாடான சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. 1829-ல் ஒரு அடிமையை ஒரு முதலாளி அடித்துத் துன்புறுத்தியதாக கொண்டுவரப்பட்ட வழக்கில், "உயிருக்குப் பாதகம் ஏற்படாமல் எத்தகைய தண்டனையும் வழங்க முதலாளிக்கு உரிமையுண்டு" எனக் கூறி வடகரோவின் சுப்ரீம் கோர்ட்டார் முதலாளியை விடுதலை செய்தனர். "முதலாளிக்கும் அடிமைக்கு முள்ள சம்பந்தம் பிதா புத்திர சம்பத்துக்கு, ஒப்பான தென்றெண்ணுவது தவறு. தன் மகன் ஒரு சுதந்தரப் பிரஜையாக ஆகும்படி வளர்ப்பதே தந்தையின் நோக்கம். அதற்காக அறிவு வளர்ச்சிக்கும், சதாசார வளர்ச்சிக்கும் துணையான கல்வியை தந்தை மகனுக்குப் புகட்டுகிறான். முதலாளிக்கும், அடிமைக்கு முள்ள பந்தம் அத்தகைய தல்ல" என்று அந்தத் தீர்ப்பில் பின்னும் கூறப்பட்டிருக்கிறது.

பிரதம நீதிபதி ரப்பின் இவ்விஷயமாகக் கூறுவதாவது:—"முதலாளியின் நோக்கம் அடிமையின் உழைப்பு மூலம் லாபமடைவதும், தன் க்ஷேமத்தைக் காப்பாற்றுவதும் ஆகும். அடிமைக்கு சுதந்தரமில்லை; அவன் முதலா

ளிக்காக வாழ்பவனே; அவன் தனக்கென்று ஒன்றும் வைத்துக் கொள்ளக்கூடாது. அவனை அடக்கியாள முதலாளிக்குப் பூரண சுதந்தரமுண்டு."

இத்தகைய நீதிபதிகள் இருக்கும் நாட்டில் நீக்கிரோவர் நிலைமை எத்துணைக் கேவலமாக இருக்கும் என்று சொல்லவும் வேண்டுமோ?

1619 முதல் 1865 வரை அடிமைத்தனம் அமுலில் இருந்த காலத்தில் அடிமைகள் அநுபவித்த ஹிம்சைகளை வாக்கால் வர்ணிக்க இயலாது. அத்தகைய ஹிம்சைகளைப் பற்றி இந்தியர்களோ, ஆசியாக்காரரோ கேட்டிருக்கவும் மாட்டார்கள். நீக்கிரோவர் விடுதலை விஷயமாக (அமெரிக்க) வடநாட்டாருக்கும், தென்னாட்டாருக்கும் 1865-ல் ஒரு கொடும்போர் நடந்தது. தென்னாட்டார் அடிமைத்தனத்துக்கு அநுகூலிகள். வடநாட்டார் பிரதிகூலிகள் சுயேச்சைப் பிரியர்களான பிரிட்டிஷார் அந்தப் போரில் தென்னாட்டார் பக்கம் சேர்ந்தனர். உண்மையிப்படியிருந்தும், பிரிட்டிஷார் மிக ஜீவகாருண்ய முடையவர்கள் என்றும், இந்தியாவில் தீண்டாச் சாதியாரின் விடுதலைக்காகப் பகீரதப் பிரயத்தினம் செய்கின்றார்கள் என்றும் கன்னி மேயோ பல்லாண்டு பாடுகிறார்.

1792 முதல் 1834 வரை டிலிவேர், மேரிலாண்டு, வர்ஜினியா, கேண்டகி என்னும் நான்கு தேசங்களும் நீக்கிரோவர்களுக்கு வாக்குரிமை யளிக்க மறுத்துவந்தன. 1835-ல் வடகரோலினாவும் நீக்கிரோவருக்கு வாக்குரிமை மறுத்தது. நியூஜேர்சீ 1807லும், கணக்டிக்கட்டு 1814லும், பேன்சிலிவேனியா 1838-லும் நீக்கிரோவர் வாக்குரிமையைப் பிடுங்கிக் கொண்டன. "நிறம் காரணமாக, நீக்கிரோவுக்குப் பிரஜா உரிமை மறுக்கும் ஒரு ஜாதிக்கட்டுப்பாடு உருப்பெற்று வந்ததற்கு மேலே கூறிய சம்பவங்கள் ஒரு நல்ல திருஷ்டாந்தமாகும்" என்று புக்கர் டி. வாஷிங்டன்

கூறுகிறார். 1802-ல் ஓஹியோ நாட்டார் தம் நாட்டில் பிரவேசிக்கும் நீக்கிரோவரிடம் 500 டாலருக்கு ஒப்பந்தச் சீட்டு வாங்கி வந்தனர். சுதந்தரர்களான நீக்கிரோவர்களும், வெள்ளையர் வாதிப் பிரதிவாதிகளாகவுள்ள வழக்கில் சாட்சியம் கூற உரிமை யற்றவர்களாயிருந்தனர். பொதுப் பள்ளிக் கூடங்களிலும் நீக்கிரோவருக்குப் பிரவேசனம் அளிக்கப்படவில்லை. நீக்கிரோவர் மனிதர்களே அன்றிப் பிரஜைகள் அல்லவென்று 1833-ல் ஒரு கோர்ட்டுத் தீர்ப்பும் பிறந்தது.

"சில தேசங்களில் நீக்கிரோவர் ஔஷதங்கள் விற்பனை செய்யக்கூடாது; சில தேசங்களில் அவர் கோதுமையும் புகையிலையும் விற்கக்கூடாது; சிலதேசங்களில் சந்தைச் சாமான்கள் விற்பதும்,மரக்கலங்கள் வைத்துக்கொண்டிருப்பதும் சட்ட விரோதமெனக் கருதப்பட்டன. அனேக தேசங்களில் நீக்கிரோவர் அந்தந்த தேச எல்லைகளைக் கடந்துசெல்லுதல் கூடாது. சில தேசங்களில் விடுதலை பெற்ற நீக்கிரோவர்களை நாடு கடத்திவிடுவது வழக்கம்.

பெயரளவில் மட்டுமே அடிமை வர்த்தகம் நிறுத்தப்பட்டது. பெயரளவில் நீக்கிரோவர் பெற்ற சுதந்தரங்களை சிறுகச் சிறுகப் பிடுங்குவதற்கு வேறொரு இயக்கம் தலையெடுத்தது. பல திருத்தங்கள் மூலமும், வியாக்கியானங்கள் மூலமும் நீக்கிரோவர் உரிமைகளை வெள்ளையர் பிடுங்கிவிட்டனர். நீக்கிரோவர்—வெள்ளையர் கலப்பு விவாகத்தைத் தடுக்கக் கடுமையான சட்டங்களும், பயங்கரமான தண்டனைகளும் ஏற்படுத்தப்பட்டன. அனேக தேசங்களில் ரயில்வண்டிகளிலும் வெள்ளையர்களுக்கும், நீக்கிரோவருக்கும் தனித்தனி இடங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன; ஸ்டேஷன்களில் தனித்தனி சிற்றுண்டிச்சாலைகளும் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. டிராம் வண்டிகளின் முற்பக்கத்தில் வெள்ளையர்களுக்கும், பிற்பக்கத்தில் நீக்ரோவருக்கும் இடமளிக்கப்படுகின்றன. ஒரு நீக்கிரோ எவ்வளவு

சீமானுயிருந்தாலும், உறங்க சௌகரியமுள்ள இடம் ரயில் வண்டியில் பெற முடியாது. வெள்ளையர்களும், நீக்கிரோவரும் ஒரே ரயில் கூலி கொடுத்தாலும் வெள்ளையர்களுக்குள்ள சௌகரியம் நீக்கிரோவர்களுக்கு இல்லை.

தென்னாடுகளில் பொதுப் பள்ளிக்கூடங்களில் நீக்கிரோவருக்குப் பிரவேசனம் கிடையாது. வெள்ளையர்கள் நீக்கிரோவர் பள்ளிக்கூடங்களிலும், நீக்கிரோவர் வெள்ளையர் பள்ளிக் கூடங்களிலும் உபாத்தியாயராயிருத்தல் கூடாதென்று ஒரு தேசத்தில் சட்டம் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. சட்ட பூர்வகமான தடைகள் தென்னாடுகளில் மட்டும் ஜாஸ்தியாகக் காணப்படினும் அமெரிக்கா முழுதும் ஜாதி வித்தியாச மணம் வீசிக்கொண்டுதா னிருக்கிறது. ஹோட்டல்களிலும், கிறிஸ்தவ யுவஜன சங்கத்திலும் (Y. M. C. A.) கிறிஸ்தவமாதர் சங்கத்திலும் (Y. M. C. A.) நீக்கிரோவருக்கு பிரவேசனமில்லை. வெள்ளையர் கல்லறைத் தோட்டங்களில் நீக்கிரோவர் அடக்கம் செய்யப்படவும் மாட்டார்கள். இந்தத் தொல்லையினால், நீக்கிரோவர் தமக்கென்று தனித் தேவாலயங்களும் ஹோட்டல்களும் வைத்திருக்கிறார்கள். நாடகசாலைகளிலும் கூட அவர்களுக்குத் தனியிடமே வழங்கப்படுகிறது. நகரங்களிலும், கிராமங்களிலும் குடியிருக்க அவர்களுக்குத் தனியிடங்கள் அமர்த்தப் பட்டிருக்கின்றன. வெள்ளையர் எல்லையில் அவர்கள் கால் வைக்கக்கூடாது. வாஸ்தவத்தில் அமெரிக்காவில் நீக்கிரோவர் வாழ்க்கை, இந்தியாவில் பறையர்கள் வாழ்க்கையிலும் எவ்வளவோ கேவலமானது.

வெள்ளையர்களுக்குத் தீமை விளைத்ததாகக் குற்றம் சாட்டப்பட்ட நீக்கிரோவர்களையும், சந்தேகிக்கப்படும் நீக்கிரோவர்களையும், நீதிஸ்தலத்தில் விசாரணை செய்யாமலே குரூர புத்தியுடைய பொது ஜனங்கள் சித்திரவதை செய்து கொல்லும் கொடிய வழக்கம் அமெரிக்காவில் இருந்துவருகிறது. இத்தகைய கொலைக்கு லின்சிங் (Lynching) என்று

பெயர். இக் கொடுங் கொலை நடத்துவதற்காக கு க்ளக்ஸ் க்ளான் (Ku Klux Klan) என்னும் பெயரால் ஒரு ரகசிய சங்கத்தார் இருக்கின்றனர். சட்ட திட்டங்களி விருந்து தப்புவித்துக் கொள்வதற்கு இவர்கள் வெகு சமர்த்தர்கள். அமெரிக்கா முழுதும் அச்சங்கத்தின் கிளைஸ்தாபனங்கள் பரவி யிருக்கின்றன. உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர்களும், உயர்தர உத்தியோகஸ்தர்களும், நீதிபதிகளும் கூட அச்சங்கத்தில் அங்கத்தினரா யிருக்கின்றனர்.

## விசாரணையின்றி

## சித்திரவதை செய்யப்பட்டவர்கள் தொகை

| வருஷம் | கொல்லப்பட்டவர் தொகை | வருஷம் | கொல்லப்பட்டவர் தொகை |
|---|---|---|---|
| 1885 | 78 | 1902 | 86 |
| 1886 | 71 | 1903 | 86 |
| 1887 | 80 | 1904 | 83 |
| 1888 | 95 | 1905 | 61 |
| 1889 | 95 | 1906 | 64 |
| 1890 | 90 | 1907 | 60 |
| 1891 | 121 | 1908 | 93 |
| 1892 | 155 | 1909 | 73 |
| 1893 | 154 | 1910 | 65 |
| 1894 | 134 | 1911 | 63 |
| 1895 | 112 | 1912 | 63 |
| 1896 | 80 | 1913 | 79 |
| 1897 | 122 | 1914 | 69 |
| 1898 | 102 | 1915 | 80 |
| 1899 | 84 | 1916 | 55 |
| 1900 | 107 | 1917 | 44 |
| 1901 | 107 | 1918 | 64 |

இந்தப் புள்ளி விவரங்கள் "சிக்காகோ டிரிப்யூன்" பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டன. இந்தத் தொகை வாஸ்தவத்தில் சித்திரவதை செய்யப்பட்டவர்கள் தொகையை விட மிகக் குறைவானது என்று நீக்கிரோ முன்னேற்ற சங்கத்தார் வெளியிடும் "க்ரைசிஸ்" பத்திரிகை அபிப்பிராயப்படுகிறது.

இனி, நீக்கிரோவர் தண்டனை வரலாறுகளைப் பற்றிச் சிறிது கூறுவோம்.

## திருஷ்டாந்தங்கள்.

அக்டோபர் **20**, மான்சஸ்டர் கா—ஜெரி லவ்லேஸ் என்னும் ஒரு நீக்கிரோ ஒரு வெள்ளை மாதைக் கீழே தள்ளியதாக குற்றஞ்சாட்டப்பட்டுச் சிறையிலிருந்தான். அவனை ஒரு கூட்டம் கலகக்காரர்கள் இரவு 2-மணிக்கு சிறையிலிருந்து இழுத்துக் கொண்டுபோய் சித்திரவதை செய்து கொன்றனர். அக் கூட்டத்தில் சுமார் 30-பேர் இருந்ததாகத் தெரிகிறது.

மே, **26**, ஒகீமன், ஒகஸ்ஹரமா:—ஒரு நகர சபைத் தலைவரைச் சுட எத்தனித்த ஒரு நீக்கிரோ மாதையும், 14 வயதுடைய அவள் மகனையும் கலகக்காரர்கள் ஒரு பாலத்தில் தூக்கிட்டுக் கொன்றுவிட்டனர். தூக்கிடப்படு முன் அம்மாது சற்பழிக்கவும் பட்டாள்.

மே **20**, ரீலக் சிட்டி, ப்ரை:—ஒரு பிரபலஸ்தர் கொலையில் சம்பந்தப் பட்டதாகச் சிறைப்படுத்தப் பட்டிருந்த 6 பேரை கலகக்காரர் சிறையிலிருந்து விடுவித்து சித்திரவதை செய்து கொன்றனர். மோட்டார்கார்களில் வந்த கலகக்காரர்கள், சிறைச் சாலையைக் காத்துக்கொண்டிருந்த சிறைச் சாலை அதிகாரி மகனிடத்தில், சிறையிலிருந்த அந்த ஆறு பேர்களையும் விடும்படி கவர்னர் அனுப்பியதாக ஒரு தந்தி

யைக் காட்டினர். இதைப்பற்றி விசாரித்ததில் அந்த அறு வரில் ஒருவன் மட்டுமே கொலைக் குற்றத்தில் சம்பந்தப் பட்டிருந்ததாகத் தெரிய வருகிறது. ஒரு நீக்கிரோவன் ஒரு வெள்ளையனை அடித்துவிட்டதாகக் கோர்ட்டில் வழக் குத் தொடரப்பட்டது. நீக்கிரோ குற்றவாளி யல்ல வென்று விடுவிக்கப்பட்டான். அன்றிரவு அந்த வெள்ளை யன் ஒரு துப்பாக்கியுடன் நீக்கிரோவின் வீட்டினுட் புகுந்து சண்டையிடத் தொடங்கினான். இருவரும் துப் பாக்கிப் பிரயோகம் செய்து கொண்டனர். வெள்ளையன் சுட்டுக் கொல்லப்பட்டான். நீக்கிரோ போலீஸ் ஸ்டேஷ னில் ஆஜராகி குற்றம் சம்மதித்தார். மற்ற ஐவரும் சாட்சிகளெனக் கண்டு சிறையில் பந்தோபஸ்து செய்யப் பட்டிருந்தனர்.

ஆகஸ்டு 13, கோட்ஸ்வில், பா. கோட்ஸ்வில் பயங் கரக் கொலையைப்பற்றி மீண்டும் விரித்தெழுதத் தேவை யில்லை. காயப்பட்டு ஆஸ்பத்திரி சிகிச்சையில் இருந்த ஒரு நீக்கிரோவை ஒரு காவற்காரனைச் சுட்டதாகக் குற்றஞ் சாட்டி உயிருடன் எரித்துவிட்டதைப்பற்றி நீங்கள் கேட் டிருப்பீர்கள். சூடு பொறுக்க முடியாமல் தீக்குழியி லிருந்து தப்ப எத்தனித்த அவனை மீண்டும் குழியில் தள்ளி எரித்து விட்டார்களாம். அவனுடைய பற்களையும் எலும்புகளையும் ஞாபகப் பொருள்களாக வைத்திருக்கிறார் களாம். இதற்காகச் சிறைப் படுத்தப்பட்டவர்க ளெல் லாம் விடுதலை யடைந்தனர்.

ஜூலை——லாலரன் ஸ்வில். கா:—நீதிபதி சாரல்ஸ் எச். பிராண்டு முன் இரண்டு நீக்கிரோவர் விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டனர். ஒருவன் ஒரு வெள்ளை மாதைத் தாக்கியதாகவும், மற்றவன் சந்தேகத்துக் கிடமான ஸ்திதி யில் தெருவில் சுற்றிக்கொண்டிருந்ததாகவும் குற்றம் சாட் டப்பட்டிருந்தது. தமது பாதுகாப்புக்காகத் துருப்புகளை அனுப்பவேண்டுமென்று அந்த நீக்கிரோவர் நீதிபதியிடம்

விண்ணப்பம் செய்தனர். நீதிபதி அதை லட்சியம் செய்ய வில்லை. அவர்களில் ஒருவன் போலீஸ் உத்தியோகஸ்தர் காவலில் ரெயில்வண்டியில் இருக்கும்பொழுது ஜனங்கள் அவனை இழுத்துச் சென்று சித்திரவதை செய்து கொன்றனர். அக்காட்சியைப் பார்க்கும் பொருட்டு ரயில்வண்டியும்கூட நிறுத்தப்பட்டதாம். மற்றவனை கலகக்காரர்கள் ஜெயிலிலிருந்து இழுத்துக்கொண்டுபோய் கொன்றுவிட்டனர்.

குற்றவாளிகள் பந்தோபஸ்துக்கு துருப்புகள் அனுப்பாததைப் பற்றிக் கேள்வி பிறந்தபோது நீதிபதி பிராண்டு கூறியதாவது:—இந்நாட்டில் உள்ள நீக்கிரோ குற்றவாளிகளுக்காக வெள்ளைத் துருப்புகளைப் பலிகொடுக்க நான் விரும்பவில்லை. என் மனச்சாட்சிக்கும், கடவுளுக்கும் என் கொள்கை உடன்பாடா யிருக்குமென்றே நம்புகிறேன். அத்தகைய 100 நீக்கிரோவரைக் காப்பாற்றும் பொருட்டு ஒரு வெள்ளையனைக் கூட ஆபத்துக் குள்ளாக்க நான் துணியமாட்டேன்.

நவம்பர் 11, ஹோனியபாத், எஸ்ஸி:—தேன் கரோலினு கவர்னர் பிளீங் என்பவர் சமீபத்தில் நடந்த ஒரு சித்திரவதையைப்பற்றிக் கூறுவதாவது:—அந்த நீக்கிரோ கழுதைகளைத் தண்டிக்கக் கூடாதென்று வெள்ளையர்களைத் தடுக்க என் அதிகாரத்தை உபயோகிப்பதைவிட என் உத்தியோகத்தை ராஜீநாமா செய்துவிட்டு அக் கலகக்காரர்களுக்குத் தலைமை வகித்து நடத்துவதே மேலானதென்று எனக்குத் தோற்றுகிறது.

மேலே கூறிய மிருகச் செயல்கள் இப்பொழுதும் அமெரிக்காவில் நடைபெற்ற வண்ணமாகவே இருக்கின்றன.

"கிரைசிஸ்" பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்ட கீழ் வரும் விஷயங்களைக் கவனியுங்கள்:—நீக்கிரோவர்களைச் சித்திரவதை செய்வதும், நெருப்பிலிட்டுக் கொளுத்துவதும்

அமெரிக்காவில் பிரதிதின சம்பவங்கள் ஆகிவிட்டன. எனினும், அமெரிக்க சர்க்கார் இக் கொடுமைகளைக் கண்டித்து ஒரு வார்த்தைகூடக் கூற முன்வரவில்லை; தேவாலயங்களிலும் ஒரு அநுதாப வார்த்தையாவது கேட்கப்படவில்லை. லூயிஸ்வில், மிசிசிபி முதலிய தேசங்களில் நடந்த சித்திரவதைகளுக்குக் காரணந்தா னென்ன? பழைய மோட்டார் கார்களில் மெதுவாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்த நீக்கிரோவர் விரைவாக ஓடும் வெள்ளையர்கள் கார்களுக்கு வழி விட்டுக் கொடுக்கவில்லையாம். இந்தக் கொடுஞ் செயல்களை மறைத்து வைத்துக்கொண்டிருக்கும் அமெரிக்கர் ஜினிவா, பீகிங் மகாநாடுகளில் வீற்றிருந்து கொண்டு நாங்களும் நாகரிகம் பெற்றவர்களே எனக் கூற வெட்க மில்லாதவர்களா யிருக்கிறார்களா?

அதே பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்ட வேறொரு விஷயம் பின்வருமாறு:—

## கலகக்காரர் சூழ்ச்சி

கலகக்காரர்கள் ஒரு முறையான சூழ்ச்சியைப் பின் பற்றி வருவதாகத் தெரிகிறது. அது பின்வருமாறு:—எங்காவது ஒரு குற்றம் நடந்தால் போலீசார் ஒரு நீக்கிரோவின் மீது குற்றஞ்சாட்டுகிறார்கள். நீக்ரோவர்கள் குற்றம் செய்பவர்கள் என்று வெள்ளையர்கள் எளிதில் நம்பிவிடுவார்கள். ...கையால் போலீசார் ஜனசம்மதமும் பெற்றுவிடுகிறார்கள். ...ற்றவாளி சித்திரவதை செய்யப் பட்டால் போலீசார் ...து குற்றம் சுமத்த ஒருவரும் முன் வருவதுமில்லை. சித்...ரவதை செய்தவர்களைக் கண்டு பிடிக்க போலீசார் முயற்...பது மில்லை. சித்திரவதைக்கு ஏதாவது தடையேற்பட்...ல் கலகக்காரர்கள் நீக்கிரோவர் கிராமங்களைத் தாக்கிக் ...ள்ளையிடத் தொடங்குகிறார்கள். தற்காப்புக்காக நீக்கி...வர் எதிர்த்து நின்றால், போலீசார் இராணுவ உதவி ... சென்று நீக்கிரோவர்களைக் கைது செய்து கலகம்

உண்டு பண்ணியதாகக் குற்றஞ்சாட்டுகிறார்கள். இதனால் தற்காப்புக்காக எதிர்த்து நிற்கவும் நீக்கிரோவர் பயப்படுகிறார்கள். உயிருக்கு ஆபத்து நேரிட்டாலும் அவர்கள் சும்மா இருக்க வேண்டியது தான்."

'கிரைசிஸ்' செப்டம்பர் மாதப் பத்திரிகையில் பின்வரும் விஷயம் வெளிவந்திருக்கிறது.

## ஜகன் சித்திரவதை

சித்திரவதையை ஒழிப்பதற்கு தீவிரமாக நாம் இப்பொழுது கிளர்ச்சி செய்யத் தொடங்கி யிருக்கிறோம். வெகு நாளாக கிளர்ச்சி செய்தும் நாம் விரும்பும் பயன் கைகூடவில்லை; இன்னும் பலகாலம் இக்கொடிய வழக்கத்தை எதிர்த்துப் போராட வேண்டியது தான். ஜகனில் நடந்த லோமன் சித்திரவதையைப்பற்றி நாம் கிளர்ச்சி செய்ததை நேயர்கள் அறிந்திருக்கலாம். எனினும் அதே இடத்தில் பின்னும் மூவர் சித்திரவதை செய்யப்பட்டதாகத் தெரிகிறது. ஏழைகளான மூன்று நீக்கிரோவர்கள் கொலைக்குற்றம் சாட்டப்பட்டு அவசரத்தில் விசாரணை செய்யப்பட்டனர். விசாரணை பூர்த்தியாவதற்கு முன் ஸ்ரீ. என். ஜெ. பிரடரிக் என்னும் ஒரு நீக்கிரோ வக்கீல் அவர்களது வழக்கை நடத்த முன் வந்தார். ஸ்ரீ. பிரடரிக் சுப்ரீம் கோர்ட்டில் அப்பீல் செய்தார். சுப்ரீம் கோர்ட்டார் அந்த வழக்கை சர்க்கியூட்டு கோர்ட்டார் விசாரணைசெய்யும்படி உத்தரவளித்தனர். புனர் விசாரணையில் ஸ்ரீ. பிரடரிக்கும், எல். ஜி. சதர்டு என்ற ஒரு வெள்ளை வக்கீலும் குற்றவாளி சார்பாக ஆஜரானார்கள்; குற்றவாளிகளில் இருவர் புருஷர். மூன்றாமவர் பெண். விசாரணையில் ஸ்ரீ பிரடரிக் வாதத்தைக்கேட்டு நீதிபதி குற்றவாளிகளில் ஒருவனை விடுதலைசெய்தார். மற்றவர்கள் விசாரணை முடியவில்லை. விசாரணை முடிந்தால் அவர்களும் விடுதலையடையக் கூடியவர்களே. ஆனால் நடந்ததென்ன? குற்றவாளிகளில் ஒருவன் விடுதலை பெற்ற அன்றி

ரவு கலகக்காரர்கள் ஜெயிலுக்குள் புகுந்து அம்மூவரையும் பிடித்துக்கொண்டு போய் சுட்டுக்கொன்று விட்டனர்."

செப்டம்பர் மாத "கிரைசிஸ்"ஸில் பின் வரும் வரலாறு வெளிவந்திருக்கிறது.

"மிசிசிபியில் கொஞ்ச நாளைக்கு முன் ஒரு சித்திரவதை நடந்ததாகத் தெரிகிறது. ஒரே மூச்சில் அமெரிக்காவிலிருந்து ஐரோப்பாவுக்கு விமானப் பிரயாணம் செய்த ஸ்ரீ லிண்டுபெர்க்கின் வீரப்பிரதாபங்களை நினைந்து நியூயார்க்கு பட்டணத்தில் லக்ஷக்கணக்கான ஜனங்கள் ஆநந்தக்கூத்தாடும் அதே நாளிரவில் ஆயிரக்கணக்கான வெள்ளையர்கள் ஒரு கூட்டமாகத் திரண்டு இரண்டு நீக்கிரோவர்களைப் பிடித்து, ஒரு ஓவர்சீயரைக் கொன்றதாகக் குற்றம் சாட்டி, ஒரு தந்தித் தூணில்கட்டி, காசோலின் எண்ணெயால் நனைத்து நெருப்பிட்டுக் கொன்று விட்டனர்.

1927வருஷம் ஜூலை மாத "கிரைசிஸ்" பத்திரிகையில் ஆசிரியர் டாக்டர் டு பாய்ஸ் எழுதியிருக்கும் ஒரு அடிக்குறுப்பு வருமாறு:—

## கான்சாஸ் சம்பவம்

கான்சாஸ் நகரத்தில் ஹைஸ்கூல் மாணவிகளான இரண்டு வெள்ளைப் பெண்களை மார்ச்சு 17ந்தேதி சில நீக்கிரோவர் கற்பழித்து விட்டார்களாம். அதற்காக மூன்று நீக்கிரோவர் கைது செய்யப்பட்டனர். அவர்களில் இருவர் விடுதலை யடைந்தனர். ஒருவர் பந்தோபஸ்தில் இருந்துவந்தார். மார்ச்சு 18ந்தேதி 2000 வெள்ளையர்கள் திரண்டு அவனை சித்திரவதை செய்வதற்காக நகரசபை மண்டபத்தைத்தாக்கி, சுற்றுப் புறங்களிலுள்ள கடைகளில் கொள்ளையிட்டு நீக்கிரோவர்களை வெருட்டி யோட்டத் தொடங்கினர். பல நீக்கிரோவர் ஒன்றுகூடி தற்காப்புக்காக கலகக்

காரர்களை எதிர்க்கத் தொடங்கினர். ஆண்டர்சன், போர்டு என்னும் இரண்டு நீக்கிரோத் தலைவர்கள் கலகக்காரர்களை நோக்கிச் சுட்டதினால் குழப்பம் அடங்கிற்றாயினும் அவர்களுக்கும் பலமான காயம் ஏற்பட்டது. அவர்களிருவரும் கலக மூட்டியதாகக் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையி லிருக்கின்றனர். ஆனால் இப்பொழுது உண்மை வெளிவரத் தொடங்குகிறது. வெள்ளையர்கள் அதை மறைக்க முயற்சி செய்கிறார்கள். நீக்கிரோவரோ தக்க பஞ்சாயத்து மூலம் இவ் வழக்கை விசாரணை நடத்த வேண்டுமென்று அதிகாரிகளிடம் விண்ணப்பம் செய்திருக்கின்றனர். அந்த வெள்ளை மாணவிகளை கற்பழித்தது இரண்டு வெள்ளையர்கள் என்றும் அவர்களில் ஒருவன் அக் குற்றத்துக்காக சிறையிலிருப்பதாகவும் அப் பெண்களில் ஒருத்தி அவனுக்கு உடந்தையாயிருந்ததற்காக அதே சிறையி லிருப்பதாகவும் காபிவில் பிரதிதினப் பத்திரிகை கூறுகிறது. இதற்கு இன்னும் வியாக்கியானம் வேண்டுமா?

## ஈஸ்டு சேயிண்டு லூயிஸ் கொலை

1917ம்வருஷம் ஜூலை மாதத்தில் ஈஸ்டு சேயிண்டு லூயிஸ் நகரத்தில் ஒரு கூட்டக் கொலை நடந்தது. அந் நகரத்துள்ள ஒரு தொழிற்சாலையில் வெள்ளைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். உடனே முதலாளிகள் தெற்குப் பிரதேசங்களி லிருந்து நீக்கிரோ தொழிலாளர்களை வரவழைத்தனர். ஆகவே வெள்ளைத் தொழிலாளருக்கு அடங்காக் கோபம் வந்துவிட்டது. வெறிகொண்ட வெள்ளையர்கள் நீக்கிரோவரை வேட்டையாடத் தொடங்கினர். பெண்கள் என்றும் வயோதிகர் என்றும் அவர்கள் வித்தியாசம் பாராட்டவில்லை. கையில் அகப்பட்ட நீக்கிரோவர்களை யெல்லாம் கொன்று குவித்தனர். வீடுகளை யெல்லாம் தீக்கிரையாக்கினர். வீட்டுக் குள்ளிருந்து வெளிவர முடியாமல் மூச்சு முட்டி மாண்டவர்கள் அநேகர். வெள்ளைப் பத்திரிகைகளின் வரலாற்றின்படி,

வெள்ளைப் போலீசார் இந்த அநியாய அலங்கோலத்தைப் பார்த்துக்கொண்டு நின்றனராம். "சேயிண்டுலூயிஸ் ஸ்டார்" என்னும் பத்திரிகையில் வெளிவந்த பின்வரும் வரலாறு போலீசார் போக்கை நன்கு விளக்கும்:—

இந்தக் கூட்டக்கொலையில் இராணுவவீரர்களும் பங்கு கொண்டனர். அவர்களில் இருவரை குருனிங் என்னும் ஒரு மாது வழியில் தற்செயலாய் சந்திக்க, வீரர்களுக்கும், அவளுக்கும் பின்வரும் சம்பாஷணை நடந்தது.

வீரர்கள்:—ஏழு நீக்கிரோவர்கள் கால்வாயில் தள்ளப்பட்டதை நாங்கள் பார்த்தோம். நீக்கிரோவர் கால்வாயண்டை வரவர ஜனங்கள் அவர்களைப் பிடித்து கால்வாயில் தள்ளிக்கொண்டே இருந்தார்கள்.

மாது:—"நீங்கள் எத்தனை பேரைக் கொன்றீர்கள்."

வீரர்கள்:—"தொகை நிச்சயமில்லை. எங்களால் ஆனமட்டும் நீக்கிரோவரைச் சுட்டுக் கொன்று கொண்டேயிருந்தோம். அது தான் எங்கள் அதிகாரி உத்தரவு.

மாது:—என்ன! நீக்கிரோவரைச் சுட்டுக் கொல்ல உங்கள் அதிகாரி உத்தர வளித்தாரா?

வீரர்கள்:—நகைத்துக்கொண்டு—"இல்லை! இல்லை! தீ கொளுத்துகிறவர்களைக் கொல்லத்தான் அதிகாரியின் உத்தரவு."

மாது:—"நீங்கள் தீ கொளுத்தியவர்களைப் பார்த்தீர்களா?"

வீரர்கள்:—"இல்லை. நாங்கள் நீக்கிரோவர்களைத்தான் பார்த்தோம். பார்க்கவே சுட்டு அவர்களை ஆகாயத்தில் பறக்க விட்டோம்."

அம்மாது இவ் விஷயங்களை ராணுவ அதிகாரிகளுக்குத் தெரிவித்து அந்த இரண்டு வீரர்களையும தனக்கு அடையாளங் கண்டு கூற முடியுமென்றும் சொன்னாள்.

ஆனல் அதிகாரிகள் அசம்பந்தமான பதிலளித்து அவளைத் திருப்பியனுப்பி விட்டனர்.

நீக்கிரோ அபிவிர்த்தி சங்கத்தார், குருனிங் என்ற அந்த மாதையும் "கிரைசிஸ்" ஆசிரியரான டாக்டர். டப்ளியூ. இ. பி. டுபாயிஸையும் (இவர் நீக்கிரோ வகுப்பைச் சேர்ந்தவர்) இந்தப் படுகொலையைப் பற்றி விசாரிக்க அனுப்பினர். அவ் விருவரும் விசாரணை செய்தறிந்த விஷயங்களெல்லாம் படங்களுடன் கிரைசிஸ் பத்திரிகையில் வெளிவந்தன. அவற்றைச் சுருக்கிக் கீழே தருகின்ரேம்.

இந்தக் கூட்டக் கொலையை ஜெர்மானியர் செய்ததாகக் கூறப்படும் கூட்டக் கொலைக்கு கிரைசிஸ் ஒப்பிட்டு, பின்னும் கூறுவதாவது:—ஜெர்மானியர் செய்ததாகக் கூறப்படும் கொலையும் இவ்வளவு பயங்கரமானதல்ல. கொலையுண்டவர்கள் துடிதுடித்துச் சாவதைப் பார்த்து ஜெர்மானியர் மகிழ்ச்சி யடைந்ததாக ஒருவராவது கூறவில்லை. ஆனல் இந்தக் கொலைப்பாதகர்கள் ஒரு பாவமு மறியாத ஏழைகளைக் கொன்றது மன்றி, அவர்கள் துடித்து மடிவதைப் பார்த்து ஆநந்தம் அடைந்தனர். "சேயிண்டு போஸ்டு டேஸ்மாச்சு" பத்திரிகையின் ரிப்போர்ட்டர், நேரிற் பார்த்து, எழுதும் வரலாறும் அவ்வாறே கூறுகிறது. அது பின் வருமாறு:—

"ஈஸ்டு சேயிண்டு லூயில் கொலை பந்தய விளையாட்டு மாதிரி நடந்த ஒரு மனிதவேட்டை. ஆனல் பந்தய விளையாட்டில் ஒருவரும் நியாய வரம்பு மீறி நடப்பதில்லை. இந்தக் கொலை நியாய வரம்பை மீறியது; பயங்கரமான துணிவுடனும் வெறுக்கத்தக்க உல்லாசத்துடனும் அவர்கள் மனிதவேட்டை யாடினர்கள். "ஒரு நீக்கிரோவைக் கொண்டுவா" என்பான் ஒருவன். உடனே ஒருவனைப் பிடித்துக்கொண்டு வருவார்கள். அவனைக் கொன்று வீழ்த்திவிட்டு "இன்னெருவனைக் கொண்டுவா" என்பான். இவ்வண்ணம் விளையாட்டாசப் பலர் கொல்லப்பட்டனர்.

அமெரிக்கர்கள் இயல்பாகவே கோலாகலப்பிரியர்கள். புதுக் களியாட்டுகளில் அவர்களுக்கு மிகுந்த கிறுக்கு. போலி யின்பம் நுகர்ந்து நுகர்ந்து அலுத்துப்போன அந்த வெள்ளைக் கலகக்காரர்களுக்கு தமது மிருக உணர்ச்சியைத் திருப்தி செய்யும் ஒரு இன்பம் தேவையா யிருந்தது. அந்த இன்பம் இதற்கு முன் ஒருவராலும் அனுபவிக்கப்படாததா யிருக்கவேண்டு மென்றுமெண்ணினர். எனவே ஏழைக ளான நீக்கிரோவர்களை வேட்டையாடத் தொடங்கினர்.

மேலும் அந்த ரிப்போர்ட்டர் கூறுவதைக் கவனியுங் கள்.

“கல்லெறியால் மண்டையில் படுகாய மடைந்த ஒரு நீக்கிரோவை அக் கலகக்காரர்கள் ஒரு மூலையில் இழுத்துக் கொண்டு சென்று ஒரு சிறு கயிறை அவன் கழுத்தில் கட்டி தொங்கவிட்டார்கள். ஒரு மனிதன் பாரத்தைத் தாங்கக் கூடிய பலம் அந்தச் சிறு கயிறுக்கு இல்லாததினால் கயிறற்று நீக்கிரோ தொப்பென்று கீழே விழுந்து நகர்ந்து நகர்ந்து செல்ல எத்தனித்தான். பின்னும் அந்தப் பாவிகள் அவனை விடவில்லை. அந்த சந்தர்ப்பத்தில் பக்கத்து வீட்டிலிருந்து ஒரு கிழவன் வெளியில் வந்து “இந்தத் தெருவில் அவனை தூக்கிட்டுக் கொல்லப் போகிறீர்களா? உங்களுக்கு அவ் வளவு துணிகரமா” என்று அதட்டினான். கிழவன் வார்த்தை அவர்கள் செவியில் ஏறவில்லை. அவனை உதைத் துத் தள்ளிவிட்டு பலமான கயிறு தேட எத்தனித்தனர். கடைசியாக ஒரு கயிறும் அகப்பட்டது. அந்தப் பாவிகள் கயிற்றில் சுருக்கிட்டு நீக்கிரோ கழுத்தில் மாட்டினர். சுருக்கு சிறிதா யிருந்ததினால் மண்டை சுருக்குக்குள் இலேசாக நுழையவில்லை. உடனே ஒரு கன்னெஞ்சப் படு பாவி இரத்தம் வடிந்துக் கொண்டிருந்த மண்டைக் காயத் தில் தன் விரல்களைத் திணித்து மண்டையை சருக்குக்குள் பலவந்தமாகத் தள்ளினான். அந்த ஏழை நீக்கிரோ வலி பொறுக்கமாட்டாமல் ஐயோ ஐயோ என்று கதறினான். அவன் கதறுதலைக் கேட்பார் யார். கடைசியாகத் தூக் கிட்டுக் கொல்லப்பட்டான்.”

இத்தகைய குரூரச் செய்கைகளைப் பற்றிய வரலாறுகள் பல வேறு வாயிலாகவும் வெளி வந்திருக்கின்றன.

இத்தகைய பாதகச் செயல்களில் பெண்களும் தேர்ச்சி பெற்றவர்களாகவே காணப்படுகின்றனர். ஸ்ரீ. ஹார்டு எழுதுவதைப் பாருங்கள்:—"நாங்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை. எங்களைக் கஷ்டப்படுத்த வேண்டாம்." என்று நீக்கிரோ மாதர்கள் மன்றாடிக் கேட்டுக்கொள்வதை நான் கண்ணாரப் பார்த்தேன். அவர்களது இரக்க மொழிகளைக் கேட்டு கன்னெஞ்ச முடைய வெள்ளை மாதர்கள் குலுங்கக் குலுங்க நகைத்தார்கள். அம்மட்டோ! கைமுட்டியால் அவர்கள் நெஞ்சில் குத்தவும், கம்பாலடிக்கவும், கல்லெறியவும் செய்தார்கள். இந்த வெள்ளைப் பேய்களின் கையி லகப்பட்டுத் தத்தளிக்கும் ஒரு ஏழைப் பெண்ணை ஒரு இராணுவ வீரன் காப்பாற்ற முன் வந்தான். உடனே ஒரு வெள்ளை மாது அவன்மேல் புலிபோல் பாய்ந்து அவன் கையிலிருந்த துப்பாக்கியைப் பிடுங்க யத்தனித்தாள். இந்தக் கலவரத்தில் அவ் வேழைப் பெண்ணை மற்றப் பெண்கள் நையப் புடைத்தனர்.

வேறொரு இளம் பெண்ணை சில வெள்ளை மாதர்கள் சூழ்ந்துகொண்டனர். ஐயோ! நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே! என்னைக் கொல்லாதீர்கள்! கொல்லாதீர்கள் என அவள் கதறத் தொடங்கினள். உடனே ஒரு வெள்ளைப் பெண் ஒரு துடைப்பக் கட்டையால் அப் பெண்ணின் வாயி லடித்தாள். வேறொரு வெள்ளைக்காரி அப் பெண்ணின் கரங்க ளிரண்டையும் பிடித்துக் கொண்டாள். மற்றப் பெண்கள் துடைப்பத்தால் தம் மனம்கொண்ட மட்டும் அடித்தனர். தம் கூரிய நகங்களால் அப் பெண்ணின் முகத்தைக் கீறினர்; மேற் சட்டையை துண்டு துண்டாய்க் கிழித் தெறிந்தனர். அவள் இவ்வாறு நிர்வாண கோலத்துடன் நிற்கையில், "இவள் எவ்வளவு விரைவாக ஓடுகிறாள் பார்ப்போம்" என ஒரு வெள்ளை மாது கூறினள். உடனே

கதியற்ற அந்த நீக்கிரோப் பெண் ஓவென் றலறிக்கொண்டு ஓடினாள். வெள்ளை மாதரும் அவளைப் பின் தொடர்ந்து ஓடினார்கள்.

கொஞ்சம் கழித்து ஒரு நீக்கிரோ கிழவி இரண்டு மூன்று போர்வீரர்கள் காவலில் அவ்விடம் வந்தாள். அவளையும் வெள்ளை மாதர் சூழ்ந்துகொண்டனர். போர் வீரர்களில் ஒருவன் துப்பாக்கியை நீட்டிப் பெண்களைத் தடுக்க முயன்றான். உடனே வெள்ளைப் பெண்கள் அத் துப்பாக்கியைப் பிடுங்க எத்தனித்தனர். வேறு சில பெண்கள் மற்ற வீரர்களை வளைத்துக்கொண்டனர். பின்னும் சில பெண்கள் கிழவியைக் காலால் உதைத்தும், கையாலடித்தும் துன்புறுத்தினர்."

துப்பாக்கிக் குண்டேற்று போத மற்று விழுந்த ஒரு நீக்கிரோவின் ஹிருதயத்தை வெட்டியெடுக்க ஒரு வெள்ளைப் புண்ணியவான் முயன்றானும். நீக்கிரோ வேட்டையாடி அலுப்படைந்த கலகக்காரர்கள் பின்னர் வீடுகளுக்கு தீ மூட்டப் புறப்பட்டார்களாம். நீக்கிரோவர் மூச்சுத் திணறி வீட்டுக்குள் கிடந்து சாவது வெள்ளையர்களுக்குப் பெரிய வேடிக்கையாக இருந்ததாம். இந்தப் புண்ணிய கைங்கரியத்தில் பெண்களும் கூச்சமின்றி சேர்ந்துகொண்டார்களாம். தீப்பற்றிய வீட்டிலிருந்து தப்பியோடும் நீக்கிரோப் பெண்களை வெள்ளைப் பெண்கள் பின் தொடர்ந்து சென்று பின்னும் ஹிம்சித்தார்களாம்.

டாக்டர் டு பாயிசும் ஸ்ரீமதி. குளுனிங்கும் ஆஸ்பத்திரி சிகிச்சையிலிருந்த அநேக நீக்கிரோவரிடம் சாட்சியம் வாங்கினார்கள். அவர்களிடம் சாட்சியம் கொடுத்தவர்களுள் அநேக பெண்களும் உட்பட்டிருந்தார்கள். அவர்களுள் நர் சிஸ்கர்வி என்பாள் ஒருவள். அவளுக்கு வயது 71. வீடு தீப்பற்றி யெரிந்தும் பயத்தினால் வெளியில் வரவில்லை யென்றும் சுவர் இடிந்து விழுந்த பிறகே வெளியில் வந்ததாகவும் அவள் கூறினாள். அவளது கைகள் இரண்டும் எரிந்து போயின.

எட்வேர்டு ஸ்பேன்சர் என்னும் ஒரு நீக்கிரோ தொழிலாளி தன் 7 மக்களையும் மனைவியையும் அழைத்துக் கொண்டு ஒரு சினேகிதனைப் பார்க்கும் பொருட்டு ஈஸ்டு சேயிண்டு லூயிசுக்குச் சென்றான். வழி மத்தியில் தனக்குப் பழக்க முள்ள ஒரு வெள்ளையனைச் சந்திக்க இருவரும் ஆப்த நண்பர்களைப் போல் உல்லாசமாக வார்த்தையாடிக் கொண்டு நடந்தனர். அவர்கள் அந்த வெள்ளையன் வீட்டண்டை வந்தவுடன் அந்த வெள்ளையன் சட்டெனத் திரும்பி எட்வேர்டு ஸ்பேன்சரை நோக்கிச் சுட்டான்.

இதுபோன்ற சம்பவங்கள் பல்லாயிரக் கணக்காக நடந்திருக்கின்றன. அவைகளை யெல்லாம் இங்கெடுத் தெழுத இடம் போதாது.

மேலே கூறிய வரலாறுகளால் அமெரிக்காவில் நீக்கிரோவர் அனுபவிக்கும் துன்பங்களை வாசகர்கள் ஒருவாறு அறிய முடியும். நீக்கிரோவர் நிலைமை மிகவும் பயங்கரமாயிருக்கிற தென்று வெள்ளையர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். வெள்ளையர்களுள் மூன்றுவித அபிப்பிராய முடையவர்கள் காணப்படுகிறார்கள். முதல் வகுப்பார் நீக்கிரோவர்களிடம் வெள்ளையர் கொண்டுள்ள பகைமையை அறவே வெறுக்கிறார்கள். இரண்டாவது வகுப்பார் அதை வெறுத்தாலும் அதைப் போக்க முயற்சிப்பதில்லை. நீக்கிரோவருக்கும்—வெள்ளையருக்கும் பல வித்தியாசங்கள் இருப்பதால் அவர்கள் சம நிலையில் வாழ்வது கூடாத காரியமென்று இவர்கள் எண்ணுகிறார்கள். கல்வித் தேர்ச்சியும் சதாசார நடக்கையும் உடைய நீக்கிரோவரிடம் சம நிலையில் நடந்து கொள்ள அவர்களுக்கு விருப்பமில்லாதில்லை. மூன்றாவது வகுப்பாரோ நீக்கிரோவரை எப்பொழுதும் அடிமையாக வைத்துக்கொள்ள விரும்புகிறார்கள். எத்தகைய கல்விப் பயிற்சியாலும் நீக்கிரோவருக்கும் வெள்ளையருக்கும் உள்ள வித்தியாசங்கள் மாறமாட்டா வென்று அவர்கள் நம்புகிறார்கள். மனச்சலிப்புற்ற நீக்கிரோவர் நாடு கடத்தப்பட்டவர்கள் ஒப்ப தம் தாய் நாட்டி லிருந்து அமெரிக்காவுக்குக்

கொண்டுவரப்பட்டார்கள். இவ் வண்ணம் இறக்குமதி செய்யப்பட்ட நீக்கிரோவர் அடிமைகளாகவும் தாய் நாட்டி லிருந்து தூரத்தப்பட்ட ஜாதிப்ருஷ்டர்களாகவும் அமெரிக்க ரால் மதிக்கப்பட்டனர். அடிமைத்தனம் அமுலில் இருந்த காலத்தில் கல்வி கற்கவும் தம்மிஷ்டப்படி உலாவவும் கூட் டம் கூட்டவும் சுதந்தரம் அளிக்கப்படவில்லை. பொதுவாக ஒரு நாகரீக மக்களுக்குள்ள உரிமைகளெல்லாம் அவர்க ளுக்கு மறுக்கப்பட்டன. அடிமை ஏற்பாட்டின்படி நீக் கிரோவர் சுய மதிப்பற்ற உயிர்ப்பிராணிகளாய் மாற்ற மடைந்தனர். வெள்ளையர்களுடன் கூடி மங்கல் நிறமான பிள்ளைப் பெறுவதை நீக்கிரோ மாதர்கள் பெருமையாக மதித்தனர். நீக்கிரோப் பெண்களைத் தம்மிஷ்டப்படி நடத்துவதில் வெள்ளை முதலாளிகளுக்கு எத்தகைய தடை யும் ஏற்பட்டிருக்கவில்லை. மானமும் வெட்கமு மற்ற வெள்ளை முதலாளிகளும் அதிகாரிகளும் நீக்கிரோப் பெண் களை தம்மிஷ்டப்படி சிற்றின்பம் நுகரும் கருவிகளாக உப யோகித்து வந்தனர். "நீக்கிரோவர் வெள்ளையர்களுக்கு பலிப்பொருளாக இருக்கிறார்கள். வெள்ளையர்களுக்குத் தொண்டுபுரிவதே அவர்கள் தலைவிதியாக இருக்கிறது." என்று டீன் மில்லர் கூறுகிறார்.

வேறு ஒரு சந்தர்ப்பத்தில் அவர் கூறியிருப்பதா வது:—இந்த நாட்டில் வசிப்பவர்களின் காம வேட்கை யைத் தணிப்பது நீக்கிரோப் பெண்களின் நீங்காப் பொறி ஆகிவிட்டது. நீக்கிரோ வகுப்பார் நரம்புகளில் எல்லா வகுப்பு இரத்தமும் ஓடிக் கொண்டிருக்கிறது."



## அத்தியாயம் 11.

# பறையரிலும் கடையர்.

(முதன் தொடர்ச்சி)

அமெரிக்கப் பத்திரிகைகளில் தடித்த எழுத்தில் தலைப்புகள் உடைய கு-க்ளக்ஸ்-க்ளான் (Ku Klux Klan) வரலாறுகளை அடிக்கடி பார்க்கலாம். இது அமெரிக்காவுக்கே சொந்தமான ஒரு தனிச்சரக்கு. இந்தச் சரக்குக்கு விளை நிலமாயிருப்பது ஒயிட்மான், எமர்சன் முதலிய அறிவாளிகளைப் பயந்த அமெரிக்காவன்று; பாயிட்டு, டப்ளியூ. ஆர். ஹேர்ஸ்டு, காதரைன் மேயோ போன்றவர்களை யளித்த அமெரிக்காவாகும். இந்த கு—க்ளக்ஸ்—க்ளான் இரகசிய சங்கத்தைப் பற்றிப் பத்திரிகைகளில் வெளிவரும் வரலாறுகளெல்லாம் நீக்கிரோ சித்திரவதையைக் குறிப்பனவாகவே இருக்கின்றன. வாஸ்தவத்தில் இந்த சங்கம் ஒரு வெறும் சித்திரவதை இரகசிய சங்கம் அல்ல; அது அன்னியரிடம் அமெரிக்கருக்குள்ள வெறுப்புணர்ச்சியால் உருப்பெற்ற ஒரு ஸ்தாபனமாகும். அதை அமெரிக்காவின் அமிதவாத தேசிய சங்கமென்றும் கூறலாம். கத்தோலிக்கர், யூதர், நீக்கிரோவர் ஆகிய மூன்று வகுப்பாரையும் அந்நியரென இகழ்வதே அச்சங்கத்தின் முக்கிய நோக்கம். அமெரிக்கருக்கு வேண்டா வகுப்பாராக, கத்தோலிக்கரும் உட்பட்டிருப்பதின் இரகசியம் அநேகருக்குப் புலனாகாதிருக்கலாம். கத்தோலிக்கரிடம் அமெரிக்கருக்குள்ள வெறுப்பு இப்பொழுதும் ஒழிந்தபாடில்லை. கத்தோலிக்கர் அமெரிக்காவில் ஏராளமாக இருந்தும் இது வரையிலும் ஒரு கத்தோலிக்கப் பிரசிடண்டை அவர்களுக்குத் தேர்ந்தெடுக்க முடியவில்லை. பிரசிடண்டு ஸ்தானத்துக்கு அபேட்சகராக இருக்கும் அல்ஸ்மித்து என்பவர் "நான் ஒரு நல்ல கத்தோ

லிக்கனுயிருப்பது போலவே ஒரு நல்ல அமெரிக்கனுகவு மிருக்கிறேன்" என்று பகிரங்கமாக விஞ்ஞாபனம் செய்தும் அவரது தேர்தலுக்கு ஏற்பட்டுள்ள தடைகள் தணிய வில்லை.

தற்கால உருவத்தில் அந்த க்ளான் சங்கம் 1915-ல் அமைக்கப்பெற்றது. எனினும் அது 19-வது நூற்றுண்டில் உற்பத்தியான ஒன்றுமறியோம் இரகசிய அங்கத்தின் (Secret Society of Know Nothing) சந்ததி என்பதை நாம் ஞாபகத்தில் வைக்க வேண்டும். "பழைய அடிமை நாடுகளில் வெள்ளேயரின் ஆதிக்கத்தை நிலை நிறுத்தும்" அதன் ஆதி நோக்கமும், மற்றும் ஆதி லட்சியங்களும், ஆதிப் பிரசார முறைகளும், ஆதிப் பிரசுரங்களும் இப்பொழுதும் அமுலில் இருந்தே வருகின்றன. ஆகவே 1915-ல் இந்த சங்கத்தை திருத்தியமைத்த கர்னல் சிம்மன்ஸ் புதிதாக ஒன்றும் செய்து விடவில்லை.

இந்த இரகசிய சங்கத்தில் சேருவோர் வெளிப் பார்வைக்குப் பிரமாதமானதும், உண்மையில் பொருளற்றதுமான சில போலிச் சடங்குகள் செய்து "தீட்சை" பெற்று சில வாக்குறுதிகளும் அளிக்கவேண்டும். நீக்கிரோவரைப் பயமுறுத்தி இரகசியக் கடிதங்களும், எச்சரிக்கைகளும் அனுப்புதல், பந்தங்களுடன் கம்பீரமாக இராப்பவனி நடத்தல், தோலும் சதையுமற்ற எலும்புக் கைகளால் நீக்கிரோவரை கைப்பற்றுதல், சித்திரவதை செய்தல், குதிரைச் சவுக்கா லடித்தல், தூக்கிட்டுக் கொல்லுதல் முதலியன அக்கூட்டத்தாரின் திருவிளையாடல்கள். தேச சட்டங்களை மதிக்கும் இயல்பும் அவர்களிடமில்லை. இந்தச் சங்கத்தில் படாடோபமான பட்டப் பெயருடைய பல உத்தியோகஸ்தர்களும் இருக்கிறுர்கள்.

மத விஷயங்களில் புராடஸ்டண்டு சபையைப் பின்பற்றுவதும், வெள்ளேயர் ஆதிக்கத்தை நிலைநாட்டுவதும்

அவர்களது முக்கிய தர்மம். அச்சபையின் அங்கத்தினர் கூடிக்கொண்டோ, குறைந்துகொண்டோ இருந்தாலும் அரசியல் விஷயங்களில் சங்கத்தாருக்கு மிகுந்த செல்வாக்கு இருக்கிறது. இந்த சங்கத்தார் சம்பந்தப்பட்ட விஷயங்களில் அரசியல் வாதிகளும் மிக ஜாக்கிரதையாகவே தலையிடுவார்கள்.

இந்தச் சங்கத்தாரால் வெளியிடப்படும் "அமெரிக்கன் ஸ்டான்டார்டு" என்ற பிரதி பட்சப் பத்திரிகையின் ஆகஸ்டு இதழில் இருந்து எடுக்கப்பட்ட கீழ்வரும் விஷயங்களால், கத்தோலிக்கர் விஷயத்தில் இந்த சங்கத்தாருக்குள்ள மனப்போக்கை நன்கு அறிந்துகொள்ளலாம்.

"உரோமாபுரியின் பிற்கால ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்கு வாஷிங்டன் ஏற்ற இடமென்று உரோமர் கருதுவதையும், அதற்காகவே நமது சர்க்கார் ஸ்தாபனங்களில் கத்தோலிக்கரை ஏராளமாக நிரப்பி வருவதையும் நீங்கள் கவனிக்கிறீர்களா? நமது ராஜதானியில் முக்கியமான ஸ்தலங்களை அவர்கள் வெகு காலமாக விலைக்கு வாங்கி வருகிறார்கள்.

வாஷிங்டனில் சர்க்கார் துறைகளில் 100-ல் 61 உத்தியோகஸ்தர்கள் கத்தோலிக்கராக இருக்கின்றனர். மதுவிலக்குப் பொறுப்புடைய பொக்கிஷ இலாகா உத்தியோகஸ்தர்களில் 100-க்கு 70-பேர் கத்தோலிக்கரா யிருக்கிறார்கள்."

கீழ்வருவன மேற்படி பத்திரிகையின் அக்டோபர் 1-தேதி இதழிலிருந்து எடுக்கப்பட்டன.

"அமெரிக்காவைக் கண்டு பிடித்தது கிறிஸ்த்பர் கோலம்பஸ் என்று ஸ்தாபிக்க கத்தோலிக்கர் தீவிர முயற்சி செய்து வருவதை நாம் பலமாகக் கண்டிக்கிறோம்.

இந்தப் பூகண்டம் 1000-ல் லீப் எரிஸ்கினுல் கண்டு பிடிக்கப்பட்டது. கொலம்பஸ் கண்டு பிடித்ததாகக் கூறும் பொய்புரையால் "நார்டிக் கிறிஸ்தவர்" (Nartic Christian) களுக்குள்ள உரிமையை கத்தோலிக்கர் கைப்பற்றிக் கொள்ள முயன்று வருகிறுர்கள்."

1000-ல் புராடஸ்டண்டு மதம் தோன்றவில்லை யென்றும், ஆகவே லீப் எரிஸ்கனும் கத்தோலிக்கராகவே இருந்திருக்க வேண்டுமென்றும் ஸ்ரீ. சீசுப் ரீடு வேடிக்கையாக ஒரு சமாதானம் கூறுகிறுர்.

கோலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்ததினுல் அமெரிக்கா முழுதும் 'போப்'புககே (Fope) உரிமையானதென்று உரிமை கொண்டாட சென்ற நூற்ருண்டின் இறுதியில் ஒரு முயற்சி செய்யப்பட்டது. அதனுலே க்ளான் சங்கத்தார் கத்தோலிக்கர்மீது பகை கொண்டனர்.

இந்த வாக்கு வாதத்தினுல் பல ரசகரமான பிரச்சினைகள் உண்டாகின்றன. இந்தியாவை பிரிட்டிஷார் ஆள்வது போல், அமெரிக்காவையும் அன்னியர்களான ஒரு ஜாதியார் ஆண்டால், இந்தியாவில் ஹிந்துக்களும், முஸ்லீம்களும் சண்டையிடுவதைவிட, அமெரிக்காவில் கத்தோலிக்கரும் க்ளான் சங்கத்தாரும் மிகக் கடினமாகச் சண்டையிட்டு, மண்டை யுடைக்க மாட்டார்களா? அமெரிக்காவில் க்ளான் சங்கத்தார் நீக்கிரோவருக்குச் செய்யும் துன்பங்களைவிட கடினமான அல்லது அநியாயமான துன்பங்களை இந்தியாவில் பிராமணர்கள் பறையர்களுக்குச் செய்கிறுர்களா?

அமெரிக்கரால் துன்புறுத்தப்படும் வேறெரு ஜாதியார் பூர்வ குடிகளான 'சிவப்பு இந்தியர்கள்' (Red ,ndians) ஆவர். ஐரோப்பியர்கள் அமெரிக்காவைக் கண்டு பிடித்தது முதல் காட்டு மிருகங்கள் வேட்டையாடித் தொலைக்கப்படுவதுபோல் சிவப்பு இந்தியர்களும் தொலைக்கப்பட்டு வருகிறுர்கள். இவ்விஷயத்தில் சர்க்காரும், ஜனங்களும் குற்றவாளிகளாகவே இருக்கிறுர்கள்.

இப்பொழுது அவர்கள் காட்டு மிருகங்கள்போல் வேட்டையாடிக் கொல்லப்படுவதில்லை. ஆபிரிக்க சுதேசிகளின் நிலைமையை அவர்கள் இப்பொழுது அடைந்திருக்கிறார்கள். கிழ் ஆபிரிக்காவில் மசாய் வகுப்பார் குடியிருப்பதற்குத் தனியான பூமிகள் ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பதுபோல இவ்விடத்தும் சிவப்பு இந்தியர் குடியிருப்பதற்கு தனி நிலப் பகுதிகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. கிழ் ஆபிரிக்காவில் நிலவளம் பொருந்திய பூமியெல்லாம் வெள்ளையர் வசமாயிருப்பதுபோல் அமெரிக்காவில் நிலவளமில்லாத பூமியெல்லாம் சிவப்பு இந்தியருக்கு விடப்பட்டிருக்கின்றன. வெள்ளையர் வியப்புறும்படி இந்தப் பாழ் நிலங்களில் எண்ணெய்க் கிணறுகள் பூமிக்குள் அமிழ்ந்து கிடந்ததினால் சிவப்பு இந்தியர் பலர் பெரும் பணக்காரராய் விட்டார்கள்.

சுகாதார சௌகரியங்கள் இல்லாத இடங்களில் சிவப்பு இந்தியர்கள் குடியிருக்கும்படி ஏற்பட்டிருக்கிறது. அவர்களது மரண விகிதம் வெள்ளையர் மரண விகிதத்தை விட மிக உயர்வானது. க்ஷயம் முதலிய கொடிய நோய்கள் அவர்களுள் ஜாஸ்தியாகப் பரவியிருக்கின்றன.

அமெரிக்க சர்க்கார், சிவப்பு இந்தியர் கல்விக்குப் பணம் செலவு செய்து வருகிறார்கள். ஆனால் சிவப்பு இந்தியர்களிடம் அனுதாபம் இல்லாதவர்கள் மூலம் அந்தச் செலவு செய்யப்படுவதினால் முயற்சிக்குத் தக்க பலன் உண்டாகவில்லை. சிவப்பு இந்தியச் சிறுவர்களை மிருகத்தனமாக நடத்தி வருவதாய் கல்வி அதிகாரி ஸ்ரீ. எச். எல். ரஸ்ஸல் சர்க்காருக்கு எழுதியனுப்பினர். அதில் சில பகுதிகள் வருமாறு:—

"சிறுவர்களைத் தண்டிக்கும்பொருட்டு அவர்களை இரவில் படுக்கையோடு சேர்த்து சங்கிலியால் தளைத்திருப்பதை நான் நேரில் பார்த்தேன். பூமிக்கு அடியில் உள்ள

நில வறைகளில் அவர்கள் அடைத்து வைக்கப்படுகிறார்கள். பண்ணைகளிலிருந்து பால் கொண்டு வர பனிக்கட்டி படிந்த பூமியில் நடந்து செல்லும்படி கட்டாயப் படுத்தப்படுகிறார்கள். அவர்களைக் கயிற்றால் அடிப்பதையும் அதிகாரிகளுக்குப் புழுக்கை வேலை செய்யும்படி நிர்ப்பந்திப்பதையும் நான் கண்ணாரப் பார்த்திருக்கிறேன்."

1926-ல் அமெரிக்காவில் 349,964 சிவப்பு இந்தியர்கள் இருந்தார்கள். அவர்களுக்கும் பிரஜா உரிமை அளிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் அரசியல் அதிகாரங்களோ அவர்களுக்கு வழங்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

இந்திய ஐக்கிய சங்கத்தார் (The Federal Indian Bureau) மேற்பார்வையில் 'தகுதியற்ற' இந்தியர்களின் சொத்துக்கள் இருந்து வருகின்றன. அந்த ஸ்தாபனம் மூலம் 5000 வெள்ளையர்கள் பிழைத்து வருகிறார்கள். அந்த சங்க ஆதீனத்திலிருக்கும் சொத்துக்கள் 30 கோடி பவுன் விலை பெறுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. வாஷிங்டனிலிருக்கும் இந்திய கமிஷனரின் அனுமதி பெறாமல் இந்தச் சொத்துக்களைப்பற்றி இந்தியர்களுக்கு வியாச்சியம் செய்ய முடியாது. அந்தக் கமிஷனர் சம்மதியின்றி உவில் எழுதவோ, ஒற்றிவைக்கவோ, விற்கவோ அவர்களுக்கு அதிகாரமில்லை. அவர்களது கட்சியை எடுத்துக்கூற வக்கீல் வைத்துக்கொள்ள அனுமதி யளிக்கப்படுகிறதானாலும் வக்கீல்கள் எல்லாம் சர்க்கார் தாசர்களா யிருப்பதினால் இந்தியர்களுக்கு விசேஷ பலன் ஏற்படுகிறதில்லை.

இத்தகைய புண்ணிய பூமியில் பிறந்து வளர்ந்த கன்னி மேயோ நம்மவர்கள் ஒடுக்கப்பட்ட ஜாதியாரை நடத்துவதைப்பற்றிக் குறை கூறுவது, ஊமையன் உளறுவாயனைக் குறை கூறுவதுபோல் இருக்கிறது. உலகத்திலே அமெரிக்கா மிகவும் சுதந்தரமுடைய நாடாகக் கருதப்படுகிறது.

அமெரிக்க சுதந்திரத்தின் யோக்கியதையைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. இப்பொழுதும் நீக்கிரோவர் பட்டப் பகலில் சித்திரவதை செய்யப்படுகிறார்கள். அது தான் அமெரிக்க நாகரிகம் போலும்!

கன்னி மேயோவும், ஆங்கிலோ-இந்தியர்களும் ஒடுக்கப்பட்ட வகுப்பாரிடம் மிகுந்த அன்புடையவர்கள்போல் நடிக்கிறார்கள். ஹிந்துக்களை முஸ்லிம்களுக்கு எதிராகவும், பிராமணர்களை பிராமணரல்லாதாருக்கு எதிராகவும், உயர்ந்த ஜாதியாரைத் தாழ்ந்த ஜாதியாருக்கு எதிராகவும் தூண்டிவிட்டு நாடகம் பார்ப்பதினால் சர்க்காருக்கு எவ்வளவோ நன்மை உண்டாகிறது. ஆகவே, ஒரு அரசியல் சூழ்ச்சியாக சர்க்கார் ஒடுக்கப்பட்ட வகுப்பாரிடத்தும் அனுதாபம் காட்டுவது போல நடிக்கிறார்கள். ஆனால் கறுப்பு ஜாதியாரை வெள்ளையர்கள் உலக முழுதும் எப்படி நடத்தி வருகிறார்கள் என்பதைக் கவனித்தால் சர்க்கார் காட்டும் அனுதாபம் போலி அனுதாபம் என்பது வெட்ட வெளிச்சமாகும். ஏகாதிபத்தியத்தை நிலை நிறுத்தும் பொருட்டு கறுப்பு ஜாதியாரை வேரறுத்து வரும் விஷயத்தைத் தள்ளிவிட்டாலும் அமிர்தசரஸ் படுகொலைக்கு அவர்கள் என்ன சொல்லப் போகிறார்கள். வெள்ளையர்களும் கறுப்பர்களும் சந்திக்குமிடங்களி லெல்லாம் வெள்ளையர்களின் ஆணவமும் அதிகாரத் தோரணையும் இப்பொழுதும் வெளிப்படத்தான் செய்கின்றன. ஆபிரிகா காப்பிரிகளுக்கு பிரிட்டிஷாரே இரட்சை கர்த்தர்கள் என்று அவர்கள் நடிக்கிறார்கள். ஏழைகளின் சுதந்தரத்தையும் பூமியையும் பிடுங்குவது தான் இரட்சை கர்த்தாக்களின் கடமையா? இரட்சை பெற வேண்டியவர் கும்பிக்குக் கூழில்லாமல் வாடுகிறார்கள்; இரட்சை கர்த்தாக்களோ அவர்களது (ஏழைகள்) உழைப்பின் பயனாய் சுவர்க்கபோகம் அனுபவித்துக்கொண்டிருக்கிறார்கள்.

நமது சமுதாய அமைப்பினால் ஜாதிக் கொடுமைகள் மிகுந்துவிட்டன என்பது உண்மையே. ஆனால் அந்தக்

கொடுமைகளை ஒழிக்க நம்மாலியன்ற மட்டும் நாம் முயற்சி செய்து தான் வருகிறோம். நம்மவர்கள் ஒரு வகுப்பாரை மிருகத்தனமாக நடத்துவதாய்க் குறைகூற வெள்ளையர்களுக்கு நாக்கில்லை. அவர்கள் பெருந்தொகையான மக்களின் அரசியல் பிரஜா உரிமைகளைப் பிடுங்கி, நாட்டைக் கொள்ளையடித்து வருகிறார்கள். வெள்ளையர்கள் செய்து வரும் அக்கிரமங்களுககுக் கையும் கணக்குமில்லை. சமீபத்தில் டமாஸ்கஸ் நகரத்தை பிரஞ்சுக்காரர் தகர்த்தெறிந்தது அதற்கு ஒரு உதாரணம். இந்த வெள்ளையர் கொடுங்கோன்மையை அடக்கத் தக்கதான முயற்சி செய்யப்படாவிட்டால் 1914-ல் உண்டானது போன்ற ஒரு பெரும்போர் உண்டாகி உலக முழுதும் அழியுமென்பது திண்ணம்.

வெள்ளையர்கள், வெள்ளையரல்லாதாருக்குச் செய்யும் கொடுமைகளுக் கொப்பான கொடுமைகளை இந்தியாவில் மருந்துக்காவது காணமுடியுமா?

பிரிட்டிஷ் சாம்பிராஜ்யப் பிரஜைகளாயிருப்பதற்காக இந்தியர்கள் பெருமை பாராட்ட வேண்டுமென்று போதனை செய்யப்படுகிறது. ஆனால் இந்தியர்களோ சாம்பிராஜ்யம் முழுதும் அடிமையினும் கடையராய் நடத்தப்படுகின்றனர்.

ஆஸ்திரேலியா, கானடா, தென்னாப்பிரிக்கா முதலிய தேசங்களில் இந்தியர்கள் அடைந்துவரும் மானக்கேட்டை நாவால் சொல்ல இயலாது. வெள்ளையர் ஹோட்டலிலும் சிற்றுண்டிச் சாலைகளிலும்கூட இந்தியர்களுக்குப் பிரவேசனமில்லை.

ஆபிரிக்க சுதேசிகளை வெள்ளையர்கள் நடத்தும் முறையோ மிகவும் பயங்கரமானது. ரப்பர் தோட்டங்களில் ஆபிரிக்க சுதேசிகள் அநுபவிக்கும் ஹிம்ஸைகளை வர்ணிக்க முடியாது. உதாரணமாக ஸ்ரீ. மாரல் கூறுவனவற்றைக் கவனியுங்கள்.

"போர் வீரர்கள், தாம் கொன்ற சுதேசிகளின் கைகளை வீரக்குறியாகக்கொண்டு செல்வதையும், அதை வெள்ளைப் பிள்ளைகள் விளையாட்டுப் பண்டமாக உபயோகிப்பதையும் பார்க்க பயங்கரமாயிருக்கிறது. இந்த இடத்திலிருந்து எடுக்கப்படும் ரப்பருக்காக அநேக சுதேசிகள் பலியிடப்பட்டிருக்கிறார்கள். அதை நினைக்கும்போதே என் உடல் நடுங்குகிறது. இந்த ரப்பர் வர்த்தகம் முழுதும் இரத்தம் தோய்ந்ததாயிருக்கிறது. சுதேசிகளெல்லாம் திரண்டெழுந்து அப்பர் காங்கோவிலுள்ள வெள்ளையர்களையெல்லாம் அடித்துக் கொன்றாலும் வெள்ளையர் செய்யும் அக்கிரமங்களுக்கு அது ஈடாகாது."

மேலே கூறிய வரலாறு பெல்ஜியன் காங்கோ கொடுமையை விளக்கிறது. பிரஞ்சு காங்கோ கொடுமைகளும் அற்பமல்ல. 1908-ல் ஒரு அமெரிக்கப் பாதிரியார் பிரஞ்சு காங்கோ நிலைமையைப்பற்றிக் கூறியிருப்பதாவது:—பிரஞ்சு காங்கோ தற்காலம் பாழடைந்திருப்பதற்கு ஜவாப்தாரி யார்? வர்த்தகம் ஒழிந்துவிட்டது. ஒரு காலத்தில் லக்ஷ்மி நடனம் புரிந்த நகரங்களெல்லாம் இப்பொழுது பாழாகிக் கிடக்கின்றன. நகரங்களெல்லாம் கொள்ளையிடப்பட்டிருக்கின்றன. வரிப் பளுவைத் தாங்க சுதேசிகள் சக்தியற்றவர்களாயிருக்கிறார்கள். வரி கொடுக்க முடியாதவர்கள் தம் குடும்பத்தாருடன் துர்க்கந்தம் வீசும் சிறையில் கிடந்து மாண்டொழிகின்றனர். சோலைகளாய் விளங்கிய இடமெல்லாம் பாழாகிக் கிடக்கின்றன. நன்செய்,புன்செய்ப் பயிர்கள் செழித்து வளர்ந்த பிரதேசங்கள் காடடர்ந்து கிடக்கின்றன.

ஸ்ரீ. மாரல் எழுதிய சிவப்பு ரப்பர் (Red Rubber) என்னும் புஸ்தகத்தில் வெள்ளையர்களின் குரூரச் செயல்கள் நன்றாக விளக்கப்பட்டிருக்கின்றன. ஒரு தளகர்த்தர் தன் வீரர்கள் கொன்ற சுதேசிப் பெண்களின் 21 தலைகளை ஒரு மாலையாகக் கட்டி தன் வீட்டின் முன் பக்கத்தில் தொங்கவிட்டிருந்தாராம்.

வெள்ளையர்களின் அக்கிரமங்களுக்கு இன்னும் திருஷ்டாந்தம் கூறவேண்டுமா?

சுதேசி மாதர்கள் வெள்ளையர்களால் கற்பழிக்கப் படுவதைப்பற்றியும் ஒரு அமெரிக்கப் பாதிரியார் ஒரு பயங்கரமான வரலாறு வெளியிட்டிருக்கிறார்.

1900 எப்ரல் 10உ லாக்ராயிக்ஸ் என்பான் ஒரு நீதிபதி முன்னிலையில் குற்றம் சாட்டப்பட்டபோது கூறியதாவது:—நான் 150 சுதேசிகளைக் கொன்றேன். 60 பேர் கைகளை வெட்டி வீழ்த்தினேன். அநேக பெண்களையும், குழந்தைகளையும் சித்திரவதை செய்து அவர்களது ஆண் பெண் குறிகளையும், ஸ்தனங்களையும் ஒரு வேலியில் தொங்க விட்டேன்.

என்னே வெள்ளையர் நாகரிகத்தின் மகிமை! 1903-1905-ல் உண்டான பல பயங்கர சம்பவங்களைப் பற்றியும் ஸ்ரீ. மாரல் கூறியுள்ளார். ஆனால் அவைகளெல்லாம் மகா யுத்தத்துக்கு முன் நிகழ்ந்த சம்பவங்கள். மகா யுத்தத்தில் ஜெர்மானியர் பல கொடுமைகள் செய்ததாக ஐக்கிய கட்சியார் பழி கூறுகின்றனர். அவை யனைத்தும் ஐக்கிய கட்சியார் செய்த பொய்ப் பிரசாரமாகும். ஜெர்மானியரைக் குறை கூறுபவர்கள் மகாயுத்தத்துக்கு முன் செய்த மேலே கூறிய பாதகங்களுக்கு என்ன சமாதானம் சொல்லப் போகிறார்கள்?

ஆண்டர் கைடு என்னும் ஒரு பெயர் பெற்ற நூலாசிரியர் சமீபத்தில் ஆபிரிக்காவில் உல்லாசப் பிரயாணம் செய்தார். ஆபிரிக்காவில் தாம் கண்டவைகளை யெல்லாம் அவர் புத்தக ரூபமாக வெளியிட்டிருக்கிறார். அப்புத்தகத்தில் ஒரு வெள்ளையனின் டயரிக் குறிப்பு ஒன்று எடுத்தாளப் பட்டிருக்கிறது. அது, பிரஞ்சு கவர்னர் பாச்சா செய்த அட்டூழியங்களைக் குறிப்பது.

அது பின் வருமாறு:—"போடோ எல்லையிலுள்ள சுதேசிகளை யெல்லாம் அடக்கிவிட்டதாக பாச்சா விஞ்ஞாபனம்செய்திருக்கிறார். குழந்தைகள் முதல் கிழவர்கள் ஈறாக சுமார் 1000 பேர் வரை கொல்லப்பட்டதாக அவர் ஒப்புக்கொள்கிறார். கொல்லப்பட்டவர்கள் தொகையை நிர்ணயம் செய்யும்பொருட்டு, கொல்லப்பட்டவர்களின் காதுகளையும், ஆண் பெண் குறிகளையும் தனக்குப் பாத காணிக்கை வைக்க வேண்டுமென்று பாச்சா, வீரர்களுக்குக் கட்டளையிட்டிருந்தாராம்."

இன்னும் அதிக திருஷ்டாந்தங்கள் எடுத்துக்கூற நான் விரும்பவில்லை. சிராலியான் தேசத்தில் சுதேசிப் பிரபுக்கள், அடிமை வர்த்தகம் செய்யலாமென்று கொஞ்ச காலத்துக்கு முன் இரண்டு பிரிட்டிஷ் நீதிபதிகள் தீர்ப்புக் கூறினார்கள். அடிமை வர்த்தகம் ஒழிந்திருக்கும் இக்காலத்திலும் ஆபிரிக்க சுதேசிகள் அடிமைகளினும் கேவலமாகவே நடத்தப்படுகின்றனர். வெள்ளையர் கொடுமை என்று ஒழியுமோ?



## அத்தியாயம் 12.

# இந்திய மாதர்கள்

நான் நியூயார்க்கில் இருந்த பொழுது நடத்திய யங் இந்தியா என்ற மாதாந்தப் பத்திரிகையில் 1918 ஜுன், ஜுலை மாதப் பிரதிகளில் நான் எழுதிய இரண்டு கட்டுரைகளைத் தழுவி இவ் வத்தியாயம் எழுதப்படுகிறது.

### வேத காலம்*

வேத காலத்துக்குப் பின் இந்திய மாதர்களின் நிலை மிகவும் சீரழிந்துவிட்டதென்பது உண்மையே. வேத காலத்தில் ஆரியமாதர்கள் மிக உன்னத நிலையில் இருந்தார்கள் என்றும், பிற்காலத்துண்டான காலபேத இயல்புகளால், அவர்கள்நிலை பெரிதும் இழிவடைந்ததென்றும் சர்வ சம்மதமாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. உலக வாழ்க்கையில் பெண்களுக்கும், புருஷர்களுக்குமுள்ள ஸ்தானத்தைப்பற்றி வேதங்களில் விரிவாக ஒன்றும் கூறப்படவில்லை. கன்னிகையாயிருக்கும் போதும், இல்லறம் மேற்கொண்டு மனைவியான பிறகும், குழந்தைகளைப் பெற்ற தாயாரான பின்னும் ஆற்ற வேண்டிய கடமைகளைப்பற்றி ரிக் வேதத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. பெண்மக்களுக்கு ஆண்மகனுக்குள்ள உரிமைகள்யாவுமுண்டு. மனைவியைத் தேர்ந்தெடுக்கும் சுதந்தரம் ஆண்மகனுக்குள்ளது போலவே, கணவனைத் தேர்ந்தெடுக்கும் சுதந்தரம் பெண்மகளுக்குமுண்டு. விவாகத்துக்கு முன் ஆண்மகனுக்கும், பெண்மகளுக்கும் பாஸ்பர காதல் அரும்ப

---

* வேதகாலம்—கி. மு. 1500-க்கு முன்னுள்ள காலம்.

வேண்டு மென்பது வேதத்தின் நோக்கமெனத் தெரிகிறது. ஆண்மகன், பெண்மகள்மீது காதல் கொள்வதையும், பெண்களைத் தேடி ஆண்மகன் செல்வதையும், களவுவழி கூடுவதையும் பற்றிய குறிப்புகள் வேதத்தில் மலிந்து கிடக்கின்றன. உதாரணமாக ரிக்வேதம் X 85-வது சூத்திரத்தில் சோமன் சூரிய தேவனான சாவித்ரன் மகள் சூர்யை மீது காதல் கொள்ளும் வரலாறு கூறப்பட்டிருத்தல் காண்க. சூர்யை சோமனை மணக்க விரும்புகிறாள். உடனே களவு மணம் நிகழ்கிறது. பிறகு மனைவியை சோமன் தன் மனைக்கு ஆடம்பரத்துடன் அழைத்துச் செல்லுகிறான். அங்கு கற்பு மணம் நடந்து விவாகம் உறுதி பெறுகிறது.

36-வது சூத்திரத்தில் விவாக மந்திரம் கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஹிந்து மணமகனும் மணமகளும் விவாக காலத்தில் இன்றும் அம் மந்திரம் ஓதிவருகிறார்கள். அது பின்வருமாறு:—"வாழ்நாள் நலம் பெறும்பொருட்டு உன்னை வலக்கையால் பாணிக்ரகணம் செய்கிறேன். உன் கணவனான என்னோடு மூப்பெய்துமளவும் வாழ்வாயாக! நாமிருவரும் சேர்ந்து இல்லறம் நடாத்தும் பொருட்டு ஆரியமான், பகன், சாவித்ரன், பரமோதி முதலிய தேவர்கள் உன்னை எனக்குத் தந்தருளினார்கள்."

மனைவி, கணவன் வீட்டில் வந்தவுடன் பின்வருமாறு நல்வரவு கூறப்படுகிறாள்:—"பொருட் செல்வமும், மக்கட் பேறுமடைந்து பல்லாண்டு க்ஷேமமாய் வாழ்வாயாக! கண்ணும் கருத்துமாய் இல்லறம் நடத்துவாயாக! புருஷனிடம் அன்பா யிருப்பாயாக! முதுமைப் பருவத்து இம்மனைக்கு நாயகியா யிருப்பாயாக! இம்மனையை விட்டு ஒருநாளும் நீங்கா திருப்பாயாக! புத்திர பௌத்திரர்களைப் பெற்று சுகம் பெறுவாயாக!"

கடைசியில் கணவனும், குடும்பத்தாரும் வாழ்த்துக் கூறுகிறார்கள்.

## கணவன் வாழ்த்து

பிரஜாபதி நமக்கு புத்திர பௌத்திர சம்பத்து அருள் வாராக! நாம் விருத்தாப்பியராகும் வரை ஆரியமான் நமக்கு செல்வம் வழங்குவாராக! இன்று முதல் உன் நாயகன் குடும்பத்தில் சேர்வாயாக! நம் மனையில் மக்களும் மிருகங்களும் பெருகி வளர்வதாக! திருஷ்டி தோஷம் பெறாது அன்புடன் வாழ்வாயாக. மிருகங்களையும் அன்புடன் வளர்ப்பாயாக! சாந்த மனமும், மலர்ந்த முகமும் உடையளாய், வீர மக்களைப் பெற்று கடவுள் வழிபாடியற்றி யாவர்க்கும் மகிழ்ச்சியளித்து வாழ்வாயாக"

இதைப்பற்றி ஸ்ரீ ரகோஜின் அபிப்பிராயப் படுவதாவது:—"தடித்த எழுத்தில் உள்ள இறுதி வாக்கியம், எக்காலத்தும், எந்நாட்டுப் பெண்களுக்கும் பொருந்தும் திவ்ய மந்திரமல்லவா? ஒரு மனையில் மனைவிக்கும், தாய்க்கும் உள்ள ஸ்தானம் எவ்வளவு கம்பீரமாக கணவனால் வகுக்கப்பட்டிருக்கிறது. தற்காலத்தவர்களின் உலக வழக்கை எத்துணை கேவலமானது. சிலாவ் ஜெர்மன் குடும்பங்களில் புத்திரனுடைய மனைவி அடிமை ஸ்தானத்திலேயே குடும்பத்தில் பிரவேசிக்கிறாள். புருஷன் பெற்றோருக்கும் சகோதரிகளுக்கும் அவள் அடிமையாகவே காலந் தள்ளுகிறாள்; இவர்களது வாழ்க்கையைவிட அநாகரிக மக்களாகக் கருதப்படும் நமது பூர்வீக ஆரியர்கள் வகுத்த வாழ்க்கை முறை எவ்வளவு சிரேஷ்டமானது!

வேதகாலத்தில் (1) விவாகம் செய்யும் ஆண்மகனும் பெண்மகளும் காதல்கொள்ளவும் காதலிக்கப்படவும் தக்க பருவமுடையவர்களாகவும் தததமக்கு ஏற்றவரைத் தேர்ந்தெடுக்கும் சக்தியுடையவராகவும் இருந்தனர்.

(2) மனைவி பூரண சுதந்தரத்துடன் வாழ்வதற்கு மணமகன் தனி வீடுடையவனாயிருக்க வேண்டும். எக்காரணம்

பற்றியாவது மணமகன் தன்பெற்ளுேர் சகோதரர் சகோதரிகளுடன் வாழ்ந்து வந்தாலும், அவன் சுதந்தர வாழ்க்கையை நடத்துபவனுகக் கருதப்பட்டதனுல் அவனுடைய மனைவிக்கு உயரிய ஸ்தானமே இருந்து வந்தது.

(3) சதிபதிகள் இன்பம், மக்களைப் பெறுதல், கடவுள் வழிபாடு, பொருளீட்டல் முதலியன விவாகத்தின் நோக்கமாயிருந்தன.

கிறிஸ்தவ விவாகங்களில் மனைவி புருஷனுக்கு அடங்கி நடப்பதாக வாக்குறுதி யளிப்பதுபோல் ஹிந்து விவாகங்களில் எத்தகைய வாக்குறுதியும் அளிக்கப்படவில்லை யென்பதை யாவரும் உற்றுக் கவனிக்கவேண்டும்.

ஏகபத்னி விரதத்தை ஆரியர்கள் பொதுவாகக் கைக்கொண்டிருந்தனராயினும் புறனடையாக உயர்ந்த வகுப்பார் பல மனைவிகளை விவாகம் செய்துகொள்வது முண்டு. ஆனுல் பெண்கள் பல புருஷர்களை மணக்கும் வழக்கு வேதத்தில் கூறப்படவே இல்லை.

வியபிசாரம் பலமாகக் கண்டிக்கப்பட் டிருந்தது. எனினும் வியபிசாரம் நடைபெறும விருக்கவில்லை; ஆனுல் இது உலகம் முழுதும் காணப்படும் குறையேயன்றி இந்தியாவில் மட்டும் காணப்படும் குறையன்று. விவாக சடங்குகள் இந்தியா முழுதுக்கும் பொதுவானவைகளாகவே இருந்தன.

புருஷன் சொத்தில் பெண்களுக்குள்ள உரிமையைக் குறித்து வேதத்தில் ஒரு தகவலும் காணவில்லை. ஆனுல் தன் தாயகத்தி லிருந்து பெற்ற ஸ்திரீ தனம், வரிசைகள், சுற்றத்தாரும் சிநேகிதர்களும் அளித்த சன்மானங்கள் இவைகளில் அவளுக்கு உரிமையில்லா திருந்ததென்று கூறுவதற்கில்லை. இவ்விஷயத்தில் இந்திய மாதர்கள் நிலை,

ஐரோப்பிய மாதர் நிலைமையைவிட எவ்வளவோ மேலான தென்றே சொல்லவேண்டும். குடும்ப நிருவாகத்தில் மனைவிக்குப் பூரண சுதந்தர மிருந்து வந்தது. தன் புருஷன் செய்யும் மதச் சடங்குகளிலும் மனைவி முக்கியமாகப் பங்கு கொள்ளுவது வழக்கம. மனைவி யுதவி யின்றி ஒரு மதச் சடங்கும் நடைபெறாது. பதி (நாயகன்) பத்னி (நாயகி) என்னும் சொற்கள் குடும்பத்தில் இருவருக்கும் உள்ள சம அந்தஸ்தைக் குறிப்பிடுகின்றன. மனைவியை இழந்த புருஷனுக்கு மறு மணம் செய்யும் உரிமை இருந்ததுபோலவே விதவைக்கும் புனர் விவாகம் செய்யும் உரிமை இருந்து வந்தது. உடன்கட்டை யேறும் வழக்கத்தைப் பற்றி ரிக் வேதத்தில் கூறப்படவேயில்லை; அதர்வண வேதத்தில் அதைப்பற்றிய பிரஸ்தாபம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

கோஷா ஏற்பாடும் வேத காலத்தில் இருந்ததில்லை. யதேச்சையாய் சஞ்சரிக்க, பெண்கள் பூரண சுதந்தரமுடையவரா யிருந்தனர். பெண் கல்விக்கு எத்தகைய தடையும் ஏற்படுத்தப் படவில்லை; மாறாக பெண்கள் பெயர் பெற்ற ஆசிரியைகளாகவும் பண்டிதைகளாகவும் இருந்ததாகத் தெரிய வருகிறது.

## காவிய காலம்†

காவிய காலத்திலும் பெண்கள் நிலையில் எத்தகைய மாறுதலும் ஏற்படவில்லை. விவாக விஷயங்களில் பூரண சுதந்தர முடையவராகவே இருந்தனர். பெற்றோர் சம்மத மின்றி நடைபெற்ற விவாகங்களும் சமுதாயத்தவரால் ஒப்புக்கொள்ளப்பட்டன. இதற்கு திருஷ்டாந்தமாக அர்ச்சுனனுக்கும் சுபத்திரைக்கும் நடந்த விவாகத்தைக் கூறலாம். பெண்களும் புருஷர்களும் மனமொத்து நிகழ்ந்த

---

† காவிய காலம்—கி. மு. 1500 முதல் 500 வரை.

சம்பந்தங்களெல்லாம் விவாகமாகக் கருதப்படுவதே காவிய காலத்தின் போக்கெனத் தெரிகிறது. ஜாதிக் கட்டுப்பாடும் இல்லாதிருந்தது. ஸ்திரீதனச் சொத்துக்களில் பெண்களுக்குள்ள உரிமை காவிய காலத்தில் அங்கீகாரம் பெற்றது. பெண்களை அந்தப்புரத்தில் அடைத்து வைக்கும் வழக்கம் காவிய காலத்தில் ஆரம்பமாயிற்றெனக் கூறுவதுண்டு. ஆனால் இதற்குத் தக்க ஆதாரமில்லை. தம் புருஷர்களுடன், போர் புரியவும், பிரயாணம் செய்யவும், திருவிழாப் பார்க்கவும் பெண்கள் போவதைப்பற்றிய வரலாறு இராமாயணம் பாரதம் முதலிய காவியங்களில் ஏராளமாகக் காணப்படுகின்றன. இதற்கு எதிரிடையாகக் கூறப்படும் ஆதாரங்களெல்லாம் க்ஷத்திரியரின் வாழ்க்கைக்குப் பொருந்துவனவாகவே இருக்கின்றன. காவியங்களில் இடைச்சொருகுகள் பல பிற்காலங்களில் சேர்க்கப்பட்டுள்ளன. உயர்குடிப் பிறப்புக்கு அந்தப்புர வாழ்க்கை இன்றியமையாததென்று காவியங்களில் காணப்படும் குறிப்புகளும் இடைச்சொருகுகளாகவே இருக்கவேண்டும்.

வேறெந்த அமிசங்களிலும் காவிய கால மாதர்கள் நிலைமையில் தாழ்ச்சி ஏற்படவில்லை. வாஸ்தவத்தில் காவிய காலத்தில் பெண்கள் மிக உயரிய நிலையை அடைந்திருந்தார்கள் என்றே நான் கருதுகிறேன். பிறகுதான் அவர்கள் நிலை பிற்போக்கடையத் தொடங்கிற்று. ஆடல், பாடல், குதிரை சவாரி செய்தல் முதலியவைகளில் பெண்களும் பயிற்சி பெற்றிருந்தனர். ஸ்திரீ புருஷர்கள் மிகவும் கண்ணியமாக ஊடாடிப் பழகி வந்தனர்.

## சூத்ர காலம்‡

சூத்ரம் என்றால் கயிறு என்று பொருள். சம்ஸ்கிருத இலக்கிய சரிதத்தில் சூத்ர காலம் மிகவும் முக்கியமானது.

---

‡ சூத்ர காலம்—கி. மு. 500க்கு அணித்தான காலம்.

மதம், தத்துவஞானம், சட்டம், சாஸ்திரம் முதலிய வற்றைப் பற்றிய கிரந்தங்கள் சூத்திரங்களாய் எழுதப்பட்டன. ஆரியர் ஆசாரத் திட்டங்களும் ஸ்மிருதிகளும் இக்காலத்தே தோன்றின. பழைய அடிப்படையை ஆதாரமாகக் கொண்டு புதிய முறையில் யாவும் அமைக்கப் பெற்றன. ஆரிய கிரந்தங்க ளெல்லாம் சாஸ்திரீக முறையில் தொகுக்கும் முயற்சி இக்காலத்திற்றான் முதன் முதலாகச் செய்யப்பட்டது. ஸ்மிருதிகளில், ஸ்திரீகளும் புருஷர்களும் பரஸ்பரம் நடந்துகொள்ள வேண்டிய முறைகளைப் பற்றிக் கூறுமிடத்து, பல முற்போக்கான குறிப்புகளும் பிற்போக்கான குறிப்புகளும் கட்டுப்பாடுகளும் காணப்படுவது விநோதமாக இருக்கிறது. இவ்விதிகள் எக்காலத்து இயற்றப்பட்டன வென்று திட்டமாகக் கூறமுடியாது. புத்தர் காலத்துக்கு— அதாவது கி. மு. 500ச்கு முன் அவை இயற்றப்பட்டிருக்க வேண்டுமென்று ஐரோப்பிய பண்டிதர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். அதற்கும் எவ்வளவோ காலத்துக்கு முன் அவ் விதிகள் இயற்றப்பட்டன வென்று ஹிந்துக்கள் கூறுகிறார்கள். ஒருகால் இவ் விரு கட்சியாரும் கூறும் காலங்களின் மத்தியில் அவை எழுதப் பட்டிருக்கலாம். இவ் விதிகளின் மூலம் புத்த காலத்துக்கு முன் எழுதப்பட்டதானாலும், தற்காலத்துக் காணப்படுவன புத்தகாலத்துக்குப் பின் தொகுக்கப்பட்டவைகளே. அவற்றைத் தொகுத்தவர்கள் அவ்வக் காலங்களுக்குப் பொருத்தமான விதிகளையும் பூர்வ விதிகளுடன் சேர்த்துக் கொண்டனர்.

இந்த விதிகள் அல்லது ஸ்மிருதிகளில் பெண்களைப் பற்றிய குறிப்புகளின் சாராம்சம் கீழ்வருமாறு:—

(1) பெண்கள் பருவமடையும் லக்ஷணம் காணத் தொடங்கும் பொழுதோ, அல்லது பருவமடைந்து மூன்று வருஷத்துக்குள்ளோ விவாகம் செய்துக்கொள்ள வேண்டும். அதற்கு முன் விவாகம் செய்து கொண்டாலும் பாதகமில்லை.

(2) ஆகவே சதிபதிகள் இஷ்டப்படி விவாகம் செய்வது முடியாத காரிய மாய்விட்டது; ஆண் பெண்கள் தம் மிஷ்டப்படி காதல் கொள்வதும் இயலாத காரியம்.

(3) ஆனல் பெண்கள் விவாக விஷயத்தில் பெற்றோர் கவலை செலுத்தா திருக்கவும், பருவ மடைந்து மூன்று வருஷம் கழிந்துப் போகவும் நேர்ந்தால் பெற்றோர் சம்மதத்தை எதிர்பாராமலே பெண்கள் தமக் கிஷ்டமுள்ள புருஷனை மணந்து கொள்ளலாம். பெண்கள் கலியாணத் துக்கான ஏற்பாடுகள் செய்யவேண்டியது பெற்றோர் கடமை யென கண்டிப்பாகக் கூறப்பட்டிருப்பதால் பெண்கள் விவாக விஷயத்தில் பெற்றோர் அலட்சியமாக இருக்கமாட் டார்கள். ஆகவே பெற்றோர் சம்மதப்படி விவாகம் நடை பெறும் வழக்கம் பிற்காலத்தில் சர்வ சாதாரணமாயிற்று.

இந்தியாவில் முஸ்லீம் ஆதிக்கம் நிலைபெற்ற காலத் தில் இவ் வழக்கம் சர்வ சாதாரணமா யிருந்ததா என்பது சந்தேகத்துக்கு இடமாகவே இருக்கிறது. ஏனென்றல் முஸ்லீம் ஆட்சியின் முதல் நூற்றுண்டில், வயது முதிர்ந்த பெண்கள் தம் மிஷ்டப்படி விவாகம் செய்துகொண்டதாகப் பல திருஷ்டாந்தங்கள் காணப்படுகின்றன. 8-வது நூற் றுண்டில் முஸ்லீம்களால் சிறைப்படுத்தப்பட்ட ராஜாதீரன் புத்திரிகள் வயது முதிர்ந்த கன்னிகைகளாக இருந்திருக் கிறார்கள். அவர்கள் மிக தந்திரமாகவும் புத்திசாலித் தன மாகவும் தம்மைச் சிறைப்படுத்திய முஸ்லீம் அரசனிடம் பழிக்குப் பழி வாங்கி யிருக்கிறார்கள். தன் தந்தை விருப் பத்துக்கு மாறுக டெல்லி அரசன் பிரிதிவி ராஜனைக் கணவ ஞகத் தேர்ந்தெடுத்த கன்னேசி அரசன் புத்திரியும் வயது வந்த பெண்ணுகவே இருந்திருக்கிறுள். இவைகளைத் தவிர இன்னும் பல திருஷ்டாந்தங்கள் அக்காலத்து வெளிவந்த நாடக இலக்கியங்களில் காணப்படுகின்றன. பருவமடைந்த பெண்கள் தமக் கிஷ்டமுள்ள புருஷர்களை மணந்து கொள் ளும் வழக்கம் அக்காலத்து சர்வ சாதாரணமா யிருந்த தென்று அந் நாடக கிரந்தங்கள் விளக்குகின்றன. நாடக

ஆசிரியர்களில் சிறந்த காளிதாசர் கி. பி. ஐந்தாவது நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர். அவர் எழுதிய நாடகங்களில் சிறந்தது சாகுந்தலம். தன் தந்தை சம்மதத்தை எதிர்பாராமல் துஷ்யந்தனை வரனுகக் கொண்ட சகுந்தலை வயது வந்த கன்னிகை என்பதை யாவருமறிவர்; அவளது தோழிகளும் வயது வந்த கன்னிகைகளாகவே இருந்தனர். ஒரு வயது வந்த பிராமணன் ஒரு கன்னிகையை சுயேச்சையாய் மணந்து அவளுடன் வாழ்ந்து வந்ததாக ஹூயான்சியாங் என்ற சீன யாத்திரிகர் கூறுகிறார். இந்த விவாகம் நடந்தது 6-வது நூற்றாண்டிலாகும். 11-வது நூற்றாண்டில் வாழ்ந்திருந்த ஆல்பருனி என்ற முஸ்லீம ஆசிரியர், ஹிந்துக்கள் பால்ய வயதில் தம் மக்களுக்கு கலியாணம் நடத்துவதாகவும், தம் மக்களின் கலியாண ஏற்பாடுகளைப் பெற்றோர்களே தம் மிஷ்டப்படி செய்து வருவதாகவும் கூறியிருக்கிறார். ஆகவே முஸ்லீம் ஆதிக்கம் பெருகப் பெருக பாலிய விவாகம் தலையெடுத்த தென்று முடிவு கூறுவதே நியாயமாகும். ஏனென்றால் விவாகமான பெண்களை அடிமைகளாக்கக் கூடாதென்று இஸ்லாம் மதம் ஒரு தடை கூறியிருக்கிறது. பால்ய விவாக வழக்கம் உருப்பெற்றதோடு பெற்றோருக்குத் தம் மக்கள் மீதுள்ள அதிகாரம் வலுவடைந்தது. ஹிந்து ஸ்மிருதியாசிரியர்களும் அதை ஒருவாறு ஒப்புக்கொண்டனராயினும், புருஷர்கள் பெண்களை நடத்தவேண்டிய முறையைப்பற்றி விதியியற்ற நேர்ந்தபோது முன்னுக்குப் பின் முரண்பா டுண்டாவதை உணர்ந்தனர். ஆசிரியர்கள் ஏற்கனவே பெண்களைக் கண்ணியமாக நடத்தும் இயல்புடையவர்கள். ஆனால் பெண்கள் ஒரு காலத்தும் சுதந்தரரா யிருக்க முடியாதென்ற உணர்ச்சியும் அக்காலத்துத் தலையெடுத்து வந்தது. மனு ஒரு இடத்தில் கூறுவதைக் கவனியுங்கள்.

"பெண்களை தந்தையும் சகோதரர்களும், கணவனும் கணவன் சகோதரர்களும் கண்ணியமாக நடத்த வேண்டும்."

"பெண்கள் கண்ணியமாக நடத்தப்பட்டால் தேவர்கள் களிப்படைவார்கள்; பெண்கள் கண்ணியமாக நடத்தப்படாவிட்டால் தேவர்கள் பூசை யேற்றுக்கொள்ள மாட்டார்கள்."

"பெண்கள் துன்பப்பட்டால் அக் குடும்பம் அழியும்; பெண்கள் மகிழ்வடைந்தால் அக் குடும்பம் வாழும்."

"பெண்கள் கண்ணியம் செய்யப்படாத வீடுகள் அழிந்து பாழாகும்."

"ஆகையால் க்ஷேமமாக வாழ விரும்புவோர், கலியாண காலங்களிலும், மற்றும் விசேஷ தினங்களிலும் பெண்களுக்கு ஆடைகளும் அணிகளும் நல்லுணவும் அளித்துப் பெருமைப் படுத்தவேண்டும்."

"மனைவி மகிழ்ச்சி யடைந்தால் குடும்பம் மகிழ்ச்சி யடையும்; மனைவி துன்பப் பட்டால் குடும்ப முழுதும் கவலையுறும்."

மேலே கூறியவற்றை, மனுஸ்மிருதி 5-வது அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கும் கீழ்வரும் விஷயங்களோடு ஒப்பிட்டுப் பார்க்க.

"குழந்தைப் பருவத்தில் பெண் தந்தைக்கு அடங்கி நடக்கவேண்டும்; யௌவனப் பருவத்தில் புருஷனுக்கு அடங்கி யிருக்கவேண்டும். புருஷன் இறந்தபின் மக்களுக்கு அடங்கி யிருக்கவேண்டும்; பெண்களுக்கு ஒரு போதும் சுதந்தரம் கிடையாது."

"ஒரு பெண் தன் தந்தை, சகோதரர், கணவன் இவர்களைப் பிரிந்து ஒருபோதும் தனிமையாக வாழக்கூடாது; தனிமையாக வாழ்ந்தால் தாயகத்துக்கும் புக்ககத்துக்கும் பழி யுண்டுபண்ணுவாள்."

"வீட்டு வேலைகளைப் பெண்கள் செவ்வையாகவும் சந்தோஷமாகவும் செய்யவேண்டும்; வீட்டுப் பாத்திரங்களை

அவர்கள் சரியாக சுத்தம் செய்யவேண்டும்; தம்மிஷ்டப்படி ஒரு செலவும் செய்யக்கூடாது."

மீண்டும் IX-வது அத்தியாயத்தில் கூறப்பட்டிருப்பதாவது:—வீட்டிலுள்ள புருஷர்கள் இரவும் பகலும் பெண்களை தமது பாதுகாப்பில் அடக்கி வைத்திருக்கவேண்டும். பால்யப் பருவத்தில் தந்தையும், யௌவன காலத்தில் புருஷனும், வயோதிக காலத்தில் மகனும் பெண்களைக் காத்துக்கொள்ள வேண்டும்.

7-வது சூத்திரத்தில் கணவன் மனைவியைக் கண்ணும் கருத்துமாய்க் காக்க வேண்டுமென்றும், அவ்வாறு காப்பதனால், பிற்கால சந்ததிகளையும், குல தர்மத்தையும், குடும்பத்தையும் தன்னையும் தன் கடமையையும் காத்தவன் ஆகிறான் என்றும் கூறப்பட்டிருக்கிறது. அடுத்த இரண்டு சூத்திரங்களிலும் காப்புக்கு வியாக்கியானம் கூறப்பட்டிருக்கிறது.

"ஒருவனும் பெண்களை பலவந்தமாக ஒரு இடத்தில் அடைத்து வைக்கக்கூடாது; புருஷர் உபதேசப்படி ஏதாவது தொழில் செய்து, பெண்கள் தம்மைத் தாமே காத்துக் கொள்வதே சிறந்த காப்பாகும். சுத்த இரத்தமுள்ள சந்ததிகளைப் பெறுவதே இவ்விதிகளின் முக்கிய நோக்கம். (1) சதிபதிகளை ஜாக்கிரதையாகத் தேர்ந்தெடுப்பதாலும் (2) சுய ஜாதியில் விவாகம் செய்துகொள்வதாலும் (3) பெண்கள் கற்புக்கு உயர்ந்த லட்சியங்கள் ஏற்படுத்துவதாலும் (4) மனைவி மீது புருஷனுக்குப் பூரண அதிகாரம் அளிப்பதாலும் (5) புறச்சாதி மணத்தால் விளையும் தீமைகளைக் கண்டிப்பதாலும் (6) கலப்பு விவாகத்தில் பிறக்கும் சந்ததிகளை கீழ்ச்சாதியாக மதிப்பதாலும் சுத்த ரத்தமுள்ள குழந்தைகள் பிறப்பதற்கு சௌகரியமுண்டாகுமென்று அந்த ஸ்மிருதிகள் கூறுகின்றன.

பூர்வ கிரந்தங்களால் எத்தகைய சம்பந்தமும் விவாகமாக மதிக்கப்பட்டதாகவும் அந்த விவாக மூலம்

பிறக்கும் சந்ததிகள் அந்தஸ்துடையவர்களாக மதிக்கப் பட்டதாகவும் அறியக் கிடக்கின்றன. புறச்சாதி மணங் களில் பிறக்கும் பிள்ளைகள் தந்தையின் ஜாதியைச் சேர்ந் தவைகளாக மதிக்கப்படுமென்றும் பிரத்தியேகமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஒரு புருஷன் தன் மனைவியை உபேட்சிக்கவோ, புருஷத் தன்மை யில்லாதிருக்கவோ, கருமவியாதியுடையவனு யிருக்கவோ நேர்ந்தால், அவன் மனைவி வேறு புருஷரோடு சேர்ந்து பெற்ற பிள்ளைகள், நற்குடிப் பிறந்த பிள்ளைகளாகவே மதிக்கப்பட்டனர். பிற் காலத்துண்டான ஸ்மிருதிகளினின்றும் கலப்பு விவாகத்தில் பிறக்கும் பிள்ளைகளெல்லாம் தாழ்ந்த ஜாதிப் பிள்ளைகளா கவே கருதப்படுகின்றனர். வியபிசாரி மக்களும் தாழ்ந்த ஜாதியாரே யாவர்.

இனி ஹிந்து மத தர்மப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட விவாக வகைகளை கவனிப்போம். ஹிந்து தர்ம சாஸ்திரப் படி எட்டு வகை மணங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் 4 உத்தமம்; ஒன்று மத்திமம்; ஏனைய மூன்றும் அதமம். அவ்வெட்டு வகைக் கலப்புகளும் ஒரு காலத்தில் சட்ட சம்மதம் பெற்றிருந்ததினுலே அவை விவாகமென ஒப்புக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும். தர்ம சாஸ்திரப்படி பெற்றோர் கைப்பிடித்துக் கொடுக்க, புருஷன் பெண்களை பாணிக்ரகணம் செய்யும் முதல் மூன்று மணங்களும் உத்தம மணங்களாம். பெற்றோர் சம்மதம் பெருமல் சதி பதிகள் சம்மதப்படி நிகழும் மணம் மத்திம மணமாம்.

(1) பணம் கொடுத்துப் பெண்களை வாங்கி விவாகம் செய்தல், (2) பெண் சம்மதம் பெருமல் பலவந்தமாக விவா கம் செய்தல், (3) பெண் உறங்கும் காலத்திலும், வேறு விதமாகப் போத மற்றிருக்கும் காலத்திலும் கற்பழித் துப் பிறகு மணம் செய்தல் ஆகிய மூன்றும் அதம மணமெ னக் கொள்ளப்பட்டிருக்கின்றன. கடைசி மணம் மிக நீச மானதாயினும், கிருத்தியம் நடந்துபோனதினுல் இருவர்

க்ஷேமத்தையும் கருதி அதுவும் ஒருவகை மணமாக ஒப்புக்கொள்ளப்பட் டிருக்கிறது.

## சந்தான விருத்தி சாஸ்திரம்.

சந்தான விருத்திக்குரிய விதிகளையும் பண்டைக்கால ஹிந்துக்கள் ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

நாரதர் கூறுவதாவது:—"விவாகம் செய்யுமுன், புருஷன் சந்தான விருத்திக்குரிய தாதுபுஷ்டி உள்ளவனா அல்லவா என்று வைத்தியப் பரீட்சை மூலம் நிர்ணயம் செய்துகொள்ள வேண்டும். தாதுபுஷ்டி யுடையவன் என சந்தேகமற அறிந்துகொண்ட பிறகே புருஷன் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்யலாம். அவனது புஜ எலும்புகளும், கால் முட்டும், மற்றும் எலும்புகளும் உறுதியுடையனவாயிருந்தால், புஜங்களும் உரோமங்களும் சக்தி வாய்ந்தனவாயிருந்தால், பிடரி பருத்திருந்தால், தொடைகளும் தோலும் மிருதுவாயிருந்தால், அவன் வீரிய விருத்தி யுடையவன் என்று அறியவேண்டும்; இவைகளுக்கு எதிரிடையான லட்சணங்கள், அவன் வீரிய விருத்தி யில்லாதவன் எனக் காட்டும்."

விவாகம் செய்ய புருஷன் தகுதி யுடையவனாயிருக்க வேண்டுமென்று நாரதர் வற்புறுத்துவதையும், பெண் தகுதியுடையவளாக யிருக்க வேண்டுமென்று மனு வற்புறுத்துவதையும் கவனித்தால், நாரதர் காலமுதல் மனு காலம் வரையிலுள்ள இடைக் காலங்களில் ஹிந்துக்களின் அபிப்பிராயங்கள் எவ்வாறு மாறுதலடைந்தன வென்பது விளங்கும்.

மனு கூறுவதாவது:—"கல்விப் பயிற்சி முடிந்த விவாகம் செய்ய விரும்பும் இளைஞன், மத கருமங்கள் நடத்தாதார் குடும்பத்திலும், ஆண் குழந்தைகள் இல்லாக் குடும்

பத்திலும், வேதம் இல்லாக் குடும்பத்திலும், உடல் முழுதும் உரோமம் அடர்ந்தவர்கள் குடும்பத்திலும், மூலநோய், க்ஷயம், குன்மம், குஷ்டம் உள்ள குடும்பத்திலும், பெண் கொள்ளா திருப்பானாக."

"மங்கல் நிறமுள்ள பெண்களையும், ஜாஸ்தி உறுப்புகளுடைய பெண்களையும், நோயுடைய பெண்களையும், குறைந்த தலை மயிர் அல்லது மிகுந்த தலை மயிர் உள்ள பெண்களையும், நதி, மரம், நக்ஷத்திரம் இவற்றின் பெயருடைய பெண்களையும், பயங்கரப் பெயருடைய பெண்களையும் அவன் கொள்ளா திருப்பானாக."

"அங்க அமைப்பும், அழகிய பெயரும், அன்னம் அல்லது யானை நடையும், மெல்லிய கூந்தலும், அழகிய பற்களும், பசிய மேனியும் உடைய ஒரு பெண்ணைத் தேடி மணப்பானாக"

சுய ஜாதியில் செய்யப்படும் மணமே உத்தம மணமென ஸ்மிருதிகாரர் எல்லாம் சம்மதிக்கின்றனர். இரண்டாம் பட்சமாக உயர்ந்த ஜாதியில் பிறந்த ஒருவன், தாழ்ந்த ஜாதிப் பெண்ணையும் மணக்கலாம். ஒப்புக்கொள்ளப்பட்ட கலப்பு விவாகத்தில் பிறந்த சந்ததிகளை ஆதிகால ஸ்மிருதிகாரர் தந்தை மரபில் சேர்த்து வந்தனர்; பிற்காலத்தவர் அவ்வாறு செய்ய மறுத்தனர். இக்காலத்தில் அநந்தம் ஜாதிகள் காணப்படுவதற்கு இத்தகைய கலப்பு விவாகங்களே காரணமாகும்.

தற்காலம் வழங்கும் மனு தர்ம சாஸ்திரத்தை வாசிப்பவர்களுக்கு, அது எழுதப்பட்ட காலத்தில் தர்ம சாஸ்திரிகளுக்கும், நியாயவாதிகளுக்கும் பெண்கள் உரிமை விஷயமாக பலமான அபிப்பிராய பேத மிருந்ததாகத் தெரியவரும். பண்டைய முறைகளே சரி என சிலர் வாதித்தனர்; வேறு சிலர், பெண்கள் எப்பொழுதும் புருஷனுக்கு அடங்கியே நடக்க வேண்டுமென்று சாதித்தனர்.

இதுகாறும், ஒரு மனைவியின் நிலையில் பெண்களுக்குள்ள உரிமைகளையும், மற்றும் பொது விஷயங்களையும்பற்றிப் பிரஸ்தாபித்தோம். இனி ஒரு மாதா நிலையில் அவளுக்குள்ள ஸ்தானத்தைப் பற்றி ஆராய்வோம். தாய் ஸ்தானம் பெற்ற பெண்கள் உயர்ந்த அந்தஸ்துடையவர்களாகக் காணப்படுகிறார்கள். மனு ஸ்மிருதி II-145-ல் மனு கூறுவதாவது:—"உபாத்தியாயர்களைவிட (மத) ஆசாரியர்கள் பத்து மடங்கு உயர்ந்தவர்கள்; தந்தை (மத) ஆசாரியனைவிட நூறு மடங்கு உயர்ந்தவர்; தாயோ தந்தையை விட ஆயிர மடங்கு உயர்ந்தவர்." ஹிந்துக்களுக்குள்ளே மாத்ரு ஸ்தானம் மிக உயர்வானது; கண்யமானது. எல்லாப் பெண்களும் மாத்ரு ஸ்தானம் பெறக் கூடியவர்களே. ஆகவே தன் மனைவி, சகோதரி, புத்திரி நீங்கலாக உள்ள பெண்களோடு வார்த்தையாடும்போது புருஷர்கள் "தாயே" என்று தான் அழைக்கிறார்கள். ஒரு அந்நிய ஸ்திரீயுடன் பேச நேர்ந்தால் தாயே! சகோதரியே! என்றுதான் அழைப்பார்கள். ஒருவன் பிறந்த நாடும் தாய் நாடு, அல்லது மாத்ரு பூமி என்று தான் அழைக்கப்படுகிறது.

ஹிந்துக்கள் தம் மக்களிடத்து மிகுந்த அன்புள்ளவர்கள். இந்தியா அநாசாரப் படுகுழியில் வீழ்ந்த காலத்தில் உடன் கட்டை ஏறுதல், பால்ய விவாகம், பல பெண்களை மணக்கும் வழக்கம், பொட்டுக் கட்டுதல், பெண்களை தாசிகளுக்கு விற்றல் முதலிய துராசாரங்கள் உண்டாயின. பாதிரிகள் இவைகளைப் பிரமாதப்படுத்தி இந்தியா முழுதும் இக்கொடிய வழக்கங்கள் தாண்டவ மாடுவதாகக் கதை கட்டி விட்டார்கள். உடன்கட்டையேறுதலும், பால்ய விவாகமும் எல்லா வகுப்பாருள்ளும் இல்லை. ராஜ குடும்பத்தாரிடையிலும், உயர்ந்த ஜாதியாரிடையிலும் மட்டுமே அவை சில பொழுது காணப்பட்டன. ஆதிகாலத்தில் விருப்ப முடையவர்கள் தான் உடன்கட்டை ஏறி வந்தனர். இந்த அநாசாரம் இப்பொழுது ஒழிந்துவிட்டது; இதர அநாசாரங்கள் நாளடைவில் மாய்ந்துகொண்டிருக்கின்றன.

சீர்திருத்தக்காரர்களெல்லாம், பெண்களுக்கு உயர்ந்த ஸ்தானம் அளிக்கவே முயற்சி செய்து வருகின்றனர்.

## சொத்துரிமை

பெண்கள் தம் சொந்தப் பேரால் சொத்து வைத்துக் கொள்ளும் உரிமையை தர்ம சாஸ்திரங்களெல்லாம் ஒப்புக் கொள்ளுகின்றன. மனுஸ்மிருதி IX 194-195. சூத்திரங்களில் கூறப்பட்டிருப்பதாவது:—"விவாக காலத்தில் பெற்ற பொருள்கள், விவாக ஊர்வலத்தில் கிடைத்த பொருள்கள், சகோதரர், தாயார், தந்தை இவர்களிடமிருந்து பெற்ற பொருள்கள் முதலியன பெண்கள் உடைமையாகும். விவாகமான பின் தன் புருஷன் குடும்பத்தாரிடமிருந்து நன்கொடையாகப் பெற்ற பொருள்களும், புருஷன் கொடுத்த பொருள்களும், புருஷன் காலத்தில் மனைவி இறந்து போனால் அவளது மக்களைச் சேரும்.

அவிபக்த குடும்பச் சொத்துக்களில் ஆண்களுக்கும், பெண்களுக்கும் உரிமை கிடையாது. குடும்ப அங்கத்தினருக்காக குடும்பச் சொத்து குடும்பத் தலைவரால் கையாட்சி செய்யப்படுகிறது. ஒரு பெண் விவாகம் ஆகும் வரை தந்தை குடும்பத்து அங்கத்தினளாகவே இருந்து வருகிறாள். விவாகமானவுடன் புருஷன் குடும்பத்தைச் சேர்ந்தவளாகிறாள். பாகமான குடும்பங்களில், விதவைகளும், தாய்மாரும், புத்திரிகளும், சகோதரிகளும் சில சந்தர்ப்பங்களில் வாரிசுகளாக ஒப்புக்கொள்ளப்படுகின்றனர். பொதுவாக, ஒரு குடும்பத் தலைவன் இறந்தால் அவனது மகன் குடும்பச் சொத்துக்கு உரிமை யுடையவனாகிறான்; அந்தக் குடும்பத்துப் பெண்களைப் பாதுகாப்பதும் அவனது பொறுப்பாகிறது. அவன் குடும்பத்துப் பெண்களைப் பாதுகாக்காமல், சொத்தை விற்றுவிட்டால் அப்பெண்களைப் பாதுகாக்கும் பொறுப்பு, அந்த சொத்தை வாங்கினவர்கள் தலையில் பொறுக்கிறது. புத்திரன் இல்லாதிருந்தால் பிதா

வின் சொத்துக்கு விதவை உரியவளாகிறள்; அந்த சொத்தின் வருமானத்தை விதவை தன்னிஷ்டப்படி செலவு செய்யலாம்; ஆனல் அதை விற்பதற்கு அவளுக்கு பூரண சுதந்தரம் கிடையாது. சட்ட சம்மதமான தேவை யுண்டாகும்போதும், அடுத்த வாரிசின் சம்மதத்துடனும் அவள் குடும்பச் சொத்தை விற்பனை செய்யலாம். அவள் இறந்த பிறகு அவளது சொத்துகள் புத்திரிக்குச் சொந்தமாகின்றன. அந்த ஆஸ்தியின்பேரில் தன் தாய்க்கிருந்த உரிமைகளெல்லாம் புத்திரிக்கும் உண்டு. இதுபோலவே சகோதரர் இல்லாத குடும்பங்களில் தாய் ஆஸ்திக் குடையவளாகிறள்.

பெண்களின் தனி உடமைகள் அவர்களது மக்களைச் சேருகின்றன; மக்க ளில்லாவிட்டால் புருஷனைச் சேரும்; சில சமயங்களில் பெண்களின் தந்தை குடும்பத்தைச் சேரும்.

## ஸ்வீகார உரிமை.

ஹிந்துப் பெண்களுக்கு ஸ்வீகார உரிமையுண்டு. புருஷன் உயிரோடிருக்கையில் ஒரு புத்திரனை ஸ்வீகாரம் செய்ய அநுமதி யளித்திருந்தால் அவன் இறந்த பிறகு அவனுக்காக ஒரு புத்திரனை ஸ்வீகாரம் செய்ய மனைவிக்கு உரிமையுண்டு. புருஷன் சுற்றத்தார் சம்மதத்தின் பேரிலும் விதவை ஸ்வீகாரம் செய்யலாம்.

## பாதுகாப்புரிமை

சில சந்தர்ப்பங்களில் தன் புத்திரர்களையும், புத்திரிகளையும் காப்பாற்றும் உரிமை தாயாரைச் சேருகிறது. புத்திரிகள் விவாக விஷயத்திலும் தாய்மார் சம்மதியளிக்க உரிமை யுடையவர்கள்.

## சந்தான உற்பத்தி

சந்தான உற்பத்தியைப் பற்றி தர்ம சாஸ்திரங்களில் விரிவாக உரைக்கப் பட்டிருக்கின்றன. கிறிஸ்தவர்களுக்கு

அவை விநோதமாகத் தோற்றலாம். ஆனால் தற்காலவிஞ்ஞான சாஸ்திரிகளின் அபிப்பிராயங்களைத் தழுவிப் பார்த்தால் சந்தான உற்பத்தி விதிகள் மிகவும் ரஸகரமாகத் தோன்றும். மனு, பெண்ணைப் பூமிக்கும் புருஷனை வித்துக்கும் உவமை கூறுகிறார். சில இடங்களில் வித்து பிரதானமாகக் கருதப்படுகிறது; சில இடங்களில் பூமி முக்கியமென மதிக்கப்படுகிறது. இரண்டும் உத்தமமா யிருந்தால் சந்ததியும் உத்தமமாகவே இருக்கும். பொதுவாகப் பார்த்தால் வித்து தான் முக்கியமானது. ஏனென்றால் வித்தின் குணமே பயிருக்கு உண்டாகிறது. யாவற்றிற்கும் பூமியே பிறப்பிடமாகக் கருதப்பட்டாலும், பூமியின் குணம் வித்தில் காணப்படுவதில்லை. ஒரே நிலத்தில், பல பருவத்தில் விதைக்கப்படும் விதைகள் பல திறப்பட்ட பலனைக் கொடுக்கின்றன. அவரை போட்டால் துவரை முளைக்குமா? ஆகையால் அறிவுள்ள ஆண் மகன் அந்நியன் மனைவியிடம் தன் விதையைப் போடமாட்டான்.

## விவாக விடுதலை

தர்ம சாஸ்திரப்படி விவாகம் என்றும் அழியாத ஒரு சாச்வத பந்தம். இந்த விதிப்படி பார்த்தால் விதவைகளுக்குப் புனர் விவாகம் செய்யும் உரிமை யில்லை. ஆனால் மனைவியை இழந்த புருஷர்கள் புனர் விவாகம் செய்வது வழக்கமா யிருக்கிறது. ஆதி தர்ம சாஸ்திரங்களில் விதவா விவாகம் அனுமதிக்கப் பட்டிருக்கிறதும் தவிர, புருஷன் உயிரோ டிருக்கையில் மனைவியும், மனைவி உயிரோ டிருக்கையில் புருஷனும் சில சந்தர்ப்பங்களில் புனர் விவாகம் செய்துகொள்ளலா மென்றும் கூறப்பட்டிருக்கிறது. இவ்விஷயத்தைப் பற்றி வேறொரு அத்தியாயத்தில் விரிவாகக் கூறுவோம்.

## புனர் விவாகம்

பெண்கள் புனர் விவாகத்தைப் பற்றி நாரதர் கூறுவதாவது:—“புருஷன் மறைந்துபோகவோ, இறக்கவோ,

சன்யாசியாகவோ, புருஷத்தன்மை இழக்கவோ, ஜாதிப் ரஷ்டனுகவோ நேர்ந்தால் அவன் மனைவி புனர் விவாகம் செய்து கொள்ளலாம்."

தேசாந்தரம் போன புருஷர்கள் வரவை எதிர்பார்த்து, இன்னின்ன ஜாதிப் பெண்கள் இத்தனை இத்தனை வருஷம் காத்திருக்க வேண்டுமென்று நாரதர் விதி ஏற்படுத்தி யிருக்கிறார். அந்தக் கால வரையறை கழிந்த பின் ஒரு பெண் வேறு புருஷனை மணப்பது குற்ற மாகாது. புருஷர்களுக்கு நாரதர் ஜாஸ்தி சுதந்தரம் கொடுத்திருக்கிறார். குடும்பச் சண்டைகள் உண்டானுல் புருஷனும், பெண்ணும் அரசனிடத்தும், குடும்பத் தலைவர்களிடத்தும் முறையிடக் கூடாதென்றும், பரஸ்பர வெறுப்பினுல் அவர்கள் ஒருவரையொருவர் பிரிவது பாபமென்றும் நாரதர் ஒரு பொது விதி கற்பித்திருக்கிறார். வியபிசாரிகளுக்கும் அவர் கடின தண்டனை விதித்திருக்கிறார். ஆனுல் நற்குண முடையவளும், குழந்தை குட்டி யுடையவளுமான ஒரு மனைவியை புருஷன் உபேட்சித்தால் அவனுக்கு அரசன் கடுந் தண்டனை வழங்க வேண்டுமென்றும் கூறி யிருக்கிறார்.

மனு கூறுவதாவது:—"மனைவி தன்னை நேசிக்க வில்லையானுல் புருஷன் ஒரு வருஷம் காத்திருந்து பார்க்கவேண்டும். பின்னும் அவள் சரியாக வில்லையானுல் அவளுக்குக் கொடுத்தவைகளை யெல்லாம் திரும்ப வாங்கிக்கொண்டு புருஷன் அவளை விட்டுப் பிரியலாம். புருஷன் சித்தப்பிரமை கொண்டதினுலோ, புருஷத் தன்மை யற்றதினுலோ, கொடிய நோயாளி யானதினுலோ பெண் அவன்மீது வெறுப்புக்கொண்டு வியபிசாரம் செய்தால் மனு அவளுக்கு மன்னிப்புக் கொடுக்கிறார். இவ்வாறு நிகழும் காலத்தும் மனைவியை விட்டுப் பிரிய புருஷனுக்கு உரிமை யில்லை; மூன்று மாதம் அவளைப் பிரிந்திருப்பதுதான் அவர் விதிக்கும் தண்டனை. மனைவி குடிகாரியாகவோ, பாப கிருத்தியங்கள் செய்யவோ, அடங்காப் பிடாரியாகவோ, நோயாளியாகவோ

வீட்டு முதலை நாசஞ் செய்யவோ நேர்ந்தால் புருஷன் வேறு பெண்ணை கலியாணம் செய்யலாம். பெண்கள் மல டெனக் கண்டால் புருஷன் எட்டு வருஷங் காத்திருந்து பார்க்க வேண்டும். மனைவி மலடா யிருந்தும் நற்குண முடையவளா யிருந்தால் அவளுடைய சம்மதத்துடன் புரு. ஷன் வேறு பெண்ணை விவாகம் செய்யலாம்.

தற்காலம் அமுலி லிருக்கும் மனு தர்ம சாஸ்திரம் உருப்பெற்றபோது, பொது ஜனுபிப்பிராயம் விதவைகள் புனர் விவாகத்துக்கு எதிரிடையாக மாறியது. தற்கால மனு தர்ம சாஸ்திரமும் விதவா விவாகம் சட்ட விரோத மானதென்று கூறவில்லை; விதவா விவாகம் உத்தமமல்ல வென்றுதான் கூறுகிறது. வைதீகப் போக்காகப் பார்த் தால் தற்கால மனுதர்ம சாஸ்திரத்தின் விவாக விதிகள் மிக உயர்ந்த லட்சியங்கள் உடையன ஆயினும், தற்காலப் பரிஷ் காரிகளுக்கு அவை கடினமாகவோ, சட்ட விரோதமாகவோ தோன்றும். இறக்கும் வரை கணவனும், மனைவியும் பின்ன மின்றி மனமொத்து வாழவேண்டு மென்பதே மனுவின் பொது விதி. அவ்வாறு மனமொத்து வாழுகிறவர்கள் இறந்த பின்னும் பிரிய மாட்டார்களாம்.

புருஷனும், மனைவியும் பேதமறக் கலந்து ஒன்று படு வதே அவ்விதிகளின் உட்கருத்து. நதி, தான் சென்று பாயும் கடலின் குணத்தைப் பெறுவது போல புருஷனிடம் பற்றும் நம்பிக்கையு முடைய மனைவிக்கு அவளது புருஷன் குணம் தன்படியே வந்துவிடுமென மனுஸ்மிருதியில் கூறப் பட்டிருக்கிறது. இங்கே கணவன் ஒரு கடலுக்கு ஒப்பாகக் கூறப்படுகிறுன். இதனுல் கணவனுக்கு எவ்வளவு உயர்ச்சி அளிக்கப்படுகிற தென்பது நன்கு புலனுகும். வேருே ரிடத்து, மனிதன் ஏகனல்ல வென்றும், மனிதனில் மனைவி யும், பிற்கால சந்ததிகளும் அடங்கியுள்ளன வென்றும் மனு கூறுகிறுர். கணவனை உருப்படுத்துவது மனைவி என்று ரிஷிகள் கூறி யிருக்கிறுர்கள். தர்ம சாஸ்திரங்கள் கூறு

வதைப் பார்க்க—"துர்க்குண முடைய கணவனுடன், தூய குணமுடைய மனைவி இறக்குமளவும் பிரியாது வாழ்ந்திருக்கத் துணிவுகொண்டால், மனைவியின் தூய்மையால் கணவனும் யோக்கியனாய் விடுவான்."

இங்கே பெண்ணுக்கு மிகவும் உயர்ச்சி அளிக்கப்படுகிறது. கணவன் மனைவி தன்மையைப் பற்றி ஒரு புராணத்தில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது.

"அவன் விஷ்ணு, அவள் ஸ்ரீதேவி. அவள் மொழி, அவன் கருத்து; அவள் விவேகம், அவன் விதி. அவன் உணர்ச்சி, அவள் புலன். அவன் பொறுமை, அவள் சாந்தி. அவன் மனம், அவள் இச்சை. அவள் விறகு, அவன் நெருப்பு. அவள் ஜோதி, அவன் சூரியன். அவள கோளம், அவன் வெளி. அவள் இயக்கம், அவன் காற்று. அவன் கடல், அவள் கரை. அவன் செல்வன், அவள் செல்வம், அவன் போர், அவள் சக்தி. அவன் விளக்கு, அவள் ஒளி. அவன் பகல், அவள் இரவு. அவன் மரம், அவள் கொடி. அவன் சங்கீதம், அவள் ஸ்வரம். அவன் நீதி, அவள் உண்மை. அவன் கொடிமரம், அவள் கொடி. அவள் அழகு, அவன் வலிமை. அவள் உடல், அவன் உயிர்."

சதிபதிகள் தன்மை எவ்வளவு அழகாக விளக்கப் பட்டிருக்கிறது பாருங்கள்!

இந்த வர்ணனையில் சில இடங்களில் அவனுக்கும், சில இடங்களில் அவளுக்கும் உயர்ச்சி யளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இருவரது உயர்ச்சியும் வாழ்க்கை மேம்பாட்டுக்கு இன்றி யமையாத தாகும். ஒவ்வொருவரிடத்தும் ஒவ்வொரு தன்மை அமையப் பெற்றிருக்கிறது. அவள் குறையை அவன் பூர்த்தி செய்கின்றான்.

"Better Half" என்னும் ஆங்கிலச் சொல்லுக்குப் பிரதிபதமாக சம்ஸ்கிருதத்தில் 'அர்த்தாங்கி' என ஒரு வார்த்தை யுண்டு. பிரம்மா தன்னுடலை இரு பிரிவாகப்

பிரித்து ஒரு பிரிவைப் பெண்ணாகவும், மறு பிரிவை ஆணாகவும் ஆக்கிக்கொண்டாராம். ஆகையால் பெண்ணுக்கும் அர்த்தாங்கி எனப் பெயர் வந்தது. தனித்தனி புருஷனாகவும், பெண்ணாகவும் இருப்பவர்கள் விவாக காலத்தில் ஒன்று படுகிறார்கள். ஆகவே சதியில்லாப் பதி செய்யும் யாகம் பூரணமாகாதாம்.



## அத்தியாயம் 13.

# புது உலகப் பெண்கள்.

இந்திய மாதர்களின் கற்பு நிலையையும், சமூக வாழ்வில் அவர்களுக்குள்ள ஸ்தானத்தையும் கன்னி மேயோ அபாண்டமாகப் பழித்துக் கூறியிருக்கிறார். தமது உத்தேச நிவர்த்திக்காக, அவர் வெகு சாமர்த்தியமாகப் பொய்யும், மெய்யும் கலந்த ஒரு கட்டுக் கதையை வெளியிட்டிருக்கிறார். அவரது கூற்று தப்பர்த்தம் உண்டுபண்ணக் கூடியதா யிருப்பதுடன், மிகைபடக் கூறப்பட்டதாகவு மிருக்கிறது. உண்மை நிலையை அவர் வேண்டுமென்றே திரித்தும் பெருக்கியும் காட்டுகிறார். ஆதாரமற்ற துணிபுகளை மேற்கோளாக வைத்துக்கொண்டு இந்திய மாதர்களையும், புருஷர்களையும் மிகக் கேவலமாக இழித்துக் கூறுவது அவரது பெண் தன்மைக்கு எள்ளளவேனும் பொருத்தமானதாக இருக்கவில்லை. அவர் கூறும் பழிகளை யெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்து ஆராயத் தொடங்குகிறேன்.

சில விஷயங்களில் இந்திய மாதர்கள் நிலைமை பொதுவாக மிக மோசமாகத்தா னிருக்கிறது. இந்திய மாதர்கள் அவர்களது சுற்றுச் சார்புக்கு அடிமைகளாய் விட்டார்கள். ராஜீய சமுதாய விஷயங்களில் அடிமைகளாக இருக்கும் புருஷர்கள் வாழும் நாட்டில் பெண்கள் நிலைமை அப்படித்தான் இருக்க முடியும். மேனாட்டுப் புருஷர்கள் நிலையைவிட இந்தியப் புருஷர்கள் நிலைமை மிகக் கேவலமா யிருப்பது போலவே மேனாட்டு மாதர்கள் நிலைமையைக் காட்டிலும் இந்திய மாதர்கள் நிலைமை மிகக் கேவலமாகவே இருந்து வருகிறது. ஆனால் இந்திய மாதர் நிலை பண்டும் கேவலமாகவே இருந்து வந்ததென, வாசிப்போர் மனதில் ஒரு

தப்பெண்ணம் உண்டுபண்ண கன்னி மேயோ எத்தனித்திருக்கிறார். அது உண்மை யல்ல. அவ்வாறு துணிந்து கூறுவது தப்பான தென்று முன் அத்தியாயத்தை வாசித்தோர் உணரக் கூடும்.

ஹிந்து நாகரிகம் பூரணமாக நிலைபெற்றிருந்த புராதன இந்தியாவில், தற்காலத்தை விட எவ்வளவோ மேம்பாடான நிலைமையில் மாதர்கள் வாழ்ந்து வந்தார்கள். விக்டோரியா மகாராணியார் காலத்துக்கு முன் ஐரோப்பிய மாதர்கள் பெற்றிருந்த நிலையைவிட ஹிந்து இந்தியாவில் வாழ்ந்த மாதர்கள் நிலை மிகவும் சிறப்புடையதாகவே இருந்து வந்தது.

வேத காலத்தில் புருஷர்களுங், பெண்களும் எல்லா விஷயங்களிலும் அந்தஸ்துடையவர்களாகவே இருந்தனர். பருவமடைந்து விவேக முதிர்ச்சி பெற்ற பிறகே பெண்கள் வாழ்க்கைத் துணைவரைத் தேர்ந்தெடுத்தனர். விதவா விவாகத்துக்கு எதிரிடையான கட்டுப்பாடுகள் எதுவும் இருந்ததில்லை. சர். ஹேர்பர்ட் ரிஸிலீ போன்ற பண்டிதர்கள் இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். சில விஷயங்களில் தற்கால ஐரோப்பிய மாதர்களைவிட வேதகால இந்திய மாதர்கள் மிகுந்த சுதந்தரமுடையவர்களாக இருந்தனர்.

ஐரோப்பாவில் பெண்கள் விடுதலை சமீப காலத்திற்றான் ஏற்பட்டது. கொஞ்ச காலத்திற்கு முன் வரை பெண்கள் வாக்குரிமையைப் பற்றி ஒருவரும் கனவு கூடக் காணவில்லை. தற்கால சாஸ்திரங்கள் தலையெடுக்கு முன் ஐரோப்பா மிகச் சீரும் சிறப்பும் பெற்றிருந்த காலம் உரோமர் ஆட்சிக் காலமே.

உரோமர் காலத்தில் ஐரோப்பிய மாதர்கள் புருஷர்களது கைப்பாவையாக இருந்து வந்தனர். உரோமர் சட்

டப்படி மாதர்கள் நிலைமை சில விஷயங்களில் மத்தியகால இந்திய மாதர் நிலைமைக்கு சமமாகவும், சில விஷயங்களில் தாழ்வாகவும் இருந்து வந்தது. இந்தியாவில் அரசியல் சீர்கேடே, அத்தகைய நிலைமைக்குக் காரணமாயிருந்தது. ஐரோப்பாவிலோ உரோமர் ஆட்சி நிலைபெற்றிருந்த காலத்தும் பெண்கள் நிலைமை மோசமாகவே இருந்திருக்கிறது. உரோமர் காலத்துப் பெண்களைப் பற்றி ஒரு ஆசிரியை கூறுவதாவது:—"தன் ஆயுட்கால முழுதும் பெண் தன் தந்தைக்கோ, கணவனுக்கோ, இரட்சை கர்த்தாவுக்கோ அடங்கி நடப்பவளாகவே இருக்க வேண்டும்; அவள் சுயமாக ஒன்றும் செய்தல் கூடாது. பண்டைக் காலங்களில் பெண்கள்மீது புருஷர்களுக்குள்ள அதிகாரம் அமிதமானதாக இருந்ததினால், ஒரு குடும்ப விசாரணை நடத்தி, சர்க்கார் அநுமதி யின்றியே புருஷர்கள் பெண்களுக்கு மரண தண்டனை விதித்தனர். பெண்கள் சஞ்சல புத்தியுடைய வர்களாகவும், பலவீனர்களாகவும், அறிவீனர்களாகவும் இருந்ததினாலேயே அவ்வாறு அடிமைவாழ்க்கை வாழும்படி நேர்ந்தது."

உரோமர்களின் விவாக விதிகளைப் பற்றி அந்த ஆசிரியை கூறுவதாவது:—"தெற்குப் பிரதேசங்களில் பெண்கள் இள வயதிலேயே பருவ மடைந்ததினால், இள வயதிலேயே விவாகம் செய்யப்பட்டு வந்தனர். 12 வயதில் பெண்களுக்கு விவாகம் நடத்துவது நாட்டு வழக்கமாக இருந்தது. ஆதிகாலத்தில் (1) பெண்களை ஏலத்தில் விலை கொடுத்து வாங்கியும் (2) மத சம்பந்தமான சில விவாகச் சடங்குகள் மூலமும் (3) கூடி வாழ்ந்த காரணத்தைக் கொண்டும் விவாகங்கள் நடைபெற்றன. ஒரு பெண் ஒரு புருஷனுடன் ஒரு வருஷகாலம் இருக்கவும், அக்காலத்தில் மூன்று நாட்களுக்கு அதிகமாகப் புருஷனைப் பிரியாதிருக்கவும் நேர்ந்தால் அப்பெண்ணை மேலே கூறிய மூன்றாவது முறைப்படி, கூடி வாழ்ந்த காரணத்தால் விவாகம் செய்து கொள்ளலாம்.

இரண்டாவது நூற்றாண்டில் இம்முறையில் சிறிது மாற்ற மேற்பட்டது. கலியாணத்தில் புருஷன் ஆஜரா யிருக்க வேண்டும். பெண்ணின் பெற்றோரும், இரட்சை கர்த்தாக்களும் கலியாண ஏற்பாடுகள் செய்து வந்தனர். ஐரோப்பாவில் சில பிரதேசங்களில் இப்பொழுதும் அவ் வாறே நடைபெற்று வருகின்றன. விவாகத்துக்கு புத்திரி யின் சம்மதி பெறவேண்டியது தேவையா யிருந்தாலும், புத்திரியைக் கட்டாயப்படுத்த தந்தைக்கு அதிகார மிருந் தது.

கிறிஸ்தவ நாகரிகத்தினல் ஐரோப்பாவில் பெண் களின் அந்தஸ்து உயரவில்லை.

கிறிஸ்தவ ஆகமப்படி பாபம் பெண்கள் மூலமே உற் பத்தி யாயிற்றென்று ஸ்ரீமதி. ஹேக்கர் கூறுகின்றார். எல் லாப் பாபங்களும் பெண்களிட மிருந்தே உற்பத்தியாயிருக் கின்றன என்று சேயிண்டு ஜேரோம் கூறுகிறார். கடவுள் உருவில் மனிதன் சிருஷ்டிக்கப் பட்டா னென்றும், பெண் அவ்வாறு சிருஷ்டிக்கப் படவில்லை யென்றும் சேயிண்டு அகஸ்டன் கூறுகிறார். பெண்களுக்கு புருஷன் மீது அதி கார மில்லை யென்றும், நீதி ஸ்தலத்தில் சாட்சி கூறவோ, ஜாமியம் கொடுக்கவோ, வேறு நடவடிக்கைகளில் கலந்து கொள்ளவோ கூடா தென்றும் அவர் மேலும் கூறி யிருக் கிறார். ஒரு பெண்ணின் தந்தை சம்மதமோ, தந்தை வழிச் சுற்றத்தார் சம்மதமோ பெறுமல் செய்யப்படும் மணம் வியபிசார மாகு மென்று கிறிஸ்தவக் குருமார் வற் புறுத்துகின்றனர்.

ஜெர்மன் ஜாதியாருக் குள்ளே பெற்றோர் சம்மதப் படியே விவாகம் நடந்தது; ஜாதிக் கட்டுப்பாடும் பலமாக இருந்தது. தம் அந்தஸ்தில் குறைந்த புருஷர்களையே பெண்கள் மணந்துகொள்ள வேண்டும்; பெண்கள் சுயேச்சை யாய் நடக்க முடியாது. விவாகமான பிறகு வேத விதிப்

படி பெண் புருஷனுக்குக் கீழ்ப் பட்டவள் ஆகிறாள். ஆகவே அவளது ஆஸ்திகளெல்லாம் புருஷன் அதிகாரத்துக்குள் வந்தன."

இங்கிலாந்தில் மாதர் நிலைமையைப் பற்றி, 1763-ல் ஸ்ரீ. பிளாக்ஸ்டன் பின்வருமாறு எழுதி யிருக்கிறார்:—"பழைய சட்டப்படி புருஷன் மனைவியை மிதமாகக் கண்டிக்கலாம். மனைவியின் துர்நடக்கைக்குக் கணவனே ஜவாப்தாரி யாகையால், பெண்களை அடக்கியாளும் உரிமையைப் புருஷர்கள் அடைய வேண்டியதாயிற்று."

ஹிந்து ஆசாரங்களைப் பற்றி ஆபே போய் விஷம ஆராய்ச்சி நடத்திக்கொண்டிருந்த காலத்திலே ஐரோப்பிய மாதர் நிலைமை மேற்கூறிய வண்ணமா யிருந்தது.

ஸ்ரீ. பிளாக்ஸ்டன் மேலும் கூறுவதாவது:—"பெண்களை அடிக்கவும், வேறு விதமாகத் தண்டிக்கவும் தேச சட்டப்படி புருஷர்களுக்கு அதிகார மிருந்தது."

மூன்றாவது ஜார்ஜ் அரசர் காலத்தில், கொலைக் குற்றம் செய்த ஒரு பெண் உயிருடன் எரித்துக் கொல்லப்பட்டாள். 1891-வரை பெண்கள் மீது புருஷர்களுக்குள்ள பூரணாதிகாரம் குறையவில்லை என்று ஸ்ரீமதி. ஹேக்கர் கூறுகிறார். 1911-லும் மனைவிமாரை யடிக்கும் கொடிய வழக்கம் இங்கிலாந்தில் இருந்து வந்த தென்பதற்குப் பல சான்றுகள் உள்ளன.

19-வது நூற்றாண்டின் கடைக்காலம் வரை, கணவன் சம்மத மின்றி தம் சொத்துக்களைக் கைமாறும் உரிமை பெண்களுக்கு இல்லா திருந்தது.

"கலியாண காலத்தில் பெண்களுக்குள்ள ஜங்கம சொத்துக்களும் கூட புருஷன் உடைமையாய் விடுகின்றன.

அவளுக்கு வரவேண்டிய நிலுவைகளுக்காக அவளது சம்மதம் பெருமலே கணவன் வியாச்சியம் செய்யலாம்.

கலியாணத்துக்குப் பிறகு மனைவி தன் சொந்தப் பேரால் உடன்படிக்கையும் செய்துகொள்ளக் கூடாது; சொத்து வாங்கவும் கூடாது. 1882-ல் மனைவிகள் சொத்துரிமை மசோதா நிறைவேறிய பிறகே பெண்கள் சொத்துக்களில் புருஷருக் குள்ள அதிகாரம் ரத்தாயிற்று.

இவை யாவற்றையும் விட மிக முக்கியமானது சம்மத வயதைப்பற்றி ஸ்ரீமதி ஹேக்கர் கூறுவதாகும். அது பின் வருமாறு:—“பெண்கள் சம்மத வயதுத் திட்டம் கிறிஸ்தவ நாகரீகத்துக்கு ஒரு பெரிய களங்கமாகும். பழைய சட்டப்படி 10-ம், 12-ம் சம்மத வயதாகக் கருதப்பட்டது. 1885-ல் அது 13 ஆக உயர்ந்தது. அந்த இளம் பருவத்திலும் பெண் விவேக முதிர்ச்சி பெற்றவளென மதிக்கப்பட்டாள். 1885-ல் இந்தத் திட்டத்தினல் பெண்கள் அனுபவித்துவந்த கொடுமைகளையும் ஹிம்சைகளையும் ஸ்ரீ. டப்ளியூ. டி. ஸ்டேட் விளக்கிக் காட்டுவதற்கு முன் ஒருவராவது அவ் விஷயங்களில் கவனம் செலுத்தவில்லை. அவரது கிளர்ச்சியின் பயனாக சம்மத வயது 16 ஆக உயர்த்தப்பட்டது. தற்பொழுதும் இந்த 16 வயதுத் திட்டமே அமுலில் இருந்து வருகின்றது.

19-வது நூற்றாண்டின் பிற்பகுதிக்கு மேலே ஆங்கில மாதர்களுக்கு உயர்தரக் கல்வி கற்பிப்பதைப் பற்றிய கிளர்ச்சி தலையெடுத்தது; வாக்குரிமைக் கிளர்ச்சி மிகவும் சமீப காலத்தில் உண்டானதாகையால் அதைப்பற்றி விரிவாக இங்கு கூறவில்லை.

## கன்னி மேயோ தாய் நாடு

“சந்தான விருத்தியே பெண்மையின் முக்கிய நோக்கம். கணவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியது மனைவி கடமை. கணவன் என்ன குற்றம் செய்தாலும் மனைவி விவாக விடுதலை பெற விரும்பக் கூடாது” என்று பிலால்

டல்பியா ஆலயத்தில் ஒரு பிரசங்கத்தின்போது ஞானோப தேசம் செய்த ரெவரண்டு கர்ணுக் ஸ்லிட்டில் போன்ற புண்ணியவான்கள் 1880 வரை அமெரிக்காவில் ஏராளமா யிருந்தனர்.

சம்மத வயது மசோதாவைப் பற்றிய விவாத காலத்தில் இந்திய சட்டசபையில் வைதீகப் பற்றுடைய சில மெம்பர்கள் பேசியதை கன்னி மேயோ மிகப் பிரமாதமாகப் பெருக்கிக் கூறுகிருர். ஒரு ஹிந்து அங்கத்தினரே அந்த மசோதாவைச் சட்டசபையில் கொண்டுவந்தனர். உத்தியோக மெம்பர்கள் எதிர்ப்பு வலுவா யிருந்ததினுலேயே அது தோல்வியடைந்தது. ஸ்ரீ. ஆர். பி. ஹரவிலாஸ் சாரதா என்ற வேருெரு ஹிந்து அங்கத்தினர் கொண்டுவந்த மசோதாவையும் உத்தியோக மெம்பர்கள் எதிர்க்கத்தான் செய்தனர். அது இப்பொழுது செலக்டு கமிட்டியார் ஆலோசனையில் இருந்து வருகிறது. சீர்திருத்தக்காரர் தொகை நாளுக்கு நாள் மிகுந்து வருவதை யாவரும் நன்கு கவனிக்கவேண்டும். சீர்திருத்தங்களுக்கு பழைமை விரும்பிகள் எப்பொழுதும் எதிரிகளாகவே இருப்பார்கள். அத்தகைய மனப்போக் குடையவர்கள் உலகமெங்கும் இருந்துதான் வருகிருர்கள். இருப்புப் பாதைக்கு எதிரிடையான ஒரு மசோதா 1852-ல் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் கொண்டுவரப் படவில்லையா? கப்பற் படையில் ஆவிக் கப்பலைச் சேர்க்கக் கூடாதென்று நேப்பீயர் என்பவர் பார்லிமெண்டில் எதிர்க்கவில்லையா? மின்சார விளக்குப் போடக் கூடாதென்று ஸ்காட்டு முறையிட வில்லையா? பைரன் அதை ஆதரித்து ஒரு கவி பாடவில்லையா?

அமெரிக்க சம்மத வயது மசோதா வரலாற்றைப்பற்றி ஸ்ரீமதி ஹெக்கர் கூறும் விஷயங்கள், சந்தர்ப்பத்துக்கு மிகப் பொருத்தமானவைகளா யிருப்பதால் அவற்றை ஈண்டுக் கவனிப்போம்:—சம்மத வயதை 16-ல் இருந்து 14 ஆகக் குறைக்கவேண்டு மென்று நியூயார்க்கு செனட்டு

சபையில் 1890-ல் ஒரு மசோதா கொண்டுவரப்பட்டது. ஆனால் அது தோல்வி யடைந்தது. 1892-ல் வியபிசார விடுதி சொந்தக்காரர்கள் மீண்டும் சட்டசபையில் ஒரு முயற்சி செய்ய அந்த மசோதா பெரும்பான்மை ஆதரவினால் நிறைவேறி விடும்போ லிருந்தது. ஆனால் அந்த மசோதா வுக்கு சாதாகமாகவும் பாதகமாகவும் வாக்குக் கொடுப்பவர் கள் இன்னின்னார் என்று பகிரங்கப் படுத்துவதற்காக தனித் தனி வாக்கைக் கணக்கெடுக்கும்படி சபைத் தலைவர் கட்டளையிட்டார். அந்தக் கட்டளைக்குப் பின் சாதகமாக வாக்களிப்பவர்கள் பலர் பின்வாங்கி விட்டனர். எனவே அம் மசோதா தோல்வி யடைந்தது. 1889-ல் கான்சாஸ் செனட்டு சபையில் சம்மத வயதை 18-ல் இருந்து 12 ஆகக் குறைக்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் கொண்டுவரப் பட்டது. பொது ஜனங்கள் அதை அறிந்தவுடனே தீவிர மாகக் கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். ஆகவே பூர்வ சட் டம் ரத்தாகா தொழிந்தது.

இந்தியமாதர்களின் குறைபாடுகளைப்பற்றி ஆராய்ச்சி நடத்தப் புகும் அமெரிக்கப் பிரயாணிகள், தம் சொந்த நாட்டில் மாதர் விடுதலை பெற்றது மிகவும் சமீப காலத்திற்கு முன் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்வது நலம். சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியிலே அமெரிக்காவில் மாதர் விடுதலை இயக்கம் வலுப்பெற்றது.

முதல் பெண்கள் உரிமை மகாநாடு, 1848-ல் நியூ யார்க்கை யடுத்த செனிக்கா பால்ஸ் நகரத்தில் நடைபெற் றது. அம் மகாநாட்டை, விவாக விடுதலை பெற்றவர்களும் மலடிகளும், கன்னிக் கிழவிகளும் கூட்டிய கூட்டமென்று அமெரிக்கப் பத்திரிகைகள் கேலி செய்து நகைத்தன. அமெரிக்க மாதர்கள் தங்கள் பிறப்புரிமைகளைப் பெற்ற காலத்தில், இந்தியாவில் அமுல் நடத்தியது பிரிட்டிஷாரா இந்தியர்களா?

சென்ற நூற்றாண்டின் பிற்பகுதி வரை, ஐரோப்பிய அமெரிக்க மாதர்கள் வகித்து வந்த ஸ்தானத்தை இந்திய

மாதர்கள் ஒருபொழுதும் வகித்ததே கிடையாது. வேத காலத்தில் புருஷர்களும் பெண்களும் சம நிலையில் வாழ்ந்து வந்ததாக நாம் ஏற்கனவே விளக்கி யிருக்கிறோம். பௌத்த மத காலத்தில் இந்திய மாதர்கள் நிலை பிற்போக்கடையத் தொடங்கிற்றெனினும் தேச சட்டப்படி அவர்களது நிலைமையில் எத்தகைய மாற்றமும் ஏற்படவில்லை. இந்தியாவில் ஹிந்து நாகரீகம் அமுலி லிருந்தகாலத்தில் ஐரோப்பாவில் உரோமர் நாகரீகம் அமுலி லிருந்தது. அக் காலங்களில் ஐரோப்பிய மாதர்களுக் கிருந்து வந்த குறைபாடுகளுக்கும் இந்திய மாதர்களுக் கிருந்து வந்த குறைபாடுகளுக்கும் பரஸ்பர ஒற்றுமை காணப்படுவது ஈண்டு கவனிக்கத் தக்கது. உதாரணமாக ஐரோப்பிய மாதர்கள் புருஷர்கள் கட்டுக்காவலிலேயே இருந்து வந்தனர். இந்தியாவிலும் பெண்கள் புருஷர்களுக்கு அடங்கி யிருக்கவேண்டுமென்று சில பாஷியகாரர்கள் அபிப்பிராயப் பட்டனராயினும் அவ் வபிப்பிராயம் ஒருபொழுதும் கட்டாயமாக அமுலுக்குக் கொண்டுவரப்படவில்லை. தம் சொந்தப் பேரால் உடன் படிக்கை செய்யவும், சொத்து வாங்கவும், சில சந்தர்ப்பங் களில் தம் கணவர் சொத்துக்கு வாரிசாகவும், மக்களுக்கு இரட்சாதிகாரியா யிருக்கவும், குடும்ப சொத்துக்களுக்கு தாய் புத்திரி, சகோதரி நிலையில் வாரிசாகவும் இந்தியாவில் பெண்களுக்கு ஒரு பொழுதும் உரிமை மறுக்கப்பட வில்லை. இப்பொழுதும் கணவன் சொத்தில் மனைவிக்கு ஒருவித உரிமை இருந்துதான் வருகிறது. கணவன் அந்தஸ் துக்குத் தக்கவாறு, தன் பாதுகாப்புக்குக் கணவன் சொத்தி லிருந்து செலவு பெற மனைவிக்கு உரிமையுண்டு. கல்வி கற்கவும் மதச் சடங்குகளில் பங்கு கொள்ளவும் இந்திய மாதர்கள் ஒரு காலத்தும் தடுக்கப்பட்டதில்லை.

சென்ற 75 வருஷங்களுக்கு இடையிற்றான் ஐரோப் பிய மாதர்கள் தற்கால அந்தஸ்தைப் பெற்றனர். அதற்கு முன் மாதர்கள் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் சட்ட சம்பந்தமாகவும், ஆசார சம்பந்தமாகவும், சமூக வாழ்விலும்

தற்கால இந்திய மாதர்களைவிட ஜாஸ்திக் குறைபாடுடைய வர்களாகவே இருந்தனர். கன்னி மேயோவுக்கு அன்னிய நாட்டு மாதர்களிடம் உண்மையாகவே அன்பு இருந்திருந் தால் இந்திய மாதர்களின் சம்மத வயதை உயர்த்துவதற்கு தடை செய்துவரும் இந்திய சர்க்காரை அவர் வானமளா வப் புகழ்ந்து வாழ்த்துக் கூறு திருக்கவேண்டும்.

தற்கால இந்திய அரசியல் அமைப்புப்படி மாதர் களுக்கு வாக்குரிமை யளிக்க இந்திய சட்டசபை மெம்பர் களுக்கு அதிகார முண்டு. இந்த அதிகாரம் மிக சமீப காலத்தில் கிடைத்ததே யானாலும் பெரிய சட்டசபைக ளெல்லாம் அதை நடைமுறையில் அனுஷ்டிக்க முன்வந்து விட்டன. நமது சட்டசபைகளில் மாதர் மெம்பர்கள் ஜாஸ்தியாக இல்லையென்று கன்னி மேயோ கூறுவது உண்மைதான். ஆனால் அமெரிக்க சேனட்டு சபையில் எத் தனை மாதர் மெம்பர்கள் இருக்கிறார்கள் என்று கன்னி மேயோ தயவு செய்து கூறுவாரா?

பெண்கள் வாக்குரிமை ஒரு புதுச் சரக்கு; அது சர்வ வியாபகமாகக் கொஞ்சகாலம் பிடிக்கும். 700 அங்கத் தினர் அடங்கிய பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் 4 மாதர் மெம்பர்கள் தான் இருக்கிறார்கள். இந்தியாவிலோ மாதர் களுக்கு அநேக உயர் பதவிகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீமதி. டாக்டர். முத்துலெக்ஷ்மி ரெட்டி சென்னை சட்ட சபையில் உப தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். டாக்டர் ஆனிபெசன்டும் ஸ்ரீமதி. சரோஜினி நாயுடுவும் இந்திய காங்கிரஸ் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப் பட்டிருக் கிறார்கள். இந்திய தேசியத் தலைவர்கள் முற்போக் குடைய வர்கள் என்பதற்கு இவை போதுமான சாட்சியங்கள் அல்லவா?



## அத்தியாயம் 14.

# பால்ய விவாகமும் — அகால மரணமும்.

பால்ய விவாகத்தின் பயனுய் இந்தியர் உடல் வலி குன்றி வருவது மெய்யே. ஆனல் பால்ய விவாகம் ஆதி கால முதற்கொண்டே இந்தியாவில் நிலைபெற்று வரும் வழக்க மல்ல. ஹிந்து இந்தியாவில் வாழ்ந்த புராதன இந்தியர்கள் பால்ய விவாகம் செய்யவில்லை யென்றும், பருவ மணமே நடத்திவந்தன ரென்றும் ஸ்ரீமான்கள். மாக்டானல், கீத்து, சர். ஹேர்பர்ட்டு ரிஸ்லீ போன்ற மேனுட்டுப் பண்டிதர்கள் ஒருமுகமாக அபிப்பிராயப்படுகின்றனர். முஸ்லிம் ஆதிக்கம் இந்தியாவில் வேரூன்று முன், இந்தியாவில் பால்ய விவாக வழக்கம் சாதாரணமாக நடைபெறவில்லை யென்றே கூறலாம். எப்பொழுது, எவ்வாறு இத் தீய வழக்கம் அநுஷ்டானத்துக்கு வந்ததென்று திட்டமாகக் கூறுவதற்கில்லை. எனினும் அதனுல் பெரும் தீமை விளைகின்றதென்பது உண்மையே.

இந்தியர்களின் தற்காலப் பொருளாதார, சமூக, ஆத்மீகக் குறைபாடுகளுக்கு இந்தக் கொடிய பால்ய விவாகமும் ஒரு காரணம் என்று ஒப்புக் கொள்கிறோம். ஆனல் இக் குறைகள் இருக்கையில் அவற்றைவிட முக்கியமான குறைகளை நாம் நீக்க முயலுதல் கூடாதென்று கூறப்படுவதை நமக்கு ஒப்புக்கொள்ள முடியாது.

பண்டைக்காலத்து உயரிய நாகரிகம் படைத்துச் சிறப்புற்றிருந்த அநேக ஜாதியாருக்குள் பால்ய விவாக வழக்கம்

இருந்திருக்கிறது. உடல் வளர்ச்சியை முக்கியமாகக் கருதும் கிரேக்கர்களும்; சிறந்த போர்வீரர்களையும், அரசியல் நிருவாகிகளையும் பயந்த உரோமர்களும் பால்ய விவாகம் செய்துதான் வந்திருக்கிறார்கள். ஹிப்ருக்களும் அவ்வாறே. இங்கிலாந்திலும் ஸ்டூவர்ட்ஸ் காலம் வரை பால்ய விவாகம் சாதாரணமாக நடைபெற்றிருக்கிறது. பால்ய விவாகத்தினால் ஒரு ஜாதியார் அழிந்துபோவது உண்மையானால் கிரேக்கர், உரோமர், ஹிப்ருக்கள் முதலியோர் அநாமதேயராய் அழிந் தொழிந்திருக்க வேண்டும்.

ஆனால் பால்ய விவாகத்தால் விளையும் தீமைகளை ஒழிப்பதற்கு அவ்வக்காலத் தலைவர்கள் பரிகாரமுயற்சிகள் செய்யாதிருக்கவில்லை. இந்தியாவில் பால்ய விவாக வழக்கமுள்ள ஜாதியார் இள வயதில் கலியாணம் செய்தாலும், சதிபதிகள் தேக சம்பந்தச் சடங்கை அவர்கள் பருவமடைந்த பிறகே நடத்தி வருகின்றனர். ஆகவே, பால்ப விவாகம் என்பது உண்மையில் விவாக நிச்சயச் சடங்காகவும், தேக சம்பந்தச் சடங்கு உண்மை விவாகமாகவும் இருந்து வருகிறது.

ஹிந்துக்களெல்லாம் இளவயதில் மணம் செய்வதில்லை. தாழ்ந்த ஜாதியார் வயது முதிர்ந்த பிறகே விவாகம் செய்து கொள்ளுகின்றனர். உயர்தர ஜாதியாரும் பரிகார முறைகளைக் கையாண்டு வருகிறார்கள். சென்சஸ் கமிஷனர்களாயிருந்து, இந்தியர் பழக்க வழக்கங்களை நேரிற் பார்த்து அநுபவம் பெற்ற சர். ஹெர்பர்ட்டு ரிஸ்லீ, சர். எட்வேர்ட்டு கேய்ட்டு முதலியோரும் இதை ஒப்புக்கொண் டிருக்கின்றனர்.

சர். ரிஸ்லீயும், சர் கேய்ட்டும் 1901-வது வருஷத்திய ரிப்போர்ட்டில் கூறியிருப்பதாவது:—"பாஞ்சாலப் பட்டாளம் அணிவகுத்துச் செல்வதையும், ஜாத் வகுப்பு மாதர்கள் கிராமக் கிணறுகளில் பெரிய தோண்டிகளில் தண்ணீர்

எடுப்பதையும் பார்த்தவர்கள், பால்ய விவாகத்தினுல் ஒரு வகுப்பாரின் உடல் நிலை சீரழியாது என்று ஒப்புக்கொள்ளாதிரார்கள்."

பாஞ்சாலத்தில் ராஜ புத்திரர்கள் 16 வயதுப் பெண்களை மணந்து, மணஞ் செய்த நாள் முதல் குடும்ப வாழ்க்கை நடத்தத் தொடங்குகிருர்கள் என்றும், 'ஜாத்' வகுப்பார் 5-ம் 6-ம் வயதுகளில் விவாகம் செய்தாலும் பருவமடைந்த பிறகே தேக சம்பந்தக் கலியாணம் நடத்திக் குடும்ப வாழ்க்கையி லமர்கிருர்கள் என்றும் சர் டேன்சில் இப்பஸ்டன் பாஞ்சால சேன்ஸஸ் ரிப்போர்ட்டில் விளக்கியிருக்கிருர்.

கன்னி மேயோ இவ்வுண்மைகளை யெல்லாம் மிகத் துணிகரமாக ஒதுக்கித் தள்ளிவிட்டு, ஹிந்துப் பெண்கள் பக்குவ மடைந்தவுடன் தாய்மார் ஆய்விடுவதாகக் கதை கட்டிவிடுகிருர்.

அவர் கூறியிருப்பதாவது:—"புஷ்பவதியாகி 9-மாதத்துக்குள் ஒரு குழந்தையைப் பெற்றுவிட வேண்டுமென்று இந்தியப் பெண் விரும்புகிருள். 8-வயதுக்கு மேல் 14 வயதுக்குள் எப்படியாவது தாயாகிவிட வேண்டுமென்பதே இந்தியப் பெண்களின் ஆவலாயிருக்கிறது. 8 வயதுத் தாய் கொஞ்சம் அபூர்வமாயினும், இந்தியத் தாய்மாரில் நேர்பாதி 14 வயதுக்குட்பட்டவர்களே."

ஆனல் தம் கூற்றை மெய்ப்பிக்க, கன்னி மேயோ ஒரு ஆதாரமும் காட்டவில்லை. பம்பாய் வாசியான ஸ்ரீ. எம். ஐ. பால்பர் என்ற ஒரு லேடி டாக்டர், கன்னி மேயோ கூறுவது தப்பென்று மறுத்துக் கூறுகிருர்.

டைம்ஸ் ஆப் இந்தியா என்னும் பிரபல ஆங்கிலோ இந்தியப் பத்திரிகையில் 1927 அக்டோபர் 11-தேதி

அவர் எழுதிய ஒரு மறுப்பில் கூறியிருப்பதாவது:—"முதல் குழந்தை பெற்ற 304 ஹிந்துத் தாய்மாரைப் பற்றிய குறிப்புகள் என்னிடம் இருக்கின்றன. அவர்களின் சராசரி வயது விகிதம் 18.7 வருஷம். 100க்கு 85. 6 பேரும் 17 வயதுக்கு மேற்பட்டவர்கள். 100-க்கு 14. 4 பேர் 17 வயதுக்குக் கீழ்ப்பட்டவர்கள். அந்த 304 பேரில் 14 வயதுடைய தாய்மார் 3 பேர்தான் இருந்தார்கள்."

"இந்தப் புள்ளி விவரங்களை சென்னைப் பேற்றுசுபத்திரி 1922-24-வது ரிப்போர்ட்டுடன் ஒப்பிட்டுப் பார்த்தேன். 2312 தாய்மார் தலைக் குழந்தை பெற்றதாகக் காணப்படுகிறது. அவர்களின் சராசரி வயது விகிதம் 19. 4 வருஷம். 100-க்கு 86.2 பேர் 17-ம் அதற்கு மேலும் வயதுடையவர்கள். 100-க்கு 13.8-பேர் 17 வயதுக்குக் கீழ்ப்பட்டவர்கள். 13 தான் குறைந்த வயது. 13 வயதில் 7 தாய்மாரும், 14 வயதில் 22 தாய்மாரும் காணப்படுகிறார்கள். சென்னைப் புள்ளி விவரங்களில் ஹிந்துக்களும், இதர மதஸ்தர்களும் உட்பட்டிருக்கிறார்கள்."

"இந்தியாவின் இதர பாகங்களிலிருந்து 3964 பேற்று வரலாறுகள் எனக்குக் கிடைத்திருக்கின்றன. அவற்றுள் 15 வயதுக்குக் கீழ்ப்பட்ட தாய்மார் 10 பேரே. குறைந்த வயது 13."

கடைசியில் டாக்டர் பால்பர் முடிவு கூறுவதாவது:— "இந்தியாவில் மிக இள வயதில் பெண்கள் தாய்மார் ஆகிறார்கள் என்பது உண்மையே. இதைத் தடுக்க சட்டம் உண்டாகவேண்டும். ஆனால் கன்னி மேயோ கூறுவதெல்லாம் பொய் யென்று என் கையிலுள்ள ஆதாரங்களைக் கொண்டு நான் தைரியமாகக் கூறுவேன்."

விவாகமான பிறகே இந்தியப் பெண்கள் சம்போக சுகமனுபவிக்கத் தொடங்குகிறார்கள். அடுத்த அத்தியாயத்தில் இதைப்பற்றி விளக்கிக் கூறுவோம்.

அயல் நாட்டார் இந்தியாவுக்குப் படையெடுத்து வந்த பிறகு, படையெடுப்பவர்கள் கன்னிகைகளைச் சிறைப் படுத்தி அடிமையாக்கும் வழக்கம் ஏற்பட்டதினால் பால்ய விவாக வழக்கம் உண்டாயிற்றென்று பல பண்டிதர்கள் அபிப்பிராயப்படுவது உண்மையா யிருந்தால், அந்நியர் படையெடுப்புத் தொல்லை யொழிந்த பிறகு பருவமண வழக்கம் மீண்டும் ஏற்பட்டிருக்க வேண்டும்.

அந்நியர் ஆட்சியால் வந்த போலித் தடைகளால் அவ் வழக்கம் மீண்டும் ஏற்படவில்லை. பொது ஜனங்கள் உணர்ச்சியற்று பக்த புத்தி யுடையவர்களானதினாலும், கல்விப் பயிற்சி யில்லாமையாலும், வாழ்க்கை முறை விருத்தி யடைய ஏதுவில்லாமையாலும், சீர்திருத்தத்துக்கு சர்க்கார் தடையா யிருப்பதாலும் பால்ய விவாக மொழிந்து பண்டையப் பருவ மணம் நடைமுறையில் வரவில்லை.

சென்ற நூற்றாண்டுகளில் ஐரோப்பாவில் கல்விப் பயிற்சி சர்வ வியாபகம் பெற்றதினாலும், வாழ்க்கை முறை விருத்தி யடைந்ததினாலும் விவாக வயது உயரத் தொடங்கிற்று. சுதந்தர இந்தியாவில் அதே காரணங்களால் பால்ய விவாகம் ஒழிந்து பருவமணம் தலை யெடாதென்று எண்ண நியாயமில்லை. கல்விப் பயிற்சி மிகுந்து வாழ்க்கை முறை விருத்தி யடைந்த சமுதாயங்களுள் பால்ய விவாக மொழிந்து பருவ மணம் தலையெடாதென்று எண்ண நியாயமில்லை. கல்விப் பயிற்சி மிகுந்து வாழ்க்கைமுறை விருத்தியடைந்த சமுதாயங்களுள் பால்ய விவாகம் குறைந்து வருவதை சென்சஸ் ரிப்போர்ட்டுகளால் அறியலாம். உயர்ந்த ஜாதி ஹிந்துக்க ளிடையில் விவாக வயது உயர்ந்து கொண்டு தான் வருகிறது. சென்சஸ் கமிஷனர்கள் எல்லாம் இதை ஒப்புக்கொள்கிறார்கள். சர்வ வியாபகமான ஆரம்பக் கல்வி ஜனங்கள் முயற்சியால் உண்டாகக் கூடியதல்ல. ஆகவே பழையன கழிந்து புதியன தோன்றாம லிருப்பதற்கு பிரிட்டிஷ் சர்க்காரே ஜவாப்தாரியாவர்.

உயர்வான சம்மத வயது தேவையென்றே இந்திய சீர்திருத்தக்காரர்கள் விரும்புகிறார்கள். விவாக வயதை 10-ல் இருந்து 12-ஆக உயர்த்த சட்டம் நிறைவேறியது அவர்களது பகீரதப் பிரயத்தனத்தின் பலனாகும். சர். ஹரிசிங் கோர் கடைசியாக கொண்டு வந்த மசோதாவில் விவாகமான பெண்களுக்கு 14-ம், விவாகம் ஆகாத பெண் களுக்கு 16-ம் சம்மத வயதாயிருக்க வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் சர்க்கார் அதை எதிர்த் தார்கள். ஸ்ரீ எச். பி. சாரதாவின் மசோதாவை சர்க்கார் பலமாக எதிர்த்தும் அது செலக்டு கமிட்டிக்கு அனுப்பப் பட்டிருக்கிறது. அந்த மசோதா இப்பொழுதும் ஊசலா டிக்கொண்டுதானிருக்கிறது. பரோடா, மைசூர், சோட் டா முதலிய சுதேச ஹிந்து சமஸ்தானங்களில் வெகு காலத்துக்கு முன்னமேயே சம்மத வயது உயர்த்தப்பட்டு விட்டன. பிரிட்டிஷ் இந்தியாவில் மட்டுமே அதற்கு எதிர்ப்பு இருந்து வருகிறது.



## அத்தியாயம் 15.

# ஹிந்து விதவை.



விதவா விவாகத் தடையும் ஒரு மூட வழக்கம். ஹிந்து விதவைகளின் துன்பத்தை அளவிட முடியாது. ஆனால் ஹிந்து விதவைகளின் கற்பு நிலையைப் பற்றி கன்னி மேயோ கூறும் அபாண்டப் பழிகள் அவரது தூய்மையற்ற மனப்போக்கையே விளக்குகின்றன. இந்திய விதவைகள் பொதுவாக தியாக வாழ்க்கையே நடத்தி வருகிறார்கள். அவர்களது கற்பு நிலையைப் பற்றி எவரும் சந்தேகம் கொள்ள இடமில்லை. ஆகவே முன்னும் பின்னும் யோசியாமல் கன்னி மேயோ வம்பளப்பது அக்கிரமமாகும்.

முதலாவதாக விதவா விவாகம் எல்லாச் சாதி விதவைகளுக்கும் மறுக்கப்படவில்லை. அநேக ஜாதியார் விதவா விவாகம் நடத்தி வருகிறார்கள், இடையர்களும் இராணுவத் தொழிலைப் பரம்பரைத் தொழிலாகக் கொண்ட சில ஜாதியாரும் தம் விதவைகளை விவாகம் செய்விக்கிறார்கள். தாழ்ந்த ஜாதியாருக்குள் இவ் வழக்கு சர்வ சாதாரணமாயிருக்கிறது. "ஹிந்து சமூகத்தைச் சேர்ந்த அநேக தாழ்ந்த வகுப்பார் பருவ மணமும், விதவா விவாகமும் நடத்துகிறார்கள்" என்று ரிஸ்லீ கூறியிருக்கிறார். உயர்ந்த ஜாதியாருக்குள் மட்டுமே விதவா விவாகத் தடை காணப்பட்டு வருகிறது. அவர்கள் தொகையோ மொத்த ஜனத் தொகையில் 100-க்கு 30 கூட இல்லை.

வைதீகர் மரபுகளில் விதவா விவாக வழக்கமே கிடையாதென்று கன்னி மேயோ கூறுவது தப்பு. வைதீகர்களிலும் மன விசால முடையவர்கள் எத்தனையோ பேர்

இருக்கிறார்கள். வைதவ்ய மடைந்த தம் புத்திரிகளுக்கும், நாட்டுப் பெண்களுக்கும் விவாகம் நடத்தி வைத்த அநேக வைதீகர்களை நான் அறிவேன்.

இரண்டாவதாக ஹிந்து விதவைகளின் ஆசாரங்கள் எல்லா விடங்களிலும் ஒன்று போல இருக்கவில்லை. வட மேற்கு எல்லைப் புறத்து மாகாணங்களிலும், பாஞ்சாலத்திலும் ஹிந்து விதவைகள், தலை மொட்டையிட்டுக் கொள்ளும் வழக்கம் இல்லை.

மூன்றுவது புனர் விவாகம் செய்ய முடியாத ஒரு கஷ்டத்தைத் தவிர, கன்னி மேயோ கூறுகிறபடி, வேறு எத்தகைய கஷ்டங்களும் அவர்களுக்கு இல்லை. நியூ இன்க்லண்டு தேசத்தவரான புரோபசர் பிராட்டு கூறுவதைக் கவனியுங்கள்:—

"விதவைகளின் குடும்ப நிலைக்குத் தக்கபடி அவாகளது நிலை மாறுபடுகிறது. சீமான் வீட்டு விதவைகளுக்கு கஷ்ட மொன்று மில்லை. எளிய வீட்டு விதவைகள் பாடு கஷ்டந்தான். ஆபே போய்ஸ் இந்திய விதவைகள் நரக வாதனை அனுபவிப்பதாகக் கூறுகிறார். சகோதரி நிவேதிதை போன்றவர்கள், ஹிந்து விதவைகள் பக்தி விசுவாசத்துடன் பராமரிக்கப் படுவதாயும், ஹிந்து விதவைகள் பரோபகார வாழ்க்கையி லீடுபட்டு உத்தம ஜீவிதம் நடத்துவதாகவும் சொல்லுகிறார்கள். இவ் விரு கூட்டத்தார் அபிப்பிராயமும் அவரவர் பார்வைக்குச் சரியே. ஆனால் நாம் அவற்றை அப்படியே நம்பிவிடுதல் கூடாது. விதவைகளின் நிலைமை பொதுவாகக் கஷ்டமானதுதான்; ஆனால் ஹிந்து விதவைகள் கஷ்டப்பட வேண்டுமென்பதுதான் வைதீக ஹிந்துக்கள் கொள்கை. ஏனென்றால் விதவைகளுக்கு சுகத்தைவிடத் துன்பமே மேல். இவ் விதியை ஒப்புக்கொண்டு தம்மைத் தாமே ஒறுத்துத் துறவு பூண்டொழுகும் விதவைகள் பொன்னினும் புனிதம் மிக்கவராய்

இருக்கின்றனர். வீட்டுத் தலைவிகளான விதவைத் தாய் மார் சர்வாதிகாரிகளாக அமுல் செலுத்துகிறார்கள். பால்ய விதவைகளுக்கு அத்தகைய அதிகாரமில்லை. ஆனாலும் அவர்களுக்குக் குடும்பத்தில் வேலைகள் இல்லாதில்லை; அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவ் வேலைகளைச் செய்து தீர்க்க வேண்டியதுதான்."

பொதுவாக ஹிந்துக் குடும்பம் ஆடம்பரமற்றதாயிருந்தாலும் இன்ப மயமாகவும் புனிதமாகவும் இருக்கிறது. மகிழுங்கால் மகிழவும் துன்புறுங்கால் துன்புறவும் அன்புற்றோர்க்காக உயிர் துறக்கவும் அவர்கள் பழக்கம் பெற்றிருக்கிறார்கள். வாக்குரிமைக்காக மல்லாடும் தற்காலப் பெண்களுக்கு இவ் வாழ்க்கை கஷ்டமானதாகத் தோன்றினும் அது அன்பும் அழகும் நிறைந்த நல்வாழ்க்கை என்பதற்கு சந்தேகமில்லை."

நான்காவதாக, தாய்மாரான ஹிந்து விதவைகள் தெய்வமாகப் போற்றப் படுகிறார்கள். தாய் வணக்கம இந்தியாவிற்போல வேறெந்த நாட்டிலும் இல்லை என்று புரோபசர் பிராட்டு கூறுகிறார்.

சகோதரி நிவேதிதை கூறுவதாவது:-தந்தைக்குப்பின் தாய் குடும்பத் தலைவி ஆகிறாள். தாய் உயிரோடிருக்கும் போது குடும்பச்சொத்தை விற்க மகனுக்குப் பூரண சுதந்தரமில்லை. அவளது ஆணையை மீறி நடக்கும் மகனை ஊராரெல்லாம் ஏளனம் செய்கிறார்கள். ஹிந்து விதவைகள் பிரஞ்சு மாதர்களைப்போல் குடும்ப நிருவாகத்தில் மிகத் தேர்ச்சி பெற்றவர்களாயிருக்கிறார்கள். ஆகவே ஒரு குடும்பம கடத்துக் குள்ளானால் அக் குடும்பத்தில் ஒரு விதவையில்லாக்குறையே அதற்குக் காரணமென்று கூறப்படுகிறது.

லாகூர் சர்க்கார் கல்லூரித் தலைவர் டாக்டர் ஜி. டபிள்யூ. லீட்னர் பஞ்சாபியர் வாழ்க்கையை நேரிற் பார்த்து அனுபவம் பெற்றவர். அவர் கூறுவதாவது:—எல்லா நாடுகளி

லும் விதவைகள் நிலைமை பரிதாபத்துக் கிடமானதாகவே இருக்கிறது. ஆனல் கீழ்வரும் காரணங்களால் இந்திய விதவைகளின் கஷ்டம் ஒருவாறு பரிகரிக்கப் படுகிறது.

(1) முஸ்லீம் விதவைகளும், சீக்கிய விதவைகளும், சில காட்டுச்சாதியார் விதவைகளும், ஹிந்து சமூகத்தில் தாழ்ந்த ஜாதி விதவைகளும் பொதுவாக புனர் விவாகம் செய்து கொள்ளுகிறார்கள்; ஜாத் வகுப்பு விதவைகள், குடும்பச்சொத்துச் சிதறியாதிருப்பதற்காகத் தம் கணவன் சகோதரர்களைப் புனர் விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்று கட்டாயப் படுத்தப் படுகிறார்கள்.

(2) பருவமடைந்த புத்திரர்களுடைய விதவைகள் குடும்ப நாயகிகளாகி, சர்வாதிகாரங்களோடு குடும்ப நிருவாகம் நடத்துகிறார்கள்.

(3) ஆகவே உயர்ந்த ஜாதி ஹிந்துக்களிடையிலும் மத்திய வகுப்பு ஹிந்துக்களிடையிலும் மட்டுமே புனர் விவாகம் செய்ய முடியாத விதவைகள் காணப்படுகிறார்கள். அவர்களுள்ளும் ஏழைகளும், சுற்றமற்றவர்களும் மட்டுமே இரங்கத் தக்கவர்களா யிருக்கிறார்கள். ஏனையோர் கவலையின்றி வாழ்ந்து வருகிறார்கள்.

(4) வைதவ்யக் கொடுமைகள் பரிகரிக்கப்படும் வகை:-

(அ) விவாகம் புனிதமானதென்ற லட்சியம்; தன் சுகம்வெறுத்து நோன்புபூண்டொழுகும் விதவைகள் அடுத்த ஜென்மத்தில் தம் புருஷருடன் சுகமாக வாழ்வார்கள் என்ற நம்பிக்கை; இத்தகைய நம்பிக்கைகளால் விதவைகள் மனவுறுதி பெற்று நன்னெறிப் படுகிறார்கள்.

(ஆ) சமுதாய வாழ்க்கையில் விதவைகளிடம் காட்டப்படும் அன்பு, மதிப்பு.

(இ) தாய் வீட்டார் அவளிடம் காட்டிவரும் அன்பு.

(ஈ) கருமாதி முடிந்தவுடன் அவளது பாதுகாப்புக்குப் போதுமான முதல் கொடுத்துதவும் வழக்கம்."

இவையாவும் உண்மையாகும். நான் வைக்கீலாயிருந்த காலத்தில் இவைகளை நேரிற் கண்டிருக்கிறேன். எனினும் கன்னி மேயோ "இந்திய மாதா" வில் பின்வருமாறு கூறுகிறாள்.

"புருஷன் இறந்த பின்பு, மனைவி, புருஷன் வீட்டிலேயே வசிக்கலாம். ஆனால் புருஷன் வீட்டார் இடும் வேலைகளெல்லாம் அவள் செய்யவேண்டும். புருஷன் வீட்டாருக்குத் திருப்திகரமாக வேலைகள் செய்யாவிட்டால் அவளை வீட்டை விட்டுத் துரத்தினாலும் துரத்தி விடுவார்கள்; பின்பு, விதவை ஒன்று பிச்சை யெடுக்க வேண்டும்; அல்லது வியபிசாரம் செய்து பிழைக்க வேண்டும்; அநேகமாக அவர்கள் வியபிசாரம் செய்தே பிழைக்கிறார்கள். கண் குழிந்து, முகம் விளறி, எலும்பும் தோலுமாய் கந்தை யணிந்து பிச்சை யெடுக்கும் விதவைகளைத் தீர்த்த ஸ்தலங்களிலும் சந்தை ஸ்தலங்களிலும் ஏராளமாய்ப் பார்க்கலாம்."

இது கன்னி. மேயோ காணும் கனவா, நினைவா?

குடும்பப் பராமரிப்புக்கு ஹிந்து விதவைகளுக்கு சட்டப்படி உரிமையில்லை யென்று அவர் கூறுவதும் சட்ட சம்பந்தமான விஷயங்களில் அவருக்குள்ள முட்டாள் தனத்தையே காட்டுகிறது.கணவன் குடும்ப ஸ்திதிக்குத் தக்கபடி விதவைகளுக்கு ஜீவனாம்சம் கொடுப்பது சர்வ சாதாரணமான வழக்கம்.



# அத்தியாயம் 16.

## தேவதாசிகள்

கன்னி மேயோ எடுத்துக் காட்டும் வேறொரு கொடிய வழக்கம் பொட்டுக் கட்டுதல் ஆகும். இது மிகவும் நீசமான வழக்கமென்று நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனால் கன்னி மேயோ இங்கேயும் தன் மனம் போனபடியே பிதற்றுகிறார். இந்திய மாதா 51ம் 52ம் பக்கங்களில் கூறப்பட்டிருப்பதாவது:—

"இந்தியாவின் சில பாகங்களில், முக்கியமாக சென்னை மாகாணம், ஒரிஸா முதலிய பிரதேசங்களில் ஏதோ சில தேவதைகளைத் திருப்தி செய்யும் பொருட்டு, தங்களுக்குப் பிறக்கும் அடுத்த குழந்தை பெண் குழந்தையா யிருந்தால், அதைக் கோவிலுக்கு அர்ப்பணம் செய்து விடுவதாக, பெற்றோர் பிரார்த்தனை செய்துகொள்ளுவதுண்டு; அல்லது தாம் மிகவும் அன்பாக வளர்க்கும் ஒரு குழந்தையை கோயிலுக்குக் கொடுத்து விடுவதென நிச்சயம் செய்து கொள்வது முண்டு. இவ்விதம் கோயிலுக்கு தத்தம் செய்யப்படும் பெண்களுக்கு நாட்டியமும், சங்கீதமும் கற்பிக்கப்படுகின்றன. அநேகமாய் அப் பெண்ணுக்கு ஐந்து வயது ஆனவுடனே கோயில் குருக்கள் வியபிசாரம் செய்ய ஆரம்பித்து விடுகிறான்.

"நாளடைவில் இப் பெண் நாட்டியமும், சங்கீதமும் சரிவரக் கற்றுக்கொள்ளுகிறாள். பின்பு அவளுக்கு வயது வந்தவுடன், அவள் நாள்தோறும் கோயிலில் பூஜை நடக்கும் சமயத்தில் நாட்டியம் ஆடுவாள். இம்மாதிரிப் பெண்கள் கோயிலுக்குச் சுற்றிலுமுள்ள தெருக்களில் வசிப்பது

வழக்கம். கோயிலுக்கு தரிசனத்துக்கு வருபவர்களுடனும், மற்றும் ஆடவர்களுடனும் அப் பெண்கள் வியபிசாரம் செய்யும்படி பழக்கப் படுகின்றனர். இப் பெண்கள் கோயில் சுவாமிக்குச் சொந்தமான நகைகளை அணிந்துகொண்டு வெகு உல்லாசமாகத் தெருக்களில் செல்லுகின்றனர். இவ் விதம் ஒருத்தி தன் ஆயுட்காலத்தின் பெரும் பகுதியை வியபிசாரத்தில் கழித்தபிறகு அவளுக்கு மூப்பு வருகிறது. அழகும் போய்விடுகிறது. இனி எந்த ஆடவனும் அவளை விரும்பமாட்டான். இந் நிலைமை வந்தவுடன் அவளுக்கு அரை வயிற்றுக் கஞ்சிக்குக் கூடப் பற்ருத ஏதோ ஒரு சிறு தொகை கொடுத்து கோயில் குருக்கள் அவளை நீக்கி விடுவான். இவ்விதம் கொடுக்கப்படும் பணம் அவள் வயிற்றுக்குப் போதாவிடில், அவள் தெருவில் அலைந்து திரிந்து பிச்சை யெடுக்க வேண்டியதைத் தவிர வேறு கதியில்லை. முன்னர் இவளைக் கோயிலுக்கு தத்தம் செய்த பெற்ருேர்கள் அத்துணைக்காலம் உயிரோடிருப்பது அரிது. ஒருகால் உயிரோடிருந்தாலும் அவளை கவனிப்பதில்லை. ஆகவே அவளும் அவளைப்போல் கோயிலுக்கு தத்தம் செய்யப்பட்ட பல நூற்றுக்கணக்கான பெண்களும் சேர்ந்து "தேவதாசிகள்" அல்லது "கடவுள் வியபிசாரம் செய்யும் பெண்கள்" என்ற பெயருடன் ஒரு புதிய சமூகம் தோன்றிவிட்டது."

தேவதாசி விஷயம், கன்னி மேயோ நேர்முகமாக ஆராய்ச்சி செய்யுமாறு அவ்வளவு உயர்ந்த விஷயமா என்பது நமக்கு விளங்கவில்லை. ஆனல் இத்தகைய ஆபாச விஷயங்களைத் தவிர அவர் வேறு எந்த நல்ல விஷயத்தைத் தான் ஆராய்ச்சி செய்திருக்கிருர்!

சர். ஜேம்ஸ் பிரேசர் எழுதிய Golden Bough என்ற நூலிலிருந்து சில பகுதிகளைக் கீழே தருகிருேம். அவர் கூறும் விஷயங்கள் கன்னி மேயோவின் பிதற்றல்களை ஆதரிக்கவில்லை. அவர் கூறுவதாவது:—

"இந்தியாவில் தமிழ் நாட்டுக் கோயில்களுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட பெண்கள் தேவதாசிகள் எனப்படுகிறார்கள். தேவதாசி என்னும் சொல்லுக்கு கடவுளுக்கு அடிமை என்பது பொருள். ஆனால் பொதுவாக அவர்கள் தேவடியாள் அல்லது வியபிசாரிகள் எனக் கருதப்படுகிறார்கள். தமிழ் நாட்டு ஆலய ஸ்தலங்களி லெல்லாம் இவர்களைக் கூட்டம் கூட்டமாய்க் காணலாம். கோயிலில் காலை மாலை இரு வேளைகளில் நடனம் செய்தல், வெண் சாமரம் வீசுதல், சுவாமி பவனி வரும்போது பாடி நடித்தல், ஆராத்தி எடுத்தல் முதலியன அவர்கள் செய்ய வேண்டும் கடமைகள். கஷ்ட மின்றிப் பெறும்பொருட்டு, கர்ப்ப ஸ்திரீகள் பிறக்கும் குழந்தை பெண்ணாயிருந்தால் கோவிலுக்கு அர்ப்பணம் செய்வதாகப் பிரார்த்தனை செய்து கொள்வார்கள். திருக்கழுக்குன்றத்தில் வசிக்கும் செங்குந்தர்கள் தம் குடும்பத்துத் தலைப் பெண்ணை கோயிலுக்கு அர்ப்பணம் செய்கிறார்கள். அவ்வாறு அர்ப்பணம் செய்யப்படும் பெண்கள் கோவில் விக்கிரகத்துக்கோ, வாளுக்கோ கலியாணம் செய்யப்படுகிறார்கள். அது முதல் அவர்கள் சுவாமியின் மனைவிகளாகக் கருதப்படுகிறார்கள்.

"கைக்கோளர்களுக்குள்ளே ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் ஒவ்வொரு பெண்ணாவது கோவிலுக்கு அர்ப்பணம் செய்யப்படவேண்டும் என்ற வழக்கம் இருக்கிறது."

" திருவிதாங்கூர் கோயில்களிலும் இம்மாதிரி தேவதாசிகள் இருக்கிறார்கள். கீழே கூறப்படும் அற்பணச் சடங்கை நுட்பமாக கவனித்தால் பெண்கள் கோயிலுக்கு அர்ப்பணம் செய்யப்படுவதின் உயரிய நோக்கம் புலனாகும். ஆசுபத்திரிகளில் தாதிகளும், கிறிஸ்தவக் கன்னி மடங்களில் கன்னி சகோதரிகளும் தம் சொந்த சுகத்தை வெறுத்து எவ்வாறு ஜீவிதம் செய்து வருகிறார்களோ அவ்வாறே தேவதாசிகளும் சிற்றின்பங்களை வெறுத்துக் கடவுளுக்குத் தொண்டாற்ற வேண்டுமென்பது அந்த அர்ப்பணச் சடங்கின் நோக்கம்.

அர்ப்பணம் செய்யப்படும் பெண் 6-க்கு மேல் 8-வயதுக்கு உட்பட்டவளாயிருக்கவேண்டும். கோவில் சுவாமிதான் அவள் புருஷன். ஒரு மனைவி தன் புருஷனுக்கு வேண்டிய பணிவிடைகள் செய்து, வேறு புருஷன் முகம் பாராது எவ்வாறு பத்தினியாயிருக்கிறளோ, அவ்வாறே தேவரடியாளும் கடவுளுக்குத் தொண்டாற்றி பத்தினியாய் வாழவேண்டும். ஆடல் பாடல்களால் கடவுளை வழிபட வேண்டும். புண்ணிய தினங்களில் நோன்பிருக்க வேண்டும். அபமாரகத் திருவிழாவின்போது தேவரடியாள் 7 நாள் நோன்பிருக்கிறள். தினந்தோறும் மாலையில் தீபாராதனை காலத்தில் திருவிளக்குப் பிடிப்பதும், தேவாரம் பாடுவதும், நடனம் செய்வதும் அவளது பிரதி தினக் கடன். சுவாமி பவனி போகும்போது கீதா கோவிந்தப் பாடல்களைப் .பாடிக்கொண்டு போகிறள். கடைசியாக சுவாமிக்குத் தாலாட்டுக் கூறுவதோடு அவளது அன்றைய வேலை பூர்த்தியாகிறது. அவளுக்குத் தேவையான செலவுகளெல்லாம் ஆலய முதலிலிருந்து கொடுக்கப்படுகின்றன. வயது முதிர்ந்த பிறகு ஒரு சடங்கு மூலம் ஆலயத் தொண்டிலிருந்து விடுதலை பெறுகிறள். பின்னும் அவளுக்கு ஜீவனும்சச் செலவு கோவிலிலிருந்து கொடுக்கப்படுகிறது. அவள் இறந்தால் அந்தியக் கிரியைகளுக்குள்ள செலவெல்லாம் கோயிலிலிருந்தே கொடுக்கப்படுகிறது. மாணப் படுக்கையி லிருக்கும்போது கோயில் பூசாரி அவளுக்குத் தேவையானவைகளை யெல்லாம் கவனிக்கிறர். இறந்தவுடன் பிரேதத்துக்கு மஞ்சள் நீராட்டிக் கோடியுடுத்தி மயானத்துக்கு அனுப்புகிறர்கள்."

கன்னி மேயோ பிதற்றலுக்கும் சர் ஜேம்ஸ் பிரேசர் வரலாற்றுக்கும் எவ்வளவு வித்தியாசமிருக்கிறது பாருங்கள்!

பொட்டுக் கட்டுதல் தென்னிந்தியாவுக்குக் களங்கத்தை வுண்டுபண்ணும் ஒரு நீச வழக்கம். அதை ஒழிக்க

ஒவ்வொரு தென்னிந்தியனும் முயற்சி செய்யவேண்டும். தென்னிந்தியாவைத் தவிர இதர மாகாணங்களில் இவ் வழக்கம் இல்லவே இல்லை. இந்தியாவின் இதர பிரதேசங் களிலும் இவ்வழக்கம் இருந்து வருவதாக, கன்னி மேயோ கூறுவது குறும்பாகும். தென்னாட்டிலும் மலையாள ஜில் லாவில் இக்கொடிய வழக்கம் இல்லை. ஐந்தாவது வயதில் தேவதாசி குருக்களின் வைப்பாட்டி யாகிவிடுகிறாள் என்று கன்னி மேயோ கூறுவது வெறும கட்டுக் கதை. தென் னிந்தியாவில் சில ஆலயங்களை கோயில் குருக்கள் வியபி சார சாலையாக ஆக்கியிருப்பது வாஸ்தவமே. ஆனால் ஐரோப்பாவில் அநேக கன்னிகா மடங்களும் வியபிசார விடுதிகளாகவே இருந்து வந்திருக்கின்றன. இப்பொழு தும் சில அவ்வாறே இருக்கின்றன.

டாக்டர் சாங்கர் எழுதிய வியபிசாரிகள் சரிதம் என் னும் நூலில் கூறப்பட்டிருப்பதாவது:—வியபிசாரிகள் தம் சம்பாத்தியத்தில் ஒருபகுதியை ஆலயங்களுக்குக் கொடுத் தால் வியபிசாரம் செய்ய சம்மதியளிக்கலாம் என்று இரண் டாவது கிளமண்டு என்னும் பாப்பானவர் ஒரு கட்டளை யிட்டார்.

நான்காவது சிக்ஸ்டஸ் என்ற பாப்பானவர் அவரை விட மிகுந்த புத்திசாலி. அவராகவே ஏற்படுத்திய ஒரு வியபிசார சாலையிலிருந்து அவருக்கு மாதம் 20,000 டக்கட்ஸ் வருமானம் கிடைத்தது."

ருஷிய—அமெரிக்கப் புரட்சிக்காரியும் பெமினிஸ்டு கட்சித் தலைவியுமான ஸ்ரீமதி. எம்மா கோல்ட்மன் எழுதுவ தாவது:—"தற்காலத்தில் ஆலய அதிகாரிகள் இவ்விஷ யத்தில் மிகுந்த ஜாக்கிரதையா யிருப்பதாகத் தெரிகிறது. வியபிசாரிகளிடமிருந்து அவர்கள் பிரதிபலன் பெறுவ தில்லை. அவர்கள் சொந்தமாக வியபிசாரி விடுதிகள் ஸ்தா பித்து, மொத்த வியாபாரம் நடத்தி முழு இலாபத்தையும் பெறுகிறார்கள்.

எவ்வாருயினும் ஆகுக. தென்னிந்திய தேவதாசிகள் ஐரோப்பிய அமெரிக்க வியபிசாரிகளைப்போல் அவ்வளவு கேவலமானவர்கள் அல்ல. 31½ லட்சம் ஜனங்கள் வாழும் ஒரு பெரிய நாட்டில், தேவதாசிகள் என்ற ஒரு சிறு கூட்டத்தார் இருப்பதனுல் தேசத்தாரெல்லாம் நெறி கெட்டவர்கள் என்று தூற்றுவது எவ்வளவு அறியாமை!

இக் கொடிய வழக்கத்தை வேரறுக்க சீர்திருத்த முயற்சிகள் செய்யப்படுகின்றன. சர்க்கார் அம்முயற்சிகளுக்குத் தடை யுண்டுபண்ணுதிருந்தால் சென்னை சட்டசபையார் மிக விரைவில் அதைத் தொலைத்துவிடுவார்கள். வைதீகக் கொடுமைகளுக்குப் பயந்தே இந்திய சர்க்கார் இத் தீய வழக்கத்தை ஒழிக்காது மௌனமா யிருக்கிறுர்கள் என்று கன்னி மேயோ கூறுகிருர். ஆனுல் மைசூரில் அது ஒழிக்கப்பட்டுவிட்டது. வைதீகர் கொடுமையால் மைசூர் சமஸ்தானத்தில் ஒரு குடிகேடும் உண்டாய்விடவில்லை.

பொட்டுக்கட்டுதலை ஒழித்தல், கட்டாய ஆரம்பக் கல்வி, பால்ய விவாகத்தை ஒழித்தல் முதலிய விஷயங்களில் சுதேச சமஸ்தானங்கள் வெகு காலத்துக்கு முன்னமேயே தலையிட்டு வெற்றி பெற்றுவிட்டன. இந்திய அதிகாரிகள் தான் வேடிக்கை பார்த்துக்கொண் டிருக்கிருர்கள்.



# அத்தியாயம் 17.

## இலவசக் கல்வி

வெளி நாடுகளில் சர்க்கார் பள்ளிக்கூடங்களில் மாணவர்களிட மிருந்து பள்ளிச் சம்பளம் வாங்கப்படுவதில்லை என்று கன்னி மேயோவுக்குத் தெரிந்திருக்கலாம். ஆனால் இந்தியாவிலோ எல்லா சர்க்கார் பள்ளிக்கூடங்களிலும் பள்ளிச் சம்பளம் வாங்கப்படுகின்றது.

இந்திய மாதா 129-ம் 130-ம் பக்கங்களில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது. "தங்கள் புத்திரிகளைப் பள்ளிக்கு அனுப்ப வேண்டுமானல் சம்பளமில்லாமல் பள்ளிக்கூடங்களில் கல்வி புகட்ட சர்க்கார் ஏற்பாடு செய்யவேண்டுமென இந்தியச் சீமான்களெல்லாம் இப்பொழுதும் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள்." இதுவும் கன்னி மேயோவின் பல பிதற்றல்களில் ஒன்றாகும். இவ்வாறு தன் மனம்போன படி பிதற்றும் சந்தர்ப்பங்களில் அவர் ஆதாரம் எதுவும் எடுத்துக் காட்டுவதில்லை. லாகூரிலுள்ள பெண் கல்விச் சாலைகள் பலவற்றின் அறிக்கைப் பத்திரிகைகள் என்னிடமிருக்கின்றன. அவற்றிலிருந்து கீழ் வரும் புள்ளி விவரங்களை எடுத்துக் கூறுகிறேன்.

சர்க்கார் மாதர் கலாசாலை

| | | |
|---|---|---|
| இண்டர் மீடியட்டு வகுப்பு பள்ளிச் சம்பளம் 1 வருஷத்துக்கு | ரூ. | 60 |
| மேற்படி பிரவேச கட்டணம் | ,, | 2 |
| சர்வகலா சங்க ரெஜிஸ்திரேஷன் கட்டணம் | ,, | 5 |
| பட்டப் பரீட்சை வகுப்புகள் | ,, | 144 |
| பிரவேச கட்டணம் (பி. ஏ.) | ,, | 2 |
| சர்வகலா சங்க ஸ்பெஷல் கட்டணம் | ,, | 3 |

## திரு இருதயப் பள்ளிக்கூடம்

| | | |
|---|---|---|
| சாப்பாட்டுக் கட்டணம் மாதம் | ரூ. | 40 |
| மேற்படி பிரவேச கட்டணம் | ,, | 10 |
| மேற்படி பகல் மாணவர் பிரவேச கட்டணம் | ,, | 5 |
| பாலர் வகுப்பு சம்பளம் | ,, | 8 |
| ஆரம்ப வகுப்பு ,, | ,, | 8 |
| மத்திய வகுப்பு ,, | ,, | 8 |
| உயர்தர வகுப்பு ,, | ,, | 10 |
| ஸ்கூல் கார் ,, | ,, | 10 |
| பியானோ ,, | ,, | 10 |
| சிற்றுண்டி ,, | ,, | 5 |

இந்தப் பள்ளிக்கூடத்தில் இது எழுதும்போது 68 போர்டு மாணவர்களும் 800 சாதாரண மாணவர்களும் படித்து வருகிறார்கள்.

## மேரி ராணியார் கல்விச்சாலை

| | | |
|---|---|---|
| பிரவேச கட்டணம் | ரூ. | 10 |
| சாப்பாடு ,, | ,, | 30 |

### சாதாரண மாணவர்கள்

| | | |
|---|---|---|
| கீழ் வகுப்புகளுக்கு | ரூ. | 5 |
| மேல் வகுப்புகளுக்கு | ,, | 10 |

இந்தியச் சீமான்கள் தம் புத்திரிகளுக்கு இலவசப் பள்ளிக்கூடங்கள் வேண்டுமென்கிறார்கள் என்றும், படிப்புக்குச் செலவளிக்க அவர்களுக்கு விருப்பமில்லையென்றும் இந்திய நிலைமையைப்பற்றிச் சொற்ப ஞானமாவது உடையவர்கள் கூறத் துணியமாட்டார்கள். இது மிகவும் துணிகரமான பொய்.

இந்திய மாதா 132-வது பக்கத்தில், லாகூர் விக்டோரியா பெண்கள் பாடசாலைத் தலைவி ஸ்ரீமதி போஸ் கூறியதாகக் கீழ் வருவன சேர்க்கப் பட்டிருக்கின்றன.

"பள்ளிச் சம்பளமா? பேரளவில் சொற்பம் வாங்கப் படுகிறது. இந்தியர்களாகிய நாங்கள் எங்கள் புத்திரிகள் படிப்புக்கு பணம் செலவு செய்வ தில்லை. சர்க்கார் பொருளுதவியாலும் இங்கிலாந்தி லிருந்து பரோபகார சிந்தையுடையவர்கள் அனுப்பும் நன்கொடையாலும் இந்தப் பள்ளிக்கூடம் நடைபெறுகிறது."

இங்கிலாந்தி லிருந்து உதவி வருவது உண்மைதானு என்று அறிய அந்த வித்யாசாலைக் காரியதரிசி திவான் பகதூர் கே. பி. தபார் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அதற்கு வந்த பதில் பின் வருமாறு:—

அன்புள்ள லாலாஜி!

விக்டோரியா பெண் கல்விச்சாலை தோன்றின நாள் முதல் நாளிதுவரை இங்கிலாந்தி லிருந்து எத்தகைய பண உதவியும் வந்தது கிடையாது. சர்க்கார் செய்துவரும் உதவியும், அரசர்களும் மற்றும் கனவான்களும் அளிக்கும் நன்கொடைகளும் பெற்று பாஞ்சால சங்கத்தாரால் அக் கல்விச்சாலை நடத்தப்படுகிறது.

லாகூர், }
14—1—28. }

தங்கள் உண்மையுள்ள,
கே. பி. தபார்.

இத்துடன் கன்னி மேயோவின் பக்காப் பொய்களில் ஒன்று தலையற்று வீழ்ந்துவிட்டது.

---

## அத்தியாயம் 18.

---

# மேனாட்டார் காமவெறி.



இந்தியர் காமவெறியர் என ஒரு கதை கட்டிய கன்னி மேயோவுக்கு, அதை மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூறுவதில் மிகுந்த மகிழ்ச்சி இருப்பதாகத் தோன்றுகிறது. அமெரிக்கர்களுக்கு இத்தகைய சிற்றின்பக் கதைகளே மன வெழுச்சியை உண்டுபண்ணுகின்றன. ஆகவே ஸ்திரீ புருஷ சம்பந்த ஆராய்ச்சியில் கன்னி மேயோ தம் முழு கவனத்தையும் செலுத்தி யிருப்பதில் ஆச்சரிய மொன்றுமில்லை. சர்க்கார் தஸ்தாவேஜிகளில் ஸ்திரீ புருஷ சம்பந்தத் தகவல்கள் இல்லவே இல்லை. ஆகையால் ஆபே போய்ஸ் போன்றவர்களின் அபிப்பிராயங்களை வேத வாக்காக நம்பியும் ஊர்வம்புகளை ஆதாரமாகக் கொண்டும், போதாக் குறைக்குப் பொய்யும் புளுகும் சேர்த்தும், இந்தியர்களின் சதாசார நெறிக்கு உலை வைக்கும் ஒரு பொய்க் களஞ்சியத்தை இந்திய மாதா என்னும் பெயரால் கன்னி மேயோ கட்டி முடித்துவிட்டார். இந்திய மாதாவைப் பார்வையிட்ட ஒரு பிரிட்டிஷ் மதிப்புரையாளர் கன்னி மேயோ மிகவும் தைரிய சாலி எனக் கூறுகிறார். அது வாஸ்தவமே! கன்னி மேயோவின் தைரியம் சாமானிய மானதல்ல. சிறு பிள்ளைகளும் நம்பாத போலிக் கதைகளை ஒப்புக்கொண்டு இந்து தேச மகா ஜனங்க ளெல்லாம் காம வெறி கொண்ட கசடர்கள் என முடிவு கட்டிய அம்மையாரின் தைரியம் வியக்கத் தக்கதல்லவா? சேற்றுக் குழியைக் கண்டால் பன்றி அதில் குதித்துப் புரளாமல் போகாது; அதுபோலவே இந்தியர்களுக்கு மானக் கேட்டை யுண்டுபண்ணும் விஷயங்கள் எங்கு அகப்பட்டாலும் சரி—கன்னி மேயோ அவைகளை அப்படியே வாரி விழுங்கி விடுவார்.

ஆனல் இந்தியர் காம வெறியைப்பற்றி கன்னி மேயோ கூறியுள்ளவைகளை அலட்சியம் செய்து தள்ளமுடியாது. ஏனெனில் அவருடைய கட்டுக் கதைக்கு இதுதான் அஸ்திவாரமாக இருக்கிறது. சுயநலப்பிரியர்கள் அதை ஆதாரமாகக்கொண்டு இந்தியர்களைத் தூற்றிக் கிளர்ச்சி செய்யவும் தொடங்கி யிருக்கிறார்கள்.

இந்தியர்களின் பலவீனத்துக்கும் சமூக, பொருளாதார, ஆத்மீகக் குறைபாடுகளுக்கும் காமவெறியே காரணமென்று கன்னி மேயோ சுனுக் காண்கிறார்.

தன் வாதத்தை நிலைநாட்ட, சில கேள்விப் பேச்சுகளையும் ஆஸ்பத்திரிப் புள்ளி விவரங்களையும் ஆதாரமாகக் கொள்கின்றார். ஆஸ்பத்திரிப் புள்ளி விவரங்களைக் கொண்டு ஒரு தேசத்தாரின் ஆசாரத்தை நிர்ணயம் செய்வது நியாயமானல், மேனுட்டார் நிலைமை இந்தியர் நிலைமையைவிட மிக மோசமாகவே காணப்படும். ஊர் வம்பர்கள் காதுக் கினிமையான பல கதைகளைக் கூறுவார்கள். உடனே நாம் அதை மெய்யாக நம்பி விடுவதா? யோக்கியர்கள் அதைக் காரியமாக எடுப்பார்களா?

இந்தியா சுமார் 32 கோடி ஜனங்கள் வாழும் ஒரு பெரிய தேசம்; பாஷைகளோ பல; ஆசாரங்கள் அளவிறந்தன. கடல் தாண்டி வெகு தூரத்தி லிருந்து இங்கு வந்த கன்னி மேயோ இந் நாட்டுப் பாஷைகள் ஒன்றுவது அறியார்; ஆசாரங்களையும் அறியார்; இந்நாட்டுக்கு முதன் முதலாக வந்தவர். இவ்வண்ணம் இந்தியாவுக்கு முற்றிலும் புதியரான அவர் 12 மாதத்தில் இந்தியா முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்து முடித்தாராம்; அந்தந்த இடங்களி லுள்ள ஆசார அநுஷ்டானங்களையும் நேரில் பார்த்து அறிந்துவிட்டாராம். அம்மட்டோ! தாம் அரைகுறையாகக் கண்டும் கேட்டும் அறிந்த சொற்ப விஷயங்களை ஆதாரமாகக்கொண்டு இந்தியர்கள் காமப் பித்தர்கள்

எனத் தீர்ப்பும் கூறிவிட்டார். அவரது தைரியமே தைரியம்! துணிவே துணிவு!

மேனாட்டாரைத் தூற்ற நமக்கு ஒரு சிறிதும் விருப்பமில்லை. எனினும் கன்னி மேயோவின் தீர்ப்பு, மேனாட்டாரின் ஸ்திரீ புருஷ சம்பந்தத் திருவிளையாடல்களை வெளியிடுமாறு நம்மைத் தூண்டுகிறது. இந்தியர்களைப் பற்றி கன்னி மேயோ கூறும் அவதூறுகள் பொய்யா மெய்யா என்று சீர்தூக்கி யறிவதற்கு மேனாட்டார் பழக்க வழக்கங்களை ஆராய வேண்டியது இன்றியமையாததாகின்றது. ஆனால் கேள்விப் பேச்சுகளையும் வம்பர் புராணங்களையும் ஆதாரமாகக் கொண்டு எதுவும் கூற நாம் எண்ணவில்லை. ஐரோப்பிய சமூக வாழ்க்கையைப் பற்றி பூரண ஞானமுடைய பெயர்பெற்ற பண்டிதர்களின் அபிப்பிராயங்களைத் துணை கொண்டே நாம் இவ்வாராய்ச்சியில் இறங்குகின்றோம்.

முன்பு ஒரு அத்தியாயத்தில் நாம் கூறியுள்ளபடி, பால்ய விவாகம் சிற்றின்ப நுகர்ச்சியைத் தூண்டி துர்ப்பலத்தை யுண்டுபண்ணுகிற தென்பது உண்மையே. சிற்றின்ப நுகர்ச்சியில் இந்தியர்களுக்குச் சுவையூட்டுவதற்கு பால்ய விவாகத்தைத் தவிர இந்திய சமூக வாழ்வில், வேறு எத்தகைய தூண்டுதலு மில்லை.

மேனாட்டார் நிலைமையோ அத்தகையதன்று. அவர்களது வாழ்க்கை முறையும் ஆசாரங்களும் சிற்றின்ப வெறியை எழுப்புவனவாகவே இருக்கின்றன. மேனாட்டு தொழிற்சாலைகளிலும் பெரிய நகரங்களிலும் ஆடவரும் பெண்டிரும் கட்டுக்காவ லின்றி ஊடாடிப் பழகச் சந்தர்ப்பம் எற்படுகின்றது. வர்த்தக முறையில் அமையப்பெற்ற வியபிசார விடுதிகளும் ஏராளமாக உள்ளன. சிற்றின்ப வேட்கையை எழுப்புவதற் கேற்ற இத்தகைய சௌகரியங்கள் இந்தியாவில் அவ்வளவாக இல்லை.

பக்க எண் 177-லிலிருந்து 192 வரை நூலில் விடுபட்டுள்ளது.



குழந்தைகளை மானபங்கம் செய்வது இந்நாட்டுக் கொடுமைகளில் முக்கியமானது. நீதிபதிகள் குற்றவாளிகளுக்கு அளிக்கும் தண்டனை மிக அற்பமானது. மாதிரிக்காகச் சில உதாரணங்கள் கூறுகிறேன்:—

(1) 4-வயதுக் குழந்தையை மானபங்கம் செய்த ஒரு குற்றவாளி நன்னடக்கை ஜாமீன்பேரில் விடப்பட்டான்.

(2) 7-வயதுக் குழந்தையை மானபங்கம் செய்த குற்றவாளிக்கு 6 மாத காவல் தண்டனை.

(3) 4-வயதுக் குழந்தையை மானபங்கம் செய்தவனுக்கு 2 பவுன் அபராதம்.

(4) 7-வயதுக் குழந்தையை மானபங்கம் செய்து படுகாயப் படுத்தியவனுக்கு 12 மாத காவல் தண்டனை.

(5) 7 வயதுக் குழந்தையை மானபங்கம் செய்து காயப்படுத்திய வேறொருவனுக்கு நன்னடக்கை ஜாமீன்.

(6) மூன்று குழந்தைகளை மானபங்கம் செய்தவனுக்கு 5 பவுன் அபராதம். (இந்த வழக்கில் வெளி வந்த சாட்சியங்கள் இங்கே கூறத் தகாதனவா யிருக்கின்றன.)

(7) 12 வயதுக் குழந்தையை மானபங்கம் செய்தவனுக்கு 3-மாத காவல் தண்டனை. (இந்தக் குற்றவாளி இதற்கு முன்னும் இதே மாதிரிக் குற்றத்துக்காக 6 முறை தண்டனை யடைந்தவன்.)

“இவ் விஷயங்கள் சைபீரியா நாட்டில் நடந்தவைகளல்ல. நம்முடைய பட்டணங்களில் நடப்பவை. நம்முடைய பெண்கள் கெட்டுப் போய்விட்டார்கள். வறுமையே இதற்குக் காரணம் என்பது தப்பு. நம்முடைய பெண்

களின் ஒழுக்கம் கெட்டுவிட்டது. சீமான்கள் குடும்பத்திலும், ஏழைகள் குடும்பத்திலும் இத்தகைய கொடிய சம்பவங்கள் நடைபெறுகின்றன. பெண்ணொழுக்கம் கெட்டதே இதற்குக் காரணம்."

ஸ்ரீ. வின்ஸ்டன் சர்ச்சில் பிரிட்டிஷ் மந்திரி சபையில் ஒரு அங்கத்தினர். வியபிசாரக் குற்றங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்ய, சக்கரவர்த்தி கட்டளைப்படி நியமனம் பெற்ற பார்லிமெண்டு கமிட்டியார் சமர்ப்பித்த ரிப்போர்ட்டை அவர் வாசித்திருக்கக் கூடும். அந்த ரிப்போர்ட்டு 1925 டிசம்பர் 2-தேதி வெளியாயிற்று. மூன்று மாதர்கள் அந்த கமிட்டியில் அங்கத்தினரா யிருந்தனர். காரியதரிசியும் ஒரு மாதாகவே இருந்தார். அந்த ரிப்போர்ட்டில் போலீசார் பார்வைக்கு வந்து நீதி ஸ்தலங்களில் விசாரிக்கப்பட்ட வழக்குகள் மட்டுமே சேர்க்கப்பட்டுள்ளன. அதில் உள்ள சில புள்ளி விவரங்கள் பின் வருமாறு:—

| | வருஷ வாரி சராசரி 1909-1913 | வருஷ வாரி சராசரி 1920-1924 |
|---|---|---|
| இயற்கை விரோதப் புணர்ச்சி | 62 | 62 |
| மேற்படிக்கு முயற்சி | 96 | 215 |
| பையன்களுடன் ஆபாசச் செயல்கள் | 132 | 176 |
| பலவந்தப் புணர்ச்சி | 165 | 120 |
| பெண்களை அடித்து அவமானம் செய்தல் | 1129 | 1515 |
| 13-வயதுக்குக் கீழ்ப்பட்ட பெண்களைக் கற்பழித்தல் | 137 | 74 |
| 16 வயதுக்குக் கீழ்ப்பட்ட பெண்களைக் கற்பழித்தல் | 214 | 184 |
| முறை தவற்ற புணர்ச்சி | 56 | 89 |
| மொத்தம் | 1991 | 2435 |

இந்தப் புள்ளி விவரங்களை ஆராய்ந்து பார்ப்போம். கிரேட் பிரிட்டனில் 1909 முதல் 1913 வரை வருஷந் தோறும் 290 வியபிசாரக் குற்றங்களும், 1920 முதல் 24 வரை வருஷந்தோறும் 462 வியபிசாரக் குற்றங்களும் போலீசார் பார்வைக்கு வந்திருக்கின்றன. 13 வயதுக் குட்பட்ட பெண்கள் கற்பழிக்கப்பட்டதும் முக்கியமாக கவனிக்க வேண்டிய ஒரு விஷயமாகும்.

வாஸ்தவத்தில் நடந்த குற்றங்களில் மிகச் சொற்பமே போலீசார் பார்வைக்கு வந்திருக்கவேண்டும். போலீசார் பார்வைக்கு வராததும், ருசுப்படுத்த முடியாததுமான குற்றங்களும் ஏராளமாக இருக்கலாம். அந்த ரிப்போர்ட்டு 16-வது பாராவில் கூறப்பட்டிருப்பதாவது:—

## முறையற்ற புணர்ச்சி

(விவாகம் செய்ய முறையில்லாத பெண்களுடன் புணர்ச்சி) குடும்ப பந்துக்களுக்குள்ள பரஸ்பரப் பற்றினால் இந்தக் குற்றங்கள் பொதுவாக வெளி வருவதில்லை. தந்தையோ சகோதரனோ தண்டனை பெற்று சிறை சென்றால் குடும்ப ஆதரவுக்கு ஆளில்லாதாகுமென அஞ்சி அநேக குடும்பத்தார் இக்குற்றங்களை வெளியிடுவதில்லை. ஆகவே, மிகச் சொற்பமான முறையற்ற புணர்ச்சிக் குற்றங்களே போலீசார் முன் வந்திருக்க வேண்டும்.

தக்க ருசுவில்லாமையால் தள்ளப்படும் வழக்குகளும் எண்ணிறந்தன. அன்றியும் பிரமாணம் செய்ய முடியாத 10, 11 வயதுக் குழந்தைகள் கூறும் சாட்சியங்களை உறுதிப்படுத்த வேறு சாட்சியம் கிடையாமல் விடுதலை யடைகிற குற்றவாளிகளும் அநந்தம்.

பின்னும் அந்த ரிப்போர்ட்டுக் கூறுவதாவது:—"13-16 வயதுப் பெண்கள் கற்பழிக்கப்படும் குற்றங்களிலும்

பெரும்பான்மைக் குற்றங்கள் வெளி வருவதில்லை. குற்றம் நடந்த பிறகு அவமானத்துக்குப் பயந்து ஆணும் பெண்ணும் சேர்ந்து குற்றத்தை மறைத்து விடுவதும் உண்டு. சில சந்தர்ப்பங்களில் பெண்கள் கருப்பவதியான பிறகே குற்றங்கள் வெளியாகின்றன. இப் பெண்களில் அநேகர் அநாதைச் சாலைகளுக்கும், பேற்று விடுதிகளுக்கும் சென்று விடுகின்றனர். நாங்கள் செய்த விசாரணையில் 37 பேற்று விடுதிகளில் 1925-ல் கருப்பவதியான 78 பெண்கள் சேர்க்கப்பட்டதாகத் தெரியவந்தது. அவர்களெல்லாம் 16 வயதுக்குக் கீழ்ப்பட்டவர்களே. அவர்களில் 44 பேர் வழக்குத் தொடுக்கவே இல்லையாம்.

“இப் பெண்கள் கருவழித்துத் தப்பித்துக்கொள்வது முண்டு. 37 பேற்று விடுதிகளில் 78 பேர் கருவழித்ததாகத் தகவல் கிடைத்திருக்கின்றன. இன்னும் 101 அநாதைச் சாலைகளும், பேற்று விடுதிகளும் இருக்கின்றன. அவ்விடங்களிலும் கருவழிப்புக் குற்றங்கள் நடந்திருக்கலாம்.”

சிறுமியரைப் புணர்ந்தால் மேக நோய்கள் ஒழிந்து விடுமென மேனாட்டார்க்குள்ளே ஒரு குருட்டு நம்பிக்கை பரவி யிருக்கிறது. இந்த நம்பிக்கையே மேற்கூறிய இயற்கை விரோதப் புணர்ச்சிகளுக்கும், முறையற்ற புணர்ச்சிகளுக்கும் காரணமாகும். பிதப்புண் பிடித்த ஒரு உழவனுக்கு, ஒரு கன்னிப் பெண்ணைப் புணர்ந்தால் அந்நோய் ஒழியுமென்று யாரோ உபதேசம் செய்ததாகவும், அவன் தன் சொந்த மகளைப் புணர்ந்து சொஸ்தமடைந்ததாகவும் டாக்டர் ப்ளாக்கு கூறுகிறார்.

இந்தக் குருட்டு நம்பிக்கை இங்கிலாந்திலும் உண்டு. 1-முதல் 5-வயது வரையுள்ள பெண் குழந்தைகளுக்கும் 5-முதல் 14-வயது வரையுள்ள பெண்களுக்கும் மேக நோயும் பறங்கிப் புண்ணும் உண்டாயிருப்பதைப் பற்றிக் கூறுகையில் அந்த ரிப்போர்ட்டில் “கன்னிப் பெண்ணைப்

புணர்ந்தால் மேக நோய் மாறும் என்ற குருட்டு நம்பிக்கையே இதற்குக் காரணம்" எனப் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

அமெரிக்காவிலும் இக் கொடுமைகள் ஏராளமாக நடைபெறுகின்றன. இக் கொடுமைகளைத் தடுப்பதற்காக மின்சார சக்தி மூலம் ஸ்திரீ புருஷர்களை மலடாக்கும் ஒரு நவீன தண்டனை நிவேதா தேசத்தில் அமுலில் கொண்டு வரப்பட்டது. அதனுலும் யாதொரு நன்மையும் விளையாததினுல் அத் தண்டனை ரத்து செய்யப்பட்டது.



## அத்தியாயம் 20.



# வம்பர் மகாசபை

அமெரிக்கப் பத்திரிகாசிரியர்களின் திருவிளையாடல்களை அறிய விரும்புவோர் ஸ்ரீ. யுப்டன் சிங்க்ளேர் என்பவர் எழுதி வெளியிட்டிருக்கும் பிராஸ் சேக் (Brass Check) என்ற புஸ்தகத்தை வாசிக்கவேண்டும். ஸ்ரீ. சிங்க்ளேர் சிறு பையனாயிருந்தபோது சமுதாயச் சீர்திருத்தக் காரரான ஒரு வக்கீலின் பிரசங்கம் கேட்கச் சென்றிருந்தார். அமெரிக்க வியபிசார விடுதிகளில் பெண்களை அணி அணியாய் உட்கார வைத்திருப்பதையும், விடர்கள் அவர்களுக்குப் பிரியமுள்ளவர்களைக் காட்டி 3 அல்லது 5 டாலர் பொக்கிஷதாரிடம் செலுத்துவதையும் பொக்கிஷதார் ஒரு பித்தளை டிக்கட்டு கொடுப்பதையும், விடர்கள் டிக்கட்டை தாம் விரும்பிய மாதிடம் கொடுத்து சம்போகம் செய்து திரும்புவதையும், பிரசங்கியார் மிகச் சாதுரியமாகவும் உருக்கமாகவும் வர்ணித்துக் கடைசியில் "இதோ பாருங்கள் அந்த டிக்கட்டு" என்று தன் சேபியிலிருந்து ஒரு டிக்கட்டையுமெடுத்துக் காட்டினாராம்.

இந்த சம்பவம் நமது சிங்க்ளேர் மனதில் நன்றாகப் பதிந்துவிட்டது. உலகத்திலுள்ள கோரமான அக்கிரமங்களுக்கெல்லாம் அந்த பித்தளை டிக்கட்டு ஒரு அடையாளமென அவருக்குப் புலப்பட்டது. அமெரிக்கப் பத்திரிகைகளும் உலகத்திலுள்ள கோரமான அக்கிரமங்களுக்கெல்லாம் அடையாளமாக விருப்பதால், அமெரிக்கப் பத்திரிகைகளைப்பற்றி எழுதிய நூலுக்கு ப்ராஸ் சேக் (Brass Check) என ஸ்ரீ. சிங்க்ளேர் பெயரிட்டார்.

அமெரிக்கப் பத்திரிகைகளில் யோக்கியப் பொறுப்புடன் நடைபெறும் அநேக உத்தம பத்திரிகைகள் இருக்

கின்றன. அமெரிக்க எழுத்தாளர்களில் பெயர்பெற்றவர்களான ஸ்ரீமான்கள் எச். எல். மேன்கன், யுப்டன் சிங்க்ளேர், ஜாக் லண்டன், சிங்க்ளேர் லூயிஸ் ஆதியவர்களெல்லாம் கண்டனக் கட்டுரைகள் எழுதுபவர்களாகவே இருக்கின்றனர். நேஷன், நியூ ரிபப்ளிக், அமெரிக்கன் மேர்குரி, நியூ மாஸஸ் முதலிய கண்ணியம் வாய்ந்த பத்திரிகைகளும் கண்டனப் பத்திரிகைகளாகவே இருக்கின்றன.

சிங்க்ளேர் நூலில் ஒரு அத்தியாயத்துக்கு ஸ்காண்டல் பூரோ (வம்பர் மகா சபை) என மகுடம் சூட்டப்பட்டிருக்கிறது. உண்மையில் அமெரிக்கப் பத்திரிகைகளெல்லாம் பழி தூற்றும் வம்புப் பத்திரிகைகளே. அமெரிக்கப் பட்டணங்களில் பல, பாதகம் நிறைந்த நரகங்கள். போதாக் குறைக்குப் பத்திரிகைகளால் உண்டாகும் அனர்த்தங்களையும் சொல்லி முடியாது. எத்தகைய உத்தமன்பேரிலும் ஒரு வியபிசாரக் கதையைக் கட்டி விட்டுவிட்டால் அவன் தலை தூக்கி நடக்கமாட்டான் என்று அமெரிக்கப் பத்திரிகைகள் நன்கு அறிந்திருக்கின்றன. வியபிசாரச் சார்பான ஆபாசக் 'கதைகள் தான் அமெரிக்கர்களுக்கு பால் சோறு. வியபிசாரக் கதைகள் மிகுந்த பத்திரிகைகளே லக்ஷக் கணக்காகச் செலவாகின்றன.

மேலே கூறிய வம்பர் மகா சபையார் யுப்டன் சிங்க்ளேரையும் சும்மா விட்டு விடவில்லை. அவர் பேரிலும் பல வியபிசாரக் குற்றங்கள் சுமத்தி மிக ஆபாசமான கதைகளைப் பத்திரிகைகளில் பிரசுரம் செய்தனர். இத்தகைய ஊர் வம்புகளுக்கும் பழிச் சொல்லுக்கும் அஞ்சி அமெரிக்காவை விட்டு எங்காவது போய் விடலாமா என்றுகூட பல சந்தர்ப்பங்களில் ஸ்ரீ. சிங்க்ளேர் நினைத்ததுண்டு. அமெரிக்கப் பத்திரிகைச் சொந்தக்காரர்களின் ஊழல்களை வெளியாக்க அவர் முயற்சி செய்யும்பொழுதெல்லாம், வம்பர் மகா சபையாரும் அவர் மீது கோரமான பழிகளை பகிரங்கமாகச் சுமத்தி வந்தனர். ஏழை எளியவர்களைக் காப்பாற்று

வதற்காக ஸ்ரீ. சிங்க்ளேர் ஒரு அநாத சாலை ஸ்தாபனம் செய்தார். உடனே வம்பர் மகா சபையார் அதற்கு 'வியபிசார ஆசிரமம்' எனப் பெயர் சூட்டிவிட்டனர். டேன்லர் நகரத்தில் வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்களுக்கு ஸ்ரீ. சிங்க்ளேர் உதவி செய்யச் சென்றபொழுதும் வம்பர் மகா சபையார் சூழ்ச்சி செய்யாதிருக்கவில்லை. ருஷிய—ஜப்பான் யுத்தம் முடிந்தபிறகு ஸ்ரீ. கார்க்கி அமெரிக்காவுக்குச் சென்றபொழுதும், வம்பர் மகா சபையார் இதே மாதிரியான சூழ்ச்சி செய்து, ஸ்ரீ. கார்க்கி ருஷியப் புரட்சிக்கு அமெரிக்காவிலிருந்து பண உதவி பெற முடியாமலாக்கி விட்டனர். ஸ்ரீ. கார்க்கி கிறிஸ்தவ மாமூல் ஆசாரப்படி விவாகம் செய்தவரல்ல. எனவே இதை ஒரு சாக்காக வைத்துக்கொண்டு ஸ்ரீமதி கார்க்கி ஐரோப்பாவில் பெயர் பெற்ற ஒரு வியபிசாரியென்று வம்பர் மகா சபையார் ஒரு கதை கட்டி விட்டனர்.

கார்க்கி நல்லொழுக்க உணர்ச்சியற்ற ஆபாசன் என்று பத்திரிகைகளிலும் பிரசங்க மேடைகளிலும், தேவாலயப் பிரசங்கங்களிலும் பலமாகக் கிளர்ச்சி செய்யப்பட்டது. முன் ஒரு அத்தியாயத்தில் நீதிபதி லிண்ட்ஸேயைப் பற்றிக் கூறினேனல்லவா? அவரும் வம்பர் மகா சபையார் கோபத்துக்கு ஆளாகாதிருக்கவில்லை. சமூகச் சீர்திருத்த விஷயங்களில் நீதிபதி லிண்ட்ஸே அதிதீவிர உழைப்பாளி. ஆகவே வம்பர் மகா சபையார் அவருக்கும் ஒழுங்காக வரிசை செய்து வந்தார்கள். தங்கள் பழிகளை ருசுப்படுத்த பொய்ச் சாட்சியங்களும் கள்ள தஸ்தாவேஜிகளும் உண்டு பண்ணுவதில் வம்பர் மகா சபையார் வெகு சமர்த்தர்கள். இதற்கென சில அயோக்கியப் பெண்களையும் புருஷர்களையும் அவர்கள் கூலிக் கமர்த்தி வைத்திருந்தனர்.

இந்தியர்களை அயோக்கியராக்கும்படி கன்னி மேயோவும், வம்பர் மகா சபைச் சூழ்ச்சிகளையே கையாண்டிருக்கிறார். இந்தியர்களைப்பற்றி அமெரிக்கர்களுக்கு தூரபிப்

பிராயம் உண்டாக எத்தகைய பழிகளை யெல்லாம் இந்தியர்கள்மீது சுமத்தலாமோ அவ்வளவையும் வெகு சாமர்த்தியமாய்ச் சுமத்திவிட்டார்.

அமெரிக்கப் பத்திரிகாலயங்களில் ரிப்போர்ட்டர்கள் கொண்டு வரும் சமாசாரங்களுக்கு சமாசாரக் கதைகள் எனப் பெயர் வழங்கப்படுகின்றன. அமெரிக்கப் பத்திரிகைகளில் வெளிவரும் சமாசாரங்களில் பெரும்பகுதி உண்மைச் சமாசாரங்களல்ல; கட்டுக் கதைகளே. பேட்டி வரலாறுகளும் அநேகமாக கதைகளாகவே இருக்கின்றன. கன்னி மேயோ இந்திய மாதா எழுதுவதிலும் அந்தக் கதை யெழுத்து முறையையே பின்பற்றி யிருக்கிறுர். ஆனல் கன்னி மேயோ கூறும் கதைகளில் பல, அமெரிக்க பத்திரிகாசிரியர்களும் நம்ப முடியாதவாறு அவ்வளவு அற்பமானவைகளாக இருக்கின்றன.

"பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுப் போய்விட்டால் இந்தியாவில் ஒரு கன்னிகையையாவது ஒரு ரூபாயையாவது பார்க்கமுடியாது" என்று யாரோ ஒரு அரசர் கூறியதாக கன்னி மேயோ கூறும் கதைதான் அவரது கதைகள் யாவற்றிலும் சிறந்தது.

இதைப்பற்றி டிச்சர் என்ற பெயர் பெற்ற நிருபர் காபிடடல் பத்திரிகையில் எழுதி யிருப்பதாவது:—"மூடர்களை மகிழ்விக்கும் கட்டுக் கதைகள் சேர்ப்பதற்கு கன்னி மேயோவுக்கு மிகுந்த வாசனை யிருப்பதாகத் தெரிகிறது. இந்தக் கதையை அவரிடத்தில் கூறியவர்கள் அவரை பைத்தியக்காரி ஆக்கிவிட்டார்கள்."

"ஒரு கனவான் இதே மாதிரியான ஒரு கதையை வேறொரு சந்தர்ப்பத்தில் கூறி யிருக்கிறுர். அது பின் வருமாறு:—1920-ல் புதிய சீர்திருத்தச் சட்டம் அமுலில் வந்த காலத்தில் பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுப் போகப்போவ

தாக நாடெங்கும் ஒரு கிலிபிடித்திருந்தது. அப்பொழுது ஒரு அமெரிக்க கனவான் ஒரு சுதேச மன்னரைப் பார்க்கச் சென்றார். மன்னரும் அவரது மந்திரியும் அமெரிக்க கனவானும் நேசபாவனையில் வார்த்தையாடத் தொடங்கினர். உடனே மந்திரி பின்வருமாறு சொன்னாராம்:—பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுப் போய்விடுவார்கள் என்று எங்கள் மகாராஜா நம்பவே இல்லை. ஒருகால் போய்விட நேர்ந்தாலும் நேரலாமென்று எங்கள் மகாராஜா இப்பொழுதே யுத்த முஸ்தீபுகள் செய்யத் தொடங்கிவிட்டார். பிரிட்டிஷார் போய்விட்டால் மூன்று மாதங்களுக்குள் வங்காளத்தில் ஒரு கன்னிகையையாவது ஒரு ரூபாயையாவது பார்க்க முடியாது."

மகாராஜாவும் மந்திரி சொன்னதை ஒப்புக்கொண்ட பாவனையில் தலையை அசைத்துக்கொண்டிருந்தாராம்.

"இதே கதையை 40 வருஷங்களுக்கு முன்னும் நான் கேட்டிருக்கிறேன். பிரிட்டிஷார் போய்விட்டால் இந்தியாவின் கதி என்னாகுமென்று லார்டு டப்ரின் சர் பிரதாபசிங்கிடம் கேட்டாராம்.

"கதியா! அதோ கதிதான். என் ஜவான்களையெல்லாம் அழைத்துக் கொள்ளையிடக் கட்டளையிடுவேன். ஒரு மாத காலத்துக்குப் பின் வங்காளத்தில் ஒரு கன்னிகையாவது இருக்கமாட்டாள்; ரூபாயையும் காணமுடியாது." என்றாராம் சர் பிரதாப சிங்.

"சர் பிரதாப சிங் என் அத்தியந்த நண்பர். லார்டு கர்சன் தர்பார் காலத்தில் நான் அவரை சந்தித்தபொழுது இந்தக் கதை மெய்தானா என்று அவரைக் கேட்டேன். அவர் கூறியதாவது:—பொய்! நண்பரே! அது சுத்தப் பொய்! சாதுக்களை ராஜபுத்திரர்கள் தொந்தரவு செய்வதில்லை. நிராயுதபாணிகளான சத்துருக்களை நாங்கள் தாக்குவதும் கிடையாது."

கன்னி மேயோவின் கதைகள் ஆபாசமான பொய்க் கதைகள் என்பதற்கு இதைவிட வேறு திருஷ்டாந்தம் வேண்டுமா?

இந்திய மாதா 24-வது அத்தியாயத்தில் ஒத்துழையாமை காலத்தில் நடந்த சில சம்பவங்களைப்பற்றிக் கூறுகிறார். அவர் கூறுவன வெல்லாம் சர்க்கார் அதிகாரிகள் சொன்ன ஒருதலைச் சார்பான வரலாறுகள். ஒத்துழையாக் கட்சித் தலைவர்கள் கூறிய மறுப்பை கன்னி மேயோ கவனிக்கவும் இல்லை. மாப்பிள்ளைக் கலகம் நடந்து எவ்வளவோ காலத்துக்குப் பிறகு சௌரி சௌரா சம்பவங்கள் நடந்திருந்தும் "மாப்பிள்ளைக் கலகம் உண்டாவதற்கு சுமார் 6 மாதங்களுக்கு முன் சௌரி சௌரா கலகம் நடந்தது" என்று இந்திய மாதா 294-வது பக்கத்தில் அவர் கூறுகிறார். 295-வது பக்கத்தில் "1919-ல் உண்டான பஞ்சாப் கலவர காலத்தில் அன்னிய நாட்டுப் பெண்களை மானபங்கம் செய்வதற்கென ஒரு கூட்டத்தார் எழுந்தனர்." எனப் பின்னும் கன்னி மேயோ ஒரு பொய் சொல்லுகிறார். இந்த அபாண்டப் பழிக்கு கன்னி மேயோ கூறுவது ஒரு சுவர் ஒட்டி விளம்பரமாகும். ஒத்துழையாமைத் தலைவர்கள் அனுமதியின்றி யாரோ ஒரு விஷமி அந்த விளம்பரத்தை ஒரு சுவரில் ஒட்டி வைத்தான். தலைவர்கள் அறிந்தவுடனே கண்டித்து மிருக்கிறார்கள். மகாத்மா காந்தியும் அதை மறுத்து எழுதி யிருக்கிறார். கன்னி மேயோ இவை ஒன்றையும் லட்சியம் செய்யவே இல்லை.

இந்திய மாதா (273-274) பக்கத்தில் கன்னி மேயோ கூறுவதாவது:—1926-27-ல் ஒரு அமெரிக்கப் பத்திரிகை நிருபர் சில இந்தியர்களைச் சந்தித்தபோது "இந்திய நிலைமையைப்பற்றி நீங்கள் என் பொய்யும் புளுகும் சொல்லுகிறீர்கள்" என்று கேட்டார். உடனே இந்தியர்களில் ஒருவன் கூறியதாவது:—"அமெரிக்கர்களுக்கு இந்தியாவைப் பற்றி ஒன்றுமே தெரியாது. உங்களிடம் பண உதவி

பெற வரும் பாதிரிகள் இல்லாத பொய்களை யெல்லாம் சொல்கிறார்கள். அந்தப் பொய்களை ஈடு செய்ய நாங்களும் பொய் சொல்லுகிறோம்.'' அந்த அமெரிக்க பத்திரிகை நிருபர் பெயரையோ இந்தியர்கள் பெயரையோ கன்னி மேயோ வெளியிடவுமில்லை.

இந்திய மாதா (305-306) பக்கத்தில் காணப்படும் வேறொரு விநோதக் கதையாவது:—"ஒரு பிரிட்டிஷ் மேலதிகாரியின் கீழ் உத்தியோகம் நடத்தி வந்த ஒரு முகமதிய அஸிஸ்டண்டு இஞ்சினீயர் ஒரு ஹிந்து உத்தியோகஸ்தரின்கீழ் நியமனம் செய்யப்பட்டார். இந்த உத்தியோகஸ்தர் ஒரு இளைஞர்; அப்பொழுதுதான் உத்தியோகம் பெற்றவர். கிழவரான முகமதிய உத்தியோகஸ்தரை அவர் பலவாறு துன்புறுத்தத் தொடங்கினார். முகமதியர் பொறுக்குமட்டும் பொறுத்துப் பார்த்தார். தாங்க முடியவில்லை. பிறகு தன் மகனையும் அழைத்துக்கொண்டு ஒரு பிரிட்டிஷ் உத்தியோகஸ்தரிடம் முறையிடச் சென்றார். கலாசாலைப் பட்டதாரியான முகமதியரின் மகன் பிரிட்டிஷ் உத்தியோகஸ்தரைப் பார்த்து "என் தகப்பனார் வயது முதிர்ந்தவர். ஒரு சிறு பயலின் கீழ் அவருக்கு உத்தியோகம் நடத்த முடியாது. நீங்கள் என்ன யோசனை சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டார்.

உடனே அந்த பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் "முகமத்! நீங்கள் சுயராஜ்யம் வேண்டுமென்று அடித்துக்கொள்கிறீர்களே! சுயராஜ்யம் வந்தால் எப்படி யிருக்குமென்று இப்பொழுது தெரிகிறதா?'' என்று கேட்டாராம்.

"ஹா! ஹா! அப்படியா? எனக்கு டிப்டி கலெக்டர் வேலைக்கு ஆர்டர் கிடைத்திருக்கிறது. சீக்கிரத்தில் உத்தியோகம் ஒப்புக்கொள்வேன். உத்தியோகத்தில் புகுந்த பிறகு ஹிந்துக்களை என்ன பாடு படுத்துகிறேன் பாரும்'' என்றாராம் முகமது.''

இந்தக் கதையிலும் பெயர்கள் குறிப்பிடப்படவில்லை. இந்தத் தகவல்கள் எவ்விட மிருந்து கிடைத்தனவென்றும் கன்னி மேயோ கூறவில்லை. பிரிட்டிஷ் உத்தியோகஸ்தராவது, முஸ்லீம் டிப்டி கலெக்டராவது இந்தக் கதை சொல்லியிருக்கமாட்டார்கள். டிப்டி கலெக்டர் உத்தியோகம் பெறுமளவிற்கு உயர்தரக் கல்வி பெற்ற ஒரு முஸ்லீம் கனவான் ஒரு பெரிய பிரிட்டிஷ் உத்தியோகஸ்தரிடம் அவ்வாறு கூறி யிருப்பாரா? அவ்வாறு கூறினல் அவர் அதைத் தன் மேலதிகாரிகளுக்குத் தெரியப்படுத்தக் கூடுமென்றும் அதனுல் தன் புரோகதிக்குத் தடை யேற்படுமென்றும் அந்த முஸ்லீம் கனவான் அறியாரா ? இந்திய கீழ் உத்தியோகஸ்தர்கள் இவ்வாறு துடுக்காகப் பேசுவதை பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் தடுக்காம லிருப்பார்களா? இந்தக் கதை முழுதும் ஆதி முதல் அந்தம் வரைக் கட்டுக்கதையாகவே இருக்கிறது.

கடைசியாக கந்தபுராணத்திலும் காணமுடியாத ஒரு பெரும் புளுகு இந்திய மாதா 204-வது பக்கத்தில் காணப்படுகிறது. அது வருமாறு:—

“வைதீகரான ஒரு அரசர் ஐரோப்பியர் கூட்டங்களுக்குச் செல்லும்பொழுது கையுறை அணிவது வழக்கம். லண்டனில் நடைபெற்ற ஒரு விருந்துக்கு அவர் சென்றிருந்தார். சாப்பாடு ஆரம்பமானவுடன் அவர் கையுறையை கழற்றினுர். உடனே அவர் விரலில் அணிந்திருந்த ஒரு வைர மோதிரத்தைப் பக்கத்தி லிருந்த ஒரு சீமாட்டி பார்த்து “ஹா! எவ்வளவு அழகான மோதிரம்! நான் அதைப் பார்க்கலாமா ?” எனக் கேட்டனர்.

“ஓ! பார்க்கலாம்! தடையென்ன” என்று கூறி அரசர் மோதிரத்தை அந்தச் சிமாட்டி கையில் கொடுத்தார். சீமாட்டி மோதிரத்தைப் பார்த்து மகிழ்ந்தபிறகு அரசர் பக்கத்தில் வைத்தார். ஆனல் அரசர் கைகொண்டு தொடவில்லை.

பக்கத்தில் நின்ற தன் வேலைக்காரனிடம் அதைக் கழுவச் சொல்லிவிட்டு ஒன்றும் அறியாதவர்போல் விருந்தினர்களுடன் பேச ஆரம்பித்தார்!

இந்த அரசர் யார்? இந்த லண்டன் விருந்து எப்பொழுது நடந்தது? இதை கன்னி மேயோவிடம் சொன்னது யார்? இந்தக் கேள்விகளுக்கு கன்னி மேயோ இறுகாறும் பதிலளிக்கவில்லை.

இவ்வளவு வைதீகப் போக்குடைய ஒரு அரசர் லண்டன் விருந்துக்குத்தான் செல்வாரா?

பொய்ச் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டாமா?



## அத்தியாயம் 21.

# ஹிந்துக்கள் சுகவழி.

கன்னி மேயோவின் இந்திய மாதாவைப் படிப்பவர்கள் ஹிந்துக்களெல்லாம் சுகவாழ்வு முறை தெரியாத அசுத்தப் பன்றிக் கூட்டங்கள் என்று எண்ணக்கூடும். இவ்விஷயத்தில் கன்னி மேயோவைக் குறை கூறுவதற்கும் காரணமில்லை. முதன் முதலாக இந்தியாவுக்கு வரும் வெளி நாட்டாரெல்லாம் அவ்வாறுதான் முதலில் எண்ணுகிறார்கள். வெளிநாட்டாருக்கு இந்தியர்களின் குடும்ப வாழ்க்கையைப் பற்றியும், பலதிறப்பட்ட வகுப்பாரின் ஆசார முறைகளைப் பற்றியும் ஒன்றும் தெரியாது. ஆகவே அவர்கள் முதலில் கொண்ட அபிப்பிராயம் அப்படியே அவர்கள் மனதில் பதிந்து விடுகிறது. பிறகு என்ன சமாதானம் சொன்னாலும் அது நீங்குவதில்லை. ஆனால் சுத்தமா யிருப்பவனே நல்லொழுக்க முடையவன் என ஹிந்துக்கள் எண்ணுவது போல் உலகத்திலே (ஜப்பானியரைத் தவிர) வேறெந்த ஜாதியாரும் எண்ணுவதில்லை யென்பது மறுக்கமுடியாத விஷயம். சுத்தம் ஹிந்துக்களின் முக்கிய மதாசாரம் என்று ஆசிரியர் லவ்ஸ் டிக்ஸன் கூறியிருப்பது வாஸ்தவமாகும். ஹிந்துக்களைப்போல் மதாசாரங்களைக் கண்டிப்பாக அனுஷ்டிப்பவர்கள் வேறு ஒருவருமில்லை. சுத்தம், உடைச் சுத்தம், உடற்சுத்தம், சுத்துச்சார்புச் சுத்தம் எனப் பலதிறப்பட்டது. ஹிந்துக்கள் மிகுதியாக வாழும் பிரதேசங்களில் அவர்கள் உடற்சுத்தமுடையவர்களாகவே யிருக்கிறார்கள். உடைச் சுத்தம் சுற்றுச்சார்புச் சுத்தம் முதலியவைகளிலும் அவர்கள்நிலை அவ்வளவு மோசமானதல்ல. வறுமையும், குளிரும் மிகுந்த இதர பிரதேசங்களில் சுத்த வாழ்வு அவ்வளவாகக் காணப்படுவதில்லை. குளிர்மிகுந்த பிரதேசங்களில் சுத்த உடை அணிய சீமான்களுக்குத் தான் முடியும். வயிற்றுக்

கஞ்சிக்கு வழியற்றவர்கள் எவ்வாறு சுத்தமான உடை உடுப்பார்கள்! சுற்றுச்சார்புச் சுத்தத்தைக் கவனிக்க வேண்டியது ன்தல ஸ்தாபன அதிகாரிகள் அல்லது சர்க்கார் அதிகாரிகள் கடமை. விந்தியமலைக்குத் தென்பாலுள்ள தெட்சணப் பிரதேசங்களில் கடுமையான குளிர்காலம் இல்லை. ஆகவே அந்தப் பிரதேசங்களிலுள்ள சகல ஜனங்களும் உடற்சுத்தம் உடைச்சுத்த முடையவர்களாகவே இருக்கிறார்கள். சுற்றுப் பிரதேசங்களும் ஒரு அன்னிய ஆட்சியில் எவ்வளவுக்கு சுத்தமாக இருக்க முடியுமோ அவ்வளவுக்குச் சுத்தமாகவே இருக்கின்றன. வட இந்தியாவில் பாஞ்சாலம், அயோத்தி, பீஹார், அசாம் முதலிய இடங்களில் வருஷத்தில் 6-மாதம் கடுமையான குளிர்காலம். எனினும் அவ்விடங்களிலுள்ள எல்லாச் சாதியாரும்—கீழ்ச்சாதியாரும்கூட—உடற்சுத்த முடையவர்களாகவே இருக்கிறார்கள்.

ஹிந்துக்களின் சமய நூல்களும், வைத்திய நூல்களும் சுத்த வாழ்வை வற்புறுத்துவனவாகவே இருக்கின்றன. கோண்டால் தாகோர் சாஹிப் மகாராஜா, லண்டன் M. D. வைத்திய பரீட்சையிலும் A. D. C. L., F. R. C. P. E. முதலிய உயர்தர வைத்திய பரீட்சையிலும் வெற்றி பெற்றுப் பட்டம் பெற்றவர். அவர் ஆரியர் வைத்திய சாஸ்திரம் என ஒரு நூல் வெளியிட்டுள்ளார். அதில் அவர் கூறியிருப்பதாவது:—"ஹிந்துக்களுக்கு ஸ்நானம் ஒரு மதாசாரம். காலையில் எழுந்து, மலசுத்தி செய்த பிறகு ஸ்நானம் செய்து, சுகந்த திரவியங்களணிந்து கண்ணுக்கு மையிட்டு ஒவ்வொருவரும் கடவுளை வணங்க வேண்டும் என்று மனுஸ்மிருதி கூறுகிறது. ஸ்நானம் ஒரு முக்கியமான மதாசாரமென்று யக்ஞவல்லியரும் விதித்திருக்கிறார்.

"உலகத்திலே எல்லா ஜாதியாருக்கும் மதாசாரங்கள் உண்டு. ஆனால் அவர்கள் அனுஷ்டிப்பது தான் அபூர்வம். ஹிந்துக்களோ அப்படியல்ல. மதாசாரப்படியே இன்றும் அவர்கள் இல்லறம் நடத்துகிறார்கள். தேகாரோக்கிய

முடைய ஹிந்துக்களெல்லாம் காலையில் கட்டாயமாக ஸ்நானம் செய்வது வழக்கம்."

தாகோர் மகாராஜா பின்னும் கூறுவதாவது:—ஹிந்துக்கள் ஸ்நானம் செய்தன்றிக் காலைப் போஜனம் செய்கிறதில்லை. உயர்ந்த ஜாதியார் ஏதாவது அசுத்தப் பொருள்களைத் தொட நேர்ந்தால் இராப் போஜனத்திற்கு முன்னும் ஸ்நானம் செய்கிறார்கள். இந்த மதாசாரங்களை அனுஷ்டிப்பதனாலேயே நாங்கள் மிகவும் பரிசுத்தமான ஜாதியார், புண்ணிய பூமியில் பிறந்தவர்கள், என்று ஹிந்துக்கள் பெருமை பாராட்டுகிறார்கள். சுகவழி முறைகளையும், தினசரி ஸ்நானம், பல் விளக்கும் குச்சி இவைகளின் தேவைகளையும் மேனாட்டார் அறிவதற்கு வெகு காலத்துக்கு முன்னமேயே ஹிந்துக்கள் அறிந்துவிட்டார்கள். 20 வருஷங்களுக்கு முன் லண்டன் வீடுகளில் ஸ்நானத் தொட்டிகள் கூட இருந்ததில்லை. பல் விளக்கும் குச்சியும் ஒரு அபூர்வப் பொருளாகவே இருந்தது. இங்கிலாந்துக்கும், அமெரிக்காவுக்கும் செல்லும் ஹிந்துக்களின் பல்லைப் பார்த்து அந்நாட்டார் ஆச்சரியப்படுகிறார்கள். மேனாட்டார் இப்பொழுது விஞ்ஞான சாஸ்திரங்களில் எவ்வளவோ விருத்தி யடைந்திருந்தும் உடற்சுத்த விஷயங்களில் அவர்கள் ஹிந்துக்களிடமிருந்து பாடம் கற்க வேண்டியவர்களாகவே இருக்கிறார்கள். ஐரோப்பிய ஸ்நான முறை சாஸ்திர விரோதமானதுமட்டு மன்றி, அசுத்தமானதாகவும் இருக்கிறது. ஸ்நானத் தொட்டியும் மலபாதை, ஜலபாதைகளைப் பிடித்து வைக்கும் பாத்திரங்களும் நோய்க் கிருமிகளுக்குத் தங்குமிடங்களாக இருக்கின்றன. ஹிந்துக்களின் ஸ்நானமுறை மிகவும் பரிசுத்தமானது. பிரதி தினமும் பல் விளக்கி ஸ்நானம் செய்யாத ஹிந்துக்கள் இல்லவே இல்லை.

தினசர்யை அல்லது தினசரி ஆசாரங்களைப் பற்றி ஹிந்து வைத்திய நூல்கள் விரிவாகக் கூறுகின்றன. குச்சி, பற்பொடி, அல்லது உமிக்கரியால் பல் விளக்கி பிரதி

தினமும் ஸ்நானம் செய்ய வேண்டுமென்று அந் நூல்கள் பிரத்தியேகம் வற்புறுத்துகின்றன. உணவு விஷயமாகவும் அநேக உபதேசங்கள் வைத்திய நூல்களில் உள்ளன. மிதூண் கடுமையாகத் தடுக்கப்பட்டிருக்கிறது. தேக சுகத்துக்கும் மூளைத் தெளிவுக்கும் நல்லொழுக்கத்துக்கும் உணவே காரணமென்றும் ஆகவே யாவரும் சாத்வீக உணவே உட்கொள்ள வேண்டுமென்றும் வைத்திய நூல்கள் முறையிடுகின்றன. அந்தப்புர ஆசாரங்களைப் பற்றியும் நம் முன்னோர் விரிவான நூல் எழுதியிருக்கிறார்கள். சுஷ்ருதன் என்னும் பெயர்பெற்ற வைத்திய ஆசிரியர் சம்போக விதிகளையும் விரிவாகக் கூறியிருக்கிறார். மனுவும் இவ்விஷயத்தில் பல விதிகளை ஏற்படுத்தி யிருக்கிறார். அமிதபோகத்தால் விளையும் தீமைகளும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. இந்திரிய நிக்கிரகத்தைப்பற்றி ஹிந்துக்களுக்கு ஒருவரும் போதனை செய்வதில்லையென்று கன்னி மேயோ கூறுவது தப்பாகும். இந்திரிய நிக்கிரகத்தை வற்புறுத்தும் நூல்கள் ஹிந்து மதத்தில் உள்ளது போல் வேறு எந்த மதத்திலும் இல்லை. வாஸ்தவத்தில் துறவைப்பற்றிய போதனைகளே ஹிந்து நூல்களில் மலிந்து கிடக்கின்றன."

ஒருவர் அணிந்த பாதரட்சை, உடை, மாலை இவைகளை அன்னியர் அணியக் கூடாதென்று ஹிந்து சாஸ்திரங்கள் கூறுவதனால், தொத்து வியாதிகளைப்பற்றியும் பூர்வீக ஹிந்துக்கள் அறிந்திருந்தார்கள் என்று தாகோர் மகாராஜா அபிப்பிராயப் படுகிறார்.

உடற்சுத்த விஷயங்களில் ஹிந்துக்களின் லட்சியங்களை உயர்வானவை என்று இந்நாள்வரை மதிக்கப்பட்டு வருகிறது

சென்ற நூற்றாண்டின் இறுதியில் ஹிந்துக்களுடன் அதிகம் ஊடாடிப் பழகி ஹிந்துக்களின் ஆசார அநுஷ்டானங்களை நன்கறிந்த சர். வில்லியம் ஹண்டர் கூறுவதா

வது:—ஆசியாக் காரர்களில்—அல்லது உலக மக்களில்—ஹிந்துக்களைப்போல் உடற் சுத்தமுடையவர்கள் இல்லவே இல்லை. காலை ஸ்நானம் நீக்க முடியா மதாசாரமாக இருக்கிறது. மத விதிப்படி ஒவ்வொருவரும் கட்டாயம் காலையில் ஸ்நானம் செய்து தீரவேண்டும். நீண்டகால பழக்கத்தால் காலை ஸ்நானம் தினசரி கடமைகளில் முக்கியமாகி விட்டது".

நகர கிராம சுகாதார விஷயங்களிலும் ஹிந்துக்கள் கவனம் செலுத்தா திருக்கவில்லை. சுத்தமான ஜலம் சப்ளை செய்யவும் தெருக்களையும் ரஸ்தாக்களையும் மற்றும் பொது ஸ்தலங்களையும் சுத்தமாக வைத்துக்கொள்ளவும் புராதன காலங்களில் தனித் தனி இலாகாக்கள் இருந்ததாக ராஜீய நூற்களால் தெரிய வருகிறது. பொது ஸ்தலங்களை அசுத்தம் செய்வோருக்கு தண்டனையும் விதிக்கப்பட்டிருக்கிறது. 1905 பிப்ரவரி மாதத்தில் சென்னை கிங் இன்ஸ்டிடியூட்டு என்னும் ஸ்தாபனத்தைத் திறந்து வைக்கையில் சென்னை கவர்னர் ஆம்ப்தில் பிரபு கூறியதாவது:—"ஹிந்துக்களும் சுகவழி விதிகளை அறிந்திருந்தார்கள் என்றும், சுகாதாரச் சீர்திருத்தக்காரர்களில் மனுவும் ஒருவரென்றும் நாம் இப்பொழுது உணரத் தொடங்கி யிருக்கிறோம்".

ஹிந்துக்களின் சுகாதார ஞானத்தைப்பற்றிக் குறிப்பிட்டபொழுது ஆம்ப்தில் பிரபு கூறியதாவது:—"சுகாதார விஷயமாக நாம் இப்பொழுது செய்து வரும் ஏற்பாடுகளெல்லாம் நூதன மானவைகளல்ல; பண்டைக்காலங்களில் ஹிந்துக்களால் கையாளபட்டவைகளே. நோய்களைத் தடுக்கும் முறைகளை ஹிந்துக்கள் வெகு காலத்துக்கு முன்னமேயே அறிந்திருக்கிறார்கள். தொத்து வியாதிக் கிருமிகள் ஒவ்வொருவர் உடலிலும் அமர்ந்திருப்பதை யுணர்ந்தே ஜாதிப் பிரிவினை ஏற்படுத்தப்பட்டதென்று கர்னல் கிங் அபிப்பிராயப்படுகிறார். அம்மை குத்தும் முறையை புராதன ஹிந்துக்களும் முஸ்லீம்களும் கையாண்டு வந்த

தாகத் தெரிகிறது. மருத்துவ சாஸ்திரம் இந்தியாவில் உற்பத்தியாகி அரேபியா வழியாக ஐரோப்பாவுக்குச் சென்றதென்று கர்னல் கிங் கூறுவது உண்மையே. கோ வைசூரிப் பிரயோகத்தைப்பற்றி தன்வந்திரி என்ற வைத்திய ஆசிரியர் விரிவாகக் கூறியிருக்கிறாராம். தன்வந்திரி, சாரகர் சச்ருதர் முதலிய இந்திய வைத்தியாசிரியர்களின் நூல்களைக் கற்று, அரேபியர் வைத்தியத்தில் தேர்ச்சி பெற்றார்கள். ஐரோபியர் அரேபிய ரிடமிருந்து வைத்தியம் கற்றுக் கொண்டனர்."

தற்காலம் நோய்களும் அசுத்தமும் ஏழைகளிடையே காணப்படுவதற்கு வறுமையே முக்கிய காரணம். வீட்டுப் புறங்களை சுத்தமாக வைத்துக்கொள்ளவும் சுத்தமான உடையணியவும் அவர்களிடம் போதுமான பணமில்லை. ஆகவே தேக சக்தி குன்றி கொடிய நோய்களுக்கு இரையாகிறார்கள். இந்தியாவினால் உலகத்துக்கே ஆபத்து உண்டாகுமானால் அதற்கு பிரிட்டிஷ் சர்க்காரின் உலோபித்தனமே காரணமாகும். கல்வி யபிவிர்த்திக்கும் சுகாதார விருத்திக்கும் சர்க்கார் போதுமான பணம் செலவு செய்யத் தயங்குவதேன்? இருப்புப் பாதைகளினால் நோய்கள் விரைவில் பரவ சௌகரியம் ஏற்பட்டு விட்டது. அதைத் தடுக்க சர்க்கார் ஒரு முயற்சியும் செய்வதில்லை. நீர்ப்பாசன ஏற்பாடுகளால் விஷ சுரங்கள் பரவி வருகின்றன. பனாமா கால்வாய்ப் பிரதேசங்களில் அமுலில் இருக்கும் விஷ சுரத் தடை ஏற்பாடுகளை பிரிட்டிஷார் இந்தியாவில் கையாள இன்னும் முயற்சி செய்யவில்லை. மத்திய சர்க்கார், மாகாண சர்க்கார் வருமானங்களி லிருந்து சுகாதார விஷயங்களுக்கு சர்க்கார் செலவு செய்யும் தொகையை உற்று நோக்கினால் இந்தியர் சுகாதார விஷயங்களில் சர்க்கார் எவ்வளவு கவலையற்றவர்களா யிருக்கிறார்கள் என்பது நன்கு விளங்கும். 1916—17 வரை சுகாதாரச் செலவுகளை வைத்திய இனத்தில்தான் சர்க்கார் சேர்த்து வந்திருக்கிறார்கள். இந்தியாவில் நோயும் அறியாமையும் குடிகொண்டிருந்தால் அவை

களை ஒழிப்பதற்குப் போதுமான பணம் செலவு செய்வது தான் சர்க்கார் கடமை. ஆனால் உண்மை நிலை என்ன? 1916-17 வரை சுகாதார விஷயங்களுக்கு வைத்திய இனத்தோடு சேர்த்து வருஷந்தோறும் 1,29,86,498 ரூபாய்தான் செலவு செய்திருக்கிறார்கள். 60 லட்சம் ஜனங்கள் இன்ப்ளூவன்சா நோயால் மரணமடைந்த 1918-19-வது வருஷத்தில் சர்க்கார் செலவு செய்தது 166,43,053 ரூபாய்தான். 1924-25-ல் மத்திய சர்க்கார் முதலிலிருந்து 26,07,271 ரூபாயும் மாகாண சர்க்கார் முதலிலிருந்து 3,04,20,169 ரூபாயும் செலவு செய்யப்பட்டதாகத் தெரிகிறது. சீர்திருத்தத்திற்குப் பின் 1919-20 முதல் இந்திய மந்திரிகள் ஏற்பட்டபிறகு தான் சுகாதாரச் செலவுத் தொகை ஏற்றமடைந்தது.



## அத்தியாயம் 22.

# பசு தீனியின்றி வாடுவதேன்?



இந்திய மாதா 17 முதல் 20 வரையுள்ள அத்தியா யங்களில் பசுவைப் பற்றி பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. 17-வது அத்தியாயத்துக்கு இரட்சண்ய சேனையார் துரோ கம் என கன்னி மேயோ மகுடம் சூட்டியிருந்தாலும் அந்த அத்தியாயத்தில் இரட்சண்ய சேனையைப்பற்றி அதிகமாக ஒன்றும் கூறப்படவில்லை. ஒரு அடிக் குறிப்பில் மட்டும் சிறிது பிரஸ்தாபனை காணப்படுகிறது. ஹிந்துக்கள் தம் வயிற்றை மட்டும் நிரப்பிக்கொண்டு, பசுவைப் பட்டினி போட்டுக் கொல்லுகிறார்கள் என்று கன்னி மேயோ குறை கூறுகின்றார்.

இரட்சண்ய சேனையாரைப் பற்றிய அத்தியாயத்தில் மகாத்மா காந்தியின் சிஷ்யர் ஸ்ரீ. தேசாய் கூறிய சில விஷ யங்கள் எடுத்தாளப்பட் டிருக்கின்றன. அவை வருமாறு:— பண்டைக் காலங்களில் பசுக்களுக்கு மேய்ச்சற்றரை ஏராள மாக இருந்தன; பசுக்கள் தாராளமாகக் காடுகளில் மேய்ந்து வந்தன. முஸ்லிம்கள் காலத்திலும் இந்நிலைமையில் மாற்ற மேற்படவில்லை. பசுவை வளர்ப்பதற்கு அதன் சொந்தக் காரருக்கு எத்தகைய செலவும் ஏற்படவில்லை. ஆங்கிலே யர் வந்ததுமுதல் பசுக்களுக்கு நாசகாலம் ஆரம்பமாயிற்று. நிலவரி வருமானத்தை அதிகப்படுத்தும் பொருட்டு தரிசு நிலங்களை யெல்லாம் குடிகளுக்குப் பதிவுசெய்து கொடுத்து விட்டனர். காடுமேடுகளையும் தம் சிநேகிதர்களான பாதிரி களுக்கு சர்வ மானியமாக அளித்துவிட்டனர். கூர்ஜரத் தில் இரட்சண்ய சேனையாருக்கு விவசாயப் பண்ணைக்காக 560 ஏக்கரா மேய்ச்சற்றரையை சர்க்கார் பதிவு செய்து கொடுத்திருக்கின்றனர்.

அமெரிக்காவையும் இந்தியாவையும் ஒப்பிட்டு, கன்னி மேயோ கூறுவதாவது:-அமெரிக்காவில் ஏராளமாக மேய்ச்சற் றரைகள் இருப்பது வாஸ்தவந்தான். ஆனால் அவைகள் பாழடையாமல் அமெரிக்கர் பாதுகாத்து வருகிறார்கள். இந்தியர்கள் அவ்வாறு செய்வதில்லை. விவசாயத்திற்கு உபயோகமான ஸ்தலங்களில் 5-ல் 3 பகுதியை பசுத் தீனிப் பயிர் செய்வதற்காக அமெரிக்கர் ஒதுக்கி வைக்கின்றனர். பருத்தி பயிர் செய்யுமிடங்களில் 100-ல் 53 பகுதியில் பசுத் தீனி பயிர் செய்யப்படுகிறது. அமெரிக்கா முழுதுமுள்ள விவசாயத்திற்கு உபயோகமான பூமிகளில் 10-ல் 7 பகுதி கால் நடைகளின் தீனிக்குரிய பயிர் செய்ய விடப்பட்டிருக்கிறது. மனிதருக்குரிய பயிர் செய்யும் பொருட்டு 257,000,000 ஏக்கரா நிலம் அமெரிக்காவில் இருக்கின்றன. ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒவ்வொரு பால் பசுவும் இருக்கின்றது.

ஹிந்துக்களுக்கு பசுவினிடமுள்ள பக்தியைப் பற்றிக் கூறுகையில், "வைதீகர்கள் பசு மூத்திரத்தைக் குடிக்கிறார்கள்" என்று ஆபே போய்ஸ் கூறியதை கன்னி மேயோ சான்றாக எடுத்துக் காட்டுகிறார். ஆனால் ஆபே போய்ஸ் கூறிய அபிப்பிராயம் வெறும் பச்சைப் பொய். 18-வது நூற்றாண்டில் அத்தகைய மூடர்கள் சென்னை மாகாணத்தில் இருந்தார்கள் என்பது எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது. ஆனால் வைதீகர்கள் பசு மூத்திரம் குடிப்பதை நான் இதுகாறும் பார்த்ததே இல்லை. எனினும் ஆபே போய்ஸ் காலத்து இந்தியாவில் இருந்து வந்த பழக்க வழக்கங்களெல்லாம் இன்றும் வைதீகர்களுக்கிடையே ஒரு மாறுதலு மடையாமலிருந்து வருகின்றன என்று கன்னி மேயோ அபிப்பிராயப்படுகிறார். இது மிகவும் துணிகரமான அபிப்பிராயமென்று கூறவும் வேண்டுமோ?

பசுக்களுக்குத் தீனியான பயிர்களை ஹிந்துக்கள் வளர்த்து வருவதில்லையென்று கன்னி மேயோ பின்னும்

குறை கூறுகிறார். அவர் இந்திய உழவு நிலையை அறிந்தவரல்ல. விவசாய விஷயத்தில் அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் பெருத்த வித்தியாசமுண்டு. முதலில் அமெரிக்கா இந்தியாவைவிட இருமடங்கு பெரிய தேசம். ஜனத்தொகையில் இந்தியா அமெரிக்காவைவிட மும்மடங்கு பெரியது. இரண்டாவது அமெரிக்காவில் வருஷாவருஷம் குடிகள் சர்க்காருக்கு நிலவரி கொடுக்கும் வழக்கமில்லை. மூன்றாவதாக அமெரிக்காவில் காடு ஜாஸ்தியாகவும், குடிகள் குறைவாகவும் இருப்பதினாலும், குடிகளுக்கு வேறு தொழில் இல்லாததினாலும் கால் நடைகளை வளர்த்த சர்க்கார் குடிகளுக்குப் பல உதவிகள் செய்து வருகிறார்கள். நான்காவதாக சர்க்கார் தீர்வை செலுத்துவதற்கும், குடும்பப் பாதுகாப்புக்கும் ஏராளமான பலனளிக்கும் பயிர்களைப் பயிர் செய்யுமாறு ஜனங்கள் அவ்வளவு எளியவர்களாகவுமிருக்கவில்லை. இந்தியாவில் பயிர் செய்யப்படும் நிலங்களுக்கெல்லாம் வரி ஏற்படுத்தப்பட் டிருக்கிறது.

இவ்விஷயத்தில் இந்தியாவை அமெரிக்காவுக்கு ஒப்பிட்டு நோக்குதல் பொருத்தமாகாது. மாட்டுத் தீனியான புல்லைத் தவிர வேறெந்தப் பயிருக்கும் லாயக்கில்லாத பூமி அமெரிக்காவில் ஏராளமாக இருக்கின்றது. மாமிசத்துக்காக கால் நடைகள் வளர்க்கப்படுவதை கன்னி மேயோ அறிந்திருக்கக்கூடும். பசுக்கள் உட்பட லட்சக்கணக்கான கால் நடைகள் மாமிசத்துக்காக அங்கே கொல்லப்படுகின்றன.

எனினும் இந்தியர்களைவிட அமெரிக்கர்களும் ஐரோப்பியர்களும் பசுக்களை நன்றாகப் பராமரித்து வருகிறார்கள் என்று நான் ஒப்புக் கொள்கிறேன். இந்தியாவில் பசுக்கள் செவ்வையாய்ப் பாதுகாக்கப்படாமலிருப்பதற்குப் பல காரணங்களுள. அவற்றுள் முக்கியமானது வறுமையே. ஜனங்களுக்கு சுத்தமான பால் சப்ளை செய்யும் விஷயத்தில் உலகத்திலுள்ள நாகரிக துரைத்தனங்களெல்லாம் கவனம்

செலுத்தி வருகின்றன. குழந்தைகளின் ஆரோக்கியமான வளர்ச்சிக்கும் பொதுஜன க்ஷேமத்துக்கும் நல்ல பால் இன்றியமையாதது. ஆகவே, பசுக்களைச் சரியாகப் பரா மரிப்பதற்கும், நல்ல பாலை தாராளமாக ஜனங்கள் பெறுவ தற்கும் அனுகூலமான சட்டங்களை துரைத்தனங்கள் நிறைவேற்றி யிருக்கின்றன. இந்திய சர்க்கார் இது விஷய மாக ஒன்றுமே செய்யவில்லை. இந்தியர்கள் க்ஷேமத்தை விட ராணுவத்தின் க்ஷேமமும், ஐரோப்பிய உத்தியோகஸ் தர்களின் க்ஷேமமும்தான் சர்க்காருக்குப் பெரிதாக இருக் கிறது. இந்தியர்கள் க்ஷேமம் சர்க்காருக்கு இரண்டாம் பட்சமானதே. அமெரிக்காவில் பொதுஜன க்ஷேமமே சர்க் காரின் முக்கிய நோக்கமாக இருக்கிறது. இவ்விஷயங்களை கன்னி மேயோ அறவே மறந்துவிட்டதாகத் தெரிகிறது. துர் எண்ணத்துடன் மனப்பூர்வமாகவே அவர் இவ்விஷயங் களை மறந்துவிட்டார் என்று நான் அபிப்பிராயப்படு கிறேன்.

இந்திய மாதா 310-வது பக்கத்தில் அவர் கூறுவதா வது.—பிரிட்டிஷ் அரசாட்சி நிலைபெற்றது முதல் பசுக் களுக்கு ஆபத்துண்டானதாக மகாத்மாவின் சிஷ்யர் கூறு கிறார். வாஸ்தவந்தான்! தற்காலத் துன்பங்களுக் கெல்லாம் பிரிட்டிஷார்தான் ஜவாப்தாரிகள்!"

பின்னர் பிரிட்டிஷார் சாதித்தவைகளை கன்னி மேயோ பின் வருமாறு வர்ணிக்கிறார்:—"பிரிட்டிஷார் வருவதற்கு முன் ஹிந்துக்களுடைய உயிரே ஆபத்தி லிருந்தது. அவர்க ளுடைய பொருள்கள் பிரதி தினமும் கொள்ளை யடிக்கப் பட்டன. ஆடு மாடுகளையும் கொள்ளைக் கூட்டத்தார் ஓட் டிக்கொண்டு சென்றனர். தெருக்களில் நடப்பதற்கே அவர் களுக்குப் போதிய பந்தோபஸ்து கிடையாது. இந்த ஆபத்தான காலத்தில் பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வந்து இந்தியரைக் காப்பாற்றும் பொறுப்பைத் தாமாகவே மேற் போட்டுக்கொண்டனர். அமெரிக்கர் பிலிப்பைபின் தீவா

ருக்கு நன்மை செய்த மாதிரியே பிரிட்டிஷாரும் இந்தியர்களுக்குப் பல நன்மைகள் செய்திருக்கிறார்கள். இப்பொழுது இந்தியாவிலே உயிருக்கும், பொருளுக்கும் ஆபத்து இல்லை. சத்துரு பயமில்லை. ஜனங்கள் அச்சமின்றி வாழ்ந்து வருகிறார்கள். கால் நடைகளும் புஷ்டியாக வளர்கின்றன. மனிதருக்கு உணவு வேண்டாமா? அதற்காக பூமிகளை சர்க்கார் ஜனங்களுக்குக் குத்தகைக்கு விட்டுப் பயிர் செய்யத் தூண்டினார்கள். 50 வருஷங்களுக்கு முன்பே பிரிட்டிஷார் செய்த வேலைகள் பூர்த்தியாய்விட்டன."

இந்த விஷயங்களுக்கும் இரட்சண்ய சேனைக்கும், பசுவுக்கும் என்ன பொருத்தமென்று நமக்கு விளங்கவில்லை. அது தான் போகட்டும். அவர் சொன்னவைகள் எல்லாம் உண்மையா? அதுவுமில்லை. இந்தியர்களைக் காப்பாற்றும் பொறுப்பை பிரிட்டிஷார் தாமாகவே மேற்போட்டுக் கொண்டார்களாய்! இந்தியர்களைக் காப்பாற்ற வேண்டுமென்று அவர்களை யார் வேண்டிக் கொண்டார்கள்? அவர்களை யார் இங்கே அழைத்தார்கள்? சுய லாபத்தைக் கருதி அவர்கள் வந்தார்கள். சுய லாபத்தைக் கருதியே இருக்கிறார்கள்.

50-வருஷங்களுக்கு முன்னமேயே பிரிட்டிஷார் செய்த வேலைகள் பூர்த்தி யடைந்து விட்டனவாம்! கடைசி ஆக்கிரமிப்பு 1849-ல் நிகழ்ந்ததென்றும், அதற்கு வெகு காலத்துக்கு முன்னமேயே வங்காளத்தையும், பீகாரையும், ஐக்கிய மாகாணத்தையும் பாழாக்கிய நிலவரி ஏற்பாடு நடப்பாக்கப்பட்டதென்றும் கன்னி மேயோ ஞாபகத்தில் வைக்க வேண்டும். இப்பொழுதும் உயிருக்கும், பொருளுக்கும் ஆபத்தில்லாமலில்லை. எல்லைப்பிரதேசக் கலகங்களையும், கொலைகளையும், கொள்ளைகளையும் பற்றிய ரிப்போர்ட்டே அதற்கு அத்தாட்சி. கொள்ளை நோய்களும், பஞ்சமும் இன்றும் ஒழிந்தபாடில்லை. இருப்புப் பாதைகளினால் தொத்து வியாதிகள் நாடு முழுதும் மிக விரைவாகப் பரவி

வருகின்றன. ஜனங்களின் வறுமையும், கல்லாமையும், நோய்கள் விருத்தியடைய உதவி புரிகின்றன.

கன்னி மேயோவின் இந்த பிதற்றல்களுக்கு ஸ்ரீ. ஆர்னூல்டு லப்டன் மிக ஆணித்தரமாகப் பதிலளித்திருக்கிறார். அவர் கூறுவதாவது:—"இந்தியாவின் உணவுப் பொருள்களைப் பற்றி ஆராயும்போது கால் நடைகளின் விஷயத்தையும் நாம் மறந்துவிடக் கூடாது. சுமார் 17 கோடிக் கால் நடைகள் இந்தியாவில் இருக்கின்றன. இவைகளுக்குப் புல், வைக்கோல் முதலிய தீனிகளைத் தவிர தானியங்களும் தேவையாக இருக்கின்றன. இந்தியாவில் பயிராகும் தானியங்களில் பெரும்பகுதி கால் நடைகளுக்கு உணவாகின்றன. இந்திய ஜனங்களுக்கு எவ்வளவு தானியங்கள் தேவையோ, அவ்வளவு தானியங்கள் கால் நடைகளுக்கு உணவாகின்றன. இதனாலேயே இந்தியாவில் பஞ்சம் ஏற்படுகிறது." இந்தியப் பஞ்சங்களில் உண்மையான காரணங்களை ஸ்ரீ. லிப்டன் சரியாக விளக்கிவிட்டார். ஆனால் தானியங்கள் தட்டுத் தடையின்றி வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாவதை அவர் கவனிக்கவில்லை. வெளிநாட்டு ஏற்றுமதி மிராசுதார்களுக்கு இலாபகாமாயிருக்கலாம். ஆனால் ஏழை ஜனங்களுக்கு அதனால் கேடுதான்.

இந்த விஷயங்களை உணராமல் இந்தியாவில் பஞ்சம் ஒழிய வேண்டுமானால் கால் நடைகளில் பாதியைத் தொலைத்துவிட வேண்டுமென்று சிலர் கூறுவது சுத்த மூடத்தனமாகும். பிறதேசங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தியாவின் விஸ்தீரணத்துக்குத் தக்கபடி கால் நடைகள் இல்லை. ஜனத்தொகை வளர்ச்சிக்குத் தக்கபடி கால்நடைகள் விருத்தி யடையவில்லை.

பசுவை வணங்கும் இந்தியாவில் பசுக்கள் பட்டினி கிடப்பதற்கு, மேல் குறிப்பிட்டவைகளே காரணமாகும். அறிவற்ற கோபாலர்கள் பசுக்களைச் சரியாக வளர்ப்ப

தில்லை யென்பது மெய்யே. ஆனாலும் ஜீவகாருண்ய விஷயத்தில் கன்னி மேயோவிட மிருந்து உபதேசம் பெறுமாறு அவர்கள் அவ்வளவு கொடியவர்கள் அல்ல. அமெரிக்காவில் நடைபெறும் பிராணி ஹிம்சையை யார்தான் அறியார்கள். இறகுகளுக்காகவும், தோல்களுக்காகவும் அங்கே கொல்லப்படும் பிராணிகளுக்குக் கையும் கணக்குமுண்டா. அமெரிக்கர் பிராணிகளை வருத்துவதனால் கோபாலர்கள் பசுக்களைப் பட்டினி போடலாம் என்று நான் நியாயம் கூறவில்லை.

பசுக் கொலையும் கால் நடைகள் குன்றுவதற்கு ஒரு முக்கிய காரணமாகும். பிரிட்டிஷ் அரசாட்சியில் இந்தியா பெற்ற நன்மையில் இது முக்கியமானது. ராணுவத்துக்கும் பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களுக்கும் மாட்டு மாமிசம் தேவையாக விருக்கிறது. மாமிசத்துக்காகவும், தோலுக்காகவும் கால் நடைகள் ஏராளமாக வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி யாகின்றன. வெளி நாட்டார் மோக விலை கொடுத்து கால் நடைகளை வாங்குகின்றனர். ஏழைகளான கோபாலர்கள் பணவாசையாலும், வறுமையாலும் பசுக்களை விற்று விடுகின்றனர். ஸ்ரீ. சட்டர்ஜி கூறுவதைக் கவனியுங்கள்:—“மாமிச பட்சணம் செய்யும் ஜாதியார் வசிக்கும் நாடுகளில் மாமிசத்துக்காக பல மிருகங்கள் வளர்க்கப்படுகின்றன. அவர்கள் கறவைப் பசுக்களைக் கொல்வதில்லை. இந்தியாவில் பசுவைத் தவிர இதர மிருகங்கள் வளர்க்கப்படுவதில்லை. ஆகவே மாமிசத்துக்காக, பசுக்களை ஏராளமாகக் கொல்லப்படுகின்றன.

கால் நடைகளைக் காப்பாற்றும் பொறுப்பை மாற்றப்பட்ட இலாகாவில் சேர்த்துவிட்டது தப்பென்றும், ஆகையால் பிரிட்டிஷ் சர்க்காருக்கு அவ்விஷயத்தில் தலையிட முடியவில்லை யென்றும் கன்னி மேயோ வருந்துகின்றார்! ஆனால் உண்மையில் பிரிட்டிஷ் ஆட்சியில் கால் நடைகளின் கதி க்ஷேமமாயிற்றா? இங்கும் ஸ்ரீ. சட்டர்ஜி சொல்வ

தைப் பாருங்கள்:—"இந்தியா முழுதும் கால் நடைகள் ஆக்கங் கெட்டு வருகின்றன. வேண்டுமானால் ஜில்லா கெஜட்டுகளையும், கால் நடை ரிப்போர்ட்டுகளையும் பாருங்கள். கால் நடைகள் நாளுக்கு நாள் ஒய்ந்து வருவதைத் தாராளமாகக் காணலாம். அக்பர் காலத்தில் டெல்லியில் உள்ள பசுக்கள் 5 கியாலன் பால் அளித்து வந்தது. அத்தகைய பசுவின் விலையோ 10-ரூபாய்க்கும் குறைவுதான். அவை குதிரைகளைவிட விரைவாக நடக்கும். புலிகளையும், யானைகளையும் எதிர்த்துப் போராடும். 25 வருஷங்களுக்கு முன் வரை வங்காளப் பசுக்கள் 3 சேர் முதல் 5 சேர் வரை பால் கறந்து வந்தன. இப்பொழுது 1 சேர் பால் கறப்பதும் கஷ்டமாக இருக்கிறது. இந்தியா முழுதுள்ள பசுக்களின் கதியும் இதுதான்."

பிரிட்டிஷ் அரசாட்சியில் கால் நடைகள் செழிப்புற்றதைப் பாருங்கள்!



## அத்தியாயம் 23.

# பொன் விளையும் இந்தியா.

இந்தியாவில் இக்காலத்திற்போலவே எக்காலத்தும் வறுமையே குடிகொண் டிருந்ததென்று கன்னி மேயோ அபிப்பிராயப்படுகிறார். சரித்திர பூர்வகமான ஆதாரங் களைக் கொண்டு இத்தகைய முடிவுக்கு வந்ததாகவும் அவர் பாவனை செய்கிறார். ஆனால் அவருக்கு நம் தேச சரித் திரத்தைப்பற்றி எள்ளளவு ஞானமும் கிடையாதென்று ஏற்கனவே கூறியுள்ளோம். அரை குறையான தகவல் களை ஆதாரமாகக் கொண்டு, துணிகரமான முடிவுகள் கூறுவதில் அம்மையாருக்கு இணையானவர்கள் இல்லவே இல்லை. 1845-ல் சிக்கியர் கலகம் நடந்ததாக அவர் கூறு வதி லிருந்தே அவருக்கு இந்திய சரித்திரத்திலுள்ள பாண்டித்தியம் நன்கு விளங்குகிறது. சீக்கியர் யாரோடு கலகம் செய்தார்கள் என ஸ்ரீ. எட்வேர்டு தாம்ப்ஸன் ஒரு ஆணித்தரமான கேள்வி கேட்கிறார். அக்காலத்தில் ஆங்கி லேயர் சீக்கியர் தேசத்தைப் பிடித்துக்கொள்ளவில்லை. பின் சீக்கியர் எவரோடு கலகம் செய்தார்கள்? தம் சொந்த அரசரிடம் அவர்கள் கலகம் செய்தார்களா? இது ஒரு பெரிய விஷயமல்ல. அம்மையாரின் சரித்திர ஞானத்தை விளக்குவதற்காகவே இவ்வளவும் கூறினோம்.

இந்தியாவில் கிராமப் பஞ்சாயத்து நிருவாகம் ஒரு பொழுதும் விருத்தியடையவில்லை யென்று கன்னி மேயோ ஒரே அடியாக அபிப்பிராயப் படுகிறார். இந்தியா முழுதும் புதிய புதிய அரச பரம்பரைகள் தோன்றி, சதா போர் தொடுத்துக்கொண் டிருந்ததினால், கிராமங்களோ, நகரங் களோ ஸ்தாபனமாகவில்லை; சுய ஆட்சி நிருவாக முறை

யும் நடைபெறவில்லை; அரசியல் உணர்ச்சியும் ஏற்படவில்லை என்று கன்னி மேயோ மிகச் சமர்த்தாகக் கூறுகிறார். இந்தியாவில் ரஸ்தாக்களோ பாலங்களோ போடப்படவில்லை; எருதுகள் காலடியால் உண்டான ஒற்றையடிப் பாதைதான் இந்தியாவில் ராஜ பாதையாக இருந்தது என்று அவர் மீண்டும் கூறிக்கொண்டு போகிறார். ஆனால் இந்திய மாதாவின் அட்டவணைகளைப் பார்வையிட்டால் அவர் கூறுவதெல்லாம் தப்பென விளங்கும். அட்டவணையில் ஒரு பெரிய ராஜபாதையைப் பற்றிக் குறிப்பிடப்பட் டிருக்கிறது. அந்த பெரிய ராஜபாதையைப்பற்றி அவர் ஏதாவது அறிய முயன்றிருந்தால் அது எருதுகளாலோ, பிரிட்டிஷாராலோ செப்பனிடப்படவில்லை என அவர் உணர்ந்திருக்க வேண்டும். பிரிட்டிஷார் வருவதற்கு முன் ஆயிரக்கணக்கான மைல் தூரமுள்ள ரஸ்தாக்கள் எத்தனையோ இருந்திருக்கின்றன. பிரயாணிகளும் கன்னியாகுமரி முதல் காசி வரை சுகமாகப் பிரயாணம் செய்துகொண்டிருந்தார்கள். இந்தியாவுக்கு பஞ்சகாலத்தில் வந்த வெளிநாட்டுப் பிரயாணிகளின் வரலாறுகளை கன்னி மேயோ வேத வாக்காக நம்பி, தப்பபிப்பிராயங்கள் வெளியிட் டிருப்பதாகத் தோற்றுகிறது. அமெரிக்கரின் இருபதாவது நூற்றாண்டத்திய மதிப்புப்படி இந்தியா ஒருகால் செழிப்பற்ற தேசமாக இருந்திருக்கலாம். ஆனால் இந்தியர்களின் பழக்க வழக்கங்களுக்கும், வாசனைக்கும் ஏற்றவாறு இந்தியா பொன் விளையும் நாடாகவே இருந்து வந்தது.

தேரயஸ் சக்கரவர்த்தியின் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாயிருந்த இந்தியா, அவரது ஏகாதிபத்தியத்தில் மிகவும் செழிப்பான தேசமென்று ஸ்ரீ. வி. ஏ ஸ்மித்து கூறியுள்ளார். ஸ்ரீ. தார்ண்டன் எழுதிய பிரிட்டிஷ் இந்தியா சரிதம் கூறுவதாவது:—“நீல நதிப் பிரதேசங்களில் Pyramid என்னும் ஸ்தம்பங்கள் கட்டப் படுவதற்கு முன்னும், கிரேக்கரும் இத்தாலியரும் குடிசைகளில் வசித்து வந்த அவ்வளவு புராதன காலத்தும் இந்தியா செல்வம் மிகுந்து

சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்திருந்தது. சுறுசுறுப்புள்ள கைத்தொழிலாளர்கள் நாடெங்கும் காணப்பட்டனர். பார்க்குமிட மெல்லாம் தானியக் குவியல்கள் தோன்றின. பருத்தியை நூலாக்கி, நெசவுத் தொழிலாளர் வஸ்திரங்கள் செய்தனர்; சிற்பிகள் அழகிய கட்டிடங்கள் கட்டினர்; சித்திரக் கலைஞர் அழகிய சிலைகளும், சித்திரங்களும் உருவாக்கினர். பன்னூற்றாண்டுகளுக்கு முன் எழுப்பப்பெற்ற ஆலயங்களும், கோபுரங்களும் இன்றும் அழியா நிலையிலிருக்கின்றன. இந்தியா பண்டைக்காலத்து மிகவும் சிறப்புற்றிருந்த தென்பதற்கு ஐயமில்லை."

புத்தர் காலத்து இந்தியா அடைந்திருந்த நிலைமையைப்பற்றி ஸ்ரீ. ரைஸ் டேவிட்ஸ் கூறுவதாவது:—"திருடர் பயம் கிடையாது. பொருளுக்கும் உயிருக்கும் ஆபத்துமில்லை. ஜனங்கள் சுதந்தரரா யிருந்தனர். ஏழைகளுமில்லை; பண்ணையார்களுமில்லை. யாவரும் சம நிலையில் வாழ்ந்து வந்தனர். கூலிக்கு வேலை செய்வது இழிவென்று ஜனங்கள் எண்ணினர்."

இவையெல்லாம் புராதன சரித்திரங்கள். இவைகளைப் படிக்க ஒருகால் கன்னி மேயோவுக்கு மனமில்லாதிருந்திருக்கலாம். ஆகவே, பிரிட்டிஷ் அரசாட்சி ஆரம்பமானதற்கு முன்னும், முஸ்லிம் அரசாட்சி காலத்திலும் இந்தியா இருந்த நிலைமையை இப்பொழுது கவனிப்போம்.

37-பார்லிமெண்டு மெம்பர்கள் அங்கத்தினராயிருந்த இந்திய சீர்திருத்த சங்கத்தார் வெளியிட்ட 9-வது துண்டுப் பிரசுரத்தில் கூறப்பட்டிருப்பதாவது:—"நாம் இந்தியாவைக் கைப்பற்றுமுன் இந்தியர்கள் சோம்பேறிகளாகவும், ஒழுக்க மற்றவர்களாகவும், பொய்யர்களாகவும் இருந்தார்கள் என்று சொல்லப் படுகிறது. சோம்பேறிகளும், சுயநலக் கிறுக்கர்களுமான நமது கவர்னர்கள், பண்டைக்கால இந்திய மன்னர்களைவிட கருணை

யுடையவர்கள் என்றும், உத்தமர்கள் என்றும் கூறப்படு கிறது. மொகலாய சக்கரவர்த்திகள் சுகபோகப் பிரியர்க ளாகவும், டம்பாச்சாரிகளாகவும் இருந்ததனால் குடிகளெல் லாம் வறுமை வாய்ப்பட்டுத் தவித்தார்களாம். மொகலாய ருக்கு முன்னிருந்த அரசர்களெல்லாம் கொடுங்கோல் மன்னரும், காமப் பித்தருமாக இருந்தார்களாம். (பிரிட்டிஷ்) பத்திரிகைகள் எல்லாம் நமக்கு அநுகூலமாகவும், பொது ஜனங்கள் நம்மிடம் பட்சமுடையவர்களாகவும் இருக்கையில் முன்னோர்களைத் தூற்றி நம்மவர்களைப் புகழ்வது மிகவும் இலேசான வேலை. நம்முடைய புகழை நாமே பாடுகிறோம். அதை மறுக்க ஒருவரையும் காணவு மில்லை. நமக்கு முன் அரசாண்டவர்களைப் பற்றி யாராவது அநுகூலமாக எழு தவோ, பேசவோ செய்தால் அதற்கு ஆதாரமில்லையென்று நாம் மறுக்கிறோம். 14-வது நூற்றாண்டில் நடைபெற்ற மொகலாயர் ஆட்சியை 19-வது நூற்றாண்டத்திய பிரிட் டிஷ் ஆட்சியோடு நாம் ஒப்பிட்டுப் பார்க்கிறோம். நாம் எள்ளளவேனும் நியாய உணர்ச்சியும், உண்மையும் உடைய வர்களா யிருந்தால் முஸ்லிம்கள் இந்தியாவை ஆக்கிரமித்த தையும் நார்மன்கள் இங்கிலாந்தை ஆக்கிரமித்ததையும் ஒப் பிட்டுப் பார்க்கவேண்டும்; முஸ்லீம் அரசர்களை அக் காலத் திய மேனாட்டு அரசர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கவேண் டும்; அக்காலத்தில் இந்தியாவில் நடைபெற்ற யுத்தங்களை நாம் பிரஞ்சுகாரரோடு செய்த யுத்தங்களோடும், கிறிஸ் தவ மன்னர்கள் தொடுத்த மதப் போர்களோடும் சீர்தூக் கிப் பார்க்கவேண்டும். முஸ்லீம் அரசாட்சியால் ஹிந்துக் களுக்கு நேர்ந்த பலாபலன்களையும் நார்மன் அரசாட்சியால் ஆங்கிலோ சாக்சன்களுக் குண்டான பலாபலன்களையும் ஆராய்ந்து பார்க்கவேண்டும். நார்மன் அரசாட்சி காலத்து ஆங்கிலோ சாக்ஸன்கள் நிலைமை எவ்வாறிருந்தது? நீதி பரிபாலன உத்தியோகஸ்தர்கள் அநீதிக்கு உறைவிடமா யிருந்தார்கள். நியாயம் வழங்க நியமனம் பெற்ற மாஜி ஸ்திரேட்டுகள் கன்னெஞ்சர்களாகவும் இருந்தனர். பணத் துக்காக அவர்கள் எதுவும் செய்யப் பின்வாங்க வில்லை. நிர்

வாக உத்தியோகஸ்தர்க ளெல்லாம் சிற்றின்பப் பிரியர்களா யிருந்தனர். அவர்களுக்குப் பயந்து ஸ்காட்லாந்தில் ஒரு அரசிளங்குமரி சன்னியாசி உடைதரித்து தன் கற்பைக் காத்து வந்தாளாம்.

"முஸ்லீம் அரசாட்சியில் பல அநீதிகளும், அக்கிரமங் களும் நடந்திருப்பது உண்மையே. ஆனால் பூர்வீக கிறிஸ் தவ அரசர்கள் காலத்தும் அத்தகைய கொடுமைகள் நடந்துதான் இருக்கின்றன. கிறிஸ்தவ அரசர்கள் புண்ணிய யுத்தகாலத்தில் (Crusade) எருசலேம் நகரத்தை முதன் முதல் கைப்பற்றியபொழுது அங்கிருந்த 40,000 வீரர் களும் தயவு தாட்சண்யமின்றிக் கொல்லப்பட்டனர். தாய் மாரும், குழந்தைகளும்கூட ஈவிரக்கமின்றி ஆயிரக் கணக் காக வதை செய்யப்பட்டனர். எருசலேம் வீதிகளி லெல் லாம் இரத்த ஆறு ஓடிற்று. 12-வது நூற்றாண்டில் ஏழா வது லூயிஸ் என்னும் மன்னன் வித்ரி நகரத்தைப் பிடித்த பொழுது அந்நகரத்தை நெருப்புக் கிரையாக்கி நாசஞ் செய்தான். அதே காலத்தில் இங்கிலாந்தில் நடைபெற்ற ஸ்டிபன் யுத்தக் கொடுமையினால் நாடு முழுதும் பயிரேற்று வாரின்றித் தரிசாகக் கிடந்தது. குடியானவர்கள் உழவுச் சாமான்களையும், கால்நடைகளையும் அப்படியே விட்டுவிட்டு, உயிர்தப்பும் பொருட்டு ஓடி யொளித்தனர். 14-வது நூற் றாண்டில் நாம் பிரஞ்சுகாரரோடு யுத்தம் செய்தபோது நிகழ்ந்த பயங்கர சம்பவங்களைப்போல் ஒரு காலத்தும் நிகழ்ந்ததில்லை. முஸ்லீம் அரசர்கள் கொடுமைகள் பல செய்திருந்தாலும், நன்மைகளும் செய்ததாகக் கூறப்பட் டிருக்கிறது. ஆனால் கிறிஸ்தவ அரசர்கள் தீமையைத் தவிர நன்மை ஏதாவது செய்ததாகச் சொல்ல முடியுமா?

இந்தியாவை எந்நாளும் அடிமைப் படுத்தி வைத்துக் கொள்ளும் பொருட்டு சுதேச மன்னர்களையும், துரைத் தனங்களையும் பழித்துப் பெரிய பெரிய புஸ்தகங்கள் வெளியிடுவது நம்மவர்களுக்கு சகஜமாய்விட்டது. முஸ்

லீம் அரசர்களைப் போன்ற துஷ்டர்கள் கிறிஸ்தவ அரசர்களிலும் இருந்தார்கள் என்பதை நாம் உணர்வதில்லை. 19-வது நூற்றாண்டத்திய இங்கிலாந்து நிலைமையோடு 14-16-வது நூற்றாண்டத்திய இந்திய நிலைமையை ஒப்பிட்டு, நாம் பெரிய பெரிய காரியங்கள் சாதித்துவிட்டதாக மகிழ்ச்சி யடைகிறோம்.

பார்லிமெண்டு மெம்பர் ஸ்ரீ. டப்ளியூ. எம். டாரன்ஸ் பின் வருமாறு கூறுகிறார்:—“இந்திய அரசர்கள் கொடுங்கோல் மன்னர்கள் என்று கூறுவது அக்கிரமமாகும். நமது கொள்ளைக்கு இரையா யிருப்பவர்களை, துஷ்டர்கள், மூடர்கள் என்று சொல்லி நமது அக்கிரமங்களை மறைக்கப் பார்ப்பது சுயநலக்காரர்களின் வேலையாகும்.”

ஐரோப்பிய அரசர்கள் நடத்திய கொலைகளுக்கும், கொள்ளைகளுக்கும் நாதர்ஷா கசினி முகமது போன்றவர்கள் அக்கிரமம் உறைபோடவும் பற்றாதென்று ஸ்ரீ. தாரன்ஸ் மேலும் கூறுகிறார்.

இந்திய சீர்திருத்த சபையாரின் 9-வது துண்டுப் பிரசுரத்தில் பின்னும் கூறப்பட்டிருப்பதாவது:—“முகமதியர் இந்தியாவைக் கைப்பற்றியபொழுது, இந்தியா மிகவும் செழிப்புற் றிருந்ததென்று ஹிந்து ஆசிரியர்களும், முகமதிய ஆசிரியர்களும் ஒருமுகமாக ஒப்புக் கொள்கிறார்கள். கன்னோசி நாட்டின் வளப்பத்தையும் சோமநாத க்ஷேத்திரத்தின் செல்வப் பெருக்கையும் அவர்கள் மிக வியந்து எழுதியிருக்கிறார்கள்.”

சரித்திர ஆசிரியரும், பிரிட்டிஷ் நிருவாக உத்தியோகஸ்தர்களில் ஒருவருமான ஸ்ரீ. எல்பின்ஸ்டன் கூறுவதாவது:—சமாதான காலங்களில் குடிகள் சந்தோஷமாகவே வாழ்ந்து வந்தனர். ஜனங்கள் சுத்தமான வீடுகளில் சுகமாக வாழ்ந்து வந்ததாகவும், பெண்கள் எல்லாம் வெள்ளி

நகைகளும், பொன்னுபரணங்களும் அணிந்திருந்ததாகவும் பிரோஷ்ஷா என்னும் சரித்திர ஆசிரியர் எழுதியிருக்கிறார்

பல சரித்திரகாரரும், பிரயாணிகளும் எழுதிவைத்த தஸ்தாவேஜிகளைப் பார்வையிட்டு ஸ்ரீ. எல்பின்ஸ்டன் பின் வரும் முடிவுக்கு வந்திருக்கிறார்:—"பொதுவாக நாட்டின் நிலைமை சுபிட்சமாகவே இருந்தது. 1420ல் இந்தியாவில் பிரயாணம் செய்த நிகாலோ-டி-காண்டி, கூர்ஜரம் மிகவும் செழிப்புற்றிருந்ததாகக் கூறுவதோடு, கங்கை நதிக்கரை களில் அழகிய பூஞ்சோலைகளும் சிங்கார வனங்களுமுடைய அநேக நகரங்கள் நிலைபெற்றிருந்ததாகவும், மாராசியா நக ரத்தை யடையுமுன் நான்கு பெரிய நகரங்களைப் பார்த்த தா வும், மாராசியா நகரத்தில் பொன்னும் வெள்ளியும் நவ ரத்தினங்களும் ஏராளமா யிருந்ததாகவும் பிரஸ்தாபித் திருக்கிறார். 16-வது நூற்றாண்டின ஆரம்பத்தில் இந்தியா வுக்கு வந்த பார்போரா, பார்த்தீமா என்னும் பிரயாணி களும் மேலே கூறியவற்றை வற்புறுத்தி எழுதியிருக்கின்ற னர்."

சீஸர் பிரடரிக் என்ற பிரயாணியும் கூர்ஜரத்தைப் பற்றி இவ்வாறே எழுதியிருக்கிறார். 15-வது நூற்றாண் டில் முகமது தோக்லாக் அரசாட்சி காலத்தில் வடஇந்தியா முழுதும் அராஜகம் நிலைபெற்றிருந்தது. அக்காலத்தில் பிரயாணம் செய்த இபன்பதூதா என்பவர் பெரிய நகரங் களின் அக்கால நிலைமையைப் பார்த்துவிட்டு, நாட்டில் கலகமும், குழப்பமும் ஏற்படுவதற்குமுன் அவை நல்ல ஸ்திதியி லிருந்திருக்க வேண்டுமென்று அபிப்பிராயப் படு கிறார்.

இந்திய சீர்திருத்த சங்கத்தார் துண்டுப் பத்திரிகை யில் மொகலாய அரசாட்சியைப் பற்றிக் கூறப்பட்டிருப்ப தாவது:—தாமர்லேன் பேரன் தூதுவனான அப்தரிஜாக்கு 1442ல் தென்னிந்தியாவில் பிரயாணம் செய்தார். அக்

காலத்தில் கந்தேசிதேசம் சுதேச மன்னர்கள் ஆட்சியில் செழிப்புற் றிருந்ததாகவும் தேசமுழுதும் பல அணைக்கட்டு களும் கால்வாய்களும் இருந்ததாகவும் அவர் கூறியிருக் கிறார்."

ஹிந்து ஸ்தானம் செல்வம் பொழியும் நாடென்றும் தொழிலாளர்கள் மிகத் திறமை வாய்ந்தவர்களென்றும் நகரங்களில் ஏராளமான ஜனங்கள் வாழ்ந்து வருவதாகவும் பாபர் சக்கரவர்த்தியும் எழுதி வைத்திருக்கிறார்.

ஸ்ரீ. எல்பின்ஸ்டன் கூறும் கீழ்வரும் விஷயங்களைக் கவனித்தால், பிரிட்டிஷார் வருவதற்கு முன் இந்தியாவில் ரஸ்தாவே கிடையாதென்று கன்னி மேயோ கூறுவது எவ் வளவோ தவறான அபிப்பிராய மென்பது விளங்கும்.

"4 மாதம் தொடர்ச்சியாய் பிரயாணம் செய்யக்கூடிய ஒரு பெரிய ரஸ்தாவை வங்காளத்தில் இருந்து மேற்கு ரோஹ்தாஸ் வரை ஷர்ஷா செப்பனிட்டார். இடையிடை யே பிரயாணிகள் தங்க சத்திரங்கள் கட்டி, $1\frac{1}{2}$ மைலுக்கு ஒவ்வொரு கிணறும் வெட்டுவித்தார். பிரயாணிகளுக்கு நிழல கொடுக்கும்பொருட்டு ரஸ்தா இருபுறங்களிலும் மரங் கள் வைத்து சாலைகளும் ஏற்படுத்தினர். அந்த ரஸ்தாவும் சாலையும் தோன்றி 82 வருஷங்களுக்குப் பின் ஸ்ரீ. எல் பின்ஸ்டன் பார்த்தபொழுதும் அது அழிவடையாமலே இருந்தது."

இந்திய சீர்திருத்த சங்கத்தார் துண்டுப் பிரசுரத்தில் பீட்ரோ டேல்லாலே என்ற இத்தாலியப் பிரயாணி 1623ல் எழுதிய சில விஷயங்கள் மேற்கோளாக எடுத்தாளப்பட் டிருக்கின்றன. அவை வருமாறு:—குடிகளெல்லாம் திருப்தி யாகவும் சந்தோஷமாகவும் வாழ்கிறார்கள். அரசன் குடிகளை வருத்துவதில்லை; குடிகள் பொருளைப் பறிப்பதுமில்லை. எல் லா ஜனங்களும் சீமான்களைப்போல் வாழ்க்கை நடத்துகிறார் கள்."

ஔரங்கசீபைப் பற்றி இந்திய சீர்திருத்த சங்கத்தார் வெளியீட்டில் கூறப்பட்டிருப்பதாவது:—“ஔரங்கசீப்பின் கொடுங்கோ லாட்சியும் பிற்காலத்தவர்களின் துஷ்டத் தனங்களும் நாதர்ஷாவின் ஆக்கிரமிப்பும் ஒருபுறம் இருந் தாலும் குடிகள் எல்லாம் நிம்மதியாகவும் சுகமாகவும் வாழ்ந்து வந்தார்கள். ஹைதர் ஆலி காலத்தில் மைசூரில் கிருஷி கைத்தொழில் முதலியன விருத்தியடைந்து ஜனங் கள் க்ஷேமமா யிருந்ததாக கர்னல் புல்லர்டன் எழுதியிருக் கிறார். திப்பு சுல்தான் காலத்திலும் மைசூர் நீர்வளம் நில வள மிகுந்து செழித்திருந்ததாய் ஸ்ரீ. மூர் கூறுகிறார்.

இந்தச் செழிப்புக்குக் காரணம் ஹைதர் ஆலியும் திப்புவு மட்டுமல்ல. அவர்களுக்கு முன்னிருந்த அரசர் கள் செங்கோ லாட்சியே அதற்குக் காரணம்.

ஸ்ரீ. ஹால்வல் வங்காளத்தைப்பற்றிக் கூறியிருப்ப தாவது:—ஜனங்கள் திருடர்கள் பயமின்றி சுதந்தரராக வாழ்ந்து வருகிறார்கள். பிரயாணிகளையும், பிரயாணிகளின் சாமான்களையும் காப்பாற்றும் பொறுப்பை சர்க்கார் வகித்து நடத்துகிறார்கள். பிரயாணிகளுக்குத் துணையாக சர்க்கார் காவலாளிகளை அனுப்புகிறார்கள். பண முடிப்போ, வேறு விலையுயர்ந்த பொருள்களோ கைதவறிப் போனால் அதைக் கண்டெடுப்பவர்கள் அதை ஒரு மரத்தில் கட்டித் தொங்க வைத்துவிட்டு உடனே காவலாளிகளுக்குத் தக வல் கொடுக்கிறார்கள்.”

டாக்காவைப் பற்றிக் கூறப்பட் டிருப்பதாவது:— பார்க்கு மிடமெல்லாம் நன்செய், புன்செய் பயிர்கள் செழிப் பாய் வளர்ந்திருக்கின்றன பாரபட்சமின்றி நீதி பரிபால னம் நடைபெறுகிறது. ஜெஸ்வந்தராய், காருண்யமும், பெருந் தன்மையும் வாய்ந்த அரசர், பொதுஜன க்ஷேமத் தை முன் நிறுத்தி அரசாட்சி நடத்துகிறார். தானிய வகை களுக்கு ஏற்பட்டிருந்த வரிகளையும்மற்றும் விசேஷத்தீர்வை களையும் அவர் நீக்கிவிட்டார்.

பிரிட்டிஷார் வங்காளத்தைக் கைப்பற்று முன் வங்காளம் என் நிலைமையி லிருந்ததென்று விளக்க இன்னும் ஒரு திருஷ்டாந்தம் கூறுகிறோம். "ஆலிவர்திகான் அரசாட்சியில் வங்காளம் மிகச் செழிப்படைந்தது. யோக்கியர்களும் திறமையுடையவர்களும் அரசனிடம் மதிப்புப் பெற்று வந்தார்கள். ஹிந்துக்களையும் முஸ்லீம்களையும் அவர் சம நிலையில் வைத்திருந்தார். மந்திரி, சேனாதிபதி முதலிய உயர்தர உத்தியோகங்களில் ஹிந்துக்களையும் அவர் தாராளமாக நியமனம் செய்தார். வங்காளத்தில் வசூலான அரசிறை முழுதும் டேல்லிக்குக் கொண்டு போகப் படாமல் வங்காளத்திலேயே செலவு செய்யப்பட்டது."

கன்னி மேயோ கிழக்கிந்திய கம்பெனியாருக்கு ஒரு நற்சாட்சிப் பத்திரம் வழங்கி யிருக்கிறார். ஆனால் கம்பெனியார் ஆட்சியில் வங்காளம் அடைந்திருந்த நிலைமையைப்பற்றி ஸ்ரீ. மேக்காலே கூறுவதைப் பாருங்கள்:— "கிளைவ் வங்காளத்தை விட்டு இங்கிலாந்து சென்று ஐந்து வருஷ முடிபுமுன் வங்காளத்தில கோடுங்கோலாட்சி தாண்டவமாடத் தொடங்கிற்று. கம்பெனி உத்தியோகஸ்தர்கள் உள் நாட்டு வர்த்தகம் முழுமையும் குத்தகை எடுத்துக் கொண்டனர். மலிவான விலைக்கு சாமான்களைத் தமக்கு விற்கவும், ஜாஸ்தி விலைக்கு தம்மிடமிருந்து வாங்கவும் அவர்கள் ஜனங்களைக் கட்டாயப்படுத்தினர். நீதி பரிபாலன உத்தியோகஸ்தர்களையும் போலீசாரையும் சங்க உத்தியோகஸ்தர்களையும் அவர்கள் லட்சியம் செய்யவே இல்லை. கம்பெனி உத்தியோகஸ்தன் ஒவ்வொருவனும் கம்பெனி அதிகாரத்தைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டான். ஆகவே அவர்கள் மிகச் சுளுவாக சீமான்களாகிவிட்டனர். 3 கோடி சுதேசிகள் வறுமைவாய்ப்பட்டுத் தவித்தனர். பண்டைய இந்திய அரசர்கள் கொடுங்கோலாட்சி புரிந்தால் ஜனங்கள் எதிரிடையாக எழும்பி அரசாங்கத்தைத் தொலைத்துவிடுவார்கள். ஆனால் கம்பெனியாரின் ஆங்கில அரசாங்கத்தை அவர்களுக்கு அசைக்க முடியவில்லை. கம்பெனியார் மிருகத்தனமாக சர்வாதிகாரம் நடத்தி வந்தார்கள்."

கம்பெனியாரின் போக்கு வாரன் ஹேஸ்டிங்சுக்குங் கூடப் பிடிக்கவில்லை. அவர் கூறுவதாவது:—"சுதேசிகள் உரிமைகளில் நம்மவர்கள் பலவந்தமாகத் தலையிடுவதை இந்தியர்கள் வெறுக்கத் தொடங்கிவிட்டார்கள். ஆகவே நம்முடன் நட்புக்கொள்ள சுதேசிகள் அஞ்சுகிறார்கள். கம்பெனி உத்தியோகஸ்தர்களின் அக்கிரமச் செயல்களால் நமது தேசியப் பெருமையே அழிந்துவிட்டது. உத்தியோகஸ்தர்களின் சம்பளம், பென்ஷன் முதலிய செலவினங்களை நவாபின் தலைமேல் சுமத்துவது, அவரால் தாங்க முடியாத ஒரு பாரமாகும். சுதேச உத்தியோகஸ்தர்களுக்கும் நவாபின் சொந்த வேலையாட்களுக்கும் சன்மானம் வழங்கப்படுவதை நம்மவர்கள் தடுத்ததும் அக்கிரம மாகும். நவாப் விரும்பாமல் இருக்கும்போது நாமாக அவருடைய பாதுகாப்புக்கு ஒரு சேனையை ஏற்படுத்தி அதற்குள்ள செலவை அவர் கொடுக்க வேண்டுமென்று கட்டாயப் படுத்துவது நியாயமாகுமா? "உமக்குப் பிரியமிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, செலவுத் தொகையை நீர் கொடுக்கவேண்டியதுதான்" என்று நான் எவ்வாறு அவர் முகம் பார்த்துச் சொல்லுவேன்? லக்ஷக் கணக்கான நவாபின் வருமானம் தமக்கே சொந்தமானதென் றெண்ணி கம்பெனி உத்தியோகஸ்தர்கள் தம்மிஷ்டம்போல் பந்தயங் கட்டிச் சூதாடுகிறார்கள்."

இனி மராத்தி தேசத்தைப்பற்றிச் சிறிது கவனிப்போம். அன்கோதில் டுபேரான் என்ற பிரயாணி 1662ல் ஜெண்டில்மன்ஸ் மகசீன் என்னும் பத்திரிகையில் எழுதியிருப்பதாவது:—"காலை 10மணிக்கு நான் சூரத்தி லிருந்து புறப்பட்டு மலையைக் கடந்து மகாராஷ்டிர தேசத்தையடைந்தேன். அந் நாட்டின் அழகை நான் என்னென்றுரைப்பேன். பொன்னுலகத்தில் புகுந்ததுபோல் எனக்குத் தோன்றிற்று. ஜனங்க ளெல்லாம் உற்சாக முடையவர்களாயும், பலசாலிகளாயும், ஆரோக்கிய முடையவர்களாயும் இருந்தனர். விருந்தினர்களை உபசரிப்பதை அவர்கள்

குலக் கடமையாக எண்ணுகின்றனர். தம் வீட்டில் உள்ளதை ஜாதிமத வித்தியாசம் பாராட்டாமல் அவர்கள் யாவருக்கும் சந்தோஷமாக வழங்கி உபசரிக்கிறார்கள்."

மகாராஷ்டிரத் தலைவரான நானாபர்னவீசைப் பற்றி சர் ஜான் மால்காம் கூறியிருப்பதாவது:—"தென் மகாராஷ்டிர ஜில்லாக்களைப்போல் செழுமையும், செல்வமும் மிகுந்த ஒரு தேசத்தை நான் பார்த்ததே கிடையாது. ராஜதானியான புனா செல்வ மிகுந்த பட்டணம்; வர்த்தகத்துக்கும் பெயர்போனது. தெக்காணப் பிரதேசம் நீர்வளம் குறைந்த காடுகளா யிருந்தும், மனிதப் பிரயத்தினத்தினால் நன்செய் புன்செய்ப் பயிர்கள் செழிப்பாக வளர்ந்திருந்தன. மாளவ தேசம் பாழடைந்திருந்தது. கொள்ளைக்காரர்களான பூர்வ குடிகளாலேயே அத் தேசம் பாழடைய நேர்ந்தது. எனினும் அந்தக் கஷ்ட காலத்திலும் சில சீமான்கள் பெருந் தொகையான பணம் லேவாதேவி செய்து வந்தனர். நாடெங்கும் உண்டியல் வியாபாரிகள் இலாபகரமாகத் தொழில் நடத்திக்கொண் டிருந்தனர். மாளவ தேசத்தில் பூர்வ அரசாங்க முறையை மீண்டும் ஏற்படுத்தாது நம்முடைய அரசாட்சி முறையை ஸ்தாபித்திருந்தால் அவ்வளவு சீரும், செழிப்பும் உண்டாகக்கூடுமென்று நான் நம்பவில்லை. தெட்சணப் பிரதேசங்களிலும் நம்முடைய அரசாட்சியினால் அவ்வளவு நன்மை ஏற்பட முடியாது. உழவுத் தொழிலில் ஹிந்துக்களுக்குள்ள இயற்கை வாசனை, கிராமங்களையும் நகரங்களையும் செழிப்புறச் செய்வதற்கு அவர்களுக்குள்ள அனுபவ ஞானம், பணக்காரர்களுக்குப் பொது ஜனங்கள் செய்யும் ஒத்தாசை, விவசாயிகளிடம் சீமான்களுக்குள்ள ஆதரவு, கிராம ஸ்தாபனங்களை ஆதரிப்பதில் பொதுஜனங்களுக்குள்ள பற்று ஆகிய இவைகளே மகாராஷ்டிர தேசத்தின் செழிப்புக்கும், செல்வப் பெருக்குக்கும் காரணமென்று எனக்குத் தோன்றுகிறது."

அயோத்தியின் செல்வ நிலையைப்பற்றி பிஷப் ஹேபேரின் பத்திரிகையி லிருந்து சில தகவல்கள் கிடைத்திருக்

கின்றன. பரதபுரியைப் பற்றி பிஷப் எழுதியிருப்பதாவது:—இதைப் போல் நீர்வளம், நிலவளம் மிகுந்த பிரதேசத்தை நான் வேறெங்கும் பார்த்ததேயில்லை. செந்நெற் கதிர்கள் பூமியில் படிந்து கிடக்கும் காட்சி மிக ஆநந்தமாக இருக்கிறது. பருத்திச் செடிகளும் மிகச்செழிப்பாக வளர்ந்திருக்கின்றன. ஏராளமான கரும்புத் தோட்டங்களும், ஆலைகளும் இருக்கின்றன. ஜனங்கள் பெரிய சீமான்களாகக் காணப்படாவிடினும், திருப்தி யுடையவர்களாகவே இருக்கிறார்கள். கிராமங்களெல்லாம் சுத்தமாகவும் அழகாகவும் இருக்கின்றன. எங்கும் சுறுசுறுப்பும் உழைப்பும் செழிப்புமே காணப்படுகிறது.”

கவர்னர் ஜெனரல் ஹேஸ்டிங்ஸ் 1827ல் பார்லிமெண்டில் பேசியதாவது:—“நம்முடைய அரசாட்சியால் ஒரு புது சந்ததியார் தோன்றி யிருக்கிறார். வழக்காடுவதுதான் அவர்கள் தொழில். அவர்கள் தேவையைப் பூர்த்திசெய்ய நம்முடைய நீதி ஸ்தலங்கள் போதா. அவர்களுடைய மனோ நிலை கேவலமாகிவிட்டது.”

ஒரு பிரிட்டிஷ் சரித்திராசிரியர் கிளைவைப் பற்றி சமீபத்தில் எழுதியிருப்பதாவது:—“வங்காளத்தை ஒழுங்காக நிருவாகம் செய்யும் பொறுப்பு தனக்கிருந்ததாக கிளைவ் எண்ணவே இல்லை. நவாபையும், பிரஜைகளையும் மூட்டிவிட்டு கம்பெனியின அரசியல் ஆதிக்கத்தை வலுப்படுத்துவதே அவரது முழு நோக்கமாக இருந்தது.”



# அத்தியாயம் 24.

## வறுமை மிக்க இந்தியா

"இந்தியா என்னாளும் ஏகாதிபத்தியத்துக்கு அடிமையா யிருந்து உழைத்துப் போட விரும்பாது; அவ்வாறு உழைக்கவும் கூடாது" என்று இந்தியா மந்திரியாக விருந்த சர் ஆஸ்டின் சேம்பர்லேன் ஒரு சந்தர்ப்பத்தில் சொன்னர். இந்தியா பிரிட்டனைச் சீமானாக்குகிறது; பிரிட்டனே இந்தியாவை வறுமைக் குழியில் ஆழ்த்துகிறது. இவ் விஷயத்தைப்பற்றி ஐரோப்பியர்களும் இந்தியர்களும் பல நூல்கள் எழுதி யிருக்கிறார்கள். இந்தியாவுக்கு இங்கிலாந்து செலுத்தவேண்டிய கடப்பாடு (England's Debt to India) என்ற புஸ்தகத்தில் நானும் இவ் விஷயத்தைச் சுருக்கமாக விளக்கி யிருக்கிறேன். இந்த அத்தியாயத்தில் அடங்கிய விஷயங்கள் அந் நூலிலிருந்து தொகுக்கப் பட்டனவே. பிரிட்டிஷ் கைத்தொழில் புரட்சி வெற்றி பெறுவதற்கு இந்தியா உதவி புரிந்திருக்கிற தென்பதை யாவரும் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் அந்த உதவி எவ்வளவு பிரம்மாண்டமான தென்பதை வெகு சிலரே அறிந்திருக்கிறார்கள். நீராவி யந்திரங்களும் நூற்கும் யந்திரங்களும், நெசவு யந்திரங்களும் தோன்றி கைத்தொழிற் புரட்சி ஆரம்பமான காலத்தில் இந்தியாவும் இங்கிலாந்தும் பொருளாதார நிலையில் எவ்வாறு இருந்தனவென்று ஆராய்வோம்.

பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன் இந்தியா எவ்வளவு செல்வம் பொருந்தி யிருந்ததென்று ஏற்கனவே விளக்கிக் காட்டி யிருக்கிறோம். 17ம் 18ம் நூற்றாண்டுகளில் இந்தியா மிகவும் செல்வப் பெருக்குடையதா யிருந்தது. இந்திய அரசர்களின் பொக்கிஷங்களில் பொற்காசுகளும் வராகன்களும் இரத்தினங்களும் குவியல் குவியலாய்க் கிடந்தன. கைத்-

தொழிலும் செழிப்புற்றிருந்தது. ஏராளமான சரக்குகளை வெளிநாடுகளுக்கு அனுப்ப, பதிலாக பொன்னும், வெள்ளியும இந்தியாவுக்கு வந்தன. ஆசியா, ஐரோப்பா, ஆபிரிக்கா முதலிய தேசங்களோடு இந்தியா பெருவாரியாக வர்த்தகம் செய்தது. இந்திய கைத்தொழில் சரக்குகளும் வெளிநாடுகளில் ஏராளமாகச் செலவாயின. இந்திய மஸ்லின், பட்டுகள், கம்பிளிசால்வைகள், பித்தளை வெண்கல பாத்திரங்கள் முதலியவைகளை உலகத்தா ரெல்லாம் போற்றிக் கொண்டாடினர். சுமார் ஒன்றரை நூற்றாண்டு காலமாக இந்தியாவிலிருந்து பருத்தி, பட்டு வஸ்திரங்களையும் பூ, நீலம், சுகந்த திரவியங்கள் முதலிய சரக்குகளையும் ஏற்றுமதி செய்வதும் பதிலாக பொற்கட்டிகளைக் கொண்டு வருவதுமே பிரிட்டிஷார் செய்துவந்த வியாபாரம். இக் காலங்களில் இந்தியா வெளிநாடுகளிலிருந்து ஒன்றுமே இறக்குமதி செய்யவில்லை. 1747 முதல் 1757 வரை 10 வருஷ காலத்தில் 552, 423 பவுன் விலை பெறுமான பொற்கட்டிகள் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு வந்ததாக ஸ்ரீ. புரூஸ் கூறுகிறார். அதற்கப்புறம் இந்தியாவுக்கு பொற்கட்டி கொண்டு வரப்பட்டதே கிடையாது.

இந்த வர்த்தகத்தினால் கிழக்கிந்திய கம்பெனியாருக்கு மிகுந்த இலாபம் கிடைத்ததென்று அக்காலத்திய சரித்திரகார ரெல்லாம் ஒப்புக் கொள்ளுகிறார்கள்.

மேக்காலே கூறுவதாவது:—"இரண்டாவது சாரல்ஸ் காலத்தில் கம்பெனியார் அடைந்துவந்த இலாபத்தைப் போல் ஒரு வர்த்தக கம்பெனியாரும் ஒருபொழுதும் அடையவில்லை. கம்பெனியாரின் அமிதமான இலாபத்தைப் பார்த்து லண்டன்மா நகரத்தா ரெல்லாம் வியப்பும் பொறாமையும அடைந்தனர். புனருத்தாரணத்துக்குப் (Restoration) பின்னுள்ள 23 வருஷங்களில் கங்காநதிப் பிரதேசங்களிலிருந்துவந்த இறக்குமதித் தொகை ௮000 பவுனிலிருந்து 300,000 பவுனாக உயர்ந்தது. கம்பெனியார்

அமோகமான இலாபம் பெற்று வந்தனர். 1876ல் ஒவ்வொரு பங்காளியும்தான் போட்ட முதலுக்கு சமமான ஒரு தொகையை விசேஷ இலாபமாகப் (Bonus) பெற்ருன். இவ்வாறு இரட்டிப்பான முதலுக்கு 100க்கு 20 வீதம் ஐந்து வருஷம் தொடர்ச்சியாக பங்கு இலாபம் அளிக்கப் பட்டது.

1677ல் 100 பவுன் விலையுள்ள ஒவ்வொரு பங்குக்கும் ஸ்டாக்கு விலை 245 பவுனுக உயர்ந்தது. அது 1681ல் 300ஆகவும், பின்னர் முறையே 360,500 வரையிலும் உயர்ந்தது கம்பெனி இலாபம் உயராமல் இருந்ததற்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கொள்ளையும், பொக்கிஷ அதிகாரிகள் பிடித்துப்பறி, கம்பெனி உத்தியோகஸ்தர்கள் இடைலாபம் இவைகளே தடைகளாக நின்றன.

அந்தக் காலத்தில் வியாபார நிலை இந்தியாவுக்கு அநுகூலமாகவே இருந்தது. அப்பொழுது நெசவுத் தொழில் இந்தியா முழுதும் நடந்துவந்ததென்றும், இப்பொழுது 1 ஷில்லிங் 6 பென்ஸ் விலையுள்ள ரூபாய்க்கு அக்காலத்தில் 2 ஷில்லிங் 8 பென்ஸ் விலை யென்றும் பிரிட்டிஷ் சரித்திர ஆசிரியர் கூறுகின்றனர். அக்காலத்தில் இந்தியாவின் பொருளாதார நிலை எவ்வளவு உந்நத நிலையிலிருந்தது பாருங்கள்.

இனி இங்கிலாந்தின் பொருளாதார நிலையை ஆராய்வோம். 16வது நூற்ருண்டில் இங்கிலாந்து வறுமை நாடாயிருந்ததென்றும், வெளிநாட்டு முதலாளிகளே இங்கிலாந்தின் தேவைகளுக்குப் பணவுதவி புரிந்தார்களென்றும் ஸ்ரீ. ராபர்ட்ஸன் கூறுகிருர். உள்நாட்டுக் கலகங்கள் நிகழ்ந்துகொண் டிருந்ததினுலும், அரசாங்கத்தாரும் குடிகளைப் பலவாறு வருத்தி வந்ததினுலும் 17வது நூற்ருண்டின் ஆரம்பத்தில் வர்த்தக விருத்திக்கும், மற்றும் தேசப் பாதுகாப்பு ஏற்பாடுகளுக்கும் தேவையான பணம் இங்கி

லாந்தில் இல்லாதிருந்த தென்றும், டச்சு முதலாளிகளோடு போட்டி போட ஆங்கிலேயர் சக்தியற்றவர்களா யிருந்தன ரென்றும் ஸ்ரீ. மில் கூறுகிறார். 17வது நூற்றாண்டின் இறுதியில் இங்கிலாந்திலும், மற்றும் ஐரோபபிய தேசங் களிலும் பொருளாதார நிலை மிகவும் கேவல ஸ்திதியை அடைந்ததென்று ஸ்ரீ. புரூக் ஆதம்ஸ் அபிப்பிராயப் படு கிறார். ஐரோப்பியப் பணம் ஆசியாவுக்கு ஏராளமாகச் சென்றுகொண் டிருந்ததினாலும் வர்த்தகத்துக்குத் தேவை யிருந்ததினாலும் 17வது நூற்றாண்டின் முடிவில் ஐரோப்பா வில் பயங்கரமான பணப் பஞ்ச முண்டாயிற்று. அகஸ்டஸ் காலத்தில் ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்கும் நடந்துவந்த வர்த்தகத்தில் ஆசியாக்காரரே இலாபமடைந்தனர். பணப் பஞ்சத்தினால் இங்கிலாந்தில் நாணயச் செலாவணி குறைந் தது.

பிரஞ்சுப் புரட்சி யுண்டான காலத்தில் ஐரோப்பிய செலாவணி நிலைமையைப்பற்றி ஸ்ரீ. ரூடிங் கூறுவதாவது: "நாணயங்களின் விலை மிகக் குறைந்து போனதினால் கள்ள நாணயங்கள் ஏராளமாக நடமாடின. வெள்ளி நாணயங் களுக்கு யதார்த்த விலையில் பாதி கிடைப்பது கூட அரிதா யிற்று. இரும்பு பித்தளை நாணயங்களும், செப்பு முலாம் பூசிய நாணயங்களும் ஏராளமாகச் செலாவணி யாயின. சுத்தம் செய்யாத இரும்பு நாணயங்கள்கூட எங்கணும் பரவி யிருந்தன."

1710 முதல் 1720 வரை வருஷா வருஷம் சராசரி 4,344,000 பவுன் விலை பெறுமான பொற்கட்டிகளை கிழக்கு இந்திய கம்பெனியார் ஏற்றுமதி செய்தனர்.

இக் காலங்களில் ஆங்கிலேயர் தம் தேவைகளைப் பூர்த்தி செய்த வரலாற்றைப் பார்த்தால் ஒரு விநோதக் கதைபோல் தோன்றும். ஸ்ரீ. ஜேவான்ஸ் அபிப்பிராயப் படுகிறபடி, உலகத்திலுள்ள செல்வங்களுக் கெல்லாம்

ஆசியா சாக்கடைக் குழியாக இருந்து வந்தது. திரவியத்தைச் சேர்த்து வைப்பதே கீழைத் தேசத்தார் வழக்கம். கோல்கொண்டா இரத்தினச் சுரங்கங்களிலுள்ள இரத்தினங்களை யணியும் மொகலாயச் சக்கரவர்த்தி முதல் அன்றுடக்கஞ்சிக்குத் திண்டாடும் குடியானவன் வரை சகல இந்தியர்களும் ஆபத்துக் காலத்து உபயோக மாகும்படி நிதிசேர்த்து வைப்பதே ஜீவித நோக்கமாக எண்ணி வாழ்ந்தனர்.

* இத்தாலியர் கிரேக்க பாண்டஸ் தேச நிதிகளை இத்தாலியாவுக்குக் கொண்டு போனதுபோல், பல நூற்றுண்டுகளாக பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் தேடி வைத்த அரும் நிதிகளை எல்லாம் ஆங்கிலேயர் கைப்பற்றி லண்டனுக்குக் கொண்டு சென்றனர். அந் நிதிகளின் விலை இவ்வளவென்று ஒருவராலும் நிர்ணயிக்க முடியாது; ஆனால் பல கோடிப் பவுன் விலை மதிக்கலாமென்பது மட்டும் நிச்சயம். அக் காலத்தில் ஐரோப்பாவிலிருந்த நிதிகளை யெல்லாம் திரட்டினாலும் ஆங்கிலேயர் இந்தியாவிலிருந்து கொண்டுவந்த பெருநிதிக்கு இணையாகாது."

கடைசி முறையாக 1757ல் பொற்கட்டி இந்தியாவுக்கு இறக்குமதி செய்யப்பட்டது. ப்ளாசி யுத்தம் நடந்ததும் அதே வருஷம்தான். அதற்குப் பிறகு பொற்கட்டி இறக்குமதி செய்யப்படவே இல்லை. அதுமுதல் சீனத்துக்கு பொற்கட்டி இறக்குமதி செய்யும் வழக்கமும் நின்றுவிட்டது. இந்தியாவிலிருந்து அனுப்ப முடியாக காலங்களில் மட்டும் அற்ப சொற்பமாக இறக்குமதி செய்யப்பட்டது. கப்பெனி டைரக்டர்கள் இங்கிலாந்தி லிருந்து சென்னையிலும், வங்காளத்திலும் உள்ள உத்தியோகஸ்தர்களுக்கு அனுப்பிய கடிதங்களி லிருந்தும், அதற்கு உத்தியோகஸ்தர்

---

* ஸ்ரீ. புருக் ஆடம்ஸ்.

கள் அனுப்பிய பதிலிலிருந்தும் இதன் காரணத்தைச் சுளு வாக அறிந்துகொள்ளலாம். இந்தியாவில் கிடைக்கக் கூடிய பொற்கட்டிகளை யெல்லாம் திரட்டி சென்னையி லிருந்தும், சீனுவிலிருந்தும் இங்கிலாந்துக்குச் செல்லும் கப்பல்களில் ஏற்றி யனுப்பவேண்டு மென்று டைரக்டர்கள் கம்பெனி உத்தியோகஸ்தர்களுக்கு சதா எழுதிக் கொண்டிருந்தனர். உத்தியோகஸ்தர்களும் காலந் தவருமல் பொற்கட்டிகளை அனுப்பிக்கொண்டு மிருந்தனர்.

இந்தியாவின் அக்கால ஸ்திதி கம்பெனி உத்தியோ கஸ்தர்கள் பொற்கட்டி சேர்ப்பதற்கு அநுகூலமாக இருந் தது. கடல் கரை உடைத்துப் பாய்வதுபோல் இந்தியாவி லிருந்து இங்கிலாந்துக்குத் திரவியம் சென்றுகொண் டிருந்ததென்றும், வாட்ஸ் முதலியோர் கண்டுபிடித்த இயந் திரங்களைப் பயன்படுத்துவதற்குத் தேவையான பொரு ளுதவி இந்தியாவிலிருந்து கிடைத்ததென்றும் ஸ்ரீ. மேக் காலே கூறுகிருர். இந்தியச் செல்வம் குறையக் குறைய பிரிட்டிஷ் பொக்கிஷம் நிறைந்தது. ஆகவே, இந்தியப் பண உதவியினுலேயே இங்கிலாந்தின் கைத்தொழிற் புரட்சி வெற்றி பெற்றதென்பது வெளிப்படையான விஷ யம். இந்தியர் செய்த உதவியை ஆங்கிலேயர் ஒரு கடனுக ஒப்புக்கொள்ளவில்லை; அதற்கு வட்டி கொடுக்கவும் உத்தே சிக்கவில்லை. இந்தியத் திரவியம் இங்கிலாந்துக்குச் சென் றிராவிட்டால் வாட்ஸ் முதலியோர் கண்டுபிடித்த யந்திரங் களால் ஒரு பயனும் உண்டாயிருக்காது. இந்தியாவின் நஷ்டம் இங்கிலாந்தின் இலாபமாயிற்று. இந்தியத் திரவிய மெல்லாம் இவ்வாறு கொள்ளை போனதினுல் இந்திய விவ சாயம் ஒழிந்தது; கைத் தொழில் நசித்தது; தேசமும் பாழாயிற்று. எந்த செழிப்புடைய நாட்டுக்குத் தான் இத் தகைய கொள்ளையைத் தாங்கமுடியும்!

கம்பெனி உத்தியோகஸ்தர்கள் வர்த்தகம் நடத்தி வந்த தோரணையைப்பற்றி சர்ஜண்டு பிராகோ பின் வரு

மாறு எழுதுகிறுர்:—சாமான்கள் வாங்கவோ விற்கவோ கம்பெனி உத்தியோகஸ்தர்கள் ஒரு குமாஸ்தாவை அனுப்பு வார்கள். அவன் சர்வாதிகாரமும் தனக்குக் கிடைத்து விட்டதாக மதித்து ஏழைக் குடிகளைக் கஷ்டப் படுத்து கிருன். சாமான்கள் விற்போர் அவன் கொடுக்கும் விலை யைப் பெற்றுக்கொள்ள வேண்டும்; அவனிடமிருந்து சாமான் வாங்குவோர் அவன் கேட்கும் விலையைத் தடை கூருது கொடுக்கவேண்டும். தவறினுல் ஏழைகள் பாடு திண்டாட்டந்தான். குமாஸ்தா தயவு தாட்சண்யமின்றி அவர்களை மரங்களில் கட்டி அடிக்கிருன். அம்மட்டோ! குடிகள் விளை பொருள்களை யெல்லாம் தம்மிடமே விற்க வேண்டுமென்றும், தம்மிடமிருந்தே சாமான்கள் வாங்க வேண்டுமென்றும் கட்டாயப்படுத்துகிருன். இக் கொடுமை களால் நானிருக்கும் பக்கர்கஞ்சு கிராமததிலுள்ள குடிக ளெல்லாம் நாலுதிசைக்கும் சென்றுவிட்டனர். பக்கர்கஞ்சு குடியற்ற கிராமமாக இருக்கிறது. தம் சாமான்களை எவ் விடங்களில் நிர்ப்பயமாக விற்கலாமோ அவ்விடங்களுக்கு தினந்தோறும் ஜனங்கள் குடி போய்க்கொண் டிருக்கிருர் கள். ஜெமீந்தார்கள் இதைத் தடுக்க முன் வந்தால் அவர் களையும் கம்பெனி உத்தியோகஸ்தர்கள் பயமுறுத்துகிருர் கள். முற்காலங்களில் பொதுக் கச்சேரியில் நீதி வழங்கப் பட்டது; இப்பொழுதோ ஒவ்வொரு குமாஸ்தாவும் நீதி பதியாய்விட்டான். அவன் வீடு கச்சேரியும் ஆய்விட்டது. வீட்டிலிருந்தே அவர்கள் தம்மிஷ்டம்போல் நீதி செலுத்து கிருர்கள். சில சமயம் ஜெமீந்தார்களுக்குங்கூட அவர்கள் தண்டனை விதித்து விடுகிருர்கள்; அவர்களைப் பயமுறுத் திப் பணமும் பறிக்கிருர்கள்."

வில்லியம் போர்ட்ஸ் என்னும் ஒரு ஆங்கில வியாபாரி எழுதுவதாவது:—"நாம் நடத்தும் உள்நாட்டு வர்த்தகம் ஒரு கொள்ளையாக மாறிவிட்டது. இங்கிலாந்துக்குப் பணம் அனுப்புவதும் ஒரு பெரும் கொள்ளைதான். நாட் டில் விளையும் பொருள்கள் எல்லாம் நமக்குக் குத்தகையா

யிருக்கிறது. விவசாயிகளும் கைத்தொழி லாளர்களும் நமது கொள்ளையை அறியத் தொடங்கி விட்டார்கள். குமாஸ்தாக்கள் செய்துவரும் அக்கிரமத்துக்குக் கையும் கணக்கு மில்லை. ஒரு குமாஸ்தா சாமான் வாங்க ஏதாவது ஒரு கிராமத்துக்குச் சென்றால் ஒரு வீட்டில் பாளய மடித்து அதையே தன் கச்சேரியாக்கிக் கொள்கிறான்; சேவகர்களை அனுப்பி தரகர்களையும் நெசவுத் தொழிலாளர்களையும், விவசாயிகளையும் வரவழைக்கிறான். கொஞ்சப் பணம் அவர்களிடம் அச்சாரமாகக் கொடுத்து இன்ன சாமான், இன்ன இடத்தில், இன்ன விலைக்குக் கொடுக்க வேண்டுமென்று தன்னிஷ்டப்படி ஒரு சீட்டில் எழுதி, அதில் அவர்களுடைய கையொபபமும் வாங்கி வருகிறான். அவன் குறிப்பிட்ட விலை குடிகளுக்கு சம்மதமாயிருந்தாலும், இல்லாவிட்டாலும் அவன் எழுதிய சீட்டில் அவர்கள் கையெழுத்துப் போட வேண்டியது தான். அச்சாரம் ஒப்புக்கொள்ள யாராவது மறுத்தால் அச்சாரப் பணத்தை அவர்களது இடுப்புத் துணியில் கட்டி உதை கொடுத்து அனுப்பப்படுவார்கள் நெசவுகாரர்கள் கம்பெனிக்கே தம் சரக்குகளை விற்பனை செய்ய வேண்டுமென்று ஒப்பந்தச் சீட்டெழுதி அதில் கையொப்பம் செய்யும்படி குமாஸ்தாக்கள் நெசவுகாரர்களைக் கட்டாயப்படுத்துகிறார்கள். குமாஸ்தாக்கள் அடிக்கும் கொள்ளைக்கு கையும் கணக்குமில்லை. இந்தக் கொள்ளைகளை யெல்லாம் தாங்க வேண்டியது ஏழை நெசவுகாரர்கள் தான். மார்க்கட்டு விலையில் 100-க்கு 15 முதல் 40 வரை குறைத்துத்தான் நெசவுகாரர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. ஒப்பந்தப்படி சரக்கு சப்ளை செய்ய முடியாதவர்களின் சாமான்களையும், சரக்குகளையும் ஏலம்போட்டு விற்று கம்பெனியார் தம் நஷ்டத்தை ஈடுசெய்து கொள்ளுகிறார்கள். பட்டுத்துணி நெசவு செய்வோரின் கதியும் அதேமாதிரிதான்."

லார்டு கிளைவ் கூட இந்தக் கொள்ளை வியாபாரத்தைக் கண்டித்து டைரக்டர்களுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதி

ஞராம். ஆனல் லார்டு கிளைவும் கொள்ளையடிக்காதிருக்க வில்லை. அதைப்பற்றி மேக்காலே கூறுவதாவது:—"கிளை வின் சம்பாதத்தியத்தைக் கணக்கிட முடியாது. தேவை யுள்ளமட்டும் சம்பாதித்தார். வங்காளப் பொக்கிஷம் அவர் கையில் இருந்தது. இந்திய மன்னர்களின் விலைபெற்ற இரத்தினங்களும், பொன் நாணயங்களும், பொற் கட்டி களும் பொக்கிஷத்தில் குவியல் குவியலாய்க் கிடந்தன. இந்தப் பொற்குவியல்களுக் கிடையிலே தாராளமாக உலாவிவந்த கிளைவ், தமக்கு வேண்டியவற்றைக் கையடக்கம் செய்துகொண்டார்."

லார்டு கிளைவ் பென்ஷன் பெற்று இங்கிலாந்துக்குச் சென்றபிறகு, கம்பெனி உத்தியோகஸ்தர்கள்,வங்காள அர சரிடமிருந்தும் குடிமக்களிடமிருந்தும் தம்மிஷ்டம்போல் பணம் பிடுங்கத் தொடங்கினர். இந்த வர்த்தகக் கொள்ளை யைப்பற்றி, கம்பெனி உத்தியோகஸ்தரான வில்லியம் போல்ட்ஸ் எழுதிய ஒரு நூலில் 73-வது பக்கத்தில் காணப் படுவதாவது:—"நெசவுகாரர்களும், மற்றும் தொழிலாளி களும் பலவாருகத் துன்புறுத்தப்படுகிருர்கள். தொழிலா ளர்களை கம்பெனியார் தம் அடிமையாக்கிக் கொண்டுவிட்ட னர். குமாஸ்தாக்களும், ஏஜண்டுகளும் பலவழியாக அவர்க ளிடமிருந்து பணம் பிடுங்கி வருகிருர்கள். குமாஸ்தாக்கள், அபராதம், சிறைப்படுத்தல், சவுக்கடி முதலிய தண்டனைகளை கூசாமல் வழங்கிவருகிருர்கள்; பலவந்தப்படுத்தி ஒப்பந்தச் சீட்டுகளில் கையொப்பம் வாங்குகிருர்கள். ஆகவே, நெசவு காரர்களும் மற்றும்தொழிலாளர்களும் நாலு திசைக்கும் ஓடி விட்டனர். அதனல் சாக்குகள் கிடைப்பதில்லை. கம்பெனி வருமானமும் குன்றிவிட்டது. உயர்தரக் கம்பெனி உத்தி யோகஸ்தர்கள் கம்பெனி வருமானத்தில் சொற்பத் தொகையை கம்பெனிக் கணக்கில சேர்த்துவிட்டு மீதியை தம் பந்து மித்திரர்களுடன் பங்கிட்டுக் கொள்கிருர்கள். பெயரளவில் வெளிநாட்டு வர்த்தகர்களுக்கு சொற்ப வர்த் தகம் செய்ய அனுமதி யளித்திருக்கிருர்கள். அநேகமாக

பெரிய வர்த்தகமெல்லாம் கம்பெனிக்கே கட்டுக்குத்தகை யாக இருக்கிறது.

இவ்வண்ணம் கம்பெனி உத்தியோகஸ்தர்கள் உள்நாட்டு வர்த்தகத்தைப் பாழாக்கி, நிர்ப்பந்தத்தினுல் வர்த்தகத் தைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்டனர்.

கம்பெனியாரின் நடவடிக்கைகளைப்பற்றி விசாரணை செய்ய பார்லிமெண்டார் ஒரு கமிட்டியை நியமித்தனர். அந்த கமிட்டியார் பார்லிமெண்டுக்கு அனுப்பிய ரிப்போர்ட் டில், மேலே எடுத்துக் காட்டப்பட்ட கொள்ளை வரலாறுக ளெல்லாம் உண்மையென்று உறுதிப்படுத்தப்பட் டிருக் கிறது.

## சர்க்கார் கொள்ளை

இந்தியா, இங்கிலாந்துக்குக் 'கப்பம் செலுத்துகிறதா இல்லையா என்பதைப்பற்றி இப்பொழுதும் ஆங்கில அரசி யல் வாதிகள் விவாதம் நடத்திக் கொண்டுதானிருக்கிறார் கள். இந்தியா ஏராளமான தொகை கப்பம் கட்டிவிடுகிற தென்றும், இந்தியச் செல்வத்தை இங்கிலாந்து வெகுகால மாகக் கொள்ளையிட்டு வருகிறதென்றும் 1858-ல் பிரிட்டிஷ் சர்க்கார் இந்திய அரசாட்சியை ஒப்புக்கொண்ட பிறகும் அந்தக் கொள்ளை குறையவில்லை யென்றும், வாஸ்தவத்தில் அதிகரித்துக் கொண்டே வருகிறதென்றும், இதனுல் இந் தியா மிக வறுமையடைந்து விட்டதென்றும் ஒரு கட்சியார் கூறுகின்றனர். எதிர் கட்சியாரோ, இந்தியா ஒரு காலத் தும் இங்கிலாந்துக்குக் கப்பம் செலுத்தவில்லை யென்றும், இந்திய முதலை இங்கிலாந்து ஒருபொழுதும் கொள்ளையிட்ட தில்லையென்றும், இந்தியா ஏதாவது கொடுத்தால் அது இங்கிலாந்து செய்த உதவிக்கும், இந்திய அபிவிர்த்திக்காக உதவிய முதலுக்கும் பிரதிபலனுகத்தா னிருக்குமென்றும், பிரிட்டிஷ் அரசாட்சியில் இந்தியா, முன் ஒருபொழுதும் அடையாத பாக்கியங்களைப் பெற்று விட்டதென்றும் வா திக்கிறுர்கள்.

பிளாசி யுத்தத்துக்கு சுமார் இரண்டு நூற்றுண்டுகள் வரை இங்கிலாந்தின் பொருளாதார நிலை எவ்வண்ண மிருந்ததென்றும், இந்தியத் திரவியம் கடல்மடை திறந்தது போல் இங்கிலாந்துக்குப் போனபிறகு இங்கிலாந்தின் பொருளாதார நிலை எவ்வாறு உயர்ச்சி யடைந்ததென்றும் ஏற்கனவே விளக்கிக் கூறியிருக்கிறோம். ஆனல் இந்த விஷயங்களை மறுக்க ஒரு ஆங்கில அரசியல் வாதியோ, இந்திய அரசியல் வாதியோ இதுகாறும் முன் வந்ததுமில்லை. 1757 முதல் 1787 வரை வங்காளம், கம்பெனி உத்தியோகஸ்தர்களால் கொள்ளையடிக்கப்பட்ட தென்பதை எல்லாக் கட்சியாரும் ஒப்புக்கொள்கிறார்கள்.

பெயர்பெற்ற சோஷியலிஸ்டு தலைவரான காலஞ் சென்ற எச். எம். ஹிண்டமோன் என்பவர், லண்டன் மார்னிங் போஸ்டு பத்திரிகையில் 1901 ஜூலை 2உ எழுதிய ஒரு கடிதத்தில் கூறியிருப்பதாவது:—"இருபது வருஷங்களுக்கு முன், அப்போது இந்தியா மந்திரியாகவும், உதவி மந்திரியாகவும் இருந்த லார்டு கிரான்புரூக், எட்வர்டு ஸ்டான்ஹோப் இவர்களின் சம்மதப்படி, சர் லூயிஸ் மாலட், இந்திய கப்ப விஷயமாக இந்தியா ஆபீசிலிருந்த பல அந்தரங்க தஸ்தாவேஜிகளை என்னிடம் ஒப்புவித்தார். நான் அவைகளைப் படித்துப்பார்த்தேன். நிலைமை மிகப் பயங்கரமாக இருக்கிறது. 1880-வரையும், அதற்குப் பின்னும் உள்ள அந்தரங்க மேமோராண்டங்களை யெல்லாம் பார்லிமெண்டார் பார்வைக்குக் கொண்டு வருமாறு லார்டு ஜார்ஜ் ஹாமில்டனை நான் வேண்டுகிறேன்.

இவ்விஷயத்தில் என்னைப்போலவே அபிப்பிராய முடையவர்களின் பெயர்களை நான் வெளியிட்டால் பொது ஜனங்கள் திடுக்கிட்டுப் போவார்கள் என்பது உறுதி. இதற்கு நிவர்த்தி மார்க்கமாக ஒரே ஒரு வழிதான் உள்ளது. இந்திய அரசாட்சி முழுமையும் இந்தியர்களிடம் ஒப்படைத்துவிட்டு நாம் சொற்பமான மேற்பார்வை மட்டும் வைத்துக் கொள்ளவேண்டும்."

ஸ்ரீ. வில்லியம் டிக்பி எழுதிய செல்வம் மிக்க பிரிட்டிஷ் இந்தியா (Prosperous British India) என்ற நூலில் 208-வது பக்கத்தில் இந்தியக் கொள்ளையைப்பற்றி, இந்திய சர்க்கார் புஸ்தகத்தில் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கும் சில பகுதிகளைப் புகைப்படம் பிடித்து வெளியிடப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—"சுங்கவரி மூலமாக பிரிட்டன், இந்தியாவிடமிருந்து கப்பம் பெற்று வருகிறது. அன்றியும், மூன்று மாகாணங்களில் வருஷா வருஷம் உண்டாகும் மீதத்தை இந்தியாவில் செலவு செய்யாமல் இங்கிலாந்தில் செலவு செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த இனத்தில் 10 லட்சம் பவுனுக்குமேல் வரலாம். ஐரோப்பிய வியாபாரிகள் இலாபத்திலும் ஒரு பகுதி பிரிட்டனுக்கு வருகிறது."

வங்காள நிருவாக சபை மெம்பராகவிருந்த ஸ்ரீ. பிலிப் பிரான்சிஸ் பார்லிமெண்டு கமிட்டி ரிப்போர்ட்டு ஒன்றில் கூறியிருப்பதாவது:—"வங்காள நிலவரி வசூலை கம்பெனியார் ஒப்புக்கொண்டது முதல் வங்காளம் வறுமையடைந்து கொண்டே வந்திருக்கிறது."

பிரிட்டிஷ் அரசாட்சியை சதா புகழ்ந்துகொண்டிருக்கும் இந்தியா ஆபீஸ் உத்தியோகஸ்தர் ஸ்ரீ. சாரல்ஸ் கிராண்டும் இந்தியாவின் வருஷவாரி மீதத்தை பிரிட்டிஷாரின் நன்மைக்குச் செலவழிக்கப்படுவதை ஒப்புக்கொண்டிருக்கிறார்.

ஒரு காலத்தில் வங்காளத்தில் நிருவாக உத்தியோகஸ்தராயிருந்த ஸ்ரீ. எப். ஜே. ஷோர் இந்திய விஷயங்களைப்பற்றி எழுதிய ஒரு புஸ்தகத்தில் கூறுவதாவது:— "பிரிட்டிஷ் அரசாட்சியினால் இந்தியாவுக்கு பெரிய நன்மை விளைந்துவிட்டதாக சாமானிய ஆங்கிலேயர்கள் நம்பித் திருப்தி யடைந்திருக்கிறார்கள். ஆகையால் உண்மைநிலையை அறிய ஆசைகொண்டு கல்கத்தாவில் வந்து சேர்ந்தவுடன்

நான் விசாரணை செய்யத் தொடங்கினேன். விசாரணையின் பலன், ஆங்கிலேயர் நம்பிக்கைக்கு முழுதும் எதிரிடையாக வே இருந்தது. இந்தியர்களை எப்பொழுதுமே தமக்கு அடிமையாக்கிவைத்து, தம் க்ஷேமத்தைப் பாதுகாப்பதே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முக்கிய நோக்கமாக இருந்து வருகிறது. இந்தியர்களால் தாங்க முடியாத பளுவான வரி விதிக்கப்பட்டிருக்கிறது. பிரிட்டிஷார் பிடித்தடக்கும் ஒவ்வொரு மாகாணங்களிலிருந்தும் எவ்வளவு பிடுங்கலாமோ அவ்வளவும் பிடுங்கி வருகிறார்கள். மிக எளிய நிலைமையிலுள்ள ஆங்கிலேயர்கள் ஒப்புக்கொள்ளாத உத்தியோகங்கள்கூட உயர்தர இந்தியர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. இந்தியாவின் நற்காலமெல்லாம் மலையேறிவிட்டது. இந்தியச் செல்வமெல்லாம் கொள்ளை போகிறது. அந்நியக் கொடுங்கோலாட்சியை இந்தியர்களுக்குத் தாங்க முடியவில்லை. சொற்ப வெள்ளையர்களின் க்ஷேமத்துக்காக கோடிக்கணக்கான இந்தியாகள் சித்திரவதை செய்யப்படுகிறார்கள்."

கம்பெனியாருக்கு இந்தியாவில் வர்த்தகம் செய்ய உரிமையளிக்கும் சாசனத்தைப் புதுப்பிக்கத் தேவையுண்டானபோது, அதுவிஷயமாக விசாரணை நடத்த ஒரு பார்லிமெண்டு கமிட்டி நியமிக்கப்பட்டது. அக்கமிட்டியார் முன், 1804 முதல் 1841 வரை இந்தியாவில் உத்தியோகம் வகித்திருந்த ஸ்ரீ. ஜான் சல்லிவன் கொடுத்த சாட்சியமாவது:—

வினு:—"தற்காலத்தைவிட சுதேசமன்னர் ஆட்சியில் இந்தியர்கள் மிகவும் செழிப்படைந்திருந்தார்கள் என்று நீர் நம்புகிறீரா?

விடை:—சரித்திர ஆதாரங்களைப் பார்த்தால் அவ்வாறு தான் எனக்குத் தோன்றுகிறது. முற்காலங்களில் இந்தியர்கள் சுபிட்சமாக வாழ்ந்துவந்ததாகவே தெரிகிறது.

வி௲:—"அடிக்கடி போர் தொடுத்து மக்களுயிரையும், செல்வத்தையும் நாசஞ்செய்துவந்த இந்தியர்கள், எவ்வாறு செல்வவான்களாகி, நீர்ப்பாசன வசதிக்காக பெரிய கால்வாய்களும், தடாகங்களும் வெட்டினார்கள் ?

விடை:—"அக்காலங்களில் இந்தியர் செல்வத்தை விழுங்க, தற்காலத்தைப்போல் ஐரோப்பிய சிவில் உத்தியோகஸ்தர்களும், இராணுவ உத்தியோகஸ்தர்களும் இருக்கவில்லை. இக்காரணத்தால் நமது ஆட்சி அதிகச் செலவுடையதாகவே இருக்கிறது. இந்தியாவின் தற்கால வறுமைக்கும் இதுதான் காரணம்."

இராணுவ மேற்பார்வை அதிகாரத்தை மட்டும் பிரிட்டிஷார் வைத்துக்கொண்டு, இந்திய நிருவாகத்தை சுதேசிகளுக்கு விட்டுக் கொடுக்கலாமா என்று கேட்கப்பட்டபொழுது ஸ்ரீ. ஜான் சல்லிவன் விடையளித்ததாவது:—"ஆம். தாராளமாய் விட்டுக் கொடுக்கலாம். ஏனென்றால் நாம் பலாத்கார முறைகளாலும், மற்றும் நியாய விரோதமான செயல்களாலும் இந்தியாவைக் கைப்பற்றினோம். இந்தியாவை ஆள நமக்கு எவ்வித உரிமையுமில்லை."

மேலும் அவர் கூறியதாவது:—"நிலவரி விஷயமாகக் கேட்கப்படும் புகாரெல்லாம் வரித்தொகை ஜாஸ்தியாகி விட்டதென்ற காரணத்தினாலல்ல. வரித்தொகையை செலவு செய்யும் முறையைப்பற்றியே அவர்கள் புகார் செய்கிறார்கள்.

சுதேச மன்னர்கள் காலத்தில் வசூலான பணமெல்லாம் இந்தியர் நன்மைக்காகவே செலவு செய்யப்பட்டது. இப்பொழுதோ நிலவரி வருமானமெல்லாம் இங்கிலாந்துக்கு வந்துவிடுகிறது. இந்தியர்களுக்கு அதனால் ஒருவித நன்மையும் ஏற்படவில்லை. சுமார் 60, 70 வருஷங்களாக நடந்துவரும் இந்தக்கொள்ளை, நாளேற ஏற விருத்தியடைந்து

கோண்டே வருகிறது. நம்முடைய நிருவாகம், கங்காநதிப் பிரதேசங்களிலுள்ள வளங்களை உரிஞ்சி எடுத்து தேம்ஸ் நதிக்கரையில் கொண்டுவந்து கக்குகிற ஒரு கடற்பாசிக்கு ஒப்பாக இருக்கிறது."

1827-ல் பம்பாய் கவர்னரா யிருந்தவரும், பிரிட்டிஷ் சாம்ராஜ்ய ஸ்தாபனத்துக்கு காரணபூதர்களா யிருந்தவர்களில் ஒருவருமான ஸர் ஜான் மால்காம், 1832-ல் பார்லிமெண்டு செலக்டு கமிட்டியாரால் விசாரிக்கப்பட்டபொழுது கூறியதாவது:—

வினா:—"அரசியல் நிருவாகம் ஒழுங்காய் நடத்தாத சுதேச மன்னர்களிடமிருந்து இந்தியாவை விடுவித்து நாம் அரசாட்சி நடத்தத் தொடங்கியது முதல் இந்திய விவசாயமும், வர்த்தகமும் அபிவிருத்தி யடைந்ததென்று தாங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா?

விடை:—"நான் அறிந்தவரையிலும் நம்முடைய அரசாட்சியால் சுதேசிகளுக்கு அதிக நன்மையுண்டாக வில்லையென்றே நினைக்கிறேன். 1803 ல் வெல்லிங்டன் பிரபுவுடன் நான் தென் மகாராஷ்டிரப் பிரதேசங்களுக்குச் சென்றிருந்தபொழுது, அந்தப் பிரதேசங்களில் விவசாயமும் வர்த்தகமும் மிகவும் செழிப்பாய் நடைபெறுவதைப் பார்த்தேன். கிருஷ்ணா நதிக்கரையில் பட்டவர்த்தனர் முதலிய இந்தியத் தலைவர்களின் ராஜ்யங்களில் விவசாயமும், வர்த்தகமும் செழிப்பா யிருப்பதுபோல வேறெந்த தேசத்திலும் செழிப்பாயிருப்பதை நான் பார்க்கவில்லை"

பம்பாய் அரசாங்கத்தில் உயர்தர உத்தியோகம் வகித்த சர் ஜியார்ஜ் வின்கேட்டும் இவ்வாறே அபிப்பிராயப் பட்டிருக்கிறார்.

இந்தியாவிலிருந்து வருஷா வருஷம் 31,300,000 பவுன் முதல் 37,000,000 பவுன் வரை இங்கிலாந்துக்குச்

சென்று கொண்டிருந்ததாய் கம்பெனி டைரக்டர்களில் ஒரு வரான கர்னல் சைக்ஸ் கூறியிருப்பதாக ஸ்ரீமான். தத்தர் எழுதிய ஒரு நூலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

வேறொரு கிழக்கிந்திய வியாபாரி 1853-வது வருஷத்திய பார்லிமெண்டு ரிப்போர்ட்டில் கூறியிருப்பதாவது:—"1847-வரை இந்தியாவின் ஏற்றுமதி 6,000,000 பவுனுகவும், இறக்குமதி 6,500,000 பவுனுகவும் இருந்தது. மீதம், இந்தியா இங்கிலாந்துக்குச் செலுத்தவேண்டிய கப்பம். அதாவது சுமார் 4,000,0.0 பவுன்.

ஸ்ரீ. எ. ஜே. வில்சன் 1884 மார்ச்சு மாதத்தில் பார்ட்னைட்லி ரிவ்யூ என்ற பத்திரிகையில் எழுதியதாவது:—"பல வழியில நாம் வருஷா வருஷம் இந்தியாவிலிருந்து 30,000,000 பவுன் கொண்டுவந்து விடுகிறோம். இந்திய சுதேசியின் வருஷவாரி வருமானம் சுமார் 5 பவுன். ஆகவே நாம் இந்தியாவிலிருந்து கொணடுவரும் பணம் 60 லட்சம் குடும்பத் தலைவர்களின் சம்பாத்தியத்துக்கு சமமாக இருக்கிறது. அதாவது இந்தியாவின் மொத்த வருமானத்தில் பத்தில் ஒரு பகுதிக்குமேல் நாம் கொண்டுவருவதாக ஏற்படுகிறது."

பெயர்பெற்ற ராஜ தந்திரியான லார்டு சாலிஸ்பரியும் இந்தக் கொள்ளையைக் கண்டித்து 1875-ல் வெகு உருக்கமாகப் பேசியிருக்கிறார். வேண்டுமானால் இன்னும் எவ்வளவோ திருஷ்டாந்தங்களை எடுத்துக் காட்டலாம். இந்தியர்கள்மீது அன்பும் அபிமானமுமுடைய சர் ஹேன்ரி காட்டன், ஸர் வில்லியம் வேட்டர்பார்ன், டப்ளியூ. எஸ். கேயின், எ. ஓ. ஹ்யூம் முதலிய மேதாவிகளின் அபிப்பிராயத்தை,வேண்டுமென்றே நாம் இவ்விடத்தில் திருஷ்டாந்தமாகக் கூறவில்லை. ஏனென்றால் இந்தியர் விடுதலைக்கு அவர்கள் அனுகூல அபிப்பிராயமுடையவர்கள். ஆகையால் அவர்கள் அபிப்பிராயத்தை பிரிட்டிஷார் மதிக்கமாட்டார்கள்.

ஆகவே இந்தியத்திரவியம் இங்கிலாந்துக்குக்கொள்ளை போவது நிச்சயமாகிவிட்டது. இனி யுத்தம் செய்து இந்தியாவைப் பிடித்ததாகக் கூறப்படுவதைக் கவனிப்போம். ஆங்கிலேயர் இந்தியாவில் நடத்திய யுத்தங்களில் ஒரு பைசாவாவது அவர்களுக்குச் செலவு ஏற்படவில்லை.

இந்தியப் பணத்தைச் செலவுசெய்தும், இந்தியத் துருப்புகளின் உதவிகொண்டும் அவர்கள் இந்தியாவைப் பிடித்தடக்கினார்கள். தம் வர்த்தக விருத்திக்காக ஆசியாவிலுள்ள சில நாடுகளைப் பிடிக்கவும், ஆராய்ச்சிகள், விசாரணைகள் முதலியன நடத்தவும் பிரிட்டிஷார் செலவு செய்த பணமெல்லாம் இந்திய பொக்கிஷத்திலிருந்தே செலவு செய்யப்பட்டது. இலாபமெல்லாம் பிரிட்டிஷாருக்குப் போயிற்று; நஷ்டமும் செலவும் இந்தியாவின் தலையில் பொறுத்தன.

வட்டிக்குவாங்கிய இந்தியக் கடன் 1792-ல் 70 லட்சம் பவுனாக இருந்தது. 1799-ல் அது ஒரு கோடியாயிற்று. பிறகு லார்டு வெல்லஸ்லியின் யுத்தங்கள் உண்டாக, இந்தியக்கடன் 1805-ல் 2 கோடி 70 லட்சம் பவுனாயிற்று. 1829-ல் அது மீண்டும் 3 கோடி 70 லட்சமாயிற்று. 1836 எப்ரல் 30உ இந்தியாவின் மொத்தக் கடன் 33,355,536 பவுன் என்று ஒரு கணக்கு வெளியாயிற்று. 1841—45-ல் இந்தியக் கடன் 4 கோடி 45 லட்சம் பவுன் ஆகிவிட்டது. ஆப்கன் யுத்தச்செலவும் இந்தியாமீது தான் சுமத்தப்பட்டது. அதற்குச் செலவான ஒரு கோடி 50 லட்சம் பவுனில் ஒரு சிறு பகுதியே பிரிட்டிஷ் சர்க்கார்பேரில் தாக்கப்பட்டது. அந்த ஆப்கன் யுத்தம் பிரிட்டிஷாரின் நன்மைக்காக, பிரிட்டிஷ் சர்க்கார் அனுமதிப்படி நடத்தப்பட்டதனால் பிரிட்டிஷாரே அந்தச் செலவு முழுமையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று ஜான் பிரைட்டு அபிப்பிராயப்பட்டார். சிந்துப் பிரதேசங்களைப் பிடிக்கவும், பாஞ்சாலத்தில் யுத்தம் நடத்தவும் நேர்ந்ததினால் 1850—51-ல்

இந்தியக்கடன் 5 கோடி 50 லட்சம் பவுன் ஆயிற்று. 1857-ல் சிப்பாய் கலகம் உண்டாக, கடன் தொகை, மொத்தக்கடனில் ஒரு கோடி ஜாஸ்தியாயிற்று. 1858 ஏப்ரல் 30வ கடன் தொகை 6 கோடி 25 லட்சம் பவுனுக இருந்தது. சிப்பாய் கலகத்தை அடக்க பிரிட்டிஷார் இந்தியப் பணத்தைச் செலவு செய்ததைப்பற்றி ஒரு ஆங்கில சரித்திராசிரியர் கூறுவதாவது:—"பன்றிக் கொழுப்பும், பசுக்கொழுப்பும் தோய்ந்த தோட்டாக்கள் காரணமாக உண்டான சிப்பாய் கலகத்துக்கு பிரிட்டிஷ் அதிகாரிகளே ஜவாப்தாரிகள். பிரிட்டிஷ் அதிகாரிகள் செய்த தவறினுல் கலகம் உண்டாயிற்ருனுலும், கலகத்தை யடக்கும் செலவு இந்தியர் தலையில் ஏற்றப்பட்டது. இந்தியச் சேனை முன்னம் சீன, ஆப்கன் யுத்தங்களுக்கு அனுப்பப்பட்டபொழுது, அந்த சேனைகளுக்கு ஏற்பட்ட செலவை பிரிட்டிஷார் இந்தியாவுக்குக் கொடுக்கவில்லை. ஆனுல் கலகத்தையடக்க பிரிட்டிஷ் துருப்புகள் அனுப்பப்பட்டவுடன் அந்தத் துருப்புகளின் செலவை பிரிட்டிஷார் இந்தியாவின் கணக்கில் தள்ளிவிட்டனர்."

"இந்தியாவைத் தவிர இதர குடியேற்ற நாட்டுக் காரியாலயங்களுக்குள்ள செலவுகளும், தரைப்படை, கப்பற்படை செலவுகளும் பிரிட்டிஷ் சர்க்காரே வகித்துவருகிருர்கள். ஆகவே, இந்தியா விஷயத்திலும் அத்தகைய செலவுகளை பிரிட்டிஷார் வகிப்பதே நியாயமாகும். ஆனுல் இந்திய சாம்பிராஜ்யப் படைச் செலவுக்காக பிரிட்டிஷார் இதுவரையிலும் ஒரு ஷில்லிங் கூட கொடுத்தறியார்கள்."

"குடியேற்ற நாடுகளுக்கும், பிற அந்நிய அரசாங்கங்களுக்கும் அமிதமாகப் பொருளுதவி செய்யும் பிரிட்டிஷார், தம் சொந்த இந்திய சாம்ராஜ்ய விஷயத்தில் லோபித்தனம் காட்டுவது ஆச்சரியமல்லவா ?



# அத்தியாயம் 25.

## ஏழைகள் கண்ணீர்

"இந்தியர் நாளுக்கு நாள் உடல்வலி குன்றிக் களைத்து வருகின்றனர். அவரது பிராணாதார சக்தி சிறுகச் சிறுகத் தேய்ந்து கொண்டிருக்கிறது" என ஸ்ரீ. எச். எம். ஹிண்ட்மான் கூறியிருக்கிறார்.

ஸ்ரீ. டப்ளியூ. எஸ். லிலி என்பவர் இந்தியாவைப்பற்றி எழுதிய ஒரு நூலில் கூறியிருப்பதாவது:—"ஏற்றுமதி விருத்தி, கைத்தொழில் அபிவிருத்தி, நகர நிர்மாணம் முதலியவைகளைக் கொண்டு ஒரு தேசத்தின் செழிப்பை நிர்ணயம் செய்தல் கூடாது. தேசமகா ஜனங்கள் மிதமான உழைப்பினால் தம் வாழ்நாளுக்கு தேவையானவற்றை சம்பாதித்து மன அமைதியுடன் வாழும் நாடே செழிப்புற்ற நாடாகும். ஆனால் இந்தியா அத்தகைய செழிப்புள்ள நாடா யிருக்கிறதா?

சுகம், வரையறுக்க முடியாத ஒருகுணம், அதன் உயர்வும் தாழ்வும் அவரவர் மனோநிலையைப் பொறுத்திருக்கிறது. வெப்ப மிகுந்த இந்தியாவில் சுகவாழ்வுக்கு அமிதமான பொருள் தேவை யில்லை. "உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்" இது நம்மவர் சுகவாழ்வின் லட்சியம். ஒரு துண்டு நிலம், நீர்வள முள்ள ஒரு கிணறு, ஒரு சிறு தோட்டம் இம் மூன்று முண்டானால் ஒரு இந்தியன் சுகமாக வாழ்வான். அத்துடன் ஒரு பசுவும் சேர்ந்தால் அவன் மகா பாக்கியசாலி. இதுதான இந்தியக்குடிகளின் ஜீவித நோக்கம். இந்தியாவிலே லட்சக்கணக்கான உழவர்கள் அரை ஏக்கரா நிலம் உழுது உயிர்வாழக் கஷ்டப்படு

-கிறார்கள். அவர்களது வாழ்நாள் முழுதும் உழைப்பும், களைப்பும், பட்டினியும், பசியுமாகவே இருக்கின்றன. சாமானிய மனிதரைப்போல் சுகவாழ்வு வாழ அவர்கள் கஷ்டப்படவில்லை; உயிர்போகாமல் காப்பாற்றுவதுதான் அவர்களது ஓயாக் கவலையாக இருக்கிறது. நீர்ப்பாசன வசதியுள்ள இடங்கள் இந்தியாவிலே மிகச் சொற்பம்; ஏனைய இடங்களில் எந்நாளும் பஞ்சமாகவே இருக்கிறது.

உலகத்திலேயே இந்தியர்கள்தான் மிகவும் வறியர்களா யிருக்கிறார்கள். ஐரோப்பிய, அமெரிக்க தேசங்களில் இத்தகைய வறுமை குடிகொண்டிருந்தால் அரசாங்கத்தை ஜனங்கள் ஒழித்து விடுவார்கள்.

ஸ்ரீ. ஆர்னல்டு லப்டன் கூறுவதாவது:—இந்தியர்களில் 100க்கு 72 பேரும் விவசாயிகளாகவே இருக்கிறார்கள். நிலமோ வளமற்றதாயிருக்கிறது. விவசாயி குடும்பத்துக்குத் தேவையானவைகளை அது அளிப்ப தில்லை. பிரிட்டிஷ் நிலங்களில் விளைவதில் பாதிகூட இந்திய நிலங்களில் விளைவதில்லை. எவ்வளவுதான் வருந்தி யுழைத்தாலும் பிரிட்டிஷ் நிலங்களில் தற்கால விளைவிற் பாதிதான் விளையுமென்று ஏற்படுமானால் பிரிட்டிஷ் விவசாயிகள் நிலைமை என்ன வாகுமென்று சிந்தித்துப் பாருங்கள். வேறு கதியில்லாததனால் இந்திய விவசாயி அல்லும் பகலும் உழைத்துக்கொண்டே இருக்கிறான். நிலத்தை வளப்படுத்தத் தன்னாலான முயற்சி யெல்லாம் செய்கிறான். மனைவிமக்களும் அவனுக்கு உதவி புரிகிறார்கள். என்ன பாடுபட்டாலும் விளைவு உயர்வதில்லை. இந்தச் சொற்ப விளைவிலிருந்து நிலவரி செலுத்தவேண்டும்; உப்புவரி முதலிய பல வரிகள் செலுத்தவேண்டும். கடைசியாக அவனுக்கு மீதமாவது சொற்பமே. இவ்வளவு சொற்பத்தைக்கொண்டு அவன் காலந்தள்ளுவதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. இம்மாதிரி எளிய வறிய வாழ்க்கையில் அவன் பழகிப்போனதனாலேயே அவன் உயிரோடிருக்கிறான்.

"அவன் இருப்பது ஒரு மண்குடிசை; புல்,வைக்கோல், இலே, தழைகள் அவன் வீட்டுக்கூரை. சாளரங்களோ, கட்டில்,நாற்காலி முதலிய கட்டுமுட்டுகளோ கிடையா. வெட்ட வெளிதான் சமையலறை. இடுப்புத்துணி ஒன்றுதான் அவனது ஆடை. அதை நனைத்தால் கட்டிக்கொள்ள வேறு துணி கிடையாது. அவன் சுருட்டுப் புகைப்பதுமில்லை; கள் குடிப்பதுமில்லை; பத்திரிகை வாசிப்பதுமில்லை; வேடிக்கை விநோதங்கள் பார்ப்பதுமில்லை. உள்ளதைக்கொண்டு திருப்தியாக வாழ வேண்டுமென்று அவனது மதம் போதிக்கிறது. ஆகவே அரை வயிறு கஞ்சி குடித்து அவன் ஆநந்தமாக வாழ்கிறான்."

இந்தியர் வறுமை உலகப் பிரசித்தமாயிருந்தும் சர்க்கார் பிரசாரம் செய்யும் கன்னி மேயோ அதை அலட்சியம் செய்ததைப்பற்றி ஆச்சரியப்படுவதற்கில்லை. இந்திய மாதாவைப்போல் சமீப காலத்தில் புரளி யுண்டுபண்ணியது லாஸ்டு டோமினியன் (The Last-Dominion என்னும் வேறொரு நூல். இந்திய ஸிவில் சர்வீஸில் உத்தியோகம் பார்த்த ஒருவர் ஆல் கார்ட்டு ஹில் (Al-Cart-Hill) என்ற மறை பெயருடன் அந்நூலை வெளியிட்டார். அதில் இந்திய கிராம வாழ்க்கையைப்பற்றி அவர் கூறியிருப்பதாவது:—
"இந்தியாவில் லட்சக்கணக்கான கிராமங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு கிராமத்திலும் சில மண் குடிசைகளும், ஒன்றோ இரண்டோ கோயில்களும், மரச்சோலைகளும், ஒரு கிணறும் கிராம மத்தியில் ஒரு சந்தியும் உண்டு. கிராமத்தைச் சுற்றி நன்செய் புன்செய்கள் காணப்படும். கிராம ஜனங்கள் பிறப்பது முதல் இறப்பதுவரை அங்கேயே வசித்து வருகிறார்கள். இவர்களே உண்மையான இந்தியப் பிரஜைகள். இந்திய நிலவரி இறுப்பவர்களும், இந்திய சாம்ராஜ்யத்தை உருப்படுத்தியவர்களும் இவர்களே.

"இந்தியர்கள் வாழவில்லை; அவர்கள் உயிரை கையில் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள்" என்று ஒரு மாகாணக்

சவர்னரா யிருந்த ஆங்கிலப் பிரபு சொல்லி யிருக்கிறார். இந்தியாவிலே வயிறார உண்டறியாதவர்களாக 4 கோடிப் பேர் இருப்பதாக சர். வில்லியம் ஹண்டர் கூறுகிறார்.

ஸ்ரீ. ஜே. எஸ். கார்ட்டன் கூறுவதாவது:—பிரிட்டிஷ் ஆட்சியில் ஜனத்தொகை மிகுந்தது உண்மைதான்; அதனால் ஜனங்கள் சுபிட்சமாக வாழ்கிறார்கள் என்று எண்ணிவிடக் கூடாது. இந்தியக் குடிகளின் வாழ்க்கை முறை விருத்தி யடையவோ, அவர்களில் பெரும்பாலார் தம் பழைய விவசாயத் தொழிலை விட்டுவிட்டு வேறு தொழில் செய்து ஜீவிக்கவோ நேர்ந்தால் மட்டுமே இந்தியர்களின் பொருளாதார நிலை உயர்ந்ததாக எண்ணலாம். இவ்விரண்டும் உண்டாகவே இல்லை. ஆனால் பிரிட்டிஷார் ஆட்சியில் கீழ்ச்சாதியார் நிலைமை மிகவும் மோசமாயிற்றென்பதே அறிவாளிகள் அபிப்பிராயம்.

இந்தியாவில் 10 கோடிப் பேருக்கு வருஷா வருஷம் நபர் ஒன்றுக்கு 5 டாலர் கூட வருமான மில்லை யென்று இந்தியன் விட்னஸ் என்ற கிறிஸ்தவப் பத்திரிகை கூறுகிறது.

தென்னிந்தியாவி லிருந்த ஒரு அமெரிக்கப் பாதிரி 1902-ல் எழுதியிருப்பதாவது:—"அநேகர் இரண்டு மூன்று நாளைக்கு ஒரு தடவை அரை வயிற்றுக்குண்டு காலந்தள்ளுகிறார். "பட்டினி கிடந்து சாகிறோம்" என்ற முறையீடே எங்கும் கேட்கப்படுகிறது. ஒரு கிராமத்திலுள்ள 300 பேர்களின் வருமானத்தை நான் கணக்குப்போட்டுப் பார்த்தேன். நபர் ஒன்றுக்கு ஒரு பார்திங் (farthing) கூட தினசரி வருமான மில்லை. அவர்கள் வாழவில்லை. மிகுந்த கஷ்டப்பட்டுழைத்து எப்படியோ வயிற்றை நிரப்பிக் கொள்கிறார்கள். கிராமத்தார் நிலை இப்படி யிருந்தும் கிராமத்தில் பஞ்ச மிருப்பதாக சர்க்கார் ஒப்புக்கொள்ள வில்லையாம். பஞ்சத்துக்கு இவ்வளவு போதாதா? வேறு என்ன வேண்டு

மென்று தான் சர்க்கார் நினைக்கிறார்களோ தெரியவில்லை. ஒரு குடும்பத்தின் தட்டு முட்டுகளை மதிப்பிட்டால் 10 டாலர் கூட விலை பிடியாது.

வங்காள கிராம ஜனங்களின் நிலைமையும் இதே மாதிரி யிருப்பதாக 1874—75-ல் வெளியான ஒரு ரிப்போர்ட்டி னால் தெரிகிறது.

ஸ்ரீ. எச். எம். ஹிண்மேன் கூறுவதாவது:—இந்தியர் கள் நாளுக்கு நாள் வறுமைப்பட்டு வருகிறார்கள். நில வரியோ ஏறிக்கொண்டே போகிறது. ஆண்டுதோறும் உண்டாகும் பஞ்சத்தினால் நாடு பாழடைந்து வருகிறது. வெளிநாட்டு அரசாங்கம் இந்தியர் இரத்தத்தை சதா உறிஞ்சிக்கொண் டிருக்கிறது.

சர்க்கார் வரி கொடுத்த பிறகு ஒரு வருஷக் குடும்பச் செலவுக்குப் போதுமான முதல் விவசாயிகளிட மில்லை யென்று சர் வில்லியம் ஹண்டர் கூறுகிறார்.

ஸ்ரீ. வில்ப்ரட் ஸ்காவன் ப்ளண்டு கூறுவதாவது:— "இந்தியாவில் அடிக்கடி கொடும் பஞ்சம் உண்டாகிறது. விவசாயிகள் வறுமையைச் சொல்ல இயலாது. வருஷா வருஷம் நிலவரியும் உயர்ந்து கொண்டு போகிறது. உப்பு வரி சிறிது குறைக்கப்பட்டதானாலும், அதைத்தாங்க ஏழை களுக்கு சக்தி யில்லை. பசிப்பிணியால் வரும் நோய்கள் எங்கும் பரவி விருத்தியடைந்து வருகின்றன. 25 வருஷங் களுக்கு முன்னிருந்ததை விட இப்பொழுது நிலைமை மிக மோசமாக இருக்கிறது. இந்த ஸ்திதியில் இந்தியர் உணவு வெளி நாட்டுக்குக் கொள்ளை போகிறது."

அலகாபாத்தில் கமிஷனராக விருந்த ஸ்ரீ. எ. ஜே லாரன்ஸ் எழுதுவதாவது:—"சொந்த நிலமில்லாத கூலிகள் நிலைமை மிகவும் பரிதாபகரமா யிருக்கிறது. புருஷனும்,

மனைவியும், இரண்டு குழந்தைகளும் சேர்ந்து ஒரு மாதம் முழுதும் பாடுபட்டாலும் மாதம் ஒன்றுக்கு 3 ரூபாய்க்கு மேல் கிடைக்கவில்லை. தானிய விலை சரசமாகவும், வேலை தட்டில்லாமலும், குடும்ப சுகம் சரியாகவும் இருந்தால் இந்த வருமானத்தில் தினம் ஒரு நேரம் உண்டு மட்டமான உடைகளணிந்து அந்தக்குடும்பம் ஒருவாறு காலந்தள்ள முடியும். மழைக்காலங்களிலும், பனிக்காலங்களிலும் நல்ல உடையில்லாததனால் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். உலர்ந்த சுள்ளிகளையும், சருகளையும் கூட்டித் தீமூட்டி குளிர் காய்வதுதான அவர்களுக்கு மிதமான பாக்கியம். நாட்டில் அடிக்கடி ஏற்படும் விறகுப் பஞ்சத்தினல் அந்தப் பாக்கியமும் அவர்களுக்கு அனுபவிக்க முடியாமலாகிறது.

சென்னை மாகாணப் பொருளாதார நிலைமையைப் பற்றி விசாரணை செய்ய சென்னை சர்க்காரால் நியமனம் செய்யப்பட்டிருந்த ஸ்ரீ. எஸ் பி. பாத்ரோ சென்னைக் கவர்னர் தலைமையில் கூடிய ஒரு கூட்டத்தில் ஒரு பிரசங்கம் செய்தார். அப்பிரசங்கத்தில் அவர் கூறியதாவது:—

கிராமாந்தரங்களில் உள்ள ஒரு குடும்பத்தின் வரவு செலவு கணக்கைப் பார்வையிட்டேன். வருஷாவருஷம் அந்தக் குடும்பத்துக்கு 22 ரூபா 9-அணு கடன் ஏற்படுகிறது. தினம் ஒரு நேரம் வயிருர உண்ணவும் முதலில்லை. சிகாகோல் டிவிஷனில் நன்செய் புன்செய்கள் உடைய ஒரு ஜெமிந்தாருககு வருஷ வருமானம் 129 ரூ. 8-அணு. குடும்பச்செலவு 181 ரூ. 8-அணு. கடன் ரூபா 52. ஒரு கலியாணத்துக்காக 1907-ல் அவர் 380 ரூபா கடன் வாங்கினர். வருஷா வருஷம் நெல்லை விற்றுவிட்டு மலிவான தானியங்கள் வாங்கி உண்டு மீதம் பிடித்து 1913-ல் அந்தக் கடனைத் தீர்த்தார். ஜனவரி முதல் மே மாதம் வரைத்தான் அந்தக் குடும்பத்துக்கு தினம் ஒரு நேரம் பூராச்சாப்பாடு உண்டு."

சர்க்கார் மதிப்புப்படி ஒரு இந்தியனின் வருஷ வருமானம் 35 ரூபாய். 1882-ல் கணக்கெடுத்த லார்டு குரோமர்,

வருஷ வருமானம் 27 ரூபா என்று மதிப்பிட்டிருக்கிறார். விவசாயிகளில் 100-க்கு 85 பேருக்கு வருஷ வருமானம் 30 ரூபாய் என்று லார்டு. கர்ஸன் மதிப்பிட்டார். இந்தியா மந்திரியா யிருந்த சர். ஜார்ஜ் ஹாமில்டன் 1901-வது வருஷத்திய வரவு செலவுததிட்ட வாதகாலத்தில் இந்தியர்களின் சராசரி வருமானம் 30 ரூபா என்று கூறினார். இவ்விஷயத்தில் மிக நுட்பமாகவும், ஜாக்கிரதையாகவும் பல ஆராய்ச்சி நடத்திய ஸ்ரீ. வில்லியம் டிக்பி சராசரி வருமானம் 17 ரூ. 8-அணுவுக்கு மேலில்லை என்று கூறுகிறார்.

ரேவரண்டு டாக்டர் சண்டர்லாந்து கூறுவதாவது:— "நேரில் பார்த்தவர்களுக்கு மட்டுமே இந்தியப் பஞ்சத்தின் கொடுமையைப் பற்றி சரியாக அறியமுடியும். நான் நேரில் பார்த்திருக்கிறேன். இந்தியக் கிராமங்களில் வறுமை குடி கொண்டிருக்கிறது. ஆபத்துக் காலத்துக்கென்று அவர்களுக்கு எதுவும் மீதம்வைக்க முடியவில்லை. வறுமையின் கொடுமையால் அவர்கள் கொள்ளை நோய்க்கு பலியாகிவிடுகிறார்கள். பிளேக்கினால் 1901 ல் 272,000 பேரும், 1902 ல் 500,000 பேரும், 1903 ல் 800,000 பேரும் 1904 ல் 1,000,000 பேரும் இறந்திருக்கிறார்கள். இப்பொழுதும் அந்நோய் தடுப்பாரின்றிப் பரவிக்கொண்டுதா னிருக்கிறது. நீண்டகாலமாக அரைப்பட்டினி கிடந்து ஜனங்களின் சக்தி குன்றிவிட்டது. வறுமை ஒழிந்தால் தான் கொள்ளை நோய்கள் ஒழியும். இந்தியப் பஞ்சத்தின் உண்மையான காரணம் மழை யில்லாமையுமல்ல; அதிக ஜனத்தொகையுமல்ல. கொடிய வறுமையே அதற்குக் காரணம்."

வருமான வரி செலுத்துவோரின் தொகையைக் கவனித்தால் இந்திய வறுமையின் காரணம் தெளிவாக விளங்கும். வருமானவரி செலுத்துபவர்களின் தொகை எவ்வளவென்று 1824 மார்ச்சு 8உ இந்திய சட்டசபையில் ஒரு கேள்வி கேட்கப்பட்டது. 1922—23 ல் 283,242 பேர் வருமானவரி செலுத்தியதாகப் பதிலளிக்கப்பட்டது. சுமார் 24 கோடி ஜனங்களில் வருமானவரி செலுத்தலாயக்

குடையவர்கள் 3 லட்சம் பேர் கூட இல்லை. ஆகவே இந்தியாவின் செழிப்பைப் பற்றிக் கூறவும் வேண்டுமா ?

உண்மை நிலை இவ்வாறிருக்க, இந்தியர்களின் பொருளாதார நிலையைப்பற்றிக் கன்னி மேயோ பின்வருமாறு கூறுகிறார்:—"பணச் செழிப்பினால் இந்திய விவசாயிகள் தமக்குத் தேவையில்லாத சாமான்களையும் வாங்கி பணத்தைப் பாழாக்குகிறார்கள். 1926 பெப்ருவரியில் நடைபெற்ற ஆலிகர் திருவிழாச்சந்தையில் ஒரு வாரத்தில் 1000 பவுன் விலைபெறுமான (Boots) கால் ஜோடுகள் விற்பனையாயின. 20 வருஷங்களுக்கு முன் விவசாயிகள் ஜோடு போடுவதே கிடையாது. இதைத்தவிர குடைகள், விளக்குகள், வர்ணமிட்ட டிரங்கு பெட்டிகள், முதலியன ஏராளமாக விற்பனையாயின. இவைகளை யெல்லாம் வாங்கியவர்கள் சாமானிய விவசாயிகளே. தேயிலை, சிகரட்டு, தீப்பெட்டி, லாந்தல், பொத்தான், கத்திகள், கண்ணாடி, கிராமபோன் முதலியன வாங்குவதிலும் விவசாயிகள் பணம் செலவு செய்கிறார்கள். 10, 15 வருஷங்களுக்கு முன் இவர்கள் இத்தகைய சாமான்கள் வாங்கினவர்களல்ல. மூன்றுவது வகுப்பு வண்டியில் எப்பொழுதும் ஜனக்கூட்டம் அதிகமாயிருப்பதிலிருந்தும் விவசாயிகளின் பணச் செழிப்பை அறிந்து கொள்ளலாம். 1924—25 ல் மூன்றுவது வகுப்புப் பிரயாணிகள் தொகை 581,804,000 ஆக இருந்தது. இவர்களெல்லாம் எங்கே எதற்காகப் போகிறார்கள் என்று நான் கேட்டேன். போகிறது இன்ன இடமென்றில்லை. கலியாணம் திருவிழாப் பார்க்கப் போகிறவர்களும் உண்டு. சிநேகிதர்களைப் பார்க்கச் செல்லுகிறவர்களுமுண்டு. தொழில் நிமித்தம் பிரயாணம் செய்கிறவர்களுமுண்டு. ஒரு காரியமு மில்லாமல் வேடிக்கைப் பிரயாணம் செய்கிறவர்களும் உண்டு" என எனக்குப் பதிலளிக்கப்பட்டது."

பூட்ஸ் வர்த்தகத்தைப் பற்றி கன்னி மேயோவுக்குத் தகவல் கொடுத்தது யார்? மேனாட்டு நாகரீகம் பெற்றவர்

களே சாதாரணமாக பூட்ஸ் அணிகிருர்கள். கிராம ஜனங்கள் இன்றும் அவ்வளவு பரிஷ்காரிக ளாகவில்லை. இருபது வருஷங்களுக்கு முன்னுள்ள விவசாயிகளின் நிலைமையைப்பற்றி அவருக்குத் தகவல் கொடுத்தது யார்? இந்தத் தகவல்களை பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள்தான் கொடுத்திருக்கவேண்டும். சர்க்கார் பூசாரிக ளெல்லாம் கன்னி மேயோவைப் போலவே கூறுகிருர்கள். உத்தியோகஸ்தர்களாகிற கண்ணுடி மூலம் கன்னி மேயோ பார்த்ததனுல் விவசாயிகளின் உண்மையான பொருளாதார நிலை அவர் கண்ணுக்குப் புலனுக வில்லை. இருப்புப்பாதை போடப்பட்டது முதல் நாட்டு வாகனங்கள் ஒழிந்துவிட்டன. ஆனுல் ஒரு காரியமுமில்லாமல் விநோதப்பிரயாணம் செய்யுமாறு விவசாயிகள் பணச்செழிப் படையவில்லை.

பம்பாய் விவசாய இலாகா டைரக்டராயிருந்த டாக்டர் ஹாரால்டுமான் கூறி யிருப்பதாவது:—“விவசாயிகளின் வாழ்க்கை முறை சிறிது திருந்தியிருப்பது வாஸ்தவந்தான். ஆனுல் விவசாயிக ளெல்லாம் திருத்த மடைந்துவிட்டார்கள் என்று கூறமுடியாது. விவசாயிகளில் பெரும்பாலார் மாமூல் வாழ்க்கை நடத்தவும் சக்தியற்றவர்களாயிருக்கிருர்கள். விவசாயிகளின் வயிற்றை நிரப்பும் மார்க்கம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகே மற்ற சீர்திருத்தங்களைப் பற்றி யோசிக்கவேண்டும். ஜனங்கள் பசி நோயால் வருந்துவதே இந்தியாவின் சகல குறைபாடுகளுக்கும் காரணம். ஜனங்களுக்கு ஏதாவது வேலைகொடுக்கவேண்டும். வருஷத்தில் 6 மாத காலம் அவர்கள் வீணுய்ப் போக்கிவிடக் கூடாது. இதர விஷயங்களில் மகாத்மா காந்தியின் உபதேசம் எப்படியிருந்தாலும் சரி; ராட்டினம் சுழற்றுவதால் இந்தியர் வறுமை ஒழியுமென்று அவர் கூறுவது சரியான அபிப்பிராயமாகும். அதனுல் உண்டாகும் வருமானம் சொற்பமானுலும் ஒன்றுக்கு முதவாமல் சோம்பேறிகளாயிருந்தவர்களுக்கு பெரிய காரிய மல்லவா? ஆகவே சர்க்காரும் இவ்விஷயத்தில் கவனம் செலுத்தினுல் நல்லது.

ஜனங்கள் பசியால் வாடும்போது எத்தகைய சீர்திருத்தமும் செய்ய இயலாதென்று டாக்டர் மான் கூறியது சரியான அபிப்பிராயம். அவர் 20 வருஷகாலம் இந்தியக் கிராம ஜனங்களோடு நெருங்கிப் பழகியவர். அவர் சுயராஜ்யக் கட்சியைச் சேர்ந்தவருமல்ல; ஹோம் ரூலருமல்ல; அமிதவாதியுமல்ல. அவர் ஒரு உயர்தர சர்க்கார் உத்தியோகஸ்தர்.



## அத்தியாயம் 26.

# கொள்ளை வரலாறு



அமெரிக்கர்களுக்கு நன்மை யளிக்கக்கூடிய இந்தியத் தகவல்களை அவர்களுக்குத் தெரிவிப்பதே கன்னி மேயோ இந்திய மாதா எழுதி வெளியிட வந்ததன் முக்கிய நோக்கம். இந்தியாவில் பொருளாதார நிலை எத்தகையதென்றும், அதைத் தமக்கு எவ்வாறு சாதகப்படுத்திக் கொள்ளலாமென்றும் அறிய அமெரிக்கர் ஆவலுடையவர்களாயிருக்கக்கூடுமென்று சிலர் நினைக்கலாம். இந்தியர்களில் செல்வ நிலை விருத்தியடைந்தால் அவர்கள் அமெரிக்கர்களோடு வர்த்தகம் செய்யவும் அதனால் அமெரிக்கர்களுக்கு இலாபம் ஏற்படவும் வசதியுண்டாகும் என்ற விஷயத்தை அமெரிக்கர் அறிவது அவர்களுக்கு நன்மையானதே. ஆனால் பொருளாதார விஷயங்களில் கன்னி மேயோவுக்கு ஞானமில்லாமையால் அமெரிக்கர்களுக்கு அவரால் ஒருவித உதவியும் உண்டாகாது. பொருளாதார விஷயங்களின் பிரதமக் கொள்கைகள் கூட கன்னி மேயோவுக்குச் செவ்வையாகத் தெரியாது. இந்தியப் பொருளாதார நிலைமையையும் அவர் உள்ளபடி அறிந்து கொள்ளவில்லை. பொருளாதார விஷயங்களில் விசேஷ பாண்டித்தியம் பெற்ற தாதாபாய் நௌரோஜி, ரானடே, ஜோஷி, வாச்சா முதலியவர்களின் நூல்களைப்பற்றி கன்னி மேயோ கேட்டது கூடக் கிடையாது. அவர்களைப் பற்றிய குறிப்புகளை இந்தியமாதாவில் காணக்கிடைக்கவில்லை. தற்காலப் பொருளாதார நிபுணர்களில் ஒருவரான ஆசிரியர் கே. டி. ஷாவையுங்கூட கன்னி மேயோ அலட்சியம் செய்துவிட்டார். என்னுடைய புஸ்தகங்களி லிருந்து அவர் சில மேற்கோள்களை எடுத்தாண்டிருக்கிறார். ஆனால் இந்தியாவுக்கு இங்கிலாந்தின் கடப்பாடு என்ற எனது நூலி லிருந்து ஒரு மேற்கோ

ளாவது அவர் எடுத்ததாகத் தெரியவில்லை. ஆகவே இந்தியப் பொருளாதார விஷயங்களைப்பற்றிப் பூரணஞான மில்லாத கன்னி மேயோ, அமெரிக்கர் இந்தியப் பொருளாதார நிலையை அறியத் தவித்துக் கொண்டிருக்கும் இக்காலத்தில் இந்தியமாதாவை எழுத முன்வந்தது மிகவும் துணிகரமான ஒரு செயலாகும். ஆங்கில சினிமாப்படக் கம்பெனியாரின் நன்மையைக் கருதி அமெரிக்க சினிமாப்பட கம்பெனியாரை ஒழிக்க இந்தியா சர்க்கார் முயற்சிசெய்து கொண்டிருக்கிறார்கள். இதை அவர்கள் அறிவது அவர்களுக்குப் பிரயோஜனமாக விருக்கும். அவ்வாறு செய்யாமல் கன்னி மேயோ நமது மதக்குப்பைகளையும் ஆசாரக் குப்பைகளையும் கிண்டிக் கிளறத் தொடங்கி யிருக்கிறார். இந்தியர்கள் தமக்குத் தேவையானவைகளை இங்கிலாந்தி லிருந்து என் ஜாஸ்தியாக இறக்குமதி செய்கிறார்கள் என்றும் இறக்குமதியில் 100 க்கு 1 கூட அமெரிக்காவி லிருந்து கொண்டு வாராததற்குக் காரணமென்னவென்றும் அமெரிக்கக் கைத் தொழிலாளர் அறிய உண்மையாகவே ஆவலுடையவர்களாக இருப்பார்கள்.

"எங்கள் நாட்டில் ஏராளமாகத் தேயிலை உற்பத்தியாகிறது. ஆனால் எல்லாவற்றையும் வெளிநாட்டார் கொண்டு போய்விடுகிறார்கள்" என்று ஏதோ ஒரு இந்தியர் புகார் செய்தாராம். உடனே "நீங்கள் விலைக்கு விற்கிறீர்களா அல்லது சும்மா கொடுக்கிறீர்களா" என்று கன்னி மேயோ மிகவும் ஆணித்தரமாக ஒரு கேள்வி கேட்டாராம். அதற்கு "விலைக்குத்தான் விற்கிறோம். ஆனாலும் தேயிலை யெல்லாம் போய்விடுகிறதே" என்று இந்தியர் விடையிறுத்தாராம். ஆனால் இவ்வாறு கன்னி மேயோவிடம் விடையிறுத்த வித்வான் யார் என்று நாம் அறிய விரும்புகிறோம்?

## இராணுவச் செலவு

இராணுவச் செலவைப்பற்றி எழுதும்போதும் கன்னி மேயோ தமது அறியாமையை வெளிப்படுத்தி விடுகிறார். அவர் முடிவுகட்டும் தோரணையைப் பாருங்கள்.

"இராணுவத்தின் தொகை அமிதமாக யிருக்கிறது" என்று இந்திய அரசியல் வாதி குறைகூறுகிருர். "உங்கள் பாதுகாப்புக்கும் க்ஷேமத்துக்கும் அது செய்யவேண்டிய வேலைகளைக் கவனித்தால் இராணுவத்தொகை அவ்வளவு பிரம்மாண்டமாகத் தோற்றுகிறதா" என்று கேட்டால், "என்னவோ? அதையொன்றும் நான் ஆராய்ந்து பார்த்த தில்லை. ஆனாலும் இந்திய வருமானத்தின் பெரும்பகுதி யை அது விழுங்கத்தான் செய்கிறது" என்று விடை கிடைக்கிறது"

விநோதக் கதைகள் எழுதுவோர் இவ்வாறு கூறினுல் அது பொருத்தமாக இருக்கும். ஆனுல் பொருளாதார ஆராய்ச்சி செய்வோர் இவ்வாறு ஒருபோதும் வேடிக்கை யாகப் பேசக்கூடாது. இவ்விஷயங்களை ஆராய்ந்து பார்த்த வர்கள் எத்துணையோ பேர் இருக்கிறுர்கள். அவர்களை கன்னி மேயோ ஏன் கேட்டறியவில்லை? அவ்வாறு ஆராய் ந்து பார்த்தவர்களில் பம்பாய் சர்வ கலாசாலைப் போத காசிரியர் ஸ்ரீ. கே. டி. ஷாவும் ஒருவர். பொருளாதார விஷய மாக அவர் பல நூல்கள் எழுதி யிருக்கிறுர். இஞ்சு கேப் கமிட்டியாருக்கும் அவர் ஒரு யாதாஸ்து அனுப்பியிருக் கிறுர். ஸ்ரீ. ஷா தயார்செய்த கீழ்வரும் ஜாபிதா இந்தப் பிரச்சினையை விளக்க மிக உதவியா யிருக்கும்.

# ஜாபிதா.

| தேசங்களின் பெயர் | மொத்த வருமானம் | மொத்தச் செலவு | இராணுவச் செலவு |
|---|---|---|---|
| இந்தியா — — | 13322 லட்சம் ரூபா | 14239 லட்சம் ரூபா | 9190 லட்சம் ரூபா |
| கிரேட் பிரிட்டன் — — | 1426091 ல. ப. | 11954 லட்சம் ப. | 6420 லட்சம் ப. |
| ஆஸ்திரேலியா — — | 617·8 லட்சம் ப. | 646·0 லட்சம் ப. | 312·0 லட்சம் ப. |
| கானடா — — | 893·8 லட்சம் ப | 741·9 லட்சம் ப. | 179 லட்சம் ப. |
| தென்னாபிரிகா — — | 276·7 லட்சம் ப. | 256·9 லட்சம் ப. | 134 லட்சம் ப. |
| ஸ்பெயின் — — | 19766·6 லட்சம் பாசெட்ஸ் | 25507·9 லட்சம் பாசெட்ஸ் | 4503 6 லட்சம் பாசெட்ஸ் |
| பிரான்ஸ் — — | 224509 லட்சம் பிராங்கு | 249320 லட்சம் பிராங்கு | 50274 லட்சம் பிராங்கு |
| இத்தாலியா — — | 176030 லட்சம் லயர் | 204548 லட்சம் லயர் | 35537·7 லட்சம் லயர் |
| அமெரிக்கா — — | 30451·8 லட்சம் டாலர் | 31434·1 லட்சம் டாலர் | 12014·4 லட்சம் டாலர் |
| ஜப்பான் — — | 13192·0 லட்சம் யென் | 13992·9 லட்சம் யென் | 6464·0 லட்சம் யென் |

இராணுவச் செலவு தாங்கமுடியாத அளவு அவ்வளவு பெரும்பாரமாக இருப்பதாலும் அதில் பெரும்பகுதி பிரிட்டனில் பிரிட்டிஷ் இராணுவத்துக்காகச் செலவு செய்யப்படுவதாலும் அதை இந்தியர்கள் இராணுவக் கொள்ளையென்றே மதிக்கிறார்கள்.

இங்கிலாந்தின் மொத்த இராணுவச் செலவு வருமாறு:—

| | | |
|---|---|---|
| 1922—23. | 18·16 | கோடி ரூபா |
| 1923—24. | 18·20 | கோடி ரூபா |
| 1924—25. | 15·03 | கோடி ரூபா |

இராணுவ விஷயங்களைப்பற்றி விசாரணை நடத்திய இஷர் கமிட்டியார், யாதாஸ்துடன் அனுப்பிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்கள்.

"இந்திய ராணுவத்தை பிரிட்டிஷ் இராணுவத்தின் ஒரு பகுதியாகவே நாங்கள் மதிக்கவேண்டியதாக ஏற்படுகிறது."

இந்தியப்படை சாம்ராஜ்யப் பாதுகாப்புக்குத் தேவையாக இருக்குமானால் அதற்குள்ள செலவில் பிரிட்டன் பங்கு கொள்ளுவதே நியாயமாகும். இப்பொழுது பிரிட்டன் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை மகிழ்விக்கப் பாட்டு பாடுகிறது. பாடுகிறவன் செலவை இந்தியா ஒத்துக்கொள்ள வேண்டுமாம். பாடுகிறவன் யார்? அவனும் பிரிட்டிஷானே. இந்திய எல்லைக்கப்பால் இந்தியப்படை அனுப்பப்படும் காலத்து சிலவேளை தற்காலீகமாக பிரிட்டிஷார் செலவு ஒத்துக் கொள்வதுண்டானாலும் நிலவரமாக அவர்கள் அந்தச் செலவை ஒத்துக்கொளவதில்லை.

ஆசிரியர் ஷா கூறுவதாவது:—எல்லைப் பிரதேசங்களைப் பிடிப்பது இந்தியச் சேனையின் நோக்கமாகவும்,

ஆசியாவில் எல்லா சக்திகளும் சமநிலையில் இருக்கவேண்டியது அவசியமாகவும் இருக்கலாம். ஆனால் இவ்விரு விஷயங்களும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குத் தேவையானவைகள். இவற்றால் இந்தியாவுக்கு எவ்வளவு நன்மையுண்டாகுமோ அவ்வளவு நன்மை பிரிட்டனுக்கு முண்டாகும். பிரிட்டிஷ் இராணுவச் செலவில் பெரும்பகுதி இந்தியா மீதே தாக்கப்பட்டிருக்கிறது. இந்த இராணுவத்தினால் ஏற்படும் நன்மை சாம்ராஜ்யம் முழுதுக்கும் சேருமானாலும் இங்கிலாந்துக்குத் தான் அதில் ஜாஸ்திப்பங்குண்டு. ஆகவே ஏகாதிபத்திய க்ஷேமத்துக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் இந்தியப்படையின் செலவில் ஒரு பகுதியை இங்கிலாந்து என் ஏற்றுக்கொள்ளக்கூடாது? பூகோளச் சார்பாகவும் அரசியல் சார்பாகவும் பார்த்தால் பிரிட்டிஷாரின் கடற்படை யுதவி இந்தியாவுக்குத் தேவையேயில்லை. ஒருகால், வெளிநாட்டுச் சத்துருக்கள் கடல்கடந்து வந்தாலும் அவர்கள் முன்னேற்றத்தைத் தடுக்க பெரிய பாலை வனங்களும் மலைகளும் இருக்கின்றன. ஆகவே கடல் மார்க்கம் சத்துருக்கள் வந்து விடுவார்கள் என்ற பயம் இந்தியாவுக்கு இல்லை. இந்திய வெளி நாட்டு வர்த்தகம் ஜாஸ்தியாக இருந்தாலும் அதனால் இந்தியாவுக்கு அதிக நன்மை ஏற்படவில்லை. இங்கிலாந்துக்குத்தான் அதிக நன்மையுண்டாகிறது ஆகவே கடற்படைச் செலவை இந்தியா மீது தாக்குவதும் ஒழுங்கல்ல."

இவ்விஷயங்களை யெல்லாம் கவனிக்க கன்னி மேயோவுக்கு நேரமோ விருப்பமோ இருந்ததாகக் காணவில்லை. சமீபத்தில் நடந்த மகாயுத்தத்துக்கு இந்தியா 1,338,620 வீரர்களை அனுப்பிற்று; சர்க்கார் கணக்கின்படி பணமாக 1462 லட்சம் பவுனும் உதவி யிருக்கிறது. இதுதவிர சாமான்களும் ஏராளமாக அனுப்பப்பட் டிருக்கின்றன. பிரிட்டிஷார் நன்மைக்கு இந்தியா செய்த இந்த தியாகத்துக்கு சமமாக, பிரிட்டிஷார் இந்தியாவுக்காக எப்பொழுதாவது ஏதாவது தியாகம் செய்ததுண்டா?

இந்தியப் படையில் 2 இந்திய வீரருக்கு ஒரு பிரிட்டிஷ் வீரன் வீதம் படை அமைப்பு இருந்துவருகிறது. பிரிட்டிஷ் வீரர்களுக்கு இந்திய வீரர்களைவிட ஜாஸ்தி செலவு ஏற்படுகிறது.

சேனையை இந்திய மயமாக்க வேண்டுமென்று தாராள கட்சியார், தேசியவாதிகள் உள்ளிட்ட சமஸ்த இந்திய அரசியல் வாதிகளும் வெகுகாலமாகப் போராடி வருகிறார்கள். அவ்விஷயத்தைப்பற்றி விசாரணை செய்வதற்காக சர் ஆண்ட்ரு ஸ்கீன் தலைமையில் சர்க்கார் ஒரு கமிட்டியையும் நியமித்தார்கள். அந்த கமிட்டியார் நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாக இந்தியப்படையை இந்திய மயமாக்கச் சில சிபார்சுகளும் செய்தார்கள். அநதச் சொற்ப சிபார்சுகளையும் கூட சர்க்கார் அலட்சியம் செய்துவிட்டார்கள்.

## இயற்கைப் பொருட் கொள்ளை

கைத்தொழில் விஷயங்களில் இந்தியா பின்னணியில் நின்று வருவதும் பொதுவாகக் கூறப்படும் ஒரு குறை. விவசாயமே இந்தியர்களின் முக்கிய தொழில். ஆனால் இந்திய இயற்கைப் பொருள்கள் வெளிநாட்டுக்குக்கொள்ளை போகின்றன. 1913—14 ல் இந்திய ஏற்றுமதியில் 23·4 பாகம் பிரிட்டனுக்குச் சென்றது. 1924—25 ல் அது 25·5 ஆக உயர்ந்தது. 1913—14 ல் இந்தியாவுக்கு வந்த சரக்குகளில் 100 ல் 64·1 பாகம் கிரேட்பிரிட்டனி லிருந்து வந்தது. 1924—25 ல் 100 ல் 54·1 பாகம் வந்தது.

## வெளிநாட்டுக்குப் போகும் இயற்கைப் பொருள்கள்

சணல்:—இது கிரேட்பிரிட்டனுக்கு நாராக ஜாஸ்தியாய் ஏற்றுமதி செய்யப்படுகிறது.

உரோமம்:—இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் உரோமம் முழுதும் அநேகமாக கிரேட் பிரிட்டனுக்கு செல்லுகிறது. இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான 1,756,448 பவுன் விலையுள்ள உரோமத்தில் 1,704,785 பவுன் விலை மதிப்புள்ள உரோமம் கிரேட் பிரிட்டனுக்குச் சென்றது.

கோதுமை:—1908—09 வரை இந்தியாவிலிருந்து ஏற்றுமதியான கோதுமை முழுதும் கிரேட் பிரிட்டனுக்கே சென்று வந்தது. 1909—10 ல் ஏற்றுமதியான 8,500,000 பவுன் விலை மதிப்புள்ள கோதுமையில் 7,000,000 பவுன் விலை மதிப்புள்ள கோதுமையை பிரிட்டன் பெற்றது. 1911—12 ல் ஏற்றுமதியான 8,598,972 பவுன் விலை மதிப்புள்ள கோதுமையில் 6,741,190 பவுன் கோதுமை பிரிட்டனுக்குச் சென்றது. 1912—13 ல் 11,795,816 விலை மதிப்புள்ள கோதுமையில் 8,380,422 பவுன் கோதுமை பிரிட்டனுக்குப் போயிற்று.

பார்லியும் இதரவித்துகளும்:—இவ்விரண்டும் கிரேட்பிரிட்டனுக்கு மிகுதியாய் ஏற்றுமதியாகின்றன.

தேயிலை:—இந்தியாவில் இருந்து ஏற்றுமதியாகும் தேயிலையில் 3-ல் 2 பகுதிக்குமேல் பிரிட்டனுக்குச் செல்கிறது.

தோல்:—இதுவும் பிரிட்டனுக்கே ஜாஸ்தியாக ஏற்றுமதியாகிறது.

ஆகவே, பிரிட்டன் இந்தியாவோடு சம்பந்தம் வைத்துக் கொள்வதனால் பிரிட்டனுக்கு ஒருவித நன்மையும் ஏற்படவில்லை யென்று கன்னி மேயோ கூறுவது எவ்வளவு தப்பான அபிப்பிராயம்!

# அத்தியாயம் 27.

# கொள்ளை வரலாறு.

(தொடர்ச்சி)

## இருப்புப்பாதை

இந்தியாவில் இப்பொழுது 40 ஆயிரம் மைல் நீளம் இருப்புப் பாதை போடப்பட்டிருக்கிறது. ஆனால் இந்தப் பாதை எவ்வாறு போடப்பட்டது, எவ்வாறு பணம் செலவு செய்யப்பட்டது, எவ்வாறு நடத்தப் படுகிறது என்று ஆராய்ந்து பார்த்தால் அநேக ரஸகரமான விஷயங்கள் வெளியாகாமல் போகா. ரயில்வே நிர்வாகிகள் ஒரு பொழுதும் இந்திய க்ஷேமத்தை மதித்ததே கிடையாது. பிரிட்டிஷ் வியாபாரத்தை விருத்தி செய்வதும், பிரிட்டிஷ் பாதுகாப்புக்கு தேவையான இடங்களைப் பரஸ்பரம் இணைப்பதும் மட்டுமே இருப்புப்பாதை நிர்வாகிகளின் முக்கிய நோக்கமாக இருந்து வருகின்றன. இரும்புப் பாதைகள் போட்டதும் நடத்துவதும் பிரிட்டிஷ் கம்பெனிகளே. அதில் வரும் நஷ்டங்களை அவர்கள் எற்றுக் கொள்வ தில்லை. இந்தியர்களை கசக்கிப் பிழிந்து கோடிக் கணக்கான ரூபாய்களைக் கொள்ளைகொண்டு இருப்புப் பாதைக்கு உபயோகப்படுத்திக் கொண்டார்கள். உண்மை இவ்வித மிருந்தும் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளை அவர்கள் நடத்திவரும் விதம் மிக்க கேவலமாகவும்,பரிதாபகரமாகவும் இருக்கிறது. மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளின் பணத்தால் கொழுத்துவரும் சில கம்பெனிகள் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளைக் கூலிகள் என்று இகழவும் தொடங்கிவிட்டன.

இருப்புப் பாதைக்கு சொற்ப வட்டியில் முதல் போட்டதற்காக, இந்தியர் பிரிட்டிஷாருக்கு நன்றி செலுத்த வேண்டுமென்று கன்னிமேயோ கூறுகிறார். ஆனால் பிரிட்டிஷார் இந்தியாவுக்கு சொற்ப வட்டிக்குப் பணம் கடன் கொடுக்கவே இல்லை. ஒப்பந்த ஏற்பாட்டை மனதில் வைத்துக்கொண்டு கன்னிமேயோ இவ்வாறு கூறுகிறதாகத் தெரிகிறது. அந்த ஏற்பாட்டின்படி ரயில்வே கம்பெனியாருக்கு ஒரு சிறு வட்டி விகிதம் கொடுப்பதாக சர்க்கார் வாக்களித்தார்கள். ஆனால் சொற்ப வட்டிக்கு பிரிட்டிஷாரிடமிருந்து பணம் கடன் வாங்கினது கிடையாது. கம்பெனியார் அதிக லாபம் பெறுவதை சர்க்கார் தடுக்கவுமில்லை.

இருப்புப்பாதை ஏற்பாட்டினால் கம்பெனிகளுக்கு எத்தகைய நஷ்டமும் கிடையாது. வீண் செலவாலும் நிருவாகப் பிழையாலும் வரும் நஷ்டங்களையெல்லாம் தாங்குவது இந்தியக் குடிகளே. இலவசமாகப் பூமி பெறுதல் முதலிய அநேக சுதந்தரங்களையும் கம்பெனியார் அனுபவித்து வருகிறார்கள். பலவித தந்திரங்களால் இந்தியர்களிடமிருந்து பணமும் பிடுங்கி விடுகிறார்கள்.

1849 முதல் 1900 வரை ஜி. ஐ. பி. ரெயில்வே ஒப்பந்த முறைப்படி நடத்தப்பட்டு வந்தது. 1901—ல் சர்க்கார் அதை ஒப்புக்கொண்டார்கள். ஆனால் எக் காரணத்தினாலோ அந்த ரயில்வே நிருவாகத்தை நடத்த கம்பெனியாரைத் தானே ஏஜண்டாக்கினார்கள். ஆகவே ஒரு மைல் இருப்புப் பாதைக்காவது சொந்தக்காரர்கள் அல்லாத கம்பெனியார் இருப்புப்பாதை முழுதையும் தம் மிஷ்டப்படி நிர்வாகம் செய்தார்கள். ஒப்பந்த ஏற்பாட்டின்படி இருப்புப்பாதை நிருவாகம் நடந்த காலத்தில் கம்பெனியாருக்கு 14·91 கோடி ரூபாய் நஷ்ட மேற்பட்டதாகத் தெரிகிறது. நஷ்டத்துக்கு 100க்கு 4 வட்டி போட்டு 1852 முதல் 1924 வரை 93,20,37,281 ரூபா கொடுக்கப்பட்டதாகவும்

தெரிகிறது. கம்பெனி ஏஜன்சி காலத்தில் 1901 முதல் 1923 வரை 1.73 கோடி ரூபா நஷ்ட முண்டாயிற்ரும். கம்பெனி 1849—ல் ஸ்தாபனமாயிற்று. அது கைநஷ்டப் பட்டு வேலை செய்து வந்ததாம். ஆனல் 1855-ல் 20 பவுன் விலையுள்ள அந்த கம்பெனி பங்கு 25 முதல் 30 பவுன் வரைக்கு விற்கப் பட்டிருக்கிறது.

இனி, கம்பெனியார் செய்த வீண் செலவைப்பற்றிக் கவனிப்போம். 1880 வரை ஒவ்வொரு மயிலுக்கும் 1,95,945 ரூபா வீதம் செலவு செய்யப் பட்டிருக்கிறது. ஆனல் நாகப்பூர்—சட்டிஸ்கர் ரயில்வேய்க்கும் தண்டு—மன்மாடு சர்க்கார் ரயில்வேயிக்கும் மைல் ஒன்றுக்கு முறையே 59,315—ம், 71,756ம் ரூபாய்களே செலவாயிருக்கின்றன.

கை நஷ்டப்பட்டு பரோபகார சிந்தையுடன் ரயில்வே நிருவாகம் நடத்துவதாகப் பாசாங்கு செய்யும் கம்பெனிகளின் பங்குகளை இலாபகரமாக விற்று வருவது எதனுல் என்று விளங்க வில்லை.

இந்திய ரயில்வேயினுல் கம்பெனியார் நஷ்ட மடைவதாகக் கூறுவதெல்லாம் சுத்தப் பித்தலாட்ட மாகும். இதை ருசுப்படுத்த ஏராளமான அத்தாட்சிகள் உள்ளன. நூலின் விரிவஞ்சி இங்கு அவைகளை எடுத்துக் கூறவில்லை.

உத்தியோகமண்டலம்:—இந்திய சர்க்கார் உத்தியோக மண்டலத்தைப் பற்றி சில தகவல்கள் தெரிவித்துவிட்டு இந்த அத்தியாயத்தை முடித்துவிடுகிரும். இந்தியாவைப் போல் உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு பெருந்தொகையான சம்பள மளிக்கும் தேசம் உலகத்தில் இல்லவே இல்லை. இவ்வாறு உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுக்கப் படும் சம்பளம் இந்தியாவில் தங்குகிறதா? அதுவுமில்லை. இங்கிலாந்துக்குத்தான் கொள்ளை போகிறது.

பிரிட்டிஷ் இந்திய சர்க்கார் பொதுவாக அதிகார வர்க்கத்தினர் என்று அழைக்கப்படுகிருர்கள். எந்த தேசத்தி

லும் அதிகாரவர்க்கத்தினர் சிலர் இருக்கவேண்டியது அவசியந்தான். ஆனால் இந்தியாவிலோ அதிகாரவர்க்கத்தினரே சர்வாதிகாரிகளாக இருக்கிறார்கள்.

உயர்தர உத்தியோகங்களெல்லாம் பிரிட்டிஷாருக்கே கொடுக்கப்படுகின்றன. இதனால் பிரிட்டிஷ் சிறுவர்களுக்கு பிழைப்பேற்படுகிறதானாலும் இந்தியாவுக்கு பெருதத நஷ்ட முண்டாகிறது. பிரிட்டிஷ் சிறுவர்களின் நன்மைக்காக நிருவாகச் செலவு வருஷா வருஷம் உயர்ந்து கொண்டு போகிறது. பிரிட்டிஷ் சிறுவர்களுக்காக வருஷா வருஷம் புது உத்தியோகங்களும் சிருஷ்டிக்கப்படுகின்றன. அவர்கள் சம்பளச் செலவைத் தாங்க இந்தியாவுக்கு சக்தியுமில்லை. பேன்ஷன் இனத்தில் வெளி நாட்டுக்குப்போகும் பணத்துக்கும் ஒரு எல்லையில்லாம லிருக்கிறது.

1913-ல் இருந்துவந்த பிரிட்டிஷ், இந்திய, ஆங்கிலோ-இந்திய உத்தியோகஸ்தர் கணக்குப் பின்வருமாறு:—

| | |
|---|---|
| 200 ரூபாய்க்கு மேல் சம்பளமுள்ள உத்தியோகங்கள் | 11064 |
| ஆங்கிலேயர், ஆங்கிலோ, இந்தியர் — — | 6491 |
| இந்தியர் — — | 4573 |

ஆசிரியர் கே. டி. ஷா வேறொரு ஜாபிதா வெளியிட்டிருக்கிறார். அது பின்வருமாறு:—

# ஜாபிதா.

| 200 ரூபா முதல் 300 ரூபா வரை சம்பளமுள்ள உத்தியோகங்கள் | ஆங்கிலேயர் 100 க்கு 12 | இந்தியர் 100 க்கு 24 | ஆங்கிலோ-இந்தியர் 100 க்கு 24 |
|---|---|---|---|
| 300——400 | „ 19 | „ 62 | „ 19 |
| 400——500 | „ 36 | „ 49 | „ 15 |
| 500——600 | „ 58 | „ 31 | „ 11 |
| 600——700 | „ 54 | „ 36 | „ 10 |
| 700——800 | „ 78 | „ 14 | „ 8 |
| 800——900 | „ 73 | „ 21 | „ 6 |
| 900——1000 | „ 92 | „ 4 | „ 4 |

இந்தியாவில் இந்தியர்களுக்கு உயர்ந்த உத்தியோகங்கள் வழங்கப்படாதிருக்கும் அநீதியை காங்கிரஸ், ஆரம்ப முதற்கொண்டே கண்டித்து வருகிறது. இம்பீரியல் சர்வீசுக்கு ஆட்களைத் தேர்ந்தெடுக்க இந்தியாவிலும், இங்கிலாந்திலும் ஏக காலத்தில் பரீட்சைகள் நடத்தவேண்டுமென்றும் காங்கிரஸ்காரர் வற்புறுத்தி வருகிறார்கள். 1843-ல் இந்த சித்தாந்தத்தை பார்லிமேண்டார் ஒப்புக்கொண்டனர். ஆனால் அதை அமுலுக்குக் கொண்டுவர அவர்கள் ஒரு ஏற்பாடும் செய்யவில்லை. எல்லா அரசியல் துறைகளிலும் உயர்தர உத்தியோகங்களில் இந்தியர்கள் எவ்வளவுக்கு ஜாஸ்தியாக நியமிக்கப்படுகிறார்களோ அவ்வளவுக்குப் பொறுப்பாட்சி வெற்றி பெறுமென்று மாண்டுபோர்டு சீர்திருத்த ரிப்போர்ட்டிலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதைப் பார்த்தவுடனே பிரிட்டிஷ் சிறுவர்கள் பெரும் புரளி செய்தார்கள். இப்பொழுது சட்டசபை சிபார்சுகளை அலட்சியம் செய்து லீ கமிஷன் சிபார்சுகளை சர்க்கார் ஒப்புக் கொண்டிருப்பதினால் அவர்களுடைய மனப்போக்கு வெட்ட வெளிச்சமாகிவிட்டது.

1914 முதல் 24 வரையுள்ள காலங்களில் உத்தியோகஸ்தர்கள் சம்பளம் அமிதமாக உயர்த்தப்பட்டது. இது தவிர பென்ஷன், பிரயாணச் செலவு விஷயமாகவும் தாராளமான ஒத்தாசை அளிக்கப்பட்டிருக்கிறது. 1913—14ல் 474,966 சர்க்கார் உத்தியோகங்கள் இருந்தன. 1922—23-ல் உத்தியோகஸ்தர்கள் தொகை 520,762 ஆக உயர்ந்தது.

லீ கமிஷன் சிபார்சுப்படியுள்ள திட்டத்தினால் முதல் வருஷத்தில் சுமார் 1 கோடி ரூபா பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் சம்பள இனத்தில் ஜாஸ்தி செலவாயிற்று. இது பிரிட்டிஷ் சிறுவர்களுக்கு நன்மையானாலும் இந்தியாவுக்கு கஷ்டமல்லவா?

---

# அத்தியாயம் 28.

## பிரித்தாளும் சூழ்ச்சி

சமீபத்தில் நிகழ்ந்த ஹிந்து-முஸ்லிம் சச்சரவுகளைப் பார்த்து கன்னி மேயோ ஆநந்தக் கூத்தாடுகிறுர். சென்ற ஐந்து ஆண்டுகளாக ஹிந்துக்களும் முஸ்லிம்களும் போரா டிக்கொண்டிருப்பது உண்மையே.

ஆனல் 1919 ல் ரௌலட் சட்டத்துக்கு எதிராகக் கிளர்ச்சி நடந்த காலத்து ஹிந்துக்களும்,முஸ்லிம்களும் ஒரு முகமாக நின்று சர்க்காரை எதிர்த்தனர். உடனே தலைவர் கள்மீது சர்க்கார், வழக்குத் தொடுத்தனர். அவர்கள் மீது சுமத்தப்பட்ட குற்றங்களில் ஒற்றுமை யுண்டுபண்ண முயற்சித்த குற்றமும் ஒன்று. சர்க்காரைக் கவிழ்க்கும் பொருட்டு ஹிந்துக்களையும், முஸ்லிம்களையும் ஒற்றுமைப் படுத்தத் தலைவர்கள் முயற்சி செய்தார்களாம்! 1920-21 ல் ஒத்துழையா யியக்கட நடைபெற்றபொழுது இந்தியா முழுதும் ஹிந்துக்களும், முஸ்லிம்களும் ஒற்றுமையாகவே இருந்தனர். இதுவெல்லாம் அதிகார வர்க்கத்தினருக்குப் பிடிக்கவில்லை. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையைக் கெடுத்து, ஒத்துழையாமையை வேரறுக்க சர்க்கார் பல முயற்சிகள் செய்தனர். ஹிந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் தனித் தனி தேர்தல் தொகுதி ஏற்படுத்தப்பட்டிருப்பது சர்க் காருக்கு இவ்விஷயத்தில் மிக உதவியாயிருந்தது. அத் துடன் உத்தியோக நியமன விஷயத்திலும் சர்க்கார் முஸ் லிம்களுக்கு சலுகை காட்டத் தொடங்கினர். ஹிந்துக்களை நசுக்கி அவர்களுக்கு எவ்விதத்திலாவது ஒரு பாடம் கற் பிக்க வேண்டுமென்று சர்க்கார் உறுதி செய்தனர்.

ஏகாதிபத்தியத் துரைத்தனங்களுக் கெல்லாம் பிரித் தாளும் சூழ்ச்சி ஒரு நல்ல கருவியாக இருக்கிறது. இந்திய

சர்க்கார் இந்த சூழ்ச்சியை ஆரம்ப முதலே கையாண்டு வருகிருர்கள். சர்க்கார் தஸ்தாவேஜுகளே அதைத் தெளிவாக ருஜுப்படுத்துகின்றன. ஆதிகாலத்தில் முஸ்லிம்களை நசுக்குவது சர்க்கார் நோக்கமாயிருந்து வந்தது. இப்பொழுதோ, முஸ்லிம்களை வசப்படுத்தி தேசியவாதிகளை எதிர்க்குமாறு தூண்டுவது சர்க்கார் நோக்கமாக இருக்கிறது. கீழ்வரும் உதாரணத்தால் சர்க்காரின் சூழ்ச்சி நன்கு விளங்கும்:—

காபூல், காசினி யுத்தங்களில் தோல்வி யேற்பட்டவுடன் அக்காலத்து கவர்னர் ஜெனரலாக விருந்த லார்டு எல்லன்பரோ, வெல்லிங்டன் பிரபுவுக்கு 1842 அக்டோபர் 4௳ பின்வருமாறு எழுதினுர்:—"ஆப்கானிஸ்தானத்தில் நமக்கு தோல்வியேற்பட வேண்டுமென முஸ்லிம்கள் விரும்புவதாகப் பிரஸ்தாபம் உண்டானபோது நான் நம்பவே இல்லை. ஆனல் இப்பொழுது கிடைத்திருக்கும் சில தகவல்களால் அது உண்மைதானென்று எனக்குத தோற்றுகிறது. நம்மையே நம்பி வாழும் சில முஸ்லிம் தலைவர்களும் கூட அவ்வாறு விரும்புவதாக அறிகிறேன். ஆனல் ஹிந்துக்களோ நம்மிடம் பட்ச முடையவர்களா யிருக்கிருர்கள். பத்தில் ஒரு பகுதியார் நமக்கு விரோதிகளாய் விட்டதை அறிந்த பிறகும், நம்மிடம் நம்பிக்கையுடைய பத்தில் ஒன்பது பகுதியாரை நம் வசப்படுத்த முயலாம லிருப்பது மூடத்தனமாகும்."

மீண்டும் 1843 ஜனவரி 18-ல் லார்டு எல்லன்பரோ, வெல்லிங்டனுக்குப் பின்வருமாறு எழுதினுர்.

"முஸ்லிம்கள் நமக்கு ஜென்ம விரோதிகளாய் விட்டார்கள். ஆகவே ஹிந்துக்களின் நட்பைப் பெற நாம் சதா முயற்சி செய்யவேண்டும்."

வங்காளத்தில் உத்தியோகம் வகித்துப் பேன்ஷன் பெற்ற ஹேன்ரி ஹாரிங்டன் தாமஸ் என்பவர் 1858-ல்

வெளியிட்ட ஒரு துண்டுப்பிரசுரத்தில், முஸ்லிம்கள் ஆங்கிலேயர்களின் கோபத்துக்குப் பாத்திரரான காரணம் விளக்கப்பட்டிருக்கிறது.

"1857-ல் உண்டான கலகத்துக்கு ஹிந்துக்கள் ஜவாப்தாரிகள் அல்லவென்றும், அவர்கள் தலைமைவகித்து நடத்தவில்லை யென்றும் ஏற்கனவே கூறியிருக்கிறேன். இப்பொழுது, ஒரு முஸ்லிம் சதியாலோசனைக் கூட்டத்தாரே அதற்குக் காரணமென்று விளக்கத் தொடங்குகிறேன். ஆதிகாலம் முதற்கொண்டே அவர்கள் இரகசிய சூழ்ச்சிகள் செய்துகொண்டு வந்திருப்பதாகத் தெரிகிறது. சூழ்ச்சிக்காரர்கள் குறிப்பிட்டிருந்த காலத்துக்கு முன்னமேயே கலகம் ஆரம்பமாய்விட்டது. இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கிறிஸ்தவனையும், ஆண், பெண், குழந்தை என்ற வித்தியாசம் பாராமல் கொன்றுவிட வேண்டுமென்று சதியாலோசனை செய்தவர்கள் யார்? கலகக்காரர்களைச் சேர்த்தது யார்? ஹிந்துக்கள் தாமாக இத்தகைய சூழ்ச்சிகளும், சதியாலோசனைகளும் செய்ய லாயக்குடையவர்களல்ல. இந்த கலகத்துக்கு வித்துப் போட்டவர்கள் முஸ்லிம்களே! நம்மைத் தொலைப்பதற்கு முஸ்லிம்கள் சூழ்ச்சி செய்யக் காரணம் என்ன? காரணம் அறியவேண்டுமானால் முஸ்லிம்களின் குணங்களையும் சித்தாந்தங்களையும் நாம் செவ்வையாக ஆராய்ந்து பார்க்கவேண்டும். முஸ்லிம்கள் முதல் காலிபா முதல் நாளிதுவரை, அகங்காரிகளாகவும், குரூர குண முடையவர்களாகவும், சகிப்புத் தன்மை யில்லாதவர்களாகவும் இருந்து வருகிறார்கள். முஸ்லிம் ஆதிக்கத்தை நிலை நிறுததுவதுதான் அவர்கள் கருத்து. அதற்காக எதுவும் செய்யப் பின்னடையார்கள். கிறிஸ்தவர்களிடம் அவர்களுக்கு ஜென்மப் பகையும், வெறுப்பும் இருந்து வருகிறது. வேறு மதத்தைப் பின்பற்றும் அரசாங்கத்தாருக்கு அவர்கள் கீழடங்கி யிருக்க மாட்டார்கள். அந்நிய மதஸ்தர் ஆட்சியில் குடிவாழ குர்ஆனும் அவர்களுக்கு சம்மதி யளிக்கவில்லை. முஸ்லிம் அல்லாத அரசருக்குக் கீழ்ப்படிந் திருப்பதை அவர்கள் அவமானமாகக்

கருதுகிறார்கள். இக்காரணத்தினால் நாம் என்ன ஒத்தாசைகள் செய்தாலும், என்ன கௌரவம் வழங்கினாலும் அவர்கள் நம்மிடம் நட்புக் காட்டமாட்டார்கள். ஏற்ற காலம் வரும்வரை நல்ல பிள்ளைகள்போல் பாசாங்கு செய்து கொண்டு அடங்கி யிருப்பார்கள். நல்ல தருணம் வாய்க்கும் போது அவர்கள் உண்மைக் குணம் வெளியாய்விடும். நம்மவர்களை ஒழிப்பதற்கு, இந்திய முஸ்லிம்களுக்கு மத சம்பந்தமான காரணங்களைத் தவிர வேறு சில காரணங்களும் உள்ளன. இந்தியாவில் வெகுகாலம் சர்வாதிகாரிகளாய் வாழ்ந்ததை அவர்கள் மறந்து விடவில்லை; பிரிட்டிஷார் தொலைவதால் தம் ஆதிக்கத்தை மீண்டும் நிலை நாட்டி ஹிந்துக்களை தம் மனம்போனபடி ஆட்டி வைக்கலாமென்று அவர்கள் நம்புகிறார்கள். சுதேசிப் பட்டாளங்களுக்கிடையில் அதிருப்தியிருந்து வருவதை யுணர்ந்து, அந்த அதிருப்தியை வலுப்படுத்த அவர்கள் சூழ்ச்சி செய்யத் தொடங்கினார்கள். ஹிந்துக்கள் உதவியின்றி அவர்களுக்கு ஒன்றும் சாதிக்க முடியாது. ஹிந்துக்கள் அவர்களுடன் சேர வேண்டுமானால், மதத்துக்கு ஆபத்துண்டா யிருப்பதாய் பிராமணர்கள் நம்பும்படி செய்யவேண்டும். ஆகவே, ஹிந்துக்களை யெல்லாம் கிறிஸ்து மதத்தில் சேர்க்க சர்க்கார் சூழ்ச்சி செய்து வருவதாக அவர்கள் ஒரு கதை கட்டி விட்டார்கள். பிராமணர்களும் இந்தக் கட்டுக்கதையை எளிதில் நம்பிவிட்டார்கள். முஸ்லிம்கள் ஹிந்துக்களைவிட திடசித்தமும், துணிவும், கல்வியறிவும், ஆற்றலும் உடையவர்கள். ஹிந்துக்கள் வாஸ்தவத்தில் முஸ்லிம்களின் கைப்பாவைகளாகவே இருக்கிறார்கள். அரசியல் நிருவாகத்தில் முஸ்லிம்கள் அநுபவமும் திறமையும் உடையவர்களானகையால் சர்க்கார் உத்தியோகங்களில் தாராளமாக நியமனம் பெற்றனர். அதனால் சர்க்கார் இரகசியங்களை அவர்கள் அறியவும், அவர்கள் சொல்லுவதை ஜனங்கள் நம்பவும் காரண மாயிற்று. ஆகவே இந்தக் கலகத்தின் காரணகர்த்தர்கள் முஸ்லிம்களே; ஹிந்து சிப்பாய்களெல்லாம் அவர்கள் சொல்வதை நம்பி ஏமாந்தவர்களே."

முஸ்லிம்களை கிறிஸ்து மதத்தில் சேர்க்க முடியாம லிருப்பதைப் பற்றி அவர் கூறுவதாவது:—“கிறிஸ்துமதக் கொள்கைகளில் முஸ்லிம்களுக்கு நம்பிக்கை யுண்டுபண்ண பாதிரிகளால் முடியவில்லை. பொதுவாக முஸ்லிம்கள் பாதிரிகளோடு வாதாடுவதில்லை; பாதிரிகள் தாமாக ஏதா வது சொன்னாலும் முஸ்லிம்கள் செவிகொடுத்துக் கேட்ப தில்லை. ஹிந்துக்களோ அப்படியல்ல; பாதிரிமார் போத னைகளை ஹிந்துக்கள் எளிதில் நம்பிவிடுகிறார்கள்.

“பிரித்தாளும் தந்திரத்தையே நாம் இந்தியாவில் கைக்கொண்டொழுக வேண்டும்” என்று 1821-ல் ஒரு பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் “எஷாயாட்டிக் ஜர்னல்” என்ற சஞ்சிகையில் எழுதி யுள்ளார்.

சிப்பாய் கலக காலத்தில் மொராதபாதில் சேனாதிபதி யாயிருந்த லேப்டினண்டு கர்னல் ஜான்கோக் எழுதியதா வது:—“இந்தியாவின் பலதிறப்பட்ட மதத்தினருக்கும், ஜாதியாருக்கும் தற்போது இருந்து வரும் பிரிவினை நாளுக்கு நாள் விருத்தி யடையும்படி செய்வதே நமது நோக்கமாக இருக்கவேண்டும். அவர்கள் ஒற்றுமைப்பட விடலாகாது. பிரித்தாளும் சூழ்ச்சியைத்தான் இந்திய சர்க் கார் கைக்கொண்டொழுக வேண்டும்.

1859 மே 14உ எழுதி யனுப்பிய ஒரு யாதாஸ்தில், “உரோமர்கள் பிரித்தாளும் சூழ்ச்சியைப் பின்பற்றி வந்த தனால் அவர்களுக்கு ஜெயமுண்டாயிற்று; நாமும் அவ் வாறே செய்யவேண்டும்” என்று லார்டு எல்லன் பரோவும் வற்புறுத்தி யிருக்கிறார்.

“இந்தியாவில் பரஸ்பர விரோதமுள்ள பல வகுப் பார் இருப்பது நமது அரசியல் வெற்றிக்குச் சிறந்த சாதன மாகும்” என்று சர் ஜான் ஸ்டராச்சியும் பிரஸ்தாபித்திருக் கிறார்.

கன்னி மேயோ, பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் ஹிந்து முஸ்லிம்களைப் பாரபட்சமின்றி நடத்துவதாகக் கூறுகிறார் இது பெரும் புளுகல்லவா? பிரிட்டிஷார் இந்திய அரசாங்கத்தை ஒப்புக்கொண்டது முதல் நாளிதுவரை பிரித்தாளும் சூழ்ச்சியையே கையாண்டு வருகிறார்கள் என்பதற்கு எட்டுணையும் ஐயமில்லை.

ஆனால் அதில் ஒரு வித்தியாசமுண்டு. முற்காலங்களில் முஸ்லிம்களை நசுக்க சர்க்கார் சூழ்ச்சி செய்து வந்தார்கள்; இப்பொழுது ஹிந்துக்களை நசுக்க சூழ்ச்சி செய்து வருகிறார்கள்.

ஆதிகால வரலாற்றை விளக்க, பிரிட்டிஷ் தஸ்தாவேஜிகளிலிருந்தே பல திருஷ்டாந்தங்கள் எடுத்துக்காட்டியிருக்கிறோம். சொற்ப காலத்துக்குப் பின், ஹிந்துக்கள் விழித்துவிட்டால் அது தம் அரசாங்கத்துக்குப் பேராபத்தாய் முடியுமென்று பிரிட்டிஷார் உணர்ந்து கொண்டனர். ஹிந்துக்களை அடக்கிவைக்க முஸ்லிம்களின் நட்பு இன்றியமையாத தென்றும் அவர்கள் அறிந்துகொண்டார்கள். ஆகவே சென்ற 20 வருஷகாலமாக அதற்கான சூழ்ச்சிகளை அவர்கள் செய்துகொண்டும் வருகிறார்கள். முஸ்லிம்கள் அல்லாதார் அரசாங்கத்துக்கு முஸ்லிம்கள் கீழ்ப்படிந்து இருக்கமாட்டார்கள் என்றும், குர்ஆன் அவ்வாறிருக்க அனுமதி யளிக்கவில்லை யென்றும் எச். எச். தாமஸ் பிரஸ்தாபித் திருப்பதை மேலே எடுத்துக் காட்டி யிருக்கிறோம். ஆகவே முஸ்லிம்களை கீழ்ப்படியச் செய்ய வேறு வழிகளில் முயற்சி செய்ய வேண்டியதாக வந்தது. பிரித்தாளும் சூழ்ச்சியே ஏற்றதென சர்க்கார் கண்டு கொண்டார்கள்.

இந்த அத்தியாயத்தில் எடுத்துக் காட்டப்படும் பல திருஷ்டாந்தங்கள் இஸ்லாத்துக்கும், முஸ்லிம்களுக்கும் அவமதிப்பை உண்டுபண்ணக் கூடியவைகளா யிருக்கின்

றன. அவைகளை இங்கு எடுத்துக் காட்டுவதனுல் நாம் அவைகளை ஆதரிப்பதாக ஒருவரும் எண்ணிவிட வேண்டாம். ஆதிகால பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் முஸ்லிம்களைப்பற்றி எத்தகைய அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள் என்று உலகம் அறியும்பொருட்டே அவைகளை இங்கு எடுத்துக் கூறுகிறேம்.

மிண்டோ மார்லி சீர்திருத்தத்தைப்பற்றிக் குறிப்பிடும்போது "1909 முதல் காற்றுமாறி வீசத்தொடங்கியது" என்று கன்னி மேயோ குறும்பாகக் கூறுகிருர். "லார்டு மிண்டோவே வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவத் திட்டத்துக்குப் பிதா" என்று சர். சுரேந்திரநாதபானர்ஜி கூறியிருக்கிருர். லார்டு மிண்டோவைக் குறைகூறிப் பயனென்ன? முஸ்லிம்கள் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று பிடிவாதம் செய்ததினுல் மிண்டோ அதற்கு இணங்கும்படி நேர்ந்தது" என சமாதானம் கூறுவோர், 1923-ல் காக்கிநாடா காங்கிரசில் தலைமை வகித்த ஸ்ரீ. முகமதலி கூறியதைக் கவனிப்பார்களாக.

"மிண்டோ - மார்லி சீர்திருத்தம் வெளியாவதற்குப் பல மாதங்களுக்குமுன், சில முஸ்லிம் தலைவர்கள் ஒரு தூதாகச் சென்று சிம்லாவில் லார்டு மிண்டோவைப் பார்த்து முஸ்லிம தேவைகளைப்பற்றி ஒரு அறிக்கையும் சமர்ப்பித்தார்கள். ஆனுல் தூதர்கள் எல்லாம் சர்க்கார் தூண்டுதலின்பேரில் சென்றவர்களே. கல்வித் தேர்ச்சி பெற்ற இந்தியர்களின் கோரிக்கைகளை சர்க்காரால் அலட்சியம் செய்ய முடியவில்லை. ஆகவே, முஸ்லிம்களுக்கு முன் சில உத்தியோகப் பணியாரங்களை வீசி யெறிந்து அவர்களுக்கு வாய்ப்பூட்டுப்போட சர்க்கார் முயற்சி செய்தார்கள்."

மிண்டோ - மார்லி சீர்திருத்தத்தின் கூட்டுப் பிதாவான லார்டு மார்லியும் அவ்வாறே அபிப்பிராயப்பட்டிருக்கிருர்.

"தங்கள் முஸ்லிம் விவாதத்தில் நான் பின்னும் தலையிட விரும்பவில்லை. ஆதிகாலத்தில் முஸ்லிம்களுக்கு விசேஷ அனுகூலங்கள் வழங்க வேண்டுமென்று தாங்கள் அபிப்பிராயப் பட்டதினாலேயே முஸ்லிம்கள் விசேஷ அனுகூலங்களுக்காக வாதாடத் தொடங்கினார்கள்" என்று லார்டு மார்லி, லார்டு மிண்டோவுக்கு அனுப்பிய ஒரு கடிதத்தில் பிரஸ்தாபித்திருக்கிறார்.

முஸ்லிம்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குக் கீழ்ப்படிந்திருக்கும் பொருட்டே இந்த விசேஷ அநுகூலங்கள் வழங்கப்பட்டன.

இந்த வகுப்புவாரிப் பிரதிநிதித்துவமே சமீபத்தில் நிகழ்ந்த ஹிந்து-முஸ்லிம் சச்சரவுகளுக்கும் காரணமென்று கன்னி மேயோவும் மறைமுகமாக ஒப்புக் கொள்கிறார். வகுப்புத்தொகுதிகள் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு மிகவும் அநுகூலமென்று அறிந்ததினாலேயே லண்டன் டைம்ஸ் போன்ற பத்திரிகைகளும் அதை ஆதரித்தன.

அதிகார வர்க்கத்தினரின் அந்தரங்க சுத்தியைப் பற்றிக்கூட அநேக பொறுப்பு வாய்ந்த பிரிட்டிஷ் ராஜ தந்திரிகள் சந்தேகம் கொண்டிருக்கின்றனர். மாஜி பிரிட்டிஷ் மந்திரியும், இன்னும் மந்திரியாக வரக்கூடியவருமான ஸ்ரீ. ராம்ஸே மாக்டோனல்டு கூறியிருப்பதைக் கவனியுங்கள்:—"பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் பல சூழ்ச்சிகள் செய்து வருவதாகத் தோன்றுகிறது. முஸ்லிம் தலைவர்களிடம் துர்ப்போதனைகள் சொல்லித் தூண்டிவிடுவதாகவும் தெரிகிறது. முஸ்லிம்களுக்கு விசேஷ அநுகூலங்கள் செய்து ஹிந்து-முஸ்லிம் பிரிவினையை அதிகப்படுத்துவதே இந்த சூழ்ச்சிக்காரர்களின் நோக்கம்.

பாஞ்சால நிருவாக சபை மெம்பராக விருந்த ஸர் ஜான் மேய்நார்டு ஒரு லண்டன் பத்திரிகையில் எழுதி

யிருப்பதாவது:—''ஹிந்து-முஸ்லிம் சச்சரவுகள் இருப்பதி ஞலேயே பிரிட்டிஷ் அரசாங்கம் நடைபெற்று வருகிறது. பிரிட்டிஷ் அரசாட்சி ஆரம்பமானது முதல் ஹிந்து-முஸ் லிம் சச்சரவுகள் தலையெடுத்தன. பண்டைக்காலங்களில் இரு சமூகத்தாரும் எத்தகைய கலவரமுமின்றி தத்தம் மதாசாரங்களைப் பின்பற்றி நேசபாவனையில் வாழ்ந்து வந் திருக்கிருர்கள்.''

ஹிந்துக்களும் முஸ்லிம்களும் பிரிட்டிஷ் அரசாங்கத் தின் இரு மனைவிகள் என்றும், அவர்களுள் முஸ்லிம்களே பிரியமுள்ள மனைவியென்றும் சர். பாம்ப்பைடு புல்லர் அடிக்கடி விகடம் பேசுவதுண்டாம்.

பிரிட்டிஷாரின் பிரித்தாளும் சூழ்ச்சியை விளக்கிக் காட்ட இன்னும் சாட்சியங்கள் வேண்டுமா?



# அத்தியாயம் 29.

## முஸ்லிம்கள்.

இந்திய மாதாவை வாசிப்பவர்களுக்கு, முஸ்லிம்கள் சுயராஜ்யம்பெற விருப்பமில்லாதவர்கள் என்றும், பிரிட்டிஷ் அரசாங்கத்தாரிடம் மிகுந்த பக்தியுடையவர்கள் என்றும், அரசியல் வாதிகளான ஹிந்துக்களிடம் வெறுப்புக் கொண்டவர்கள் என்றும் அபிப்பிராயமுண்டாகும். ஆகவே, கன்னி மேயோ முஸ்லீம்களைப்பற்றி மதிப்பாகவே எழுதியிருக்கிறார். அவர்களைக் குறைகூறவும் அவர் முன்வரவில்லை. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்குச் சதத்ருக்களாயிருக்கும் தலைவர்களின் அபிப்பிராயங்களையும் அவர் ஏராளமாக எடுத்தாண்டிருக்கிறார். ஆனால் முஸ்லிம்களெல்லாம் இந்திய விடுதலைக்கு எதிரிகளாயிருக்கிறார்கள் என்று கூறுவது, முஸ்லிம் சமூகத்தையே அவமதிப்பதாகும். ஆகவே, 1927 டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற காங்கிரசிலும், மற்றும் மகாநாடுகளிலும் பொறுப்பு வாய்ந்த முஸ்லிம் தலைவர்கள் செய்த பிரசங்கங்களிலிருந்து தாராளமாக உதாரணங்களை இங்கே எடுத்துக்கூற எண்ணுகிறோம்.

ஸ்ரீ. முகமது ஆலி ஜின்னா ஒரு பிரபல முஸ்லிம் தேசபக்தர். இந்திய சீர்திருத்தம் நடைபெறும் முறையை விசாரணை செய்வதற்காக சர்க்கார் நியமித்த முட்டிமன் கமிட்டியில் அவர் ஒரு மெம்பராக நியமனம் பெற்றிருந்தார். இந்தியப் படையை இந்திய மயமாக்குவதைப்பற்றி விசாரணை நடத்த நியமித்திருந்த ஸ்கீன் கமிட்டியிலும் அவர் ஒரு மெம்பராயிருந்தார். ஆகவே, அவர் சர்க்கார் மதிப்புப் பெற்ற ஒரு செல்வாக்குள்ள முஸ்லிம் தலைவர் என்பது வெளிப்படை. எனினும், சட்டசபையிலும் வெளியிலும், ஒரு ஹிந்து தேசீய வாதியைப்போலவே அவர் சர்க்கா

ருக்கு எதிரிடையாகப் பேசியும், எழுதியும் வந்திருக்கிறார். வடமேற்கு எல்லைப்புற பிரதேசங்களிலுள்ள அனேக தலைவர்களுடன் வார்த்தையாடியதாகக் கன்னி மேயோ கூறுகிறார். ஆனால் எந்த பாஷையில் அவர், அவர்களோடு வார்த்தையாடினாரோ தெரியவில்லை. ஏனென்றால் இங்கிலீஷ் பேசத்தெரிந்த தலைவர்கள் அந்தப் பிரதேசங்களில் இல்லவே இல்லை அது ஒரு அற்ப விஷயம். எப்படியானாலும் ஆகட்டும்.

அந்தத் தலைவர்களெல்லாம் தற்கால அரசியல் முறையே போதுமென்று கூறினார்களாம்; சீர்திருத்தம் வேண்டுமென்றே அவர்கள் விரும்பவில்லையாம். ஆனால் எல்லைப்புற பிரதேசங்களுக்கு சீர்திருத்தம் வழங்க வேண்டுமென்று அகில இந்திய முஸ்லிம் லீக் மகாநாட்டில் வருஷாவருஷம் தீர்மானம் நிறைவேற்றப்படுகிறது. 1926 ல் இந்திய சட்டசபையிலும் அதுபோன்ற ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. கன்னி மேயோ பேட்டி கண்ட தலைவர்களில் ஒருவர், "பிரிட்டிஷார் போய்விட்டால் இந்தியா நரகமாய்விடும். வங்காளிகளெல்லாம் அடியோடு அழிந்தொழிவார்கள்" என்றும் கூறினாராம். பிரிட்டிஷார் வருவதற்கு முன்னும் வங்காளிகள் பல்லாயிர வருஷங்களாக இந்தியாவில் வாழ்ந்து வருவதினால், எள்ளளவேனும் விவேகமுடைய ஒருவனும் அவ்வாறு கூறியிருக்கமாட்டான். கன்னி மேயோ பேட்டிகண்ட மகான் "பிரிட்டிஷார் போய்விட்டால் எங்கள் அடிமைகளைத் தவிர வேறு ஹிந்துக்கள் இந்தியாவில் மருந்துக்கும் அகப்படமாட்டார்கள்" என்று கடைசியாகக் கூறினாராம். இவ்வாறெல்லாம் கூறிய மகான் யாரென்று கன்னி மேயோ தெரிவிக்கிறாரில்லை. ஒருகால் அவர் அப்படியே கூறினரென்று வைத்துக்கொள்வோம். ஆனால், பிரிட்டிஷார் வருமுன் பல்லாயிர வருஷகாலம் ஹிந்துக்கள் இந்தியாவில் வாழ்ந்திருக்கவில்லையா? என்று கன்னி மேயோ அவரிடம் கேட்டிருக்கலாகாதா? அம்மட்டோ! வடமேற்கு எல்லைப் பிரதேசங்

களேயும், காபூல் கந்தகார் பிரதேசங்களேயும் ஹிந்துக்கள் அடக்கி ஆண்டும் இருக்கிறார்கள். இந்தப் பிரதேசங்களெல்லாம் முஸ்லீம் பிரதேசங்களே - பாஞ்சாலத்தை 1849-ல் ஆங்கிலேயர் கைப்பற்றிய காலத்தில் இந்த தேசங்களெல்லாம் சீக்கியர் ஆளுகையில் இருந்திருந்தது. அத் தேசங்களிலுள்ள அநேக நகரங்கள் சீக்கியப் பெயருடையனவா யிருக்கின்றன. அங்கப் பிரதேசங்களிலுள்ள ஆப்கானியர்களெல்லாம் நடு நடுங்கும்படி செய்த ஹரிசிங்கின் பெயரால் ஸ்தாபனமான ஹரிபுரம் அவற்றுள் ஒன்றாகும். ஆகவே கன்னி மேயோ கூறிய பேட்டிக் கதையெல்லாம் வெறும் கட்டுக்கதையாக இருக்கவேண்டும். அல்லது அவரைக் கோமாளியாக்குவதற்காக யாரோ ஒரு பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் அவ்வாறு ஒரு பொய்க்கதை கூறி ஏமாற்றி யிருக்கவேண்டும். ஸர். இப்ராஹீம் ரஹமதுல்லா, பம்பாயிலுள்ள ஒரு முஸ்லீம் தலைவர். அவர் ஒரு பெயர்பெற்ற வர்த்தகர். பம்பாய் சட்ட சபைக்கு அநேக வருஷம் தலைவரா யிருந்தவர். முதலில் அவரை சர்க்கார் சட்டசபை மெம்பராக நியமனம் செய்தார்கள். தேர்தல் மூலம் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் ஏற்பாடு அமுலில் வந்தவுடன் அவர் போட்டி யின்றித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1927 டிசம்பர் மாத இறுதியில் சென்னையில் நடைபெற்ற அகில இந்திய கைத்தொழில் வர்த்தக மகாநாட்டில் அவர் தலைமை வகித்தபொழுது, இந்தியாவுக்கு பிரிட்டிஷார் இரட்சை கர்த்தாக்கள் என்று உரிமை பாராட்டுவதை ஆராய்ச்சி செய்து பேசியதாவது.

"இரட்சை கர்த்தாக்கள் என உரிமை பாராட்டும் ஆங்கிலேயர் சென்ற 150 வருஷங்களில் தங்கள் கடமையை எவ்வாறு செய்து முடித்திருக்கிறார்கள் என்று ஆராய்ந்து பார்ப்போமாக! சுயநலங் கருதாது ஜனக்ஷேமத்தை முன் நிறுத்தி அவர்கள் நிருவாகம் நடத்தி யிருந்தால் அவர்களுக்கு அவ்வாறு உரிமை பாராட்ட நியாய முண்டு. அவர்களுடைய இரட்சை கர்த்தா ஸ்தானகாலத்தில்

இந்தியா க்ஷேமமாகவும், திருப்தியாகவும் வாழ்ந்திருந்தால் ஆங்கிலேயர் இந்தியாவுக்கு வந்தது, தம் பாக்கிய மென்றே இந்தியர்கள் கருதுவார்கள். ஆனால் பிரிட்டிஷார் சுயநலங் கருதாத இரட்சை கர்த்தாக்களா? அவர்கள் ஆளுகையில் இந்தியா க்ஷேம மடைந்ததா? என்பனவே நாம் கேட்கும் முக்கியமான கேள்விகள். இந்திய விஷயங்களைப் பற்றி சொற்பமேனும் ஞானமுடையவர்கள் இக்கேள்விகளுக்கு ஒரே ஒரு விடை தானளிப்பார்கள்.

இங்கிலாந்தில் உற்பத்தியாகும் சாமான்களை இலாப கரமாக விற்க இந்தியாவை ஒரு சந்தையாக்குவதே அந்நாள் முதல் இந்நாள் வரை பிரிட்டிஷாரின் நோக்கமாக இருந்து வருகிறது. இந்த நோக்கத்தைப் பூர்த்தி செய்யவே அவர்கள் தம் அரசியல் அதிகாரத்தை உபயோகப்படுத்தி வருகிறார்கள். *தடித்த எழுத்திலுள்ள இந்த வாக்கியங்களே மேலே நானெழுப்பிய இரண்டுகேள்விகளுக்கும் ஏற்றதான ஒரேவிடை.* ஆதியில் இந்தியாவுக்கு வந்த ஆங்கிலேயர்கள் வியாபாரம் செய்து பணந்தேடும் நோக்கத்துடனேயே வந்தார்கள். பிற்காலத்தில் அவர்கள் பெற்ற அரசியல் அதிகாரத்தை, கிழக்கிந்திய கம்பெனியார் தம் வர்த்தகத்தை விருத்தி செய்ய உபயோகிக்கலாயினர். 1858-ல் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்திய அரசாட்சியை ஒப்புக்கொண்டது வாஸ்தவமே. ஆனால் பிரிட்டிஷ் சர்க்கார் அரசாட்சி ஒப்புக் கொண்ட பிறகு இந்தியாவின் பொருளாதார நிலை எள்ளளவேனும் விருத்தி யடைந்ததா? கிழக்கிந்திய கம்பெனி டைரக்டர்கள் வகித்திருந்த அதிகாரம்,பெயரளவில் பார்லிமெண்டுக்கு மாற்றப்பட்டது. நடை முறையில் இந்தியா மந்திரி கம்பெனி டைரக்டர்களின் ஸ்தானத்தைப் பெற்றார். இந்திய மந்திரி சபையாரே பொருளாதார நிருவாகத்தை நடத்தி வருகிறார்கள்; இந்திய அரசாங்கத்தை நடத்தும் உத்தியோகஸ்தர்கள் எல்லாம் அவர்கள் கட்டளைப்படி நடக்க வேண்டியவர்களே. இதைத் தெளிவாக விளக்க சமீபத்தில் ஒரு சம்பவம் நடந்தது. பொருளா

தார நிபுணரான சர். பேசில் பிளாக்கட்டு ரிசர்வ் பாங்கி விவாதத்தைப்பற்றித் தன் அபிப்பிராயங்களை அவர்களிடம் நேர்முகமாகத் தெரிவிக்கும் பொருட்டு இங்கிலாந்துக்கு செல்லும்படி ஏற்பட்டது. இந்தியர்களின் தேவையைப் பூர்த்தி செய்யத்தக்க விதமாய் ரிசர்வ் பாங்கி மசோதாவை உருப்படுத்தும்படி இந்தியா மந்திரியாரை வற்புறுத்த இந்திய சர்க்கார் எவ்வளவோ தந்திகள் அனுப்பியும் முடியவில்லை. லண்டனிலிருக்கும் வெளிநாட்டு கம்பெனி டைரக்டர்கள் அக்கம்பெனி விஷயங்களில் எவ்வாறு நடந்து கொள்ளுகிறார்களோ அவ்வாறே ஒரு பெரிய தேசமாகிய இந்தியா விஷயத்திலும் இந்தியா மந்திரி சபையார் நடந்து கொள்ளுகிறார்கள். டைரக்டர்களையும் பங்காளிகளையும் திருப்திப்படுத்தும் பொருட்டு வெளிநாட்டுக் கம்பெனி மானேஜர் லண்டனுக்குச் செல்லுகிறார். அதுபோலவே பிரிட்டிஷ் வர்த்தகப் பிரதிநிதிகளான இந்தியா மந்திரி சபையாரைத் திருப்திப்படுத்த ஒரு பொறுப்பு வாய்ந்த இந்திய சர்க்கார் உத்தியோகஸ்தரும் லண்டனுக்குச் செல்லவேண்டியிருக்கிறது. இந்தியர்களின் இரட்சை கர்த்தாக்களெனப் பெருமை பாராட்டும் பிரிட்டிஷார் தான் ரேன்றிகளா யிருக்கிறார்கள் என்பதற்கு இந்த ஒரு திருஷ்டாந்தம் போதாதா ?"

வங்காளிகளையும், மற்றும் ஹிந்துக்களையும் போலவே, சர். இப்ராஹீம் பிரிட்டிஷாரின் பொருளாதார சம்பந்தமான நிருவாகத்தை மிக வன்மையாக எதிர்த்து வருகிறார்.

மேலும் அவர் கூறுவதாவது:—"இந்திய க்ஷேமத்தை முன் நிறுத்தி, விவசாயம், கைத்தொழில், ஏற்றுமதி இறக்குமதி, நாணயச் செலாவணி, நாணய மாற்றம் முதலியவைகளைப்பற்றி ஏக காலத்தில் விசாரணைகள் நடத்த தனித்தனி கமிட்டிகள் நியமனம் செய்யப்படவேண்டும். இதற்கு முன் சர்க்கார் நியமனம் செய்த கமிட்டிகளில், ஒரு கமிட்டியைத் தவிர, மற்ற கமிட்டிகளிலெல்லாம் தலைவர்

களும், பெரும்பான்மை அங்கத்தினரும் ஐரோப்பியர்களாகவே இருந்திருக்கின்றனர். இந்தியாவின் பொருளாதார சம்பந்தமான நிருவாக முறையை நிர்ணயம் செய்யவேண்டியவர்கள் இந்தியர்களே யன்றி பிரிட்டிஷாரல்ல. ஐரோப்பிய கமிட்டித் தலைவரும், மெம்பர்களும் பிரிட்டனுக்குச் சாதகமாகவே முடிவு செய்து விடுகின்றனர்.

பொருளாதார விஷயமாக விசாரணை செய்ய நியமனம் பெற்ற கமிட்டிகள் ஒன்றில் நமது சர். இப்ராஹீமே தலைமை வகித்தார். அப்பொழுது, வரிப்பளுவைத் தாங்க இந்தியாவுக்குள்ள சக்தியைப்பற்றி அவர் பிரஸ்தாபித்திருப்பதாவது:— "பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வந்தது முதல் இந்தியர்கள் க்ஷேமமாக வாழ்வதாகவும், இந்தியாவில் பணம் குவிந்து கிடப்பதாயும் கூறப்படுகிறது. அது சரியென்று வைத்துக்கொள்வோம். ஆனால் நமது காலட்சேபச் செலவும் இப்பொழுது உயர்ந்துவிட்டது. அகவிலை ஏறிவிட்டதனால் பணத்தின் கொள் முதல் சக்தி குறைந்துவிட்டது. முற்காலத்தைப்போல் மீதம் வைக்க முடிகிறதில்லை. பொதுவாக நாடு முழுதும் நாளுக்கு நாள் வறுமை வளர்ந்துகொண்டு வருகிறது. யுத்தத்துக்கு முன் நபர் ஒன்றுக்கு 18 கெஜம் சீமைத்துணி தேவையாயிருந்தது. இப்பொழுது அது 10 கெஜமாகக் குறைந்துவிட்டது. வரிவருவாய் நாளுக்கு நாள் குறைந்துகொண்டு வருகிறது. ஆகையால் சர்க்கார் செலவைச் சிக்கனம் செய்ய வேண்டுமென்று முறையிடப்படுவதில் ஆச்சரிய மொன்று மில்லை. செலவு சிக்கனத்துக்காக சர்க்கார் சில ஏற்பாடுகள் செய்திருப்பதை நானறிவேன். ஆனால் அவ்வேற்பாடுகள் அவ்வளவு திருப்திகரமாக இருக்க வில்லை. சிக்கன விஷயமாகப் பேச்சுண்டாகும்போது, அரசியல் நிருவாகத்துக்குத் திறமை வாய்ந்தவர்கள் தேவையென்றும், திறமை வாய்ந்தவர்களுக்கு ஜாஸ்தி சம்பளம் கொடுத்துத்தான் ஆக வேண்டுமென்றும் ஒரு நியாயம் கூறப்படுகிறது. இந்தத் திறமை வாதத்தினால் உண்டான தீமைகளுக்குக் கையும்

கணக்குமில்லை. ஒரு தேசத்துக்கு எவ்வளவு பணச் செலவு செய்ய சக்தியுண்டோ அவ்வளவுக்கே திறமையுடைய உத்தியோகஸ்தர்களும் தேவை. கரும்பு ருசியென்று வேரோடு விழுங்குவார் ஒருவருமில்லை. ஒரு தேசத்துக்குத் தாங்க முடியாத செலவில் நிபுணர்களையும், திறமையுடையவர்களையும் நியமனம் செய்வது ஆபத்துக்கிடமானதாகும். குடிகளின் செல்வ நிலையை உயர்த்துவதற்கு பண வருவாய்க்குரிய தொழில்களை விருத்தி செய்வதே சர்க்காரின் முதற் கடமையாகும்.

கடைசியாக சர். இப்ராஹீம் கூறுவதாவது:—பரோபகாரத்தை முன்னிட்டும், தம் தேக சுகத்தை விருத்தி செய்யவும் பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வரவில்லை. இந்தியாவின் இரட்சை கர்த்தாக்களாக அவர்கள் இங்கு வருவதாகக் கூறுவதை அவர்கள் நிறுத்திவிடட்டும். தமது வியாபார விருத்திக்காக அவர்கள் இங்கு வந்திருப்பதாக உள்ளபடியே சொல்லிவிடட்டும். இந்தியாவின் பொருளாதார நிலையை உள்ளபடியுணர்ந்து அதை உயர்த்தத் தகுதியான ஏற்பாடு செய்ய வேண்டுமென்று லார்ட். இர்வினுக்கு இந்த சந்தர்ப்பத்தில் விண்ணப்பம் செய்கிறேன். இந்தியாவிலுள்ள வர்த்தக நிபுணர்களையெல்லாம் வரவழைத்து, பிரிட்டிஷ் வர்த்தக நிலையை அவர்களிடம் வெளிப்படையாக விளக்கிக் கூறி, இந்தியாவின் க்ஷேமத்துக்காக, எல்லோரும் ஒத்துப்பேசி ஒரு சமரச ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நான் லார்ட். இர்வினைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.”

பிரிட்டிஷ் அரசாட்சியைப்பற்றி, ஹிந்துக்கள் கொண்டிருக்கும் அபிப்பிராயத்துக்கும், முஸ்லிம் தலைவரான சர். இப்ராஹீம் அபிப்பிராயத்துக்கும் பெரிய வித்தியாசமொன்றுமில்லையென நன்கு விளங்குகிறதல்லவா?

சைமன் கமிஷன் விஷயமாக முஸ்லிம்கள் கொண்டுள்ள அபிப்பிராயமும், அவர்களுக்கு பிரிட்டிஷ் அரசாட்சி

யிலுள்ள மனப்பான்மையை நன்கு புலப்படுத்துகிறது. பொறுப்பும், செல்வாக்குமுடைய முஸ்லிம் தலைவர்களெல்லாம் சைமன் கமிஷன் பகிஷ்கார விஷயத்தில் ஹிந்துக்களுடன் ஒத்துழைத்தே வருகிறார்கள். 1927 டிசம்பர் 30-ல் கல்கத்தாவில் கூடிய அகில இந்திய முஸ்லிம் லீக் மகாநாட்டில் சைமன் கமிஷனைப் பகிஷ்கரிக்குமாறு ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அதற்கு எதிரிடையாக இரண்டே இரண்டு பேர்தான் ஓட்டுக் கொடுத்தார்கள். அம்மகாநாட்டில் தலைமை வகித்த, இந்திய சட்ட சபை உதவித்தலைவர் மௌல்வீ முகமது யாக்கப், ஒரு வெள்ளையர் கமிஷன் நியமனம் செய்யப்பட்டிருப்பதை வன்மையாகக் கண்டித்துப் பேசினார்.

அதே தேதியில், அகில இந்திய முஸ்லிம் லீகின் வருஷாந்தக் கூட்டம் என்னும் பேரால் ஒரு போட்டி மகாநாடும் நடைபெற்றது. அதற்கு லாகூர் சர். முகமது ஷாபி தலைமை வகித்தார். அந்தக் கூட்டத்தில் சைமன் கமிஷனை ஆதரிக்க வேண்டுமென்று சொற்ப ஓட்டு மிகுதியால் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாம். ஆனால் ஓட்டைக் கணக்கிட வேண்டுமென்று சிறுபான்மைக் கட்சியார் விண்ணப்பஞ் செய்தனர். அவ் விண்ணப்பத்தை மகாநாட்டார் ஒப்புக் கொள்ளவில்லை. அந்த சிறுபான்மைக் கட்சியைச் சேர்ந்த முகமது அலம் (எம். எல். சி), பாஞ்சால கிலாபத் கமிட்டித் தலைவர் அப்தல் காதிர் அப்சால் ஹக் (எம் எல். ஸி.), மஜார் அலி அசார், முகமது ஷாரிப் முதலியோர் அந்த மகாநாட்டைப்பற்றி ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். மகாநாட்டுத் தலைவர் தமது அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்ததாகவும், தீர்மானத்துக்கு சாதகபாதக ஓட்டுகள் சமமாகவே இருந்தனவென்றும் அவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. எனினும் அந்த ராஜபக்தியுடைய மகாநாட்டுத் தலைவர் சர். முகமது ஷாபியும், பிரிட்டிஷ் அரசாட்சியை வரையறையின்றி ஆதரித்து விடவில்லை. அவர் கூறியதாவது:—"உள் நாட்டு

விஷயங்களில் இந்தியா மந்திரிக்கு இருந்துவரும் கண்காணிப்பு இந்திய க்ஷேமத்துக்குப் பாதகமாகவே இருக்கிறது. இவ்விஷயத்தில் இந்திய சர்க்காரின் அடிமைத்தனம் ஒழியவேண்டும். வைசிராய் நிருவாக சபையில் வெளிநாட்டு, அரசியல், இலாகாக்களை ஒரே மெம்பரின் ஆதீனத்தில் விடவேண்டும். இராணுவ இலாகாவுக்கு, இந்திய மந்திரி சபைக்கடங்கிய ஒரு சிவில் உத்தியோகஸ்தரைத் தலைவராக்கவேண்டும். வைசிராய் நிருவாக சபையில் 8 பேர் இருக்கவேண்டும். அவர்களில் 4 பேர் இந்தியராகவும் இருக்கவேண்டும். மத்திய சட்டசபை மெம்பர்களிலிருந்து ஒருவர் அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவர்களைத் தேர்ந்தெடுத்து வைசிராய் நிருவாக சபை அங்கத்தினராக்கவேண்டும். மாகாணங்களுக்கும் பூரண சுய ஆட்சி வழங்கவேண்டும்."

முஸ்லிம்களெல்லாம் நல்ல பிள்ளைகளென்றும், தற்கால அரசியல் முறையில் எத்தகைய மாற்றம் செய்யவும் அவர்கள் விரும்பவில்லை யென்றும் கன்னி மேயோ கூறியிருப்பது சுத்தப்பொய் என்று விளக்க, மேலே காட்டியவைகளை விட வேறு திருஷ்டாந்தங்கள் வேண்டுமோ ?

இனி, பிரமாதமாகப் பெருக்கிக் கூறப்படும் ஹிந்து-முஸ்லிம் போராட்டத்தைப்பற்றி, முஸ்லிம் தலைவர்களில் சிலர் வெளியிட்டுள்ள அபிப்பிராயங்களைக் கீழே தருகின்றோம்.

அகில இந்திய முஸ்லிம் லீக் மகாநாட்டில் தலைமை வகித்த மௌல்வி முகமது யாகூப் பேசியதாவது:— ஹிந்து-முஸ்லிம் சச்சரவு விஷயமாய், நான் ஹிந்துக்களையோ, முஸ்லிம்களையோ குறை கூறவில்லை. இவ்விஷயத்தில் நபிகள் நாயகமே நமக்கு சிறந்த வழிகாட்டியாயிருக்கிறார். அவர் காட்டியுள்ள வழியை நாம் பின்பற்றினால் ஹிந்து-முஸ்லிம் பிரச்சினை சுலுவாக முடிவடைந்துவிடும். நபிகள்

நாயகம் மிகுந்த தியாக புத்தியுடன் விட்டுக்கொடுத்து, மெதீனா யூதர்களுடன் ஒற்றுமை ஏற்படுத்தினர். அவ் வழியையே நாம் பின்பற்றவேண்டும். ஒற்றுமை என்றால் ஒரு சமுதாயத்தை மறு சமுதாயம் விழுங்கிவிடவேண்டு மென்று அர்த்தமல்ல. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் கூட்டுக் குடும்பத்தார் பாவனையில் ஒத்துப்பேசி ஒரு சமரச முடிவுசெய்து கொள்ளவேண்டும். அவ்வாறு செய்து கொண்டால் இரு சமுதாயத்தாரையும் உலகத்தார் மதிப் பார்கள். அவ்வாறு செய்யாமல் வீண் வழக்காடி, அன்னி யரை மத்தியஸ்தராக அழைத்தால் உலகம் அவர்களைப் பார்த்துச் சிரிக்கும். சென்னைக் காங்கிரஸ் முடிவு, முஸ்லிம் களில் 100 க்கு 90 பேருக்கும் உடன்பாடானதே.

முஸ்லிம் லீக் வருஷாந்தக் கூட்டத்தில் சைமன் கமிஷன் பகிஷ்காரத் தீர்மானத்தைப் பிரேரேபித்த சர் அலி இமாம் கூறியதாவது:—"கமிஷன் நியமனம் செய்யப் பட்டிருக்கும் தோரணை ஆதரிக்கத் தக்கதல்ல. இந்தியர் கள் பகிஷ்கரிக்கப் பட்டிருக்கிறார்கள். கமிஷனர் முன் இந்தியர்கள் சாட்சிக்காரர்களைப்போல் கைகட்டி நிற்க வேண்டுமாம். கமிஷனில் மெம்பர் ஸ்தானம் வகிக்கத்தகுதி யுடைய இந்தியர்கள் இல்லாமலா போய்விட்டார்கள்? இரண்டு ஹிந்துக்களும், ஒரு முஸ்லிமும், ஒரு உத்தியோ கஸ்தரல்லாத ஐரோப்பியரும், ஒரு ஹைக்கோர்ட்டு ஜட்ஜி யும் அடங்கிய ஐந்துபேரைத் தேர்ந்தனுப்ப வேண்டு மென்று பிரிட்டிஷ் மந்திரி சபையார் இந்திய சட்டசபை யாரிடம் கேட்டிருந்தால் சுலபமாக ஐந்துபேர் தேர்ந்தெடுக் கப்பட்டிருப்பார்கள். அவ்வாறு இந்திய சட்டசபையால் கமிஷன் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தால் பிரிட்டிஷ் சர்க் காரை ஒருவரும் குறைகூறவும் மாட்டார்கள். பாரபட்ச மற்ற அபிப்பிராயம் கூறக்கூடிய இந்தியர்கள் இல்லையென்று வேறொரு குறை கூறப்படுகிறது. ஒருவருடைய பூர்வ அபிப்பிராயம் எத்தகையதாயிருந்தாலும், கமிஷன் அங்கத் தினராகும் நாள் முதல் அவர் பாரபட்சமற்ற அபிப்பிரா

யம் கூறவே கட்டுப்பட்டவராவார். பூர்வ அபிப்பிராயத்தினுல் பாதிக்கப்படாமல் தம் பொறுப்புணர்ந்து நடக்கக்கூடிய இந்தியர்கள் எத்துணையோபேர் இருக்கத்தான் செய்கிறுர்கள். எந்த இந்திய ஹைக்கோர்ட்டு ஜட்ஜாவது வகுப்புணர்ச்சியோடும், பாரபட்சமாகவும் தீர்ப்புக் கூறியதாக நிரூபிக்க முடியுமா? ஒரு ஹைக்கோர்ட்டு ஜட்ஜ் பதவியை விட ராயல் கமிஷன் மெம்பர் பதவி, அவ்வளவு உயர்வானதா? நீங்கள் இந்த அவமானத்தைப் பொறுத்துக்கொண்டிருக்கப் போகிறீர்களா? (இல்லை! இல்லை! என்ற சப்தம்) நான் ஒரு வடிகட்டின மிதவாதி. சர்க்கார் தாசனுகவும் இருந்திருக்கிறேன். ஆனுலும் இந்த கமிஷனை ஆதரிக்க முடியவில்லை.

பிரிட்டிஷ் அதிகாரிகள் வீசியெறியும் எச்சிலையுண்டு வயிறு வளர்க்கும் அடிமைகளைப்போலவே நாம் பாவிக்கப் படுகிறோம். ஆனுல் யுத்தகாலத்தில் நாம் சம அந்தஸ்துடைய பங்காளிகளாகப் பாவிக்கப்பட்டோம். பிரிட்டிஷார் மனப்பான்மை மாறிவிட்டதாகவும் கூறப்பட்டது. யுத்தத்தில் நாமும் ஒத்துழைக்க வேண்டுமென்று வேண்டிக் கொள்ளப்பட்டது. பிளாண்டேர்ஸ் போர்க்களத்தில் நாமும் இரத்தம் சிந்திஞேம். பிரிட்டிஷார் சொல்வதெல்லாம் உண்மையென்று தான் நான் எண்ணியிருந்தேன். இப்பொழுதோ அவர்களுடன் உட்காரக்கூட நமக்கு யோக்கியதையில்லையென்று கூறுகிறுர்கள். இந்த அவமானத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளப் போகிறீர்களா? மண்டிபோட்டு சலாம் செய்யப் போகிறீர்களா? என்னவந்தாலும் மாஜி சர்க்கார் தாசனுன நான் இதைப் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டேன்."

வாஸ்தவம் என்னவென்றுல், முஸ்லிம் அரசியல் வாதிகள் வகுப்புரிமைகளைப்பற்றி எத்தகைய அபிப்பிராயமுடையவர்களாயிருந்தாலும், இந்தியாவில் அன்னியர் அரசாட்சி செலுத்துவதைப் பொறுத்துக் கொண்டிருக்க

மாட்டார்கள். அவர்கள் ஒருகாலத்தில் அதிகார வர்க்கத்தினரின் கைப்பாவையாய் வாழ்ந்துவந்தது வாஸ்தவமே. ஆனால் அது மானங்கெட்ட வாழ்க்கையென்று அவர்கள் இப்பொழுது உணர்ந்துவிட்டனர்.

சென்னை காங்கிரஸ் தலைவராயிருந்த டாக்டர். அன்சாரியின் அபிப்பிராயங்களைப் பார்த்தால் ஹிந்து-முஸ்லிம் விஷயத்தில் ஒரு மாற்றம் ஏற்பட்டிருப்பது பிரத்தியட்சமாகும். அவர் கூறுவதாவது:—''சுயராஜ்யமே இந்தியாவின் தேவையென்று எல்லா அரசியல் வாதிகளும் ஒப்புக்கொள்கின்றனர். அந்த சுயராஜ்யத்தில் எல்லா சமுதாயத்தாரும் சம உரிமை பெற்று சகோதர பாவனையில் வாழ்வார்கள். பிறநாடுகளில் ஜனங்கள் அநுபவிக்கும் சுதந்திர வாழ்க்கையைத் தான் இந்தியர்களும் விரும்புகிறார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குள் இத்தகைய ஒரு சுதந்தர வாழ்வுபெற முடியுமானால், ஏகாதிபத்தியத்தை விட்டுப் பிரிய அவர்கள் விரும்பமாட்டார்கள். ஆனால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அதற்கு முட்டுக்கட்டையாயிருக்குமானால் அந்த ஏகாதிபத்தியத் தொடர்பை அறுத்துத்தள்ள அவர்கள் பின்வாங்க மாட்டார்கள். மகாத்மா கூறுகிறபடி, "முடியுமானால் ஏகாதிபத்தியத்துக்குள்ளே, முடியாவிட்டால் ஏகாதிபத்தியத்துக்கு வெளியில்" என்பதே இந்தியர்களின் லட்சியம்.

"நாங்கள் சுயராஜ்யம் பெறுவதற்கு எதிரிடையான தடைகள் பல இருக்கின்றன. ஆனால் அவைகளெல்லாம் வெல்லக் கூடாதவைகளல்ல. தாழ்த்தப் பட்டவர்களை உயர்த்துவதே வெள்ளையர் நாகரிகத்தின் நோக்கமென்று அரசியல் வாதிகளும், ராஜதந்திரிகளும் பெருமை பாராட்டிக்கொள்கிறார்கள். ஆனால் இந்தப் பாராட்டெல்லாம் வெறும் பித்தலாட்டமென்று ஸ்ரீ. சிஸில் ரோட்ஸ் தெளிவாகக்கூறியிருக்கிறார். ''வர்த்தகந்தான் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம்; இந்தியர்கள் தான் எங்களுக்கு ஏற்ற வாடிக்கைக்காரர்கள்"

என்று ஸ்ரீ. ஜோஸப் சாம்பர்லேன் ரத்தினச் சுருக்கமாய் விளக்கியிருக்கிறார். இந்தப் பரோபகாரக் கொள்ளைச் சரித்திரம் உலகப் பிரசித்தமாய்விட்டது. இந்தக் கொள்ளை மேலும் நடந்துகொண்டே போகுமானால் உலகம் நரக வாதனை யனுபவிக்க வேண்டியதாகிவிடும். ஆனால் அந்த நரக வாதனையைப் போக்கும்வழி இந்தியர் கையில் இருக்கிறது. ஏனென்றால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு இந்தியாவே உயிர் நிலை. இந்தியா சுதந்திரம்பெற்றால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தவிடுபொடியாவது நிச்சயம். ஆசியாவின் சுயேச்சைக்கும் உலக சமாதானத்துக்கும் இந்தியா சுயேச்சை யடையவேண்டியது மிக முக்கியமாகும்"

டாக்டர் அன்சாரியின் அபிப்பிராயத்துக்கும் ஹிந்து அரசியல் வாதிகள் அபிப்பிராயத்துக்கும் ஏதாவது வித்தியாசமுண்டா?



## அத்தியாயம் 30.

# பிரிட்டிஷ் அரசாட்சியைப் பற்றிய பிரிட்டிஷார் அபிப்பிராயங்கள்.

அரசியல் பிரசாரமே கன்னி மேயோவின் நோக்கமென்று நாம் ஏற்கனவே விளக்கியிருக்கிறோம். பிரிட்டிஷார் இந்தியாவில் சாதித்த அரிய பெரிய விஷயங்களையும் பொது ஜனங்களுக்கு பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களிடமுள்ள மதிப்பையும்பற்றி அவர் ஒரு அத்தியாயத்திலாவது கூருமலிருக்கவில்லை. நீங்கள் இந்தியமாதாவை ஆதி முதல் அந்தம் வரை படித்துப்பாருங்கள். ஒரு பக்கத்திலாவது இந்தியரைப்பாராட்டி அவர் ஒரு வார்த்தையாவது கூறவில்லை; மாருக பிரிட்டிஷாரைப் பற்றி ஒவ்வொரு பக்கத்திலும் புகழ்ந்திருக்கிருர். ஆகவே இதுபோன்ற ஒரு புஸ்தகம் இதுகாறும் வெளிவந்ததில்லை யென்றே சொல்லலாம். இந்தியாவைப் பற்றி எத்தனையோ பிரிட்டிஷ் ஆசிரியர்கள் நூல்கள் எழுதியிருக்கிருர்கள். ஆனுல் ஒருவராவது இந்தியரைப் பாதாளம்வரைத் தாழ்த்தியும் பிரிட்டிஷாரை ஆகாயம் வரை உயர்த்தியும் எழுதவில்லை. அவர்கள் இந்திய க்ஷேமத்துக்குப் பிரிட்டிஷ் அரசாட்சி யின்றியமையாததென்று கூறினுலும் பிரிட்டிஷாரின் குற்றங் குறைகளை எடுத்துக்காட்டாது விட்டு விடவில்லை. ஆனுல் கன்னி மேயோவுக்கு மட்டும் பிரிட்டிஷ் அரசாட்சி குற்றங் குறையில்லாத உத்தம அரசாட்சியா யிருக்கிறது. ஆனுலும் இந்தியா உலகத்துக்கெல்லாம் தீமை விளைக்கும் ஒரு நரகமாக விருக்கிறதாம், அதற்கு ஜவாப்தாரிகள் இந்தியர்கள் தானும், பிரிட்டிஷார் அல்லவாம். ஆனுல் ஒரு உத்தம அரசாட்சியில் வாழும் குடிகள் ஏன் இவ்வளவு

ஆகாவழிகளா யிருக்க வேண்டுமென்று, அவர் சிறிதாவது சிந்தித்துப் பார்க்கவில்லை.

அந்நியராட்சி எப்பொழுதுமே தீமை விளைக்கக்கூடிய தாகும். அது குடியரசா யிருந்தாலும் சரி; அதிகார வர்க்கத்தார் அரசாயிருந்தாலும் சரி—அந்நிய ஆட்சி அதம—அக்கிரம-ஆட்சியே. அந்நிய ஆட்சி அவ்வாறுதானிருக்க முடியும். ஆங்கிலேயர் நெறி தவருத உத்தமர்களாக இருக்கலாம். ஆனாலும் அவர்கள் மனிதர்தானே. எவ்வளவு உத்தமர்களும் தாம் சாக மருந்துண்ணுர்கள். இந்தியர்கள் சுகமாய் வாழவும் பிரிட்டன் பட்டினி கிடக்கவும் அவர்கள் விரும்புவார்களா? முடி அரசை ஜனங்கள் வெறுப்பதற்கு இதுதான் காரணம். சுதேசிகள் நடத்தும் முடியரசினுல் கூட ஜனங்களுக்கு க்ஷேமமுண்டாகாதாயின் விதேசிகள் நடத்தும் அரசினுல் எவ்வாறு உண்டாகும்? சுதேச அரசாட்சிக்குரிய குறைபாடுகளெல்லாம் பிரிட்டிஷ் அரசாட்சிக்கும் உண்டென உத்தமர்களான அநேக ஆங்கிலேயர்கள் ஒப்புக் கொண்டிருக்கிருர்கள். ஒரு தேசத்தார் நீண்டகாலம் அந்நிய ஆட்சிக்கு உட்பட்டிருந்தால் திட்டமாகவே உருவழிந்து பரிசுகெட்டுப் போவார்கள் என்று ஆசிரியர் ஜோசீலி எழுதியிருக்கிருர். மாண்டேகு-செம்ஸ்போர்டு ரிப்போர்ட்டை எழுதி வெளியிட்டவர்களும் அக்காலத்திய பிரிட்டிஷ் ஆட்சிக்கு "உதாரமான எதேச்சாதிகார ஆட்சி" என்று தான் பெயர் சூட்டியிருக்கிருர்கள். இந்த "உதாரமான எதேச்சாதிகார அரசாட்சியில் குடிகளெல்லாம் நசுக்கப்படுகிருர்கள் என்று தொழிற் கட்சித் தலைவரான ஸ்ரீ. ராம்ஸே மக்டோனல்டு கூறுகிருர்.

இவ்விஷயமாக நமது சொந்த அபிப்பிராயத்தை விளக்கி வீண்பொழுது போக்குவதைவிட, இந்திய அரசாட்சியைப் பற்றி அபிப்பிராயம் கூறுவதற்குத் தான் ரேன்றியான கன்னிமேயோவைவிட ஜாஸ்தி யோக்கியதை யுடைய பிரிட்டிஷ் நிருவாக உத்தியோகஸ்தர்களும் ஆசிரி

யர்களும் என்ன சொல்லியிருக்கிறார்கள் என்று கவனிப்பதே சிலாக்கியமானதென்று நினைக்கிறோம்.

ஸ்ரீ. ஜி. லவ்ஸ் டிக்கின்சன் சுதந்திர மனப்பாங்குடைய ஒரு உத்தம ஆசிரியர். அவர் கீழைத் தேசங்களில் பிரயாணம் செய்து அரசியல் விஷயங்களை நேர்முகமாகக் கண்டறிந்த பிறகு "இந்தியா, சீனா, ஜெப்பான் நாகரீகம்" என ஒரு நூலை எழுதி வெளியிட்டார். அவர் அந்நூலில் கூறியிருப்பதாவது:—"இந்திய நாகரீகத்தின் மகிமையை அறிய ஆங்கிலேயர்களுக்கு சக்தியே இல்லை. இந்திய நாகரீக தத்துவங்களைக் கிரகித்துக்கொள்ள அவர்களுக்கு வாசனையுமில்லை. தமது ஆசார அனுஷ்டானங்களை யெல்லாம் அவர்கள் இந்தியாவுக்கு கொண்டுபோகிறார்கள். 20 அல்லது 25 வருஷங்கள் நாடு கடத்தப் பட்டவர்களைப்போல் எண்ணி எண்ணித் தொலைக்கிறார்கள். அவர்கள் தாய் நாட்டுக்கு வந்ததும் புது மனிதர்களைப் பதிலாக அனுப்புகிறார்கள். சஞ்சார சௌகரியங்களினால் ஏற்பட்ட நன்மை இவ்வளவு தான். இந்தியாவிலிருக்கும் ஆங்கிலேயர்கள் கல்விப் பயிற்சிக்காகத் தம் குழந்தைகளை இங்கிலாந்துக்கு அனுப்புகிறார்கள். சாதாரணமாக அவர்கள் மனைவிமார் தம் பாதி வாழ்நாளை இங்கிலாந்திலே போக்குகிறார்கள். அவர்களும் அடிக்கடி தாய் நாட்டுக்கு வந்து போகிறார்கள். அவர்களது உயிர் நாடியிருப்பது இந்தியாவிலல்ல; இங்கிலாந்திலே. ஆகவே அவர்கள் இந்தியர்களோடு ஒருநாளும் ஐக்கியப்படக் கூடாதவர்களா யிருக்கிறார்கள்.

சர். பாம்ப்பைட் புல்லர், இந்தியர் வாழ்க்கை முறை மனோபாவனை இவைகளைப் பற்றி எழுதிய ஒரு நூலில் அவர் கூறியிருப்பதாவது:—"தமது உத்தியோகத்துக்குத் தேவையான யோக்கியதைகள் இல்லாத பிரிட்டிஷ் இளைஞர்கள் இந்தியாவில் பொறுப்பு வாய்ந்த உத்தியோகங்கள் வகிக்க அனுப்பப்படுகிறார்கள். அவர்களுக்கு இந்துதேச

சட்டமோ சரித்திரமோ தெரியாது. பொருளாதார விஷயங்களிலும் அவர்களுக்கு ஞானம் கிடையாது. அரை குறையாக ஒரு தேச பாஷையை மட்டும் கற்றிருப்பார்கள். உத்தியோகத்துக்குத் தேவையான இதர விஷயங்களிலும் அவர்கள் ஞான சூனியர்களாகவே இருக்கிறார்கள். போலீஸ் இலாகாவுக்குரிய பழக்கம் பொருதவர்கள் போலீஸ் உத்தியோகஸ்தர்களாக அனுப்பப்படுகிறார்கள். போலீஸ் உத்தியோகஸ்தர்கள் இந்தியர்களின் வாழ்க்கை முறை ஆசாரங்கள் முதலியவைகளைப்பற்றி அறிந்திருக்க வேண்டியது மிக அவசியமானாலும் அத்தகைய ஞானமில்லாதவர்களே பொதுவாக போலீஸ் உத்தியோகஸ்தர்களாக நியமனம் பெறுகிறார்கள். தேசபாஷைகளில் ஒன்ருவது அவர்கள் கற்றுக்கொள்வதுமில்லை. வன இலாகா உத்தியோகஸ்தர்களும், வைத்திய இலாகா உத்தியோகஸ்தர்களும், இஞ்சினீயர்களும், கல்வியிலாகாதார்களும் இத்தகையவர்களே. இந்த ஏற்பாடு சுதேசிகளை அவமதிக்கத்தக்கதாகும்."

இந்திய விஷயங்களை மிகுந்த ஆவலுடன் கவனித்து வரும், பெயர்பெற்ற சோஷியலிஸ்டு தலைவர் ஸ்ரீ. எச். எம். ஹிண்டமான் எழுதுவதாவது:—"இந்தியாவுக்கு அனுப்பப்படும் உத்தியோகஸ்தர்கள், இந்திய வாழ்வுக்குப் பொருந்தாத நடை உடை பாவனையுடையவர்களா யிருக்கிறார்கள். உத்தியோக வாழ்க்கையிலும், சமூக வாழ்க்கையிலும் அவர்கள் இந்தியர்களுடன் கலந்து கொள்வதில்லை. மாகாண கவர்னர்கள் ஐந்து வருஷங்களுக்கு மேல் உத்தியோகத்தி லிருப்பதில்லை. கீழுத்தியோகஸ்தர்களும் அடிக்கடி விடுமுறை பெற்று இங்கிலாந்துக்குச் செல்லுகிறார்கள்; உத்தியோகம் முடிந்ததும் மீண்டும் இங்கிலாந்துக்குப் போய்விடுகிறார்கள். அவர்கள் நீண்டகாலம் உண்மையாக உத்தியோகம் நடத்தியவர்களா யிருந்தாலும் பொதுவாழ்வில் இந்தியர்களுடன் கலந்து நட்புப் பாராட்டியவர்களாக இருக்கமாட்டார்கள். ஆதிகாலத்தில் மிகச் சொற்பமா

யிருந்த ஜாதி, நிற வித்திபாச உணர்ச்சிகள் நாளடைவில் வலுத்துவிட்டன. தற்கால ஆங்கிலப் பிரபுக்கள் குடும்பங்களைவிட எவ்வளவோ புராதனப் பெருமை வாய்ந்த பரம்பரைச் சீமான்களான ஜெமீன்தார்களும், அரச குடும்பத்தாரும்கூட, வயிற்றுப் பிழைப்புக்காக சமீபத்தில் இந்தியாவுக்கு வந்த ஆங்கில உத்தியோகஸ்தர்களுக்குத் தாழ்ந்தவர்களாகவே மதிக்கப்படுகிறார்கள்."

பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களின் பொதுவிஷய ஞானத்தைப் பற்றி ஸ்ரீ. ராம்ஸே மாக்டோனல்டு கூறுவதாவது:—"பத்துப் பதினைந்து வருஷம் இந்தியாவில் உத்தியோகம் நடாத்திய சிவில் உத்தியோகஸ்தர்கள் பலரை நான் இந்தியாவில் சந்தித்தேன். இந்தியத் தலைவர்களில் ஒருவரையாவது அவர்களுக்குத் தெரியாது; பொது விஷயங்களைப்பற்றி அவர்கள் பரஸ்பரம் வார்த்தையாடியதும் கிடையாது. தற்கால ராஜீய விஷயங்களில் அவர்களுக்குள்ள ஞானமோ பூச்சியந்தான். கிளப்புப் பேச்சுகளிலும், பத்திரிகை ரிப்போர்ட்டுகளிலும் வெளியாகும் விஷயங்களைத் தவிர வேறெதையும் அவர்கள் அறியார்கள். லண்டனில் இருக்கும் நம்மவர்கள் பத்திரிகைகள் மூலம் விஷயங்களை அறியும் அளவிலாவது அவர்கள் அறிய முயல்வதில்லை. இந்தியர்கள் நடத்தும் பத்திரிகைகளை அவர்கள் வாசிப்பதுமில்லை."

முற்காலங்களில் இந்தியாவுக்கு அனுப்பப்பட்ட உத்தியோகஸ்தர்கள், அவர்களது உத்தியோகத்துக்குத் தேவையான தேச பாஷைகளைக் கற்றிருக்க வேண்டுமென்று ஏற்பாடு இருந்ததென்று லார்டு கர்சன் பிரஸ்தாபித்ததாக ஸ்ரீ. மக்டோனல்டு கூறுகிறார்.

"ஆனால் தற்கால உத்தியோகஸ்தர்களோ அது அநாவசியமென்று நினைக்கிறார்கள். 15 அல்லது 25 வருஷங்களுக்கு முன் இருந்ததைவிட தேச பாஷை பேசக்கூடிய

வர்கள் தொகை இப்பொழுது மிகச் சொற்பமாகவே இருக்கிறது.

ஆங்கிலேயர்களின் கர்வத்தையும், ஜாதி யிறுமாப்பையும் பற்றி ஸ்ரீ. ஆல்டஸ் ஹக்ஸ்லி என்னும் ஓர் ஆசிரியர் எழுதியிருப்பதாவது:—“இங்கிலாந்து கிராமாந்தரங்களிலிருந்து ஒரு வாலிபன் இந்தியன் சிவில் சர்வீசில் ஒரு குமாஸ்தாவாகச் செல்கிறான். இந்தியாவுக்குச் சென்றவுடனே அவன் ஆளும் வகுப்பைச் சேர்ந்த ஒரு ஆண்சிங்கமாகி விடுகிறான். அவன் காலாலிட்ட பணியைத் தலையால் செய்ய எண்ணற்ற இந்திய ஊழியர்கள் அவனைச் சூழ்ந்து விடுகிறார்கள். 32 கோடி இந்தியர்களுக்கு அவன் எஜமானனாகிவிடுகிறான். இந்தியக் கூலியும், மகாராஜாவும், பறையனும், பிராமணனும், உழவனும், கலாசாலைப் பட்டதாரிகளும்-சுருங்கக்கூறில் சர்வ இந்தியர்களும் அவனுக்குக் கீழ்ப்பட்டவர்கள் என நினைக்கிறான். அவன் ஏழை மகனாயிருந்தாலும், கல்வியறிவில்லாதவனாயிருந்தாலும், முழு மூடனாயிருந்தாலும் காரியமில்லை; அவனது வெள்ளைத் தோல், அவனுக்கு எல்லாப் பெருமைகளையும் அளித்து விடுகிறது.”

லண்டன் டேய்லி ஹிரால்டு பத்திரிகையின் அதிபராயிருந்த ஸ்ரீ. ஜியார்ஜ் லான்ஸ்பெரி, 1910 டிசம்பர் 11-ல் எஸ்ஸக்ஸ் ஹாலில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசியதாவது:—“இந்தியாவில் சுமார் 30 கோடி ஜனங்கள் இருக்கிறார்கள். இங்கிலாந்தில் நாம் 4 கோடிப்பேர் இருக்கிறோம். ஆனால் அவர்களுடைய க்ஷேமத்துக்குத் தேவை இன்னதென்று அவர்களைவிட நமக்கு நன்றாகத் தெரியுமென்று நாம் பெருமை பாராட்டுகிறோம். இதைவிட முழுமூடத்தனமான இடும்பு வேறுண்டா? நமது தோல் வெண்மையாயிருக்கும் காரணத்தினாலேயே, கறுப்புத்தோலுடைய இந்தியர்களைவிட நாம் மிகுந்த புத்திசாலிகளென்று பெருமை பாராட்டுகிறோம். இந்தியர்களைச் சந்திக்கும் போதெல்

லாம் நான் வெட்கித் தலைகுனிகிறேன். இந்தியாவைப் பற்றி அவர்களுக்குத் தெரிவதைவிட நமக்கு எவ்வாறு ஜாஸ்தியாகத் தெரியமுடியும்?."

இந்தியா மந்திரியாயிருந்த ஸ்ரீ. இ. எஸ். மண்டேகு 1917 ஜூலை மாதத்தில் பார்லிமெண்டில் பேசியதாவது:— இந்திய அரசாங்க இயந்திரம் தற்காலப் போக்குக்கு ஒவ்வாத ஒரு இரும்புக் கூடாகிவிட்டது. அதை மேலும் இந்தியாவில் வைத்துக்கொண்டிருப்பது நியாயமல்ல.''

"சுதந்தர புத்தியுடைய இந்தியர்களின் கண்டன அபிப்பிராயங்கள் வெளிவராமல் தடுக்கப்பட் டிருப்பதிலேயே இந்திய அரசாங்கம் நிலைபெற்று வருகிறது" என்று இந்தியா உதவி மந்திரியா யிருந்த சர். லூயிஸ் மாலட் ஒரு சந்தர்ப்பத்தில் பிரஸ்தாபித்திருக்கிறார்.

இந்தியாவுக்கு வரும் வைசிராய் களுக்கும் கூட இந்திய பாஷை ஒன்றாவது தெரியாது; இங்கு வந்த பிறகும் அவர்கள் சற்றுக்கொள்வதில்லை. அவர்கள் இந்திய ஜனங்களுடன் நெருங்கிப் பழகுவதுமில்லை. கீழ் உத்தியோகஸ்தர்கள் சொல்வதையே நம்பவேண்டியவர்களாக இருக்கிறார்கள். அவருக்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரமோ அபாரமானது. கீழ் உத்தியோகஸ்தர் சொல்லை நம்பியே அந்த அபார அதிகாரத்தை அவர் உபயோகித்து வருகிறார்.

கர்னல் வெட்ஜ்வுட் நமது இர்வின் பிரபுவைப்பற்றிக் கூறி யிருப்பதாவது:—"இந்தியாவில் அவர் நிலைமை மிகக் கஷ்டமாகத்தா னிருக்கும். அவருக்கு இந்தியர்களைப் பற்றி ஒன்றுமே தெரியாது. கீழ் உத்தியோகஸ்தர்கள் சொல்லையே அவர் நம்பவேண்டியவராக இருக்கிறார். இந்திய விஷயங்களைப்பற்றி பார்லிமேண்டில் விவாதம் நடந்த காலத்தில் அவர் ஒரு முறையாவது வந்திருந்ததை நான் பார்த்ததில்லை".

ஒரு பொறுப்புள்ள பார்லிமெண்டு மெம்பரிட மிருந்து இத்தகைய நற்சாட்சி பத்திரம் பெற்றிருக்கும் ஒருவரை

வைசிராயாக நியமித்திருப்பது விநோத மல்லவா? உயர்தர உத்தியோகங்கள் வகிக்க லாயக்குள்ள இந்தியர்கள் எத்துணையோ பேர் இருக்கிறார்கள் என்று முதன் மந்திரியாயிருந்த ஆஸ்க்வித் 1909ல் பிரஸ்தாபித் திருக்கிறார். ஒரு யோக்கியதையு மில்லாத ஆங்கிலேயர்களை பொறுப்புள்ள உத்தியோகங்களில் நியமிப்பதைவிட, யோச்கியதை மிருந்த இந்தியர்களை நியமிப்பதுதான் சிலாக்கிய மென்றும் அவர் அபிப்பிராயப் பட்டிருக்கிறார்.

டாக்டர். வி. எச். ருதர்போர்டு சமீபத்தில் வெளியிட்ட ஒரு புஸ்தகத்தில் காணப்படுவதாவது:—“இந்திய சர்க்கார் பொதுக் கல்வியை விருத்தி செய்ய ஒரு முயற்சியும் செய்யவில்லை. கிராம சுகாதார நிலைமை மிக்க மோசமாக இருக்கிறது; போதிய அளவுக்கு வைத்திய உதவியும் செய்யப்படவில்லை. ஏழைகளுக்குக் குடியிருப்பு வசதி யில்லை. விவசாயிகள் லேவாதேவிக்காரர் கையில் அகப்பட்டுத் தவிப்பதைத்தடுக்க ஒன்றும் செய்யப்படவில்லை; விவசாய பாங்கிகள்ஏற்படுத்தப் படவில்லை. விவசாயம் கைத்தொழில் அபிவிர்த்தி முயற்சிகள் செய்யப்படவில்லை. இந்திய கைத்தொழில் பாதுகாப்பு ஏற்பாடுகள் ஒன்றும் காணப்படவில்லை. பிரிட்டிஷ் முதலாளிகள் தம் மிஷ்டம்போல் கொள்ளையடித்து வருகிறார்கள். பிரிட்டிஷாருக்கு அனுகூலமாக நாணய மாற்றுத் தந்திரங்கள் நடைபெறுகின்றன.”

காங்கோ கொடுமைகள் நடந்தகாலத்தில் ஒரு ஐரிஷ் ஆசிரியர் கூறியதாவது:—“தமக்குத்தான் சுதந்திரம் தேவை யென்று ஆங்கிலேயர் எண்ணுகிறார்கள். பிறர் செய்யும் அநீதிகளை யெல்லாம் அவர்கள் கண்டிக்கிறார்கள். தாம் செய்யும் அக்கிரமங்களை அவர்கள் கவனிப்பதில்லை. சுயேச்சைப் பிரியர்களான ஆங்கிலேயர்கள் காங்கோ விஷயங்களில் தலையிட்டு பெல்ஜியர் செயலைக் கண்டிக்கிறார்கள். ஆனால் இந்தியர்களைத் தம் சப்பாத்துக் காலால் அடக்கி வைத்திருப்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள்.

லார்டு லிட்டன் வைசிராயா யிருந்தபொழுது அவரது ஆப்த நண்பர்களில் ஒருவரான ஸ்ரீ. வில்ப்ரட் ஸ்காவின் ப்ளண்ட் இந்தியாவுக்கு வந்தார். அவர், இந்திய விஷயங்களை சர்க்கார் அதிகாரிகள் மூலமாகவும்,நேர்முகமாகப் பார்த்தும் மிக நுட்பமாக அறிந்துகொண்டார். அவர் கன்சர்வேடிவ் கட்சியைச் சேர்ந்தவராயினும் இந்தியக் கொள்ளையை அவருக்கு சகிக்க முடியவில்லை. ஆகவே, அவர் எகிப்தைப்பற்றி எழுதிய ஒரு புஸ்தகத்தில் இந்தியாவைப்பற்றி பின்வருமாறு எழுதி யிருக்கிறார்.

"இந்திய விஷயங்களைப் பார்த்து நான் ஏமாற்றமடைந்துவிட்டேன். மற்ற ஆசியா தேசங்களிற் போலவே இந்திய ஆட்சியும் மிக மோசமாகவே இருக்கிறது. துருக்கியிற் போலவே இந்தியாவிலும் வரிப்பளுவும், பொது முதல் அழிவும் காணப்படுகின்றன. சுதேசிகள் மெலிந்து வாடி, அடிமைகளைப்போல் வாழ்கிறார்கள். நான் கன்சர் வேடிவ் கட்சியைச் சேர்ந்தவனாயினும் இந்தியர்களின் அடிமை வாழ்க்கையைப் பார்த்து எனக்கு சகிக்க முடியவில்லை. பிரிட்டிஷ் அரசாட்சியில் எனக்கிருந்த நம்பிக்கையும், மதிப்பும் அடியோடு ஒழிந்துவிட்டன. தற்காலத் தோரணைப்படி நாம் மேலும் இந்தியாவை விருத்தி செய்து கோண் டிருப்போமானால் இந்தியர்கள் வெகு சீக்கிரத்தில் நரமாமிச பட்சணிகளாய் விடுவார்கள். ஏனென்றால் இந்தியாவிலுள்ள பொருள்களெல்லாம் கொள்ளைபோன பிறகு அவர்கள் ஒருவரை யொருவர் கொன்று தின்பதை விட வேறு பிழைப்புக்கு வழி யேது?"

ஆனால் இந்த மேதாவிகளை யெல்லாம் விட கன்னி மேயோ, சர்வஞானி யென நடிக்கிறார். கன்னி மேயோவைப்போல் தற்பெருமையும், இறுமாப்பு முடைய ஒரு பெண்ணை உலக முழுதும் தேடிப் பார்த்தாலும் நம்மால் காண முடியாது.

---

## அத்தியாயம் 31.

# சீர்திருத்தக் கதை



மாண்டு-போர்டு சீர்திருத்தம் கன்னி மேயோவுக்குப் பிடிக்கவே இல்லை. அதைப்பற்றிய ஒப்பாரி "இந்திய மாதா"வில் ஒரு அத்தியாயத்தை விழுங்கிவிட்டது. சீர்திருத்தம் கொடுக்கப்பட்டது தவறு என்று அவர் கூறினும், அதற்குக் காரணமென்னவென்று அவர் தெளிவாகவும் கூறவில்லை. தேசீய வாதிகளிடத்தில் அவருக்குள்ள வெறுப்பும், பிரிட்டிஷ் சர்க்காரிடத்து அவருக்குள்ள மதிப்பும் அந்த அத்தியாயத்தில் மறைமுகமாக வெளிப்பட்டிருக்கின்றன. பரஸ்பர விருத்தமான பல அபிப்பிராயங்களையும் அந்த அத்தியாயத்தில் நிரப்பிவைத்திருக்கிறார். பல கற்பனைக் கதைகளும் அதில் காணப்படுகின்றன. அநேகருடன் அவர் நடத்திய சம்பாஷணைகளைப்பற்றியும் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் அவர்கள் பெயர் மட்டும் வெளிப்படுத்தப் படவில்லை. இந்தியத் தேசீயவாதிக ளெல்லாம் வம்பளப்புக்காரர்கள் என்றும், ஜனங்களை ஏமாற்றுவதற்காக சர்க்கார்மீது வீண்பழி சுமத்துகிறவர்கள் என்றும், அவர், பல இடத்து அபிப்பிராயப்படுகிறார். பிரிட்டிஷாருக்கு எதிரியான ஒரு இந்திய சட்டசபை அங்கத்தினரிடம் அவர் அது விஷயமாகப் பேசினாராம். "சட்டசபை மெம்பர்களெல்லாம் உண்மையாகத்தானா சர்க்காரைக் குறை கூறுகிறார்கள்?" என்று கன்னி மேயோ அந்த அங்கத்தினரிடம் கேட்டாராம். "இல்லை! இல்லை! சட்டசபை மெம்பர்களில் ஒருவராவது அப்படி நம்பவில்லை. தமாஷுக்காகவே நாங்கள் குறை கூறுகிறோம்" என்று அவர் சொன்னாராம். வாஸ்தவத்தில் அவர் அவ்வாறு நடந்துகொள்ளும் அயோக்கியரா யிருந்தாலும், முன்னும் பின்னும் தெரியாத ஒரு வெள்ளை

மாதிடத்தில் தன் அயோக்கியத்தனத்தை ஒப்புக்கொண்டிருப்பாரா? சீர்திருத்தத்தைப்பற்றிய கன்னி மேயோவின் பிதற்றல்களை நாம் கவனிக்க வேண்டியதில்லை. சீர்திருத்தத்தின் உற்பத்தி, வளர்ச்சி, தற்கால நிலை முதலியவைகளைப்பற்றி நாம் உள்ளபடியே ஆராய்வோம்.

1914-ல் மகாயுத்தம் ஆரம்பமாவதற்கு முன் இந்தியா முழுதும் புரட்சிச் சங்கங்களும், சதியாலோசனைக் கூட்டங்களும் நிறைந்திருந்தன. இந்திய அரசாங்கத்தைப் பற்றி அதிருப்தியே எங்கணும் குடிகொண்டிருந்தது. மகா யுத்த காலத்தில் ஐக்கிய கட்சி ராஜதந்திரிகளும், அமெரிக்கப் பிரசிடண்டு வில்சனும் வெளியிட்ட அபிப்பிராயங்களினால், யுத்தத்தில் ஐக்கிய கட்சியார் வெற்றிபெற்றால், தமது பிறப்புரிமைகள் அங்கீகரிக்கப்பெற்று, சுயராஜ்யம் கிடைக்கக் கூடுமென்று இந்திய தேசியவாதிகள் நம்பியிருந்தனர். 1916-ல் யுத்தம் மும்முரமாக நடந்துகொண்டிருந்த காலத்தில் இந்திய தேசீய காங்கிரசும், அகில இந்திய முஸ்லீம் லீகும் சேர்ந்து, இந்தியாவுக்குத் தேவையான அரசியல் சீர்திருத்தங்களைப் பற்றி ஒரு திட்டம் வெளியிட்டனர். அத்துடன் யுத்தத்துக்கும் தம்மாலான உதவியை மனப்பூர்வமாகவும் செய்து வந்தனர். மகாத்மா காந்தியும் படைக்கு ஆள்சேர்க்கவும், போர்முனையில் வைத்திய உதவி செய்யத் தொண்டர்களைத் திரட்டவும் தீவிரமாக முயற்சி செய்தார். மகா யுத்த வெற்றிக்காக இந்தியப் பணமும் ஏராளமாகச் செலவாயிற்று; இந்தியர்களும் ஏராளமாக இரத்தம் சிந்தினர். இந்தியாவிலுள்ள ஆளுதவியும் பண உதவியும் போர்க்கருவி, உணவுப்பொருள் உதவியும் சென்றிருக்காவிட்டால் பிரிட்டிஷார் அந்தஸ்துக்குக் கேடு உண்டாவதுமன்றி, ஐக்கிய கட்சியாரும் வெற்றியடைந்திருக்க மாட்டார்கள்.

இந்திய உதவியைப்பற்றி சர்க்கார் வெளியிட்ட ஒரு அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது:—“நல்ல சமயத்

தில் இந்தியப் படை பிரான்சில் வந்துசேர்ந்தது. அவர்கள் வந்ததினால் ஜெர்மானியர் முன்னேற்றம் தடைபட்டது. அக்காலத்தில் பிரான்ஸ் போர்முனைக்கு வரக்கூடிய பழக்கம்பெற்ற படை இந்தியப் படையைத் தவிர சாம்ராஜ்யம் முழுதிலும் வேறு படை இல்லவே இல்லை. எகிப்து, பாலஸ்தீனம், பாரசீகம், கிழக்கு-மேற்கு ஆபிரிக்கா முதலிய பிரதேசங்களில் பிரிட்டிஷ் படையோடும், குடியேற்ற நாட்டுப் படையோடும் சேர்ந்து இந்தியப்படை தைரியமாகவும், உண்மையாகவும் உழைத்ததனாலேயே இறுதியில் ஐக்கிய கட்சியார் வெற்றிபெற்றனர்."

1916 ஏப்ரல் மாதத்தில் மெஸப்பொடேமாயாவில் உண்டான குழப்பங்களுக்கு இந்திய சர்க்காரின் உபேட்சையே காரண மென்று புகார் கூறப்பட்டது. அதைப் பற்றி விசாரணை நடத்த நியமனம் பெற்ற கமிட்டியாரும் இந்தியரின் திராணி யின்மையினாலேயே அக் குழப்பமுண்டாயிற் றென்று தீர்ப்புச் செய்தனர். அதைப்பற்றி பார்லிமெண்டில் வாதம் நடந்தபோது இந்திய அரசாங்க அமைப்பு காலப்போக்குக்கு ஒத்ததாக இருக்க வில்லையென்றும், அதைத் திருத்தி யமைக்கவேண்டியது அவசியமென்றும் ஸ்ரீ. இ. எஸ். மண்டேகு பிரஸ்தாபித்தார்.

அவர் மேலும் கூறியதாவது:—"நீங்கள் எந்த நோக்கத்துடன் இந்தியாவை ஆளுகிறீர்கள் என்று வெளிப்படையாகக் கூறிவிட வேண்டுமென்று இந்தியர்கள் விரும்புகிறார்கள். இந்தியர்களுக்கு சுயராஜ்யம் அளிப்பது உங்கள் நோக்கமானால், முதற்படியாகச் செய்யவேண்டிய சீர்திருத்தங்களை உடன்தானே நாம் செய்துவிட வேண்டும். ஆபத்துக் காலத்தில் இந்தியர்களை நம்பலா மென்றும், அவர்கள் நமக்கு உதவிபுரிவார்கள் என்றும் இந்த யுத்த மூலம் வெளிப்பட்டுவிட்டது. இந்தியர்களின் ராஜ பக்தியைக் காப்பாற்ற இந்திய அரசியல் நிருவாகத்தில் அவர்களுக்கும் சரியான பங்கு அளிக்கவேண்டும். அப்படி யளித்

தால், மேலும் ஒரு யுத்த முண்டானால் அவர்கள் மனமு வந்து நமக்கு உதவி செய்வார்கள். நமது ஏகாதிபத்தியத் தின் க்ஷேமத்துக்கு இந்தியர்களின் திருப்தி மிகவும் இன்றி யமையாதது."

இது இவ்வாறாக, யுத்தமோ பயங்கர நிலையை அடை யத் தொடங்கிற்று. ருஷியா அழிந்தொழியும் நிலைமையி லாயிற்று. இந்தியாவிலிருந்து எவ்வளவு ஆட்களும் பண மும் கொண்டுபோக முடியுமோ அவ்வளவும் கொண்டு போகாவிட்டால் ஐக்கிய கட்சியார் தோல்வி யடைவது நிச் சயமென்றும் வெளியாயிற்று. உடனே ஸ்ரீ. லாயிட் ஜார்ஜ் ஒரு தந்திரம் செய்தார். ஸ்ரீ. மாண்டேகுவை இந்தியா ஆபீசில் பிரதிஷ்டை செய்து, 1920 ஆகஸ்டு 20உ வெளி வந்த விஞ்ஞாபனத்தை வெளியிடுமாறு தூண்டினார். அந்த விஞ்ஞாபனத்தின் சாரம் பின்வருமாறு:—"இந்தியர் களை அரசியல் நிருவாகத்தில் பழக்கி காலக்கிரமத்தில் அவர்களுக்கு சுயராஜ்ய மளிப்பதே பிரிட்டிஷ் சர்க்காரின் நோக்கம். அதற்குப் பூர்வாங்கமான ஏற்பாடுகள் வெகு சீக்கிரத்தில் செய்யப்படும். அவ்வாறு ஏற்பாடுகள் செய் வதற்குள் இந்திய அதிகாரிகளும் பிரிட்டிஷ் அதிகாரி களும் தம்முள் கலந்துகொள்ள வேண்டியது அவசியம். அதற்காக மன்னர்பிரான் சம்மதப்படி வைசிராயிடம் கலந்து ஆலோசனை செய்ய நான் இந்தியாவுக்கு வரு கிறேன்."

இந்த விஞ்ஞாபனம் முன்னாலோசனையின்றி வெளி யிடப் பட்டதல்ல. சாம்ராஜ்யத்தின் க்ஷேமத்துக்கு அது இன்றி யமையாததென்று முடிவு செய்யப்பட்டது. அந்த விஞ்ஞாபனத்தை இந்தியத் தலைவர்கள் மெய்யென்றே நம்பினார்கள். "இங்கிலாந்தின் ஆபத்து அயர்லாந்தின் நற்றருணம்" என்று ஐரிஷ் தேசீய வாதிகள் எண்ணியது போல் இந்தியர்கள் எண்ண வில்லை. ஆபத்துக் காலத்தில் இந்தியர் இங்கிலாந்துக்குக் கைகொடுத்து உதவினார்கள். வேறு போக்குவழி யில்லாததனால் சீர்திருத்தம் வழங்க

ஆங்கில அரசியல் வாதிகள் ஒருவாறு ஒப்புக்கொண்டார்கள். ஸ்ரீ. மண்டேகு மட்டும் உண்மையில் நல்லெண்ணமுடையவராக இருந்திருக்கலாம்.

அந்த விஞ்ஞாபனத்தினுல் இந்தியாவில் அமைதியுண்டாயிற்று. அரசியல் வாதிகளுக்கு விஞ்ஞாபனத்தின் போக்குப் பிடிக்க வில்லை யாயினும், இங்கிலாந்தின் நல்லெண்ணத்துக்கு அது ஒரு அறிகுறியாகு மென்று நம்பினுர்கள்.

ஸ்ரீ. மண்டேகு வாக்களித்தபடி இந்தியாவுக்கு வந்து லார்ட். சேம்ஸ்போர்டுடன் கலந்து, மண்டேகு—சேம்ஸ் போர்டு ரிப்போர்ட்டை எழுதி முடித்தார்.

ரௌலத் சட்டம் நிறைவேறுவதற்கும், மகாத்மா காந்தி ஒத்துழையா இயக்கம் தொடங்குவதற்கும் முன், 1919—ல் இந்த சம்பவங்கள் நிகழ்ந்தன. அந்தக் காலத்திலும் அதிகார வர்க்கத்தினரில் சிலர் ஸ்ரீ. மண்டேகுவை திட்டிக்கொண்டுதா னிருந்தனர். சர். மிக்கேல் ஓடயரும், ஜெனரல் டயரும் அவர்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். சர். மிக்கேல் ஒரு புரட்சியை உண்டுபண்ணினுர். ஜெனரல் டயர் இந்தியர்களிடம் பழிவாங்கினுர். அமிர்தசரஸ் படுகொலைக்கும், இராணுவச் சட்டக் கொடுமைகளுக்கும் அவ்விருவருமே ஜவாப்தாரிகள்.

சீர்திருத்தம் அபூர்ணமாகவும், மோசமானதாகவும் இருந்தாலும், அதை ஒப்புக்கொண்டு நடத்திப்பார்க்க வேண்டுமென்று 1919—ல் அமிர்தசரசில் கூடிய காங்கிரசில் முடிவு செய்யப்பட்டது. ஆனுல் அவர்கள் பிரிட்டிஷாரின் தந்திரத்தை உணர்ந்து கொள்ளவில்லை. அவர்கள் கூறுவதெல்லாம் உண்மை யென்று நம்பினுர்கள். யுத்தம் முடிந்து எகாதிபத்தியத்துக்கு ஆபத்தில்லை யென்று அறிந்தவுடன் பிரிட்டிஷார் வாக்குமாறத் தொடங்கினர். இந்தியாவை எப்பொழுதும்போல் கொள்ளையடித்துக்

கொண்டிருக்கவே அவர்கள் விரும்பினார்கள். மாண்டேகு, செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தைத் தொலைக்க பிரிட்டிஷார் கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். பிரிட்டிஷார் மனப் பான்மையை விளக்க ஒரே ஒரு திருஷ்டாந்தத்தை இங்கே கூறுகிறோம்.

உள்நாட்டு மந்திரி சர். வில்லியம் ஜாயின்சன் ஹிக்ஸ் ஒரு சந்தர்ப்பத்தில் கூறியதாவது:—"இந்தியர்களின் நன்மைக்காக நாம் இந்தியாவைப் பிடிக்கவில்லை. இந்தியர்களை உயர்த்துவதற்கு நாம் இந்தியாவைப் பிடித்தோமென்று சில பாதிரிமார் கூறுகிறார்களாம். அது வெறும் பகட்டுப் பேச்சு. பிரிட்டிஷ் வர்த்தகத்தை விருத்தி செய்யும் பொருட்டே நாம் இந்தியாவைப் பிடித்தோம். நாம் வாளுதவியால் இந்தியாவை வென்றோம். வாளுதவியால் இந்தியாவை அடக்கிக் கொண்டிருப்போம். இந்தியர்களின் நன்மைக்காக நாம் இந்தியாவைப் பிடித்தோமென்று சொல்லி ஏமாற்ற எனக்கு இஷ்டமில்லை. பொதுவாக பிரிட்டிஷ் சாமான்களையும், விசேஷமாக லங்காஷயர் ஜவுளிகளையும் இந்தியாவில் விற்பனைசெய்து இலாப மடையும் பொருட்டே நாம் இந்தியாவைப் பிடித்தோம்."

தேசீய வாதிகளில் மிக்காரும் இதே அபிப்பிராய முடையவர்களாகவே இருக்கிறார்கள். சீர்திருத்தத்தில் பல குறைகள் இருந்தாலும், அதுவுங்கூட நடத்த வேண்டிய முறையில் நடத்தப்படவில்லை. சீர்திருத்தத்தைத் தொலைக்கவே இந்திய அதிகார வர்க்கத்தினரும், பிரிட்டிஷ் அதிகாரிகளும் சதா முயற்சி செய்துகொண்டு வருகின்றனர். 1920ல் ஹண்டர் கமிட்டி ரிப்போர்ட்டு வெளியானதும் நிலைமை திடீரென மாற்றமடைந்தது. பிரிட்டிஷார் சாபம் வெளுக்கவே 1920 செப்டம்பரில் கல்கத்தாவில் கூடிய ஸ்பெஷல் காங்கிரசில், சட்ட சபைகளையும் சீர்திருத்தத்தையும் பகிஷ்காரம் செய்யும்படி ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. 1920ல் நடைபெற்ற

தேர்தலில் ஒரு காங்கிரஸ் வாதியாவது முன்வர வில்லை. ஆகவே மிதவாதிகள் மாகாண சட்ட சபைகளிலும் மத்திய சட்ட சபையிலும் ஏராளமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். அதுவரை மிதவாதிகள் பிரிட்டிஷ் ராஜ்ய தந்திரிகளின் செல்வப் பிள்ளைகளா யிருந்தனர். சர்க்காருக்கும் அவர்களிடத்தில் நம்பிக்கை யிருந்தது. அவர்களில் அநேகர் மந்திரிகளாகவும் நிருவாக சபை மெம்பர்களாகவும் நியமனம் பெற்றூர்கள். அவர்களில் ஒரு இந்தியர் சர்க்கார் சட்ட மந்திரியாகவும், நியமனம் பெற்றூர். 1921ல் சீர்திருத்த அரசாட்சி ஆரம்பமான காலத்தில் மிதவாதிகள் மிக நம்பிக்கை யுடையவர்களா யிருந்தனர். தேசீய வாதிகளோ சீர்திருத்தம் பயனற்றதென நம்பினர். 1921ல் ஒத்துழையாமை வலுப்பெற்றிருந்தது. 1921 முடிவில் வட இந்தியத் தலைவர்களில் பலர் உட்பட சுமார் 40,000 தேசீய வாதிகள் சிறை புகுந்தனர். 1922 மார்ச்சு மாதத்தில் மகாத்மாவும் சிறைப்படுத்தப் பட்டார். இந்த அடக்கு முறைகளுக்கு மிதவாதிகளான மந்திரிகளும், மற்றும் தலைவர்களும் உடந்தையாகவே இருந்தனர். ஒத்துழையாமையின் சரித்திரத்தை விளக்க இது இடமன்று. எனினும் அதனுல் பொது ஜனங்களுக்குள் ஒரு உணர்ச்சி உண்டாயிற்றென்பது உண்மை. மிதவாதிகளும் ஒத்துழையா இயக்கத்தில் சேர்ந்திருந்தால் இந்திய சர்க்கார் தவிடு பொடியாக நொறுங்கிப்போ யிருக்கும். ஆனுல் கடைசிவரை அவர்கள் சர்க்காருக்கு உதவியாகவே இருந்தார்கள். முதல் சீர்திருத்த நிருவாகம் 1923ல் முடிவு பெற்றது. அந்த நிருவாகம் சிறு அளவிலாவது வெற்றி பெற்றதற்கு மிதவாதிகளே காரணம். 1923ல் நடந்த தேர்தலில் மிதவாதிகள் காங்கிரஸ்காரர்களால் தோற்கடிக்கப் பட்டார்கள். ஆனுல் அதே காலத்தில் சர்க்கார் மிதவாதிகளைக் கைவிட்டுவிட்டு, அரசியல் உலகில் கேட்டறியாத அநாமதேயப் பேர்வழிகளைத் துணையாகப் பிடித்துக்கொண்டார்கள்.

அத்துடன் சீர்திருத்தம் பின்னேக்கிச் செல்லத் தொடங்கிற்று. ஒத்துழையாமையும் சோர்வடைந்தது.

சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தூண்டுதலினால் ஹிந்து முஸ்லிம் சச்சரவுகளும் வலுவடைந்தன. அதிகார வர்க்கத்தினரும் தலை தூக்கத் தொடங்கினர். அதனால் இந்திய சர்க்கார் போக்கு மிக்க கேவலமாயிற்று. அதை விரிவாகக் கூறப்போதிய காலமும் இடமும் நமக்கில்லை. சில திருஷ்டாந்தங்களால் மட்டும் விளக்கிவிடுகிறோம். லீ கமிஷன் சிபார்சுகளை சர்க்கார் ஒப்புக்கொண்டதனால் வருஷா வருஷம் 1 கோடி ரூபாய் அதிகச் செலவு ஏற்பட்டது. அதிகார வர்க்கத்தினர் நிலைமையும் வலுவடைந்தது. இது நடைபெறும்பொழுது லாயிட் ஜார்ஜ்தான் இங்கிலாந்தில் பிரதம மந்திரியாக இருந்தார். காலத்துக் கேற்ற கோலம் கொள்ளுவதில் அவர் வெகு சமர்த்தர். மனச்சாட்சி, வாக்குறுதி முதலிய அசட்டுப் பேச்சுகள் அவரிடம் கிடையா. அவர் நம்பத்தக்கவரல்லவென்று அவரது சகாக்களே கூறி யிருக்கின்றனர்.

அதிகார வர்க்கத்தினர் வலுப்பெற்றால் இந்தியர் சுயராஜ்யம் பெற முடியவே முடியாது. அன்றியும் மொக்கிஷமும், படையுந்தான் அரசியலின் முக்கியமான அமிசம். இவ் விரண்டும் பிரிட்டிஷார் கையிலிருந்தால் இந்தியர் சுயராஜ்யம் பெறுவது எக்காலம்? இந்திய சட்டசபைத் தீர்மானங்களை வைசிராய் தமது விசேஷ அதிகாரத்தினால் நிராகரித்து விடுகின்றார். அவர்கள் மறுத்த செலவுகளை அவர் தாராளமாக அனுமதிக்கிறார். நாணய மாற்று, செலாவணி விஷயங்களிலும் சர்க்கார் தம்மிஷ்டம்போல் நடத்துகின்றனர். சட்டசபை அபிப்பிராயத்தையும் சர்க்கார் மதிப்ப தில்லை. ராணுவத்தில் இந்தியர்கள் சேர்க்கப்படவில்லை.

சட்ட சபையார் விடாப்பிடியாய்க் கிளர்ச்சி செய்ததன் பயனாக 1925ல் இராணுவத்தை இந்திய மயமாக்குவதைப்பற்றி யோசித்து முடிவு செய்ய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. சர்க்கார் உத்தியோகஸ்தர் ஒருவர் அதன் தலை

வராக இருந்தார். கமிட்டியார் சமர்ப்பித்த ரிப்போர்ட் ஒரு வருஷம் வரை பைசல் செய்யப்படாமலிருந்தது. கடைசியில் இந்திய மந்திரி சபையார் அதை குப்பைத் தொட்டியில் எறிந்துவிட்டனர். இந்தியர்களுக்கு இராணுவப் பிரவேசனம் மறுக்கப்பட்டுவிட்டது.

போதாக் குறைக்கு இப்பொழுது ஒரு வெள்ளைக் கமிஷனும் நியமனம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே பிரிட்டிஷாரிடம் இந்தியர்களுக்கு நம்பிக்கைக் குறைந்துவிட்டது அதிசயமா?



## அத்தியாயம் 32.

# இரட்டையாட்சியின் வண்டவாளம்

இனி இரட்டை யாட்சியின் வண்டவாளத்தை ஆராய்ந்துபார்ப்போம். இந்தியர்கள் முட்டுக்கட்டை போடுகிறவர்கள் என்றும், சீர்திருத்தத்தை வெற்றிபெற நடத்த அவர்கள் சர்க்காரோடு ஒத்துழைப்பதில்லையென்றும் ஒரு குறை கூறப்படுகிறது. ஆனால் இந்தச் சீர்திருத்தம் ஜனநாயக அரசாட்சிக்கு உரியதல்ல. மொத்தஜனங்களில் 100-க்கு 2 பேருக்கே வாக்குரிமை யளிக்கப்பட்டிருக்கிறது. அரசாங்க அமைப்போ சுகமாக நடத்தக்கூடியதல்ல. அதில் அடங்கியிருந்த அற்ப சொற்ப நன்மைகளை ஆங்கிலோ இந்திய உத்தியோகஸ்தர்களும், இந்தியா ஆபீஸ் அதிகாரிகளும் தேய்த்து மாய்த்துக் கெடுத்துவிட்டனர். சீர்திருத்தத்தை குதூகலத்தோடு வரவேற்றவர்களும் அது பயனற்றது என்று கூறத் தொடங்கிவிட்டார்கள். சர். அலெக்சாண்டர் முடிமான் தலைமையில் நியமனம் பெற்ற சீர்திருத்த விசாரணை கமிட்டியார் முன்னிலையில் அக் காலத்திய இந்திய மந்திரிகளும், மாஜி மந்திரிகளும் அவ்வாறே அபிப்பிராயப் பட்டிருக்கின்றனர். பிரிட்டிஷ் நிருவாக உத்தியோகஸ்தர்களும் கூட அவ்விதமே அபிப்பிராயப்படுகின்றனர். பீகார் ஒரிசா கவர்னர் சர். ஹென்ரி வீலர் கூறுவதாவது:—"குறைபாடுகள் எல்லாம் சீர்திருத்தத் திட்டத்திலிருந்து நீக்க முடியாதவைகளா யிருக்கின்றன. அதில் பல பழுதுகள் இருந்தும் எவ்வாறோ நடத்தப்படுகிறது. ஆக்ரா அயோத்தி கவர்னர் சர். வில்லியம் மாரிஸ் "இரட்டையாட்சி, கைக்குள் அடங்காத சிக்கலான குழப்பமிகுந்த திட்டம்" என அபிப்பிராயப் பட்டிருக்கிறார். பெயர் பெற்ற இந்திய மந்திரிகளும் அத்தகைய அபிப்பிராய முடையவர்களாகவே இருக்கிறார்கள். பீகார் ஒரிசா

மந்திரி சர். முகமது பக்ருதீன் ஒரு வருஷத்துக்கு முன் பாடலீபுரம் சட்டசபையில் பேசியதாவது:—மாற்றப்பட்ட இலாகாக்களை தரம் பிரித்திருப்பது மிகவும் குறைபாடுடையதா யிருக்கிறது. நீர்ப்பாசன இலாகா இல்லாமல் விவசாய இலாகாவை மந்திரிகளுக்குக் கொடுத்திருப்பதினால் என்ன பிரயோஜனம், பொக்கிஷ விஷயத்தில் அதிகார மில்லாத மந்திரி கையில் செலவிலாகாக்களைக் கொடுத்துப் பயன் என்ன ? பணப்பொறுப்பு இல்லாத என்னை திட்டங்கள் தயார் செய்யும் ஒரு குமாஸ்தாவாகவே பிறர் மதிக்கிறார்கள்.

சென்னை மாகாணத்தில் சீர்திருத்தம் வெற்றி பெற நடத்தப் பட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது. சீர்திருத்த விசாரணை காலத்து மந்திரியா யிருந்த சர். கே. வி. ரேட்டி நாயுடு 1923-ல் கூறியதாவது:—"நான் அபிவிர்த்தி மந்திரியாயிருந்தும் வன இலாகா என்கையில் இல்லை; அபிவிர்த்தி செய்வதற்குரியது வன இலாகா என்பது யாவரும் அறிந்த விஷயம். நான் கைத்தொழில் மந்திரியாயிருந்தும் தொழிற்சாலைகள் என் அதிகாரத்தில் இல்லை. தொழிற்சாலை யில்லாவிட்டால் கைத்தொழில் எப்படி விருத்தியாகும். நான் விவசாய மந்திரியாயிருந்தும் நீர்ப்பாசன இலாகாவில் எனக்கு அதிகாரமில்லை. கைத்தொழில் மந்திரி அதிகாரத்தில் இருக்கவேண்டி மின்சார இலாகா ஒதுக்கப்பட்ட இலாகாவாயிருக்கிறது. இவைகளைத் தவிர இரட்டையாட்சியில் இன்னும் எத்துணையோ குறைபாடுகள் இருக்கின்றன.

மேலே காட்டப்பட்ட சர். கே. வி. ரெட்டி நாயுடுவின் அபிப்பிராயங்கள் இரட்டையாட்சியின் வண்டவாளங்களை செவ்வனே விளக்குகின்றன. பொறுப்புடையவர்களாகக் கருதப்படும் மந்திரிகளுக்கு ஒரு பொறுப்பும் அளிக்கப் படவில்லை. "நேற்று வந்த நிருவாக சபை மந்திரி வெகு நாளாயிருக்கும் இந்திய மந்திரிக்கு சீனியராகக் கருதப்படு

கிறர்" என்று பீகார் ஒரிசா நிருவாக சபை மெம்பராக விருந்த ஸ்ரீ. சச்சிதாநந்த சின்ஹா கூறுகிறர். "ஒதுக்கப் பட்ட இலாகாக்களில் ஐரோப்பிய மெம்பருக்குத் தான் சர்வாதிகாரமும் அளிக்கப்பட்டிருக்கிறது. ஒரு மாகாணத் தில் உள்நாட்டு மந்திரி ஒரு இந்திரியரா யிருந்தும் அந்த மந்திரிக்குரிய வேலைகளை யெல்லாம் ஒரு சிவில் உத்தியோ கஸ்தர் கையில் கவர்னர் ஒப்படைத்திருந்தாராம். அதைப் பற்றி சட்டசபையில் கேள்வியுண்டான போது வேலை நடப் புக்கு சௌகரியமாக ஏற்பாடு செய்வது சர்க்கார் இஷ்டத் தைப் பொறுத்திருக்கிறது" என்று பதிலளிக்கப்பட்ட தாம்.

மாற்றப்பட்ட இலாகாக்களின் மேலதிகாரமும் அநேக மாக இந்திய மந்திரிகளால் வகிக்கப்படவில்லை. இந்திய மந்திரிகளின் காரியதரிசிகளான சிவிலியன்களே அவ்வதி காரத்தை வகித்து நடத்துகிறர்கள்.

ஹைக்கோர்ட்டு ஜட்ஜியாகவும் நிருவாக சபை மெம்ப ராகவுமிருந்த சர். அலி இமாம் கூறுவதாவது:—"மாற்றப் பட்ட இலாகாக்கள் மந்திரிகள் அதிகாரத்தில் விடப்பட் டிருக்கின்றன. மந்திரிகள் சட்டசபைக்கு ஜவாப் சொல்ல வேண்டியவர்களா யிருக்கிறர்கள். வெளிப்பார்வைக்கு அது ஜன நாயக ஆட்சிபோல் காணப்பட்டாலும் வாஸ்த வத்தில் அது வெறும் சாவிதான். ஏனென்றல் மந்திரி சட்ட சபைக்கு அடங்கியவரா யிருந்தாலும், அவர் கவர்னர் கட்டளைப்படி நடக்க வேண்டியவராகவே இருக்கிறர். மந்திரி ஏதாவது செய்ய விரும்பினல் காரியதரிசி கவர்னரிடம் நேராகச் செல்கிறர். கவர்னர் மந்திரி சொற் களை அலட்சியம் செய்துவிடுகிறர். லார்டு கர்சன் உள் ளிட்ட பெரிய ராஜ்ய தந்திரிகளும் இந்தச் சீர்திருத்தம் பயனற்றதென்றே கூறியிருக்கிறர்கள்.

ஆகவே இந்தியர்களைக் குறை கூறிப் பயனென்ன?

---

## அத்தியாயம் 33.

# இந்தியாவினுல் உலகத்துக்கு ஆபத்துண்டாகுமா?



இந்தியா கொள்ளை நோய்களுக்கு இருப்பிடமாயிருப்பதால் இந்தியாவினுல் உலக முழுமைக்கும் ஆபத்துண்டாகுமென்று கன்னி மேயோ கூறுகிருர். ஆம்! இந்தியாவினுல் உலகத்துக்கு ஆபத்துண்டாகப் போவது உண்மைதான். ஆனுல் காரணம் தான் வேறு. பிரிட்டிஷார் இந்தியாவை அடிமையாக்கி, கொள்ளையடித்து வருவதினுல் இந்தியா வறுமைக்கும், நோய்களுக்கும், அறியாமைக்கும் உறைவிடமாக இருக்கிறதென்று தக்க ஆதாரங்களுடன் ஏற்கனவே விளக்கிக் காட்டியிருக்கிறோம். ஆகவே இந்தியாவுக்கு சுதந்தர மளிக்கப்படாவிட்டால் இந்தியாவினுல் உலக முழுமைக்கும் ஆபத்துண்டாகப்போவது நிச்சயமென்று கூறுகிறோம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு இந்தியாவே நடு நாயகமாக இருக்கிறது. உலக சமாதானத்தின் விசைக்கருவி இந்தியர் கையிலும், சீனர் கையிலுமே அடங்கியிருக்கிறது. பண்டைக்கால முதற்கொண்டே ஏகாதிபத்திய ஸ்தாபகர்கள் லட்சியமெல்லாம் இந்தியாவின்பேரிலேயே இருந்து வந்திருக்கிறது. இந்தியாவை யார் அடக்கியாள்கிருர்களோ அவர்களிடமே செல்வமும், உலக மதிப்பும், செல்வாக்கும் அமைந்திருக்கும். இந்தியாவை பிரிட்டிஷார் கைப்பற்றுமுன், இந்தியா ஏகாதிபத்தியமில்லாத சாமானிய நாடாயிருந்தது. இந்தியர் செல்வத்தினுல் பிரிட்டிஷார் கைத்தொழிற் புரட்சியில் வெற்றி பெற்று கோடீசுரர்கள் ஆனுர்கள். இந்தியப் பணமும் இந்தியத் துருப்புகளும், பிரிட்டன் உலகத்தைக்

கீழடக்குவதற்கு உதவியாக நின்றன. ஆசியாவிலும், ஆபிரிக்காவிலும் பிரிட்டிஷார் பிடித்தடக்கியிருக்கிற நாடுகளெல்லாம் பிரிட்டிஷார் இந்தியாவைக் கைப்பற்றிய பிறகு வந்தவைகளாகும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு இந்தியாவே அடிப்படையாக இருந்துவருகிறது. இவ்வுண்மைகளை ஒருவருக்கும் வாக்கு வல்லமையால் சமாளித்துவிட முடியாது. ஐரோப்பிய தேசத்தாரோடு பிரிட்டிஷார் நடத்திய யுத்தங்களெல்லாம் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ இந்தியாவை யொட்டி உண்டானவைகளே. பிரிட்டிஷ் அரசாட்சி இந்தியாவில் நிலைபெற்றது முதல் பிரிட்டனுக்கும் ருஷியாவுக்கும் போர் நடந்த வண்ணமாகவே இருக்கிறது. இப்பொழுது சோவியத்து சர்க்காரைப்பற்றிக் கனவு காண்பதுபோல் சுமார் ஒரு நூற்றூண்டு காலமாக பிரிட்டிஷார் ஜார் சக்கரவர்த்தியைப் பற்றிக் கனவு கண்டுகொண்டே இருந்தனர். ஸ்ரீ. ஹேர்பர்ட்டு ஆதம்ஸ் கிப்பன்ஸ் உள்ளிட்ட பெரிய பெரிய மேதாவிகளெல்லாம் இவ்வபிப்பிராயங்களை ஒப்புக்கொண்டே இருக்கின்றனர்.

வெளிநாட்டு சத்துருக்களின் தொந்தரவுகளிலிருந்து காப்பாற்றப்படுவதற்கு பிரிட்டிஷாரின் உதவி இந்தியாவுக்குத் தேவையா யிருக்கிறதென்று ஒரு சமாதானம் கூறப்படலாம். இதுவும் நொண்டிச் சமாதானமே. ஆனால், சுதந்தர இந்தியாவின் இராணுவ பலத்தைப்பற்றி ஜெனரல் சர். யான் ஹாமில்டன் கூறுவதைக் கவனியுங்கள்:—

“இராணுவத்துக்குரிய யோக்கியதையுடைய ஜாதியார் வட இந்தியாவில் தாராளமாயிருக்கிறார்கள். திறமையுள்ள தலைவர்களால் பழக்கப்பட்டால் அவர்கள் ஐரோப்பாவையும் தலைகீழாய் மறித்துவிடுவார்கள். போர்முனையில் வீரமும், தியாகமும் ஒரு தேசமக்களை மாட்சிமைப்படுத்தும் குணங்களாயிருக்கின்றன. அவர்களுடைய வீரமும், தியாகமும் பிரத்தியட்சப்பட இப்பொழுது தக்க சந்தர்ப்பமளிக்கப்படவில்லை. அறிவு வளர்ச்சியடையும்போது தக்க தலைவர்களும் தோன்றுவார்கள். தலைவர்கள் தோன்றிவிட்டால்

ஆங்கிலேயர்களுக்கு இந்தியரை அடிமைப்படுத்தி வைத்திருக்க முடியாது. கானடா, ஆஸ்திரேலியா நாடுகளைப் போல் இந்தியாவுக்கும் சம அந்தஸ்தும், சுயராஜ்யமும் வழங்கப்பட்டால் ஒருகால் இந்தியர்கள் பிரிட்டிஷாருக்கு அடங்கியிருப்பார்கள்."

ஆகவே வேற்றரசர்கள் இந்தியாவைப்பிடித்துக்கொள்வார்கள் என்று பயப்படுவதற்கும் காரணமில்லை. உலக அமைப்பைக் கவனித்தால் வேற்றரசர்கள் இந்தியாவைப் பிடிக்க சௌகரியமில்லையென்பது விளங்கும். இந்தியா சுயராஜ்யம் பெற்றால், அதனால் ஐரோப்பிய தேசங்களுக்கும் ஆபத்துண்டாகாது. ஏதேனும் ஒரு தேசத்தார் இந்தியாவைக் கைப்பற்ற முயற்சி செய்தால், தற்காப்பைக் கருதி ஐரோப்பிய தேசத்தார் அதைத்தடுக்க முயற்சிசெய்யாமலிருக்க மாட்டார்கள். அன்றியும் இந்தியர் தற்காலம் விரும்புவதுபோல் இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குள் சுயேச்சை நாடாக இருக்குமானால், அது பிரிட்டனுக்கும் ஒரு பெரிய பக்கபலமாகவே இருக்கும். ஏகாதிபத்தியத்தை விட்டு விலகும்படி நிர்ப்பந்திக்கப்பட்டால் அதனால் உலக சமாதானத்துக்குள்ள ஒரு தடை நீங்கிவிடுமென்றே சொல்லலாம். மகா யுத்தத்துக்குப் பிறகு ஏகாதிபத்தியக் கட்சியாருக்கும், பொதுவுடமைக் கட்சியாருக்கும் போர் நடந்த வண்ணமாகவே இருக்கிறது. யுத்தம் நிமித்தம் ருஷியாவில் ஒரு புரட்சி யுண்டாயிற்று. அதற்கு இணையான ஒரு புரட்சி இதுகாறும் உண்டானதேயில்லை. சோவியத்து அரசாங்கத்தை முதலாளி அரசாங்கங்களெல்லாம் எதிர்த்தே வருகின்றன. "ருஷியா அழிந்துவிட்டது; அழியப் போகிறது" என்று பயமுறுத்தப் படுவதை நாம் அடிக்கடி கேட்கிறோம். ஆனாலும் ருஷியா இப்பொழுதும் சுகமாகவே வாழ்ந்து வருகிறது. பிரிட்டிஷாரும் ருஷியாவைப் பார்த்துப் பயந்துகொண்டுதானிருக்கிறார்கள். போல்ஷவிக் கொள்கைகள் நமக்கு ஒருக்கால் பிடித்தமாகவோ, பிடிக்காமலோ இருக்கலாம். ஆனால் ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் அதன் சக்தி பரவி வரு

வதை ஒருவருக்கும் மறுக்கவோ, மறைக்கவோ முடியாது. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் நடைபெறும் விஷயங்களைக் கவனித்தால் ஏகாதிபத்தியத்தின் வாழ்நாள் குறுகிவருவதை நமக்கு எளிதில் உணர்ந்துகொள்ள முடியும். ஏகாதிபத்தியக் கொள்கைக்கும், பொது வுடமைக் கொள்கைக்கும் ஒரு போராட்ட முண்டாகப் போவதும், பொது வுடமைக் கொள்கை வெற்றியடையப் போவதும் நிச்சயம். போல்ஷவிக் முறையைத் தடுப்பதற்கு ஏற்ற வழி, இந்தியா உட்பட எல்லா அடிமை நாடுகளுக்கும் சுதந்தரம் அளித்துவிடுவதேயாகும். இல்லையேல் அதிருப்தியடைந்திருக்கும் அடிமை நாடுகளால் உலகத்துக்குப் பேராபத் துண்டாவது உறுதி. இந்தியா தன் பிறப்புரிமையான சுதந்திரம் பெற்றுத் தீரவேண்டும். இந்தியா சுதந்திரம் பெறுவிட்டால் போல்ஷவிக்குகள் இந்தியாவில் பிரவேசியாமல் தடுக்க ஹிமாலய பர்வதத்தாலுங் கூட முடியாது.

வர்த்தக சார்பாகப் பார்த்தாலும் இந்தியா கீழைத் தேசங்களுக்கும், மேலைத் தேசங்களுக்கும் மத்தியிலிருக்கிறது. ஐரோப்பிய தேசத்தாருக்கும் கீழைத்தேசத்தாருக்கும் மத்தியில் இந்தியா இடம்பெற்றிருக்கும். ஐரோப்பியர்களுக்கும் ஆசியாக்காரர்களுக்கும் போருண்டானல் இந்தியர் சேரும் பக்கம் வெற்றி யுண்டாவது உறுதி. சமாதான காலத்திலும் இருதேசத்தாரையும் ஒற்றுமைப் படுத்தும் சக்தி இந்தியரிட மிருக்கிறது. மரபுவழி இந்தியர்களுக்கு ஐரோப்பியர்களிடம் சம்பந்த மிருந்தாலும் சமயம் நாகரிகச் சார்பாகப்பார்த்தால் இந்தியர்கள் சீனர்களோடும், ஜப்பானியர்களோடும் சம்பந்த முடையவர்களா யிருக்கிறார்கள்.

அன்றியும் 7 கோடி முஸ்லிம்கள் வாழும் இந்தியா, இஸ்லாமிய உலகுக்கு நடு நாயகமாக இருக்கிறது. இப்பொழுதும் ஹிந்து - முஸ்லீம் சச்சரவுகளைக் கிளப்பியும், முஸ்லிம்களுக்கு விசேஷ அனுகூலங்கள் செய்தும் பிரிட்டிஷார் முஸ்லீம்களைத் தம் வசப்படுத்த முயற்சி செய்துவரு

கிறார்கள். ஆனால் இந்த நிலைமை நீண்டநாள் நிற்காது. ஏனென்றால் இஸ்லாமிய உணர்ச்சி நாளுக்கு நாள் வலுத்து வருகிறது. இந்தியா சுயேச்சை பெறுவதினால் இஸ்லாம் நன்மையடையுமென்று முஸ்லிம்களில் மிக்காரும் உணர்ந்து விட்டனர். முஸ்லீம் உலகத்தின் விடுதலை இந்திய விடுதலையைப் பொறுத்திருக்கிறது. தற்கால ஹிந்து - முஸ்லிம் சச்சரவு வெகு விரைவில் ஒழிந்துவிடும். இஸ்லாம் இறந்துவிடவில்லை; அது இறக்கவும் செய்யாது, இறக்கவும் முடியாது.

மனித சமூக க்ஷேமத்துக்கு இந்தியாவும், சீனவும் சுயேச்சை யடையவேண்டியது இன்றி யமையாததாயிருக்கிறது. இந்த உண்மையை அவ் விரு தேசங்களும் உணர்ந்துவிட்டன. தற்கால துர்ப்பலத்தையும், பிறகாலத்துத் தமக்கு உண்டாகக் கூடிய சக்தியையும் அவ் விரு தேசங்களும் அறிந்திருக்கின்றன. உலக முன்னேற்றத்துக்கு அவ் விரு தேசங்களும் தற்காலம் முட்டுக் கட்டைகளாக இருக்கின்றன. இந்தியா சுயேச்சை யடையும் போது எல்லாத் தடைகளும் ஒழிந்துவிடும். வடகிழக்கில் குடி அரசு சீனவும், வடமேற்கில் சக்தியுள்ள ஆப்கானிஸ்தானமும், பிற்பக்கம் முன்னேறிக்கொண்டிருக்கும் பாரசீகமும்,வடக்கே போல்ஷவிக் ருஷியாவும் இருக்கும்போது இந்தியாவில் எந்நாளும் ஏதேச்சாதிகாரம் நடத்தலாமென்று எண்ணுவது முழு மூடத்தனமாகும். அவ்வாறு ஏதேச்சாதிகாரம் நடத்த, தேவர்களுக்கும் கூட முடியாது. பிரிட்டிஷ் பார்லிமெண்டும் இந்திய சட்டசபையும் சேர்ந்து ஆயிரக்கணக்கான அடக்குமுறைச் சட்டங்களை நிறைவேற்றினாலும் அது சாத்தியமாகாது உலக சமாதானமும் சர்வதேச ஒற்றுமையும், மனித சமூக முன்னேற்றமும் இந்தியா விடுதலை பெறுவதில் அடங்கி யிருக்கின்றன. ஆங்கிலேயர் இவ் வுண்மையை அறிவார்களாக.

முற்றிற்று.

---

“தமிழ் நாடு” பிரஸ், சென்னை.